துறைமங்கலம்

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# பிரபுலிங்க லீலை



திரு சு அ இராமசாமிப் புலவர்

அவர்கள் எழுதிய

குறிப்புரையுடன்



கழக வெளியீடு

கழக வெளியீடு : ௪௦௨



உ

துறைமங்கலம்

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# பிரபுலிங்க லீலை

டாக்டர் இ. சுந்தரமூர்த்தி
எம்.ஏ., பிஎச்.டி., டிப்.மானிடவியல்.,
தமிழ்த்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை - 600005

கருப்பக்கிளர் சு அ இராமசாமிப் புலவர் அவர்கள்

எழுதிய

குறிப்புரையுடன்




திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.
1974

சுப்பிரமணிய அருட்டிரு சதாசிவ இராமசாமிப் புலவர் (1907)



*Branches*:

Tirunelveli-6 Madurai-1 Coimbatore-1
Kumbakonam Tiruchi-2

Ed 1 April 1954
Reprints: Jan 1961; Aug 1963; Sep 1966; June 1969;
May 1974



PRABULINGA LEELAI

Thiruvaranganar Achakam, Madras-13 I/6

# பதிப்புரை

'சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால்—மல்லிகையின்
வண்தார் கமழ்தாமம் அன்றே மலையாத
தண்தாரான் கூடல் தமிழ்'

என்னும் நல்லிசைப்புலவர் மாங்குடிமருதனார் வாய்மொழிக்கு இலக்காக இலகும் நம் தமிழ்மொழிக்கண் பொருளென்னும் நல் இருந்தாது கமழ்வது இப் பிரபுலிங்க லீலை என்னும் அரிய நூல்.

இறவாத புகழுடைய இறைவன் திருவிளையாடல்கள் பல. அவற்றை மக்கட்குச் சத்திநிபாத முறைநோக்கிப் புகட்டும் நூல்கள் சில. அவற்றுள் ஒன்றாக அமைந்தது இது.

இறைவன் அல்லமதேவராக எழுந்தருளி வந்து யாது சமயம்? பொருள் நூல் யாது? இஃது ஆகும், அஃது அல்லது என்னும் வேற்றுமைக்கு இடனின்றி எச்சமயத்துக்கும் முதன்மையாக இலகும் 'சைவ சமயத்'தின் ஒரு கூறாகிய வீர சைவத்தை வளர்த்த மேம்பாட்டை விளக்க இந்நூல் எழுந்தது.

இதில் குறிக்கோளாக நிற்பவர் அல்லமதேவரும் மாயையும் ஆவர். இவ்விருவரே இந்நூற்குத் தலைவராவர். இதன் நுட்பப் பொருள் மெய்ஞ்ஞானத்துக்கும் அஞ்ஞானத்துக்கும் மூண்ட போர்; இதில் இறுதியில் மெய்ஞ்ஞானமே அஞ்ஞானத்தை வெல்கின்றது. இதை உருவகப்படுத்தி மெய்ஞ்ஞானச் செல்வராகிய சிவப்பிரகாச அடிகளார் செய்யுள் உருவில் ஆக்கியருளித் தந்தனர்.

இந்நூல் சொற்பொருட்சுவை நலஞ்சான்றது. வித்துவான் முதனிலை (Preliminary) வகுப்புக்குப் பாடத் திட்டமாக அமைந்துள்ளது. ஆகவே, வித்துவான் வகுப்புக்குப் பயில்கின்ற மாணவர்க்கும், இலக்கியச் சுவை கண்டின்புற விழையும் அறிஞர்க்கும் பொருள் இனிது விளங்குவான் வேண்டி இந்நூற்கு திரு கு. அ. இராமசாமிப் புலவர் அவர்களைக் கொண்டு குறிப்புரையும் கதி (படலம்)

கட்கு வரலாற்று விளக்கங்களும் எழுதுவித்தும், நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கமும், நூலின் நயம் பற்றிய விளக்கமான முன்னுரையும் எழுதிச் சேர்த்தும் அழகிய முறையில் அமைத்தும் வெளியிட்டுள்ளோம்.

ஆகலான், மாணவரும் ஆசிரியரும் ஏனையோரும் வாங்கிக் கற்றுத் தெருளுற்ற தமிழமுதின் சுவையுடன் அருளுற்ற இறை திருவருளும் பெற்று மிளிர்வார்களென நம்புகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு

நன்மை நீடிய நடுநிலை ஒழுக்கத்து நயந்த, தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைக்கும் தொண்டை நாட்டிற் சிறந்த நகராகிய காஞ்சிபுரத்தில் தொண்டை மண்டல வேளாளர்கட்கு ஞானகுருவாக விளங்கியவர் குமாரசாமி தேசிகர் என்பவர்.

இவர் ஆண்டுதோறும் தவறாது திருவண்ணாமலையில் கார்த்திகை விளக்கைக் கண்டு தொழுது வந்தனர். திருவண்ணாமலைப் பெருமான் பேரருளால் சிவப்பிரகாசர், வேலையர், கருணைப் பிரகாசர், ஞானாம்பிகை என்னும் பெயருடைய மக்கள் நால்வரைப் பெற்று மகிழ்ந்தனர்.

தமது தவப்பயனால் தோன்றிய ஆண்மக்கள் மூவரும் பெண்மகள் ஒருவரும் கல்வி பயிலுங்காலத்திலேயே குமாரசாமி தேசிகர் இறைவன் திருவடிப் பேறெய்தினர்.

அப்பால் மூத்தவராகிய சிவப்பிரகாசர் தம் தம்பியரோடு திருவண்ணாமலைக்குப் போய் அங்குத் தெற்கு வீதியிலுள்ள திருமடத்தில் எழுந்தருளியிருந்த குரு தேவரைக் கண்டுவணங்கி அங்கேயே இருந்து கொண்டு தாம் கற்கவேண்டிய நூல்களைக் கற்றுக்கொண்டு வருவாராயினார். அக்காலத்து ஒருநாள் அந்தத் திருவண்ணாமலையை வலங்கொண்டு வந்தார். அப்போது இறைவன் திருவருட்பேற்றால் 'சோணசைலமாலை' என்னும் நூல் ஒன்றினை நூறு செய்யுட்களால் பாடி இறைவனை வணங்கினார்.

பின்னர்க் கல்வியில் மிக்க விருப்பம் எழுந்தது. தமிழ் மொழிக் கண்ணுள்ள இலக்கண இலக்கியங் கற்கும் வேட்கையுடன் வடநாட்டுக்குத் தம் தம்பியருடன் சென்று வாலிகண்டபுரத்துக்குத் தென்பாலுள்ள துறைமங்கலம் என்னும் நகரைச் சார்ந்த ஒரு நந்தவனத்தில் சிவவழிபாடு செய்துகொண்டிருந்தார். அப்போது அவ்வூருக்கு அதிபதியும் கல்வி கேள்வி அடியார் பேரன்புடையருமாகிய அண்ணாமலை ரெட்டியார் என்பவர், சிவப்பிரகாச அடிகளின் வரவைக் கேள்வியுற்று அடிகளை ஆங்கே வந்து கண்டனர்; வணங்கி நின்றனர்; தம்மை யறியாது அடிகள்பால் பேரன்பு பெருகினார்; அடிகளின் நல்லருள் பெற விரும்பினார். அப்போது அடிகளை நோக்கி, 'அடிகாள்! நீவிர் இவண் எழுந்தருளியிருத்தல் வேண்டு'மெனக் கேட்டுக் கொண்டார். அடிகளும் அவர் விருப்பத்துக்கு இசைந்தார்.

அதன் பின்னர்த் தம் குருவாகிய சென்னவசவையர் திருமடத்துக்கு மேற்றிசையில் ஒரு திருமடங் கட்டுவித்து, அதில் அடிகளை இருக்கச் செய்து தாம் அடிகளின் அணுக்கத் தொண்டராக அமர்ந்து அடிகள் பால் அரும்பொருள்களாகிய அறிவுரைகேட்டு மகிழ்ந்து வரலானார். இவ்வாறு ஆங்கே இரண்டாண்டுக் காலம் இருந்து வந்தார்.

அதன்பின் தென்னாடு செல்ல விரும்பினார். தம் கருத்தை ரெட்டியாருக்கு அறிவித்துப் புறப்பட்டுத் திருநெல்வேலியை அடைந்தார். ஆங்கேயுள்ள சிந்துபூந்துறையில் தருமபுர ஆதீன வெள்ளியம்பலவாண சுவாமிகள் இலக்கண இலக்கிய நூற் புலமையில் மிக வல்லுநராக இருக்கின்றாரென்பதைக் கேள்வியுற்றார். சுவாமிகள்பாற் சென்று வணங்கி நின்று தாம், 'இலக்கணங்கற்க வேண்டி வந்தே' மெனத் தெரிவித்துக்கொண்டனர். சுவாமிகள் அதற்கு இசைந்து சிவப்பிரகாச அடிகளின் இலக்கியப் பயிற்சியை அறிய எண்ணி, "ஐய! 'கு' என்னும் எழுத்தை முதலிற்கொண்டு 'ஊருடையான்' என்பதை இடையில் அமைத்து 'கு' என்னும் எழுத்தே இறுதியிலும் வந்து முற்றுற இறைவன் மீது ஒருவெண்பாப் பாடுக' என்று கூறினார்: உடனே அடிகளார்,

"குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லைதோல் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னும் உலகு"

என்னும் வெண்பாவைத் தம் பாமணங் கமழுந் திருவாய் மலர்ந்து பாடினார்.

இவ்வெண்பாவினுள் தாம் அமைக்கச் சொன்னவற்றோடு அரிய கருத்துக்கொண்ட 'வடக்கோடு தேருடையான்' என்னும் அழகிய தொடரையும் அதன் நுட்பதிட்ப நயத்தையும் வியந்து மகிழ்ந்து பாராட்டித் தம் அருகிருத்தித் தழுவினார். அடிகளின் தம்பியர்களான வேலைய சுவாமிகள், கருணைப்பிரகாசசுவாமிகள் ஆகிய இருவருக்கும் பதினைந்து நாட்களுக்குள் ஐந்து இலக்கணங்களையும் பாடஞ்சொல்லி இலக்கணப்புலமை நிறைவுறச் செய்தார். இதற்குச் சிவப்பிரகாச அடிகளார் மகிழ்ந்து தமக்கு அண்ணாமலை ரெட்டியார் வழிச் செலவுக்குக் கொடுத்ததில் முந்நூறு பொன்களைக் காணிக்கையாகக் கொடுத்து வணங்க, 'இது நமக்கு வேண்டுவதில்லை; நம்மை இகழ்வதுவே இயல்பாகக் கொண்டு திருச்செந்தூரில் இருக்கும் தமிழ்ப்புலவரொருவரைத் தங்கள் முன்னிலையில் வென்று எம்மை வந்து வணங்கச் செய்தலே காணிக்கையாகும்' எனக்கூறிக் காணிக்கையை வாங்கமறுத்தார்.

அவர் கருத்தறிந்த சிவப்பிரகாச அடிகளார், அதற்கு உடன்பட்டு அவர் மாணவருடன் திருச்செந்தூர் சென்று முருகக் கடவுளை வணங்கித் திருக்கோவிலை வலங்கொண்டு வருங்கால், சுவாமிகளால் அடிகட்கு அறிவிக்கப்பட்ட புலவர் எதிர்ப்பட்டு அடிகளை யாரென அடிகளுடன் வந்த மாணவர்கள்பாற்கேட்டுச் சுவாமிகளிடம் பாடங் கேட்ட அடிகள் என்பதை அறிந்துகொண்டார். அப்பால் தம் வழக்கம்போல் சுவாமிகளை வசைமொழியாடத் தலைப்பட்டார். அதனால் அடிகட்கும் புலவருக்கும் சொற்போர் (வாக்கு வாதம்) நிகழ்ந்தது. அப்பால், புலவர் புதுமுறையில் பாடி, இவரை வெல்வோம் எனத் துணிந்தார். அவர், 'நாம் இருவரும் நிரோட்டக யமகம் (வாயிதழ் குவியா அடிமுதல் மடக்கு) பாட்டு முருகப்பெருமான்மீது பாடுவோம். முன்னர்ப் பாடி முடித்தவர்க்கு அஃதியலாதவர் அடிமையாதல் வேண்டும்' என்று கூறினார். அடிகளும் இதுவே இவரை வெல்வதற்கு நல்வாய்ப்பெனக் கருதி அதற்கு இசைந்தார். உடனே இருவரும் பாடத் தொடங்கினர். அடிகள் நிரோட்டக யமக வந்தாதியின் 'சீற்ற வருணனை' எனத் தொடங்கும் காப்புச்செய்யுளை முதற்கொண்டு 'கயங்கலையநலி' என முற்றுப்பெறும் செய்யுளோடு முப்பத்தொரு கட்டளைக் கலித்துறையான் இயன்ற பாடல்களை முருகப்பெருமான் திருக்கோவிலை வலமாக வருவதற்குள் பாடி முடித்தருளினார். புலவர் ஒரு பாட்டுக்கூடப் பாட இயலாமல் தயங்கி நின்றார். அப்பால் புலவர், சிவப்பிரகாச அடிகளின் திருவடிகளை வணங்கி, 'அடியனேன், அடிகளுக்கு அடியனாயினேன்' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டார். தமக்கடிமையாக அமைந்த புலவரைத் தம் குருவாகிய வெள்ளியம்பலத் தம்பிரான் சுவாமிகளிடம் அழைத்துச் சென்று அவருக்கு அடிமை பூணச் செய்தார். அப்பால் சுவாமிகள் மனமகிழ்ந்து, 'தாங்கள் பாமாலைச் செய்யுளில் சிவ பெருமானுக்குரிய திருநகர் சிதம்பரமேயெனக் குறிப்பால் சுட்டி விளக்கியிருத்தலால், அத்தில்லையில் சிலகாலம் இருக்க' எனப் பணித்து விடை கொடுத்தார்.

அடிகள் அவ்வாறே சிதம்பரஞ்சென்று சிலகாலம் தங்கியிருந்து பின்னர்ச் சிவத்திருநகர்களெங்குஞ் சென்று வணங்கிக்கொண்டு வந்து துறைமங்கலத்திற்குப்போய் ஆங்கு முன்போலவே அண்ணாமலை ரெட்டியார் என்பவருக்குத் திருவருள் செய்து, அவர் வேண்டுகோட்படி வாலிகண்டபுரத்துக்கு வடமேற்பாகத்துள்ள திருவெங்கை மாநகரில் தம்பொருட்டு அவரால் கட்டுவிக்கப்பட்ட திருமடத்தில் எழுந்தருளியிருந்து அத் திரு நகரிலுள்ள பழமலை நாதர்மீது திருவெங்கைக்கோவை முதலிய நான்கு நூல்களையும் இயற்றியருளினார்.

பின்னர், அண்ணாமலை ரெட்டியார் அடிகளை நோக்கி, 'அடிகள் இல்லற வாழ்க்கையை மேற்கொள்ளவேண்டு' மென விண்ணப்பஞ் செய்துகொண்டார். அதற்கு அடிகள் உடனே,

'சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பணியும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலாம் நாறுவய தளவிருந்து
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ளல் ஆகாதே'

என்னும் அரிய பாடலினால் தம் இசைவின்மையை உணர்த்தி அருளினார்.

பின்பு, அடிகளின் தம்பியர்களான வேலைய சுவாமிகள், கருணைப் பிரகாச சுவாமிகள் இருவரிடமும் ரெட்டியார் தம் வேண்டுகோளை விண்ணப்பித்தார். இருவரும் திருமணஞ் செய்தற்கு விருப்புடைமை யைத் தெரிவித்தனர்.

சிவப்பிரகாச அடிகள் தம் இளவல்கள் இருவரின் கருத்தை அறிந்து தாம் துறவறம் மேற்கொண்டுள்ளமையை அவர்கட்குத் தெரிவித்து அவ்விருவர்க்கும் 'மனைத்தக்க மாண்புடைய' மங்கைய ரிருவரைத் தேர்ந்து உரியகாலத்தே திருமணம் புரிவித்தார்.

அப்பால், தம்பால் அன்புமிக்க அண்ணாமலைரெட்டியாரோடு சிதம்பரத்திற்குச் சென்று ஆங்கே ஒரு திருமடங் கட்டுவித்து அதில் எழுந்தருளியிருந்து நாள்தோறும் இறைவழிபாடு செய்துகொண்டு சிவப்பிரகாச விலாசம், தருக்க பரிபாஷை, சதமணி மாலை, நால்வர் நான்மணிமாலை என்னும் நூல்களை இயற்றி யருளினார். அதன் பின்னர் ஆங்கிருந்தும் புறப்பட்டு, மற்றத் திருநகரங்களையும் வணங்கிக்கொண்டு திருக் காட்டுப்பள்ளியை அடைந்தார். அங்கே கடவுள் வழிபாடு செய்து கொண்டு தங்கியிருந்து வரலானார். அதுகாலைக் கல்வியறிவிற் சிறந்த ஒரு பெண் தெருவில் உப்புவிற்றலைக் கண்டார். அப் பெண்ணின் நல்லூழையும், தகுதியையும் தம் கூர்த்த அறிவால் உணர்ந்து அவர் புலமையை மக்கட்குப் புலப்படுத்தத் திருவுளங் கொண்டார். உடனே ஒரு வெண்பாவினால் அவளிடம்,

"வெறைய உளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக்கணிந்த பெம்மான்—உறையும்
திருக்காட்டுப் பள்ளி திரிபாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி எமக்கு'

என வினவினார். அப்போதே, அப்பெண்,

‘தென்னோங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்
பொன்னோங்கு சேவடியைப் போற்றினோம்—அன்னோன்
திருக்கூட்டம் அத்தனைக்கும் தெண்டனிட்டோம் தீராக்
கருக்கூட்டம் போக்கினோம் காண்’

என்னும் வெண்பாவால் விடையிறுத்தாள். அப்பால் சிவப்பிரகாச அடிகள்பால் அளவற்ற அன்புப் பெருக்கால் நெருப்பிலிடு நெய்யென மனமுருகி வணங்கி நின்றாள். அப்பெண்ணுக்கு மெய்யுணர்வு உண்டாகுமாறு அருள்நோக்களித்தார்.

அதன்பின் காஞ்சிநகர் சென்று கடவுளைத்தொழ எண்ணி அண்ணாமலை ரெட்டியாரோடு புறப்பட்டுப் போகுங்கால், வழியிலே சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு கலந்துபேசிக் களிகூர்ந்தார். பின்னர் அவரை நோக்கித் ‘தாங்கள் பேரூரில் எதை யெண்ணி எழுந் தருளியுள்ளீர்?’ என வினவினார். அதற்கு அவர், ‘சிவஞான பாலைய தேசிகரைக் காண்டல் விருப்பத்தோடு போந்தேன்’ என்றார். பின்னர் இருவரும் பேரூர் சென்று பொம்மைய பாளையத்துக்கு அண்மையி லுள்ள புந்துப்பட்டு என்னும் நகரத்தை யடைந்தவுடன் சாந்தலிங்க சுவாமிகள் சிவப்பிரகாச அடிகளை நோக்கி, ‘நாம் இருவரும் சிவஞான பாலைய சுவாமிகளைக் கண்டு வணங்க வேண்டுவதிருப்பதால், அவர்கள் மீது சில புகழ்ப்பாக்கள் அருளுக’ என வேண்டினார். அதற்கு அடிகள், ‘யாம் மக்கள்மீது பாடுவதில்லை’ என்றார். இருவரும் ஆங்கே அன்று தங்கினர். அன்று இரவு அவ்வூர் ஐயனார் கோவிலின் பக்க இடத்தில் தூங்கினர். அக்கால், முருகக்கடவுள் மயில் ஊர்தியின் காட்சி கொடுத்து எழுந்தருளி, ஓர் ஏனத்தில் விடுபூக்களை இட்டு, ‘இவற்றை மாலையாகத் தொடுத்து எமக்கு அளிப்பாயாக’ எனத் திருவாய் மலர்ந்தருளி, மறைந்ததாகக் கனவு கண்டார். விழித் தெழுந்தவுடன் தாம் கண்ட கனவைச் சாந்தலிங்க சுவாமிகள்பால் கூறினார். அதுகேட்ட சுவாமிகள் அடிகளை நோக்கி, ‘சிவஞான பாலைய தேசிக சுவாமிகள் முருகப்பெருமான்மீது அளவற்ற பத்திமை யுடையவர். ஆதலால் முருகப்பெருமானே தங்கட்குக் கனவில் இவ்வாறாகச் சுவாமிகளின் பெருமையை விளக்கிக் குறிப்பாக உணர்த்தியருளினர். எனவே, அடிகள்மீது பாடுதல் சிறந்த’தென வேண்டினர். அவர் வேண்டுகோளை மறுக்காராகி, அத் தேசிகர்மீது பேரன்புடன் தாலாட்டு, நெஞ்சுவிடு தூது என்னும் புகழ் நூல்களைப் பாடித் தேசிகர் திருமுன்னிலையில் அரங்கேற்றினார் தேசிகர், சிவப்பிரகாச அடிகள்பால் திருநோக்கம் வைத்து உண்மையறிவைப் புகட்டி யருளினர். அதன்பின் தேசிகரின் கட்டளைப்படி சாந்தலிங்க சுவாமி கட்குத் தம் தங்கை ஞானாம்பிகையாரைத் திருமணஞ் செய்து கொடுத்து

விட்டு, தம்மை விடாது நெடுநாட்களாக உழுவலன்புடன் தொடர்ந்து வந்த அண்ணாமலை ரெட்டியாரைத் துறைமங்கலத்துக்குச் செல்லும் படி கட்டளையிட்டுத் தம் ஞானகுருவாகிய சிவஞான பாலய தேசிகரை வணங்கிக்கொண்டு அங்கேயே தங்கியிருந்து வரலானார்.

பின்னர்ச் சிலகாலம் அவ்வாறே சென்றபின் தேசிகர்பால் விடை பெற்றுக் காஞ்சிபுரம் சென்று கடவுளை வணங்கிக்கொண்டு ஆங்கிருக்கும்போழ்து, நிசகுணயோகி என்பவரால் கன்னட மொழியில் செய்திருந்த விவேகசிந்தாமணியின் ஒரு பாகமாகிய வேதாந்த பரிச்சேதத்துக்கு வேதாந்த சூடாமணி எனப் பெயர் கொடுத்துத் தனி நூலாகப் பாடினார். இரேணுகர் என்னும் கணத்தலைவரால் அகத்திய முனிவருக்குக் கூறப்பெற்ற சித்தாந்த சிகாமணியையும் அல்லமதேவ ராகிய பிரபுதேவர் வரலாறான பிரபுலிங்க லீலையையும் அழகுறப் பாடி யருளினார்.

அப்பால் தம் ஞானகுரவரைக் காண எண்ணி அவர்மீது திருப்பள்ளி யெழுச்சி, பிள்ளைத்தமிழ் என்னும் இரு நூல்களையும் செய்து முடித்துப் புறப்பட்டுத் திருநகர்களை வணங்கிக்கொண்டு கூவம் என்னும் திரு நகரையடைந்து, அங்குள்ளோர் வேண்டுகோட்படி திருக்கூவப் புராணம் பாடி அரங்கேற்றித், தேசிகரை அடைந்து வணங்கி அவர்மீது பாடிய இரண்டு நூல்களையும் அரங்கேற்றி அவருடன் இருந்து வரலானார். அந்நாளில் ஒருநாள் மாலைப்பொழுதில் மாலை வழிபாடுகளை முடித்துக் கொண்டு தம் ஞானாசிரியரிடத்தில் தனித்திருந்து 'ஷடுஸ்தல இலிங்கானு பவ'த்தை ஆராய்ந்து கொண்டிருந்தார். அப்போது பிறைநிலவு எதிரே தோன்றியெழுந்தது. அதைக் கண்டதும்,

> 'கடல்முரசம் ஆர்ப்பக் கதிர்க்கயிற்றால் ஏறி
> அடைமதி விண்கழைநின் றாடக்—கொடைமருவும்
> எங்கள் சிவஞான ஏந்தல் இறைத்தமணி
> தங்கியவே தாரகைகள் தாம்'

என்னும் அரிய கருத்தமைந்த வெண்பாவொன்றைப் பாடினார்.

பின்பு, தேசிகர் பணித்தவாறு பழமலையையடைந்து, ஆங்குப் பழமலைநாதரையும் பெரியநாயகியம்மையாரையும் வணங்கினார். ஆங்குத் தம்பொருட்டாக, ஒரு திருமடம் கட்டி எதிர்கொண்டு வணங்கிநின்ற சிதம்பர பூபதியென்பார்க்கு அருள்செய்து அம் மடத்தில் தங்கியிருந்து, பழமலை அந்தாதி, பிட்சாடன நவமணிமாலை, கொச்சகக் கலிப்பா, பெரியநாயகியம்மை ஆசிரிய விருத்தம், பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை என்னும் புகழ்நூல்கள் ஐந்தினையும் திருவாய் மலர்ந் தருளினார்.

இங்ஙனம் அடிகள் இருக்கும் நாளில் சிவஞான பாலையதேசிக சுவாமிகள் உலகின்கண் வெறுப்புற்ற நீரராய்த் தம்மாணவருள் ஒருவருக்கு ஆசிரிய முழுக்குச்செய்து, உண்மையறிவு புகட்டி அவரைத் தமக்கு அடுத்த நிலையில் தலைமையாக்கிப் பட்டமளித்துத் தாம் ஒரு வைகாசித் திங்கள் பௌர்ணமி கூடிய சுளகு (விசாகம்) நன்னாளில் இட்டலிங்க பரசிவத்திலே கலந்தருளினார்.

இதனையறிந்த சிவப்பிரகாச அடிகள் பொம்மபுரஞ் சேர்ந்து ஆசிரியர் ஒடுக்கமுற்ற குகையுட் சென்று கண்ணீர் சொரிய அடியற்ற மரம் போல் விழுந்து பன்முறை வணங்கி எழுந்து நின்று 'இக்கடையேனை விரைவிலே நும் திருவடியில் சேர்த்தருளுக' என வேண்டி, தாம் இயற்றிய கலம்பகத்தையும் திருமுன் பாடினார்.

அப்பால் அக்குகையில் மூன்றும் பட்டத்துச் சுவாமிகளோடு தங்கியிருந்தனர். ஒருநாள் தன்னந்தனியராய்க் கடற்காட்சி காணச்சென்று, அங்கு நறுமணற் பரப்பிலே நன்னெறி என்னும் பெயருடைய நூலாக நாற்பது வெண்பாக்கள் எழுதினார். அவற்றைத் தம் இளவலாகிய கருணைப்பிரகாச சுவாமிகளிடம் எழுதிக்கொண்டு வரும்படி கட்டளை விட்டார். அவர், அவ்வாறே எழுதிக்கொண்டுவந்து அடிகள் திருமுன் சேர்த்தார்.

அதன்பின், தம் பட்டத்துச் சுவாமிகளிடம் விடைபெற்றுக் கொண்டு இறைவன் எழுந்தருளியிருக்கும் திருநகர்கள்தோறும் வழிபட்டு வருங்கால், சதுரகராதி தொகுத்த வீரமாமுனிவரென்பார் எதிர்ப்பட்டுத் தம் சமயமாகிய கிறித்துமதக் கொள்கையை நிலைநாட்டுதற்கு அடிகளிடம் வாதுசெய்ய முற்பட்டார். உடனே அவர் கொள்கையை மறுத்து, ஏசுமத நிராகரணம் எனப் பெயர் சூட்டி ஒரு நூலியற்றினார்.

இவர் இளவலாகிய கருணைப்பிரகாச சுவாமிகள் இவர்பால்விடைபெற்றுச் சென்று இட்டலிங்க அகவல் என்னும் நூலொன்றைப் பாடி முடித்துச் சீகாளத்திப் புராணத்தைப் பாடத்தொடங்கி அந்நூல் சீகாளத்திச் சருக்கம் வரை தமிழில் மொழி பெயர்த்துப் பாடியருளித் திருவெங்கை நகரில் தம் பதினெட்டாம் அகவையில் இட்டலிங்கத்தோடு இரண்டறக் கலந்தார். அதனை யறிந்த சிவப்பிரகாச அடிகள் திருவெங்கை நகருக்குச் சென்று தம் இளவல் கருணைப்பிரகாசரின் பிரிவாற்றாமையை நினைந்து வருந்தி,

'முன்னமொரு தமிழ்ப்புலவன் தனைஉண்டு
கண்டசுவை முதிர்ச்சி யாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன்
நினைக்கவர்ந்து தடங்கா ளத்தி

மன்னவனுண் டானெனது மாதவத்தின்
வலிதீர மண்ணின் மீதே
என்னுடன்வந் தவதரித்த இளங்கருணைப்
பிரகாசன் என்னும் கோவே'

என்னும் விருத்தத்தைப் பாடினார்.

அப்போது தம் மற்றொரு தம்பியராகிய வேலைய சுவாமிகளும் தம் உடன்பிறந்தாரின் பிரிவாற்றாது வருந்துதல் கண்டு அவருக்குத் தேறுதல்மொழி கூறி நிறுத்திவிட்டுத் தாம் நல்லாற்றூரையடைந்து திருமடத்தி லெழுந்தருளியிருந்துகொண்டு, சிவநாம மகிமை, அபிஷேக மாலை, நெடுங்கழிநெடில், குறுங்கழிநெடில், நிரஞ்சனமாலை, கைத்தல மாலை, முதலிய நூல்களையும், சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பச் சருக்கம், நக்கீரச் சருக்கம் என்னும் இரண்டையும் பாடிமுடித்துச் சிவநெறிச் செல்வராய்ச் சிலகாலம் வீற்றிருந்து. தம் முப்பத்திரண்டாம் அகவையில் புரட்டாசித் திங்கள் பௌர்ணமி நன்னாளில், இட்டலிங்க பரசிவத்தில் இரண்டறக் கலந்தருளினார் என்ப.

சிவப்பிரகாச சுவாமிகள் திருவடி வாழ்க.

———

# முன்னுரை

[செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமிபிள்ளை, கழகப் புலவர்.]

## தோற்றுவாய்

பிரபுலிங்க லீலை என்னும் இந்நூல், தன்னேரில்லாத் தமிழ் மொழியை அணிசெய்யும் அரிய பெரிய காப்பியமாகும். இதனைக் கற்டனைக் கருவூலமாகிய சிவப்பிரகாச அடிகள் ஆக்கி உதவினர்.

பிரபுலிங்க லீலை என்னும் மூன்று சொற்களால் ஆகிய இச்சொற்றொடர்ப்பொருள், மேலான இறைவனது திருவிளையாடல் குறித்துக் கூறப்பெறும் நூல் எனப் பொருள் தருவதாகும். பிரபுலிங்கம்: பிரபுவாகிய லிங்கம் எனப் பண்புத்தொகை விரியும். பிரபு - செல்வன், 'அருட்செல்வம் செல்வத்துட் செல்வ' மென்று பேசப்பெறுதலின், பேரிரக்கப் பேருணர்வினையுடைய இறை சிவபெருமான் என்பது பெறப்பட்டது. லிங்கம் - குறி; அடையாளம். இஃது அருவுருவான சதாசிவத்தை உணர்த்தும். லீலை - திருவிளையாடல். இம்மூன்று வடசொற்களாற் பெயர் பெற்றது இந்நூல்.

பிரபுவாகிய அல்லமதேவரின் வரலாற்றைக் கூறுவதே இந்நூலின் உள்ளுறைப் பொருளாகும்.

இறைவன் செய்யும் தொழில்களெல்லாம் அவன் நினைந்தவுணையானே யாதொரு வருத்தமுமின்றி எளிதாக முடிதலின், விளையாட்டெனப் பெறலாயிற்று. இவ்வாறே பிறரும் [1]'அலகிலா விளையாட்டுடையார் அவர் தலைவர்' என்றதும், இறைவன் செயற்பாடுகளாகிய வற்றைத் தொகுத்துக் கூறும் ஒரு நூலுக்குத் 'திருவிளையாடற் புராணம்' எனப் பெயர் வழக்காற்றிலிருப்பதும் இதற்குச் சான்றாகும் துணையாக அமைவன. இதனைச் சிவஞான சித்தியார் சுபக்கத்திலும்,

> [2]'சொன்னஇத் தொழில்கள் என்ன
> காரணத் தோற்ற என்னின்
> முன்னவன் விளையாட் டென்று
> மொழிதலும் ஆமு யிர்க்கு

---

1. கம்பராமாயணம், கடவுள் வணக்கம், க.
2. சிவஞானசித். சுபக்கம். ௩௪.

> மன்னிய புத்தி முத்தி
> வழங்கவும் அருளான் முன்னே
> துன்னிய மலங்கள் எல்லாம்
> துடைப்பதும் சொல்லல் ஆமே'

என அருணந்தி சிவாச்சாரியார் அருளுவது அறியற்பாலது.

அல்லமதேவப் பிரபு என்பவர் இறை சிவபெருமான் சாயலென்பது இந்நூற்கண் கைலாசகதி (௯௪) ஆம் செய்யுளில் 'எமதுமெய்வடிவத்தானே அல்லம நாம மைந்தன் ஆயினும்' என்று கூறுதலால் உணரலாம்.

## நூல் வரலாறு

இதில் இறைவனும் இறைவியும் திருக்கைலைக்கண் வீற்றிருந்த போது ஆங்கே ஏனைய நாராயணர், பிரமர், இந்திரர் முதலிய தேவர்கள் யாவரும் இறைவனைக் கண்டு தொழுதற்கு வந்தனர். அது காலை இறைவி இறைவனைப் பார்த்து, 'இவர்கள் யாவரும் வீடுபேறு எய்துவரோ' வென வினவ, இறைவன் அதற்கு, 'இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொழிலினை மேற்கொண்டிருத்தலால், வீடுபேறடையார்' என, அப்பால் இறைவி, 'வீடுபேறடைதற்கு வழியாது?' தென வினவ, இறைவன் அதற்கு, 'மண்ணுலகில் மக்களாகப் பிறந்து யோகநெறியில் ஒழுகினால் மெய்யறிவு கைவரப்பெறுவர்' என்று கூற, இறைவி,'அத்தகைய மக்கட்பிறவி பெற்றோர்க்கு ஞானாசிரியனாக அமைபவர் யார்?' என்று கேட்க, இறைவன் 'யாமே' என்றும், 'யாமே அல்லமன் என்னும் பெயரோடு வருவே' மென்றும், 'எம்மை உன்னாற்கூடக் காண இயலா' தென்றும் உரைக்க, உடனே அம்மையார் சினங்கொண்டு, 'என்னாற் கூடக் காணமுடியாது என்பதென்னே? இங்குள்ளோர் யாவருமே உம்மை எளிதிற் காண்பார்' என்றனர். அதற்கு இறைவன், 'நீ சினங்கொள்ளாதே. அல்லமனென்பான் அன்பர்களின் அன்புக்கு வேண்டிய உருவங் கொண்டு தோன்றுவன்; ஆதலால், அவன் பெருமை அளப்பிடற்கரிது' என்றார். அதற்கு அம்மையார், 'யான் உலகில் பிறந்த எத்தகையோரையும் மாயையால் மயங்கச்செய்வேன்; அவ்வாறிருக்க அல்லமர் எவ்வாறு அதினின்றும் தப்புதற்குரியர்?' என்ன அதற்கு இறைவன், 'அவ்வாறாயினால் உன் ஆற்றலைக் காண்பேம்; இவ்வாறு நீ குனுரையாடினால் உனக்கே தோல்வி வருதல் உறுதி' என்றார். அப்பால் இமயச்செல்வி, 'என்சொல் எப்போதும் மாறுபடாது: தவறாது' என்றுரைத்துப் பக்கத்தில் நின்ற தமோகுண மாயையை அழைத்து, 'நீ மண்ணுலகஞ் சென்று அல்லமன் என்பாரைக் கண்டு-அப்பால் இவண் வருக' என்று கட்டளையிட்டாள்.

அதுகேட்ட மாயை இறைவியை வணங்கி, 'அம்மே! அல்லமன் இயற்கையை அறிந்து இவண் வருவேன்; அகப்படா தொழுவனேல் இவண் அவனை வலிந்து பற்றி இழுத்துக் கொணருவேன்' என்று வஞ்சினங்கூறி மண்ணுலகு நோக்கி வந்தாள். வந்தவள், விளவல நாட்டில் வனவசைநகர் என்னும் ஊரில் மமகாரனென்னும் அரசனுக்கு அவன் மனைவி மோகினி பால் மகளாகத் தோன்றினாள். அவட்கு மாயை என்னும் பெயர் சூட்டித் தந்தை மகிழ்கின்றான். பின்னர்ப் பருவமங்கை ஆகின்றாள். பிரபுதேவராகிய அல்லமர் மத்தளிகன் என்னும் பெயரோடு மக்கள் உடல் கொண்டு உலகிற்கு வருகின்றார். பல அருஞ் செயல்களை ஆற்றுகின்றார். நந்திதேவர் முதலிய தேவகணங்கள் சிவபெருமான் ஆணையால் வசவண்ணர் முதலியவர்களாக உலகில் பிறந்து வாழ்ந்து வருகின்றனர். மாயை, அல்லமரைக் கண்டு காதலாகி அணைய முயல்கின்றாள். அவர் பிடிபடாது கையிற் பிடிக்கவொண்ணா வானவெளி போல் ஆகின்றார். அதனால் அவள் வருந்துகிறாள். பின்னர் உமையம்மை நெடுங்காலம் ஆகியும் மாயை வாராமை கண்டு விமலையைக் கைலையிலிருந்து மண்ணுலகிற்கு வரவிடுக்கின்றாள். விமலை வந்து மாயையைக் கண்டு உரையாடுகின்றாள். மாயை அல்லமரின் வரலாறெல்லாம் விளக்கமாக விமலைக்கு எடுத்துரைக்கின்றாள். பின்னர் அல்லமதேவர் பல இடங்கட்குஞ் சென்று வீரசைவ மாண்பை விளக்கி உலகில் வீரசைவ நெறியை வளர்த்துக் கொண்டிருக்கின்றார். அதன்பின் உமையம்மை, திருக்கைலையில் இறைவனை நோக்கி, 'இவ்வுலகிற்குச் சென்ற நந்தி முதலிய சிவகணங்களும் என்னுடைய கூறாகிய நற்கலை முதலியவர்களும் என்ன செய்கின்றார்கள்?' என, இறைவனை வினவ, அதற்கு இறைவன், சிவகணங்கள் முதலியோர் பல இடங்களில் தங்கியிருத்தலையும் உலகில் அவர்களால் வீரசைவம் வளர்க்கப்படுதலையும் விளக்கமாக உரைக்கின்றார். இறைவி, 'வீரசைவம் எதனால் உயர்ந்தது?' என வினவ, அதற்கு இறைவன், அதன் சிறப்பியல்புகளை விளக்கமாக விரித்துரைக்கின்றார். இறைவி, இறைவனை அணுகி, 'உண்மையை உணர்ந்தேன்' எனப் பணிகின்றாள். அப்பால் இறைவன், 'அல்லமன் மாயையைக் கடந்தவன்' எனக் கூறி, அம்மையோடு வீற்றிருந்தார். குருகுகேசனாகிய அல்லமர் உலகில் யாவர்க்கும் வீடுபேறருளும் தொழிலை மேற்கொண்டிருந்தாரென்பது கூறி இந்நூல் முடிபுறுகின்றது. இதுவே இந்நூலின்கண் உள்ளுறையாக அமைந்த கதைப்பொருள்.

## இந்நூற் பொருள்வளம்

இந்நூல் வீரசைவ மாண்பை விளக்க - வளர்க்க - அடிகளால் அருளப்பட்டதேனும் இதன் உள்ளுறை பொருள்களானவை, எந் நாட்டவர்க்கும் எம்மதத்தவர்க்கும் பொதுநெறியே ஆகுமென்ப

தொருதலை. பருப்பொருள் காதை. நுண்பொருள்: இதன்கண் காணப்படும் ஒழுக்க நெறிகளும், கவிச்சுவை, கற்பனை மாண்பு, வீரசைவ நுண்மை முதலிய பலவுமாகும்.

இந்நூலில் சாதி சமய வேறுபாடு கருதாது ஓதி, நுண்பொருளும் காவிய ஓவிய நயங்களும் பிறவும் கண்டு களித்து இன்புறுதற்கேற்ற, நகை அழுகை இளிவரல் மருட்கை அச்சம் பெருமிதம் உவகை வெகுளி யென்னும் எண்வகைச் சுவையும் அமைந்து சிறந்தொளிர்தலை, இதனைக் காய்தல் உவத்தல் அகற்றிப் பயில்வார் கண்கூடாக உணரலாம்.

ஆசிரியர், கேடில் விழுச்செல்வமாகிய கல்விச் செல்வத்தில் மேம்பாடுற்றதோடன்றி, இறைவன் பேரருட்செல்வமும் பெற்ற பெரும்பேறுடையவராகலான், தம் கற்பனை நயத்தோடு இறையருள் நயமும் கெழுமக் காப்பியமாக நமக்கு இதனை ஆக்கி உதவியருளினார்.

'உணர்வினின் வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்' என்னும் நன்னூலாரின் நன்மொழிக்கு இலக்காக இந்நூற்செய்யுட்கள் மிளிர்கின்றன. ஓசைநயம், பொருள்வளம், வருணனை, குறிக்கோள் யாவும் செய்யுட்களில் வளனுற அமைந்துள்ளன.

[1] 'புவியினுக் கணியாய் ஆன்ற பொருள் தந்து புலத்திற்றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும்

தழுவி'யன இவர் செய்யுட்கள் எனின், புகழ்ச்சியன்று; மிகையுமன்று. இதனானே, தமிழ்கூறு நல்லுலக மக்களிடையே இன்றும் இது நிலை பெற்றொளிர்கின்றது.

இந்நூலைத் துவங்குமுகத்தானே, உலக முதல்வராகிய இறைவன் இறைவி வணக்கங் கூறுங்காலத்தே பிறபிற நூலாசிரியர்கள் போலாது, கற்பார் நெஞ்சங் கரைந்து கரைந்து உருகுமாறு அரிய பெரிய உவமையும் உலக இல்லற நிகழ்ச்சியில் காதல் கணவர், மனைவியர்க்கிடையே நிகழும் ஊடல் நிகழ்ச்சியில் காதல் சான்ற கருத்தினையும் வடித்துக்கொடுத்து இன்புறச் செய்திருப்பது நெஞ்சை அள்ளும் சிறப்பாக அமைந்துள்ளது.

'பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன் கைகால்
முடங்கு பொறியிலிதன்
நாவாய் ஒழுகிற் றெனவுலகம் அளந்த
மாலும் நான்முகனும்
காவாய் எனநின் றேத்தெடுப்பத் தானே
யுவந்தெங் கரதலத்தின்

1. கம்பரா, சூர்ப்ப: க.

'மேவா அமர்ந்த மாமணியைத் தொழுது
விணைக்கு விடைகொடுப்பாம்'
"ஆதி பகவன் தனதூடல் தணிப்பான்
பணிய அவ்விறைவன்
பாதம் இறைஞ்சும் அதற்கும்நெற்றிப் பகையும்
அல்குல் பகையுமாம்
சீத மதியும் அரவும்விழும் செயற்கும்
உவகை செயாமல் அலை
மாது பணியும் அதற்குமனம் மகிழும்
உமையை வணங்குவாம்.''

(திகதி க : உ

இவ்விரண்டு செய்யுட்களும் முறையே இறைவன், இறைவி வணக்கமாக அடிகளால் நூலின் தொடக்கத்தில் கூறப்பெற்றவையாகும். இவைகளின் பொழிப்பு:

"மலர்கள் பொருந்திய நீண்ட மரத்துக்கொம்பின் நுனியில் உள்ள நல்ல தேனானது, (அதைப்பெறத் தகுதியுடையான் ஒருவனுக்குக் கிட்டாமல்) கைகளும் கால்களும் முடங்கிய அறிவற்றவொருவன் நாவினிடத்தே அவன் முயற்சியின்றியிருந்தும் தானே வந்து ஒழுகினாற் போல, உலகையளந்த திருமாலும் நான்முகனும், 'அடியேங்களைக் காத்தருள்க' என வேண்டித் தொழுது தன்னை அடைதற்குரிய வழியில் கருத்தூன்றி வாழ்த்த (அவர்பால் செல்லாமல்), பேரருட்பெருக்கால் தானாகவே எழுந்தருளி வந்து (எம் முயற்சியும் இல்லாத) என் உள்ளங்கையிடத்தே போந்து எழுந்தருளியிருக்கின்ற முழுமாணிக்கம் போன்ற செந்நிறமேனிச் சிவபெருமானைத் தொழுது எம்மைப் பற்றியிருக்கின்ற இருவினைகளுக்கும் 'எம்மைவிட்டுச் செல்லுமின்' என்று விடைகொடுத்துப் போகச்செய்வாம்.''

'ஆதிபகவனாகிய இறைவன், தன்னிடம் கொண்ட பிணக்கைத் தணிக்கும் பொருட்டாக வணங்க, அத்தகைய இறைவனே தன் திருவடிகளில் வணங்குகின்ற செயலுக்காகவும், நெற்றிக்குப் பகை, அல்குற்குப் பகையான மூன்றும் பிறை நாகப்பாம்பு ஆகிய இவை வணங்குகின்ற செயலுக்காகவும் மகிழ்ச்சியடையாமல், கங்காதேவி வணங்குகின்ற செயலுக்காகத் திருவுளம் மகிழ்கின்ற உமையம்மையாரை வணங்குவோமாக' என்பதாம்.

'பூவாய் நெடுங்கோடுஉறு பசுந்தேன் கைகால் முடங்கு பொறியிலிதன், நாவாய் ஒழுகிற்று என' என்பது வரை உவமங் காட்டப்பெறுகின்றது. மலர்கள் மிக்க நீண்ட கொம்பு என்றமையால் மரமென்பது குறிப்பினால் விளங்கிற்று. அதன்கண் நல்ல செவ்வி

வாய்ந்த தேன் உள்ளது ; அது, கையும் காலும் முடக்கம் பெற்று ஒன்றைச் செய்யவும் நடக்கவும் இயலாத ஒருவன், அஃதோடு அதனைப் பெறுதற்குரிய முயற்சியோ அதன் சுவையை உணரும் தன்மையோ மூற்றும் அற்றவன். இத்தகையோனுடைய நாவினில், தானே அம் மரத்தினின்றும் அத் தேன் கசிவெடுத்து வந்து ஒழுகினாற்போல என அரிய உவமை குறித்தார். 'பூவாய்' என்றமையால் மரத்தின் செழிப்பும் இலை பூ காய் முதலிய நெருக்கமும், 'நெடுங்கோடு' என்றமையால் அம் மரத்தில் ஏறிக் கொள்ளற்கேற்றதல்லாத அரிய நிலையும், 'உறுபசுந்தேன்' என்றமையால் தேன் உண்டு களித்தற் கேற்ற அளவுடன் சுவையும் பக்குவமும் கெடாத தன்மையும் கொள்ள வைத்தார். பின், அஃது ஒருவனுக்கு விரும்பாதிருக்கக் கிடைத்த நிலைக்குக் 'கைகால் முடங்கு' என்றமையால் குறித்தார். ஒருவனுக்கு ஒன்றைச் செய்துமுடித்தற்கு முதன்மையான உறுப்பு கையும் காலுமாகும். கை வன்மையுடன் இருப்பின் எதனையும் எளிதில் முடிக்கலாம்; காலும் வலிமையுற இருந்தால் கடத்தற்கரிய பல இடுக்கு வழிகளையும் ஏறிச்செல்லும் நிலையிலுள்ள உயரிய இடத்தையும் நடந்து கடந்து சென்று அடையலாம். அவை இரண்டும் உறுப்பாக இருக்கின்றனவேயன்றிச் செய்தற்கேற்ற நிலையினில்லாமல் முடங்கப் பெற்றுப் பயனில்லாத நிலையில் இருக்கின்றன. இவ்வாறிருப்பினும், அதைக் கேட்கப் பார்க்கக் கூடாத நிலையினனாக ஊமையனாய்ச் செவிடனாய்க் குருடனாய் இருக்கின்றானென்பதைப் 'பொறியிலி' என்றமையாற் பெறவைத்தார். இன்னநிலையிலுள்ளவனுக்கு அவன் எந்த முயற்சியும் கருத்தும் இன்றியிருந்தும் தானே தன் வாய்க்குள் நாவினகத்து வந்து விழுந்தது என்பதை 'நாவாய் ஒழுகிற்றென' என்ற தொடரால் கூறினர். இக் கருத்தோடொப்பக் 'கையில் ஊமன் கண்ணிற் காக்கும் வெண்ணெய் உணங்கல் போல,' எனக் குறுந்தொகையிலும் (௫௮) வருதலை அறிந்து இன்புறுக.

இதுகாறும் உவமங்கூறி உவமம் ஏற்ற உவமேயத்தை இனித் தொடங்குகின்றார். அது, 'உலகம் அளந்த மாலும் நான்முகனும்...... விடைகொடுப்பாம்' என, முடிகின்றது.

வேண்டி வேண்டி அல்லும் பகலும் ஓய்வின்றி முயல்பவர் இருவர், அவர் மிக்க அளவில் ஆற்றல் கொண்டவர் என்பதைக் குறிப்பாராய், 'உலகம் அளந்த மாலும் நான்முகனும்' என்னும் சொற்றொடரால் சுட்டியுணர்த்தினர். அத்தகைய ஆற்றல் பெற்றாரும், 'காக்குக எம்மை'யென வேண்டியும் அழுதும் தொழுதும் ஏக்கற்று நிற்க என்பாராய்க் 'காவாய் என நின்றேத் தெடுப்ப' என்ற சொற்றொடரால் விளக்கினார். அவர்கட்கெல்லாம் அருள் செய்யாது என்பால் வேண்டாது வறிதே இருக்கும் என்னிடத்துத், தானாகவே

வலிதில் மகிழ்வுற்று எழுந்தருளி வந்து ஒன்றுக்கும் பற்றாத எளியேன் கையகத்து மெய்ம்மையாக அமர்ந்தான் என்பதை, 'தானே உவந்து எம்......அமர்ந்த' என்னும் அரிய சொற்றொடரால் பெறவைத்து, அவ்வாறு அமர்ந்தோன் யாவன்? எது? என வினவுவார்க்கு அவன் தான் சிவபெருமான், முழுமுதல் இறையென்றெல்லாம் கூறுது, விடையாக 'மாமணி' என்ற சொல்லாற் குறித்து அரிய பெரிய கருத்தமைதியுடன் பொருள் செறியப் பெறவைத்தார். மாமணி, பெரியமணி, முழுமணி, குறைவற்ற மணி எனப் பலபொருள் நயங்கள் கெழும உரைதந்தருளினர். இம் மணியை மணிமொழிப்பெருமான், "பொல்லாமணி" யெனப் பாராட்டிப் புகழ்வர். பொல்லாமணி, பொள்ளாமணி, பொள்ளல் - பொத்தல், துளை. பொள்ளா - அஃதாவது துளைக்கவொண்ணாத மணி. துளைத்தற் கேலாத தன் இயற்கை சிதையாத மணி. பொல்லா என்பது அதன் திரண்ட பொருள். மணி - மாணிக்கம். மாணிக்கம் செந்நிறமுடையது. இதுபோல் இவனும் செந்நிறமுடையான் எனப் பலப்பல பொருள்கள் யாவும் ஒருங்கே செறிந்து கிடப்ப ஆகுபெயராற் பெறவைத்தார். இறை சிவபெருமானை மணிமொழிப்பெருமான், 'போதாய்த் தனைவ தென்று கொல்லோ என்பொல்லாமணி யைப்புணர்ந்தே' எனவும், "சிவனெனும் நாமம் தனக்கே யுடையசெம் மேனி எம்மான்' எனவும், பிறப்பறுத்து வீடுபேறு பெறும் நெறியைச் 'சிறப்பென்னும் செம் பொருள்' எனவும் பிற பெரியார்களும் கூறுமாற்றான் அறியப்பெறும்.

'இவ்வாறு அவன் கையகத்து எழுந்தருளினதால் ஆம்பயன் என்னை?' என்பார்க்குச் சொன்னயமும் பொருள் நயமும் ஒருங்கே விறைய, அவனை வணங்கவேண்டும். வணங்கி அன்பு கசிந்து ஒழுகி வருவோமாயின், நம்மைப் பற்றின இருவினை, மும்மலங்கள் முற்றும் அற்றொழிந்து பிறப்பற்று நிலையான வீடுபேற்றின்பம் அடைதல் உறுதியென்பாராய்த் 'தொழுது வினைக்கு விடைகொடுப்பாம்' என்ற சொற்றொடர் கொண்டு முடித்து, இறைவன் பேரருட் பெருக்கினன் என்பதும், அவன் தடுத்தாட்கொண்டு அருள் சுரப்பன் என்பதும், அவனை வணங்குதல் வேண்டுமென்பதும், வணங்குவோர் இருள்சேர் இருவினையற்று வீடுபேறடைதல் திண்ணமென்பதும் ஒருங்கே பெறவைத்த அடிகள் ஒட்பம் அம்மம்ம! அளவிடற் கரியது!

பின் 'ஆதிபகவன்' என்று தொடங்கும் அம்மையார் வாழ்த்துப் பாடற்கும் இவ்வாறே பொருள் விரிப்பின் மிக நீண்டு செல்லுமாகலின் அன்பர்கள் ஆய்ந்து அறிவார்களாக.

இனி, இந்நூலின் ஏனைய உட்கிடக்கையான சில நயங்களை மட்டும் கூறி இதனை முற்றுவிப்பாம்.

## (க) எடுத்துக்காட்டுவமை

வனவசை மாநகரின்கண் அமைந்துள்ள அகழியின் ஆழத்திற்கும், அந்நகரின் மதிலின் உயர்ச்சிக்கும் உலக இயலை எடுத்துக்காட்டி அழகுறக் கூறியிருக்கும் நுட்பம் சுவைத்துச் சுவைத்து இன்புறற் பாலது. அங்குள்ள அகழி தாழ்ந்துள்ளமையால் பூமியைத் தாங்கும் ஆதிசேடன் என்னும் பாம்பின் தலைமேல் இருக்கின்றது. மதில் தாழாமல் இறுமாந்து மேலோங்கியெழுந்து உயர்ந்திருப்பதனால் ஞாயிற்றின் காலின் கீழ் மிதிபட்டுத் தாழ்ச்சி யடைந்துள்ளது. ஆகலான், உலகில் தாழ்ந்தோர் உயர்வுபெறுவாரென்றும், உயர்ந் தோர் தாழ்வு அடைவாரென்றும் உலகோர் சொல்லும் பழமொழி உண்மையென்பதை இவை விளக்கிநிற்கின்றன என்பதற்கு எடுத்துக் காட்டாக இலகுகின்றதெனக் கூறி அறமும் கற்பனைத் திறனும் ஒருங்கமையச் செய்யுள் யாத்த சதுரப்பாடு இன்புறற்குரித்து.

> 'தாழ்ந்தோர் உயர்வ ரென்றுமிக
> உயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறம்
> சூழ்ந்தோர் உரைக்கும் உரைகண்டா
> மதில்சூழ் கிடந்த தொல்லகழி
> தாழ்ந்தோர் அனந்தன் மணிமுடிமேல்
> நின்றன் றுயர்ந்து தடவரையைச்
> சூழ்ந்தோர் வரையின் உதிப்பவன் தாட்
> கீழ்நின் றதுபோய்ச் சூழெயிலே'.

(மாயையின் உற். கச)

இதில் வனவசைமாநகர் அகழி, பாதாளம்வரை ஆழமுடையதாய் வற்றாத நீரையுடையதாய் விளங்குகின்றன வென்றும், அந்நகர் உயர்ந்த மதில்கள் சூரியமண்டலம் வரை உயர்ந்துள்ளது வென்றும் அதனால் அந்நகர், நீரரண், மதிலரண் முதலிய அரணால் சிறப்புற்றுப் பகைவர் போர்முற்றுகை கொள்ளற்கியலாத பாதுகாப்புள்ளதாகத் திகழ்கின்றதென்றும் உணர்த்தினர். இதனால் உயர்வு நவிற்சியணி அமைந்திருத்தல் ஓர்க.

## (உ) வருணனைகள்

மாயை பிறந்தாள், அவளை வளர்த்தனர் என்று கூறத் துவங்கிய ஆசிரியர், எவ்வாறு வளர்த்தனர் என்பதை உவமத்தால் சுட்டியுணர்த்தி

அவ்வுவமமாகக் கூறப்பெறும் பொருள்களின் தன்மையையும், அவற்றை ஓம்பும் சீர்மையையும் கற்பார் அறிந்தின்புறுமாறு அமைத்து விரித்துரைத்திருப்பது இன்பவிருந்தாகவுளது.

'மிடிய னொருசெய் யானனச்செய்
விளையக் காக்கும் செயல்போலப்
படியில் கல்வி விரும்பினோன்
பாடம் போற்றும் அதுபோல
ஓடிவில் செங்கோல் மனுவேந்தன்
உலகம் புரக்கும் முறைபோலக்
கொடிய நோன்பு செய்தீன்ற
கொடியை வளர்த்தாள் மோகினியே.'

(மாயையின் உற் : சக)

வறியவன் ஒருவன், அவனுக்கு இருப்பது ஒரே ஒரு நன்செய்நிலம்; அதில் அவன் பயிர் செய்தால், அதற்கு உரியகாலத்தில் நீர் பாய்ச்சுதல், களைகட்டல், காவல் செய்தல், காலந் தவறாது சென்று சென்று பார்த்தல் முதலியன செய்து பாதுகாப்பான்; ஆகலான், அதுபோன்றும், கல்வியின் விருப்பங்கொண்டோன், கற்பதற்கு நாள்தோறும் புதுப் பாடம் படித்து நெட்டுருச்செய்தலும், பழம் பாடத்தை நாள்தோறும் தவறாது படித்து மறவாதிருத்தலும் கடப்பாடாகக் கொண்டொழுகுவான. ஆகலான், அதுபோன்றும், செங்கோல்முறை செலுத்தி நெறிமுறைதவறாது ஆளும் மன்னன். குடிமக்கட்குத் தீமை வாராதவாறு பாதுகாத்தும், அவர்க்கு வேண்டும் நலங்கள் பல செய்தும் வையமன்னுயிராக அவ்வுயிர் உய்யத்தாங்கும் உடலன்னனாக இருந்து பாதுகாக்க வேண்டுவது முறையாகலான், அதுபோன்றும் என்றும் அரிய உவமங்கூறி, மாயையை எவ்வளவு அருமையாக அவள் தாய் போற்றி வளர்த்தாள் என்பதை விளக்கியவாறறிக. அஃதோடு வறியன் எவ்வாறு தன் வேளாண்மைத்தொழிலை மேற்கொண்டு நடத்தவேண்டுமென்றும், கற்கும் மாணவன் எவ்வாறு கற்றுத்துறைபோக வேண்டுமென்றும், அரசன் எவ்வாறு நாட்டைப் பாதுகாக்க வேண்டுமென்றும் விளக்கிய மேம்பாடும் அறிந்தின்புறற்பாலனவாக அமைந்துள்ளன.

அவள், இளங்குதலைப் பருவமாக இருந்து இன்சொற் கூறித் தாய் தந்தையர்க்கு மகிழ்வூட்டிய சிறப்பை—இனிய மழலை மொழியின் கனிவை,

'குழலும் யாழும் இனியவெனக்
கூறு வண்ணம் மென்கனிவாய்
மழலை மொழிந்தும் உடற்கின்பம்
மருவ ஓடி மேல்விழுந்தும்
விழையும் அமிழ்தின் மிகஇனிமை
விளைய நுகரும் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்தும்
செய்தாள் மோகம் ஈன்றோரை.'

(மாயையின் உற் : ௩உ)

என, மாயையின் குழந்தைப்பருவ மென்சொல்லைக் குழலிசையும் யாழிசையும் ஒவ்வாதன என, அழகுற அமைத்துக் காட்டிக் கற்பார்க்குக் 'குழலினிது யாழினிது' என்னும் வள்ளுவப் பெருமான் திருக்குறட்கருத்தைக் கண்டின்புற வைத்திருப்பதும், அஃதோடு அவள் குழந்தைப் பருவச் செயற்பாட்டினை 'இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்படவிதிர்த்தும், மயக்குறு மக்கள்' என்னும் பாண்டியன் அறிவுடைநம்பியின் ஒட்பக் கருத்தும் அறிய அமைத்துளதும் மகிழ்வுறுத்தும் தன்மையாக அமைந்துள்ளன.

இனி, மாயைக்குப் பல்வகை அணிகள் அணிந்து அழகுக்கு அழகு செய்த திறத்தை நகைச்சுவையும் தன்மை நவிற்சி அணியும் அமையக் கூறியிருப்பது வியத்தற்குரியதாக இருப்பதை ஓர்மின்.

'தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேற்பழி சார
மன்னி அங்கது நிகரற வாழ்மனை வாய்தன்
முன்னி றந்திடு வேனென ஞான்றுகொண் டுறைமை
என்ன வெண்மணி மூக்கணி ஒருத்திநின் றிட்டாள்.'

(மாயை பூசை : ௧௧)

மாயைக்கு ஏனைய அணிகளெல்லாம் அணிந்தனர். முகத்திற்கு அணிவன மூக்கிற்கு அணியும் அணிகளே; அவற்றுள் மூக்கிற்கு மூக்குத்தியும், மூக்கின் உள்ளிடத்துள்ள மூக்குத்தண்டின்கீழ் மூக்கணி (புல்லாக்கு) அணிந்தனர். அது முத்தாலாகிய புல்லாக்கு; அது தலைகீழாகத் தொங்குவது. ஆதலால், அது தொங்குவதை அடிகளார் தற்குறிப்பேற்ற அணியாக அமைத்து, ஒரு கருத்தைத் தமிழ்கூறு நல்லுலக மக்கட்கு அரியவிருந்தாகத் தந்துள்ளார். அஃதாவது மூக்கணி தொங்குவது; அவ்வணி முத்தாலானது; முத்து மாயையின் பல்லின் வெண்ணிறத்துக்கும் ஒளிக்கும் தன்மைக்கும் ஒத்த நிலையான உவமை.

இவளின் பற்கள், முத்தின் குணங்களினும் மேம்பட்டு முத்தை இகழ்கின்றன. அவ்விகழ்ச்சியைப் பொறாத முத்து பற்களின்மேல் வருத்தங்கொண்டு அது தன்னிகரற்று வாழ்கின்ற வாய்க்கு முன்னாகப்போய், 'உன் இகழ்ச்சியை என்னாற் பொறுத்தற்கு இயலவில்லை எனக்கு மிக நாணத்தைத் தருகின்றது; இதோ இறந்துபோகின்றேன்' எனவுரைத்து நான்றுகொண்டு தொங்குவதுபோலத் தோன்றும்படி ஒருத்தி மாயைக்கு மூக்கணி இட்டாள் என, இறும்பூது திகழக் கூறியது மிக மகிழ்வுக்குரித்தாகவுளது காண்க. இது, கற்பனையின் தலைமணியாகத் திகழ்வதுடன் இல்பொருளுவமை யணியும் கலந்து மகிழ்தருதலைக் கண்டின்புறுக.

## (௩) அரிய சொற்றொடர்

'அன்ன நடையும் அன்னமிலா
ஐயர் நடையும் தளர்வெய்தக்
கன்னி நடக்கும் நடைகற்றான்'

(மாயையின் உற் : [illegible])

'அள்ளிக் கொளும்பேர் அழகன்'

(பிரபுதேவர் வந்தகதி : ௧௧)

'ஒன்றும் இல்லேன் நான்நீவிர்
மிகவும் உடையீர்' (பிரபுதேவர் வந்தகதி : ௪௧)

'நாம்பார்க் குழவி ஆகாமல் நம்பாற்
குழவி ஆயினான்' (விமலை கதி : ௧[illegible])

'பஞ்சின் மேன்மிதிப் பினும்பதை
பதைக்குமென் பதங்கள்' (மாயைகோலா : ௪[illegible])

'கொங்கைப் பொறையைக் கொண்டு
மருங்குற் கொடிவாட
அங்கைக் குடசெய் பெய்தழல்
என்ன அழகெய்தி' (அக்கமாதேவி துறவு : ௨)

'கடலின் விழுந்து துயர்பவர்க்குக்
கலமொன் றருகு வந்ததென' (கொக்கி : ௨௨)

'அடியர் வேண்டிற் றேபுரியும் அல்ல
மப்பேர் எம்பெருமான்' (கொக்கி : ௧௰)

'உதித்த ஞாயிறு போன்றுசெம்
மணியினம் ஒளிர' (சித்தரா : ௰)

'காஞ்சிரங் கனிதின் றுங்குக் கடையனேன்
பிழைபொ றுத்தாய்' (வசவண்ணர் : ௪௧)

'உடம்பெலாம் உள்ளமாய் உருகிக்கண்கள்நீர்
அடங்குறு தொழுகமெய் விதிர்ப்ப'
(சூனிய......இருந்த : ௪௭)

'வான மல்லேன் வளியல்லேன் அழல்நீர்
அல்லேன் மண்ணல்லேன்' (மனோலய : ௧௧)

## (௪) நல்லறக் கருத்துக்கள்

'கொலைகள வழுக்கா றவாவொடு வெகுளி
கொடுஞ்சொல்பொய் பயனில கூறல்
நிலையழீஇ ஒருவன் செய்ந்நன்றி மறத்தல்
நிந்தனை வஞ்சனை பிறர்தம்
சிலைநுதல் மடவார்க் கருதலென் றினைய
தீமைகள்' (அக்கமாதேவி உற் : ௨௪)

'சாதியும் குறியும் நீத்துச் சரணரைச் சிவனே
என்று
பாதபங் கயமிறைஞ்சல்' (அக்கமாதேவி உற் : ௪௭)

'தமக்க டாதது செய்துயிர் வாழ்வது தன்னிற்
சுமைக்க டாதமெய் விடுத்தலே நன்று'
(அக்க......துறவு : ௨௧)

'வந்தநல் விருந்திருப்ப மனையினுற் றருந்து வானும்'
(அக்க......துறவு : ௩௧)

'கற்பழி மனைவியோடு கலந்திருப் பவனும் மற்றோர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற் கெண்ணு
வானும்' (அக்க......துறவு : ௩௭)

'பெரியவர் தம்மைக் காய்ந்தான் பிறங்கல்கல்
வியகோல் ஒப்பான்
புரிவன புரியப் பட்டுப் புலம்புவன்
ஒத்தார்க் காய்ந்தான்
எரிகர கதனில் வீழ்வன் இழிந்தவர்க்
காய்ந்தான் என்றால்
ஒருவர்தம் இடத்தும் சீற்றம் உறுமையே
நன்று மாதோ' (சித்தராமையர் கதி : கக)

'துறவறம் மனைய றஞ்சீர் தூய்மைநற்
கல்வி நல்லோர்
உறவொடு மகங்கள் தானம் ஒண்தவம்
விரதம் பூசை
அறிவிவை அனைத்தும் இல்லை ஆதர
வில்லை ஆயின்' (வசவண்ணர் : சக)

'பெரியவர் சிறியவர் என்னும் பெற்றிமை
அரவணி கடவுள்தன் அடியார் தம்முளே
தெரிபவன் எவனவன் சிறியன்' (ஆரோகண கதி : கக)

## (ரு) சமயக் கருத்துக்கள்

'நாமரு பத்தொ டொன்றுறத்
தனைந்துள கிரியையாற் சார்கிலார்' (கைலாச கதி : ௩0)

'வினைதபும் அன்பர் அல்லால் வேண்டிய
வடிவன் ஆகி
அனையவர் விழியின் தோன்றி அருளுவன்
அலம தேவன்' (கைலாச கதி : ௩க)

'நெஞ்செனும் அகலில் அன்பால்
நெய்ந்நிறைத் துள்ளம் என்னும்
பஞ்சுறு திரியின் உச்சி
பற்றிட அல்ல மப்பேர்
அஞ்சுடர் இலக ஏற்றி
அருந்தவர் மாயை என்னும்
துஞ்சிருள் அகன்றி ருந்தார்' (மாயையின் உற் : சக)

'மெய்ம்மை சிவமே அல்லாத
 விரியும் உலகம் பொய்என்பார்
இம்மை மறுமை நிலையல்ல
 என்ன நிகழ்ந்த கருத்தினோர்
செம்மை நெறியிற் புறமோடகம்
 திரியுங் கரணம் காமாதி
பொய்ம்மை வினையில் அவர்குருநூல்
 பொருளாய்த் துணிந்து வீடுவப்பார்' (விமலை கதி : கக)

'வாயு நிற்ப மனநின்று மனந்தான்
 நிற்பப் பொறிநின்று
பாய பொறிகள் நிற்ப இடர்
 படுபுன் புலன்கள் நின்றனவால்
ஆய புலன்கள் நின்றமையால்
 அகிலம் தோன்று துள்ளத்தே
தூய பரமா னந்தபரஞ்
 சோதி தோன்றக் கண்டிருந்தார்' (விமலை கதி : உக)

'புலன்களை ஒழித்த போதே பொறிகளும்
 பூதம் ஐந்தும்
கலங்குறு கரணம் நான்கும் கலாதியும்
 சுத்தம் ஐந்தும்
விலங்குறும் அடியில் வைத்த வெறுங்குடம்
 தன்னின் மேன்மேல்
மலங்குற ஒருங்க டுக்கும் மட்குலம்
 விழுத லேபோல்' (சித்தரா : எஉ)

'ஆதலான் மனமடங்கில் அங்கலிங்
 கங்கள் தம்முள்
பேதமோ அபேதமோவென் றறிவுறு
 பித்து நீங்கும்
நீதலாய் என்றி யம்பிச் சித்தரா
 மற்கு நாவால்
ஓதொணு உணர்வின் உண்மை உணர்த்தினன்
 குருகு கேசன்' (சித்தரா : எச)

'பொருவில்சற் பத்தியாம் தாரம் பூண்டொரு
வரவயி ராகமாம் வத்தி ரம்புனைந்
தொருவலில் உணர்வெனும் செச்சை ஒன்றுறப்
பரமனை இருத்துவோன் பத்தன் ஆகுவான்'

'ஒன்றின்றென் றுள்ளுற உடம்பு மூன்றையும்
மன்றநல் வத்திர மடிய தாக்கியே
என்றுமங் கமைவுற இட்டம் வைப்பனேல்
அன்றவன் சிவமயம் ஆகும் என்பவே'

'அருளெனும் புனலினை ஆட்டிச் சாந்தமாம்
வரைநறுஞ் சந்தொடு மருவ இந்திய
விரைமலர் புனைந்தறி வினைய ருத்துறில்
பரமனை யவன்சிவ பத்தன் ஆகுவான்'

(இட்டலிங்க கதி உ0-உ)

'வெங்கொலை களவுபொய் வெகுளி ஆசையென்
றிங்கிவை யொடுமரீஇ இருக்கின் றூர்தமக்
கங்கையின் நெல்லிபோல் அவிர்ச டைப்பிரான்
செங்கையில் இருப்பினும் சேயன் சேயனே'

( ,, : கஅ)

'இருவினை தாம்வரும் யானெனை லாலவ்
இருவினை யால்வரும் இன்பொடு துன்பம்
இருவினை யானெனல் இன்றெனில் இல்லை
இருவினை இல்லெனில் இல்லை பிறப்பே.'

(மனோலய கதி :அ)

---

# முடிப்புரை

இன்னும் இந்நூற்கண், மக்கட்கு அகவாழ்வுக்கும் புறவாழ்வுக்கும் இல்லற துறவற நெறிகட்கும் வேண்டும் அரிய நுண் கருத்துக்கள் செறிந்து 'எல்லாப் பொருளும் இதன்பால் உள' என்னும் பொருளுரைக்கு இலக்காக இந்நூல் இலகுறுகின்றது.

இந்நூலில் இடம்பெற்ற எல்லாக் கருத்துரைகளையும் நுண் பொருள், உவமை நயம், கற்பனைத் திறம், சமயக் கருத்து, பொதுமை அறம், சிறப்பறம் ஆகிய யாவற்றையும் எடுத்து விளக்குவதாயின், கரையில; இடம் போதா. ஆகவே, இதனைக் கற்பார் யாவரும் இதன் நுண்பொருள் அமைப்புக்கள் சிலவேனும் முதற்கண் அறிந்து கோடற்கு வாய்ப்பாகச் சிற்சில ஈங்கே பொறிக்கப்பட்டன

இப்பிரபுலிங்க லீலை, ஏனைய நூல்கள்போல் பெண்மையைக் கண்டு ஆண்மை தன் நலமெல்லாம் கெட்டுக் காமத்தால் காதலித்தும், அக்காதற்கு இடங்கொடாது ஆண்மை வீறுற்று நின்ற அரிய காட்சியராக அல்லமதேவரையும் மாயையையும் சித்தரித்து, இன்று உலகத்து இனிய காணச்செய்த புதுமைக் கருத்துக்கு, நம் முதுமை அறிவுகொடு இந்நூலைக் கற்றலும் கேட்டலும் கற்பித்தலும் செய்து மக்கட்பிறப்பாலெய்தும் மாண் பயன் எய்துவதே கடப்பாடாகும்.

இதுவே, என்றுமுளா தென்றமிழ்க்கும், 'நீதியினல் அவை யெல்லாம் ஓரிடத்தே காண நின்றதியா தொருசமயம் அது சமயம்' என்னும் திருமொழிக்கு இலக்காகிய நம் சைவநெறிக்கு ஆற்றும் பெருந்தொண்டுமாகும்.

---

# உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| | பதிப்புரை | ௫ |
| | சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு | ௭ |
| | முன்னுரை | க௫ |
| | முடிப்புரை | ௩௦ |
| க. | துதி கதி | 2 |
| உ. | கைலாச கதி | 12 |
| ௩. | மாயையின் உற்பத்தி கதி | 35 |
| ௪. | மாயை பூசை கதி | 61 |
| ௫. | பிரபுதேவர் வந்த கதி | 83 |
| ௬. | விமலை கதி | 118 |
| ௭. | மாயை கோலாகல கதி | 133 |
| ௮. | வசவண்ணர் வந்த கதி | 159 |
| ௯. | அக்கமாதேவி உற்பத்தி கதி | 172 |
| க௦. | அக்கமாதேவி துறவு கதி | 191 |
| கக. | கொக்கிதேவர் கதி | 208 |
| கஉ. | முத்தாயி அம்மை கதி | 218 |
| க௩. | சித்தராமையர் கதி | 226 |
| க௪. | வசவண்ணர் கதி | 249 |
| க௫. | மருளசங்கர தேவர் கதி | 265 |
| க௬. | இட்டலிங்க கதி | 274 |
| க௭. | கதலிவன கதி | 288 |
| க௮. | சாதகாங்க கதி | 295 |
| க௯ | கோரக்கர் கதி | 303 |
| உ௦. | முனிவரர் கதி | 322 |
| உக. | சூனிய சிங்காதன கதி | 328 |
| உஉ. | சூனிய சிங்காதனத்தில் இருந்த கதி | 332 |
| உ௩. | ஆரோகண கதி | 349 |
| உ௪. | மனோலய கதி | 366 |
| உ௫. | மான்மிய கதி | 372 |
| | செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை | 379 |

## சிவப்பிரகாச சுவாமிகள் வணக்கம்

புனையெழில் வடிவி னாளோர்
பொற்கொடி கண்ட மைந்தர்
மனமெனப் புலவர் நெஞ்சம்
மருளும்இன் தமிழ்ப்பா மாலை
சினவிடை யவர்க்கே சாத்தும்
சிவப்பிர காசன் என்னும்
முனிவன்எம் அடிகள் பாத
மூளரிகள் சென்னி சேர்ப்பாம்.

# பிரபுலிங்க லீலை

---

### காப்பு

சுரகு லாதிபன் றூய்மலர் நந்தனம்
பெருக வார்கடற் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரணம் நாளும் தலைக்கணி யாக்குவாம்.

*[இந்நூலாசிரியர் தாம் செய்யத் தொடங்கிய இந்நூல் இனிது நிறைவேறும் பொருட்டுத், தம்மை வழிபடுவாரின் இடையூறுகளைப் போக்கியருளும் ஆனைமுகக் கடவுளை இச்செய்யுளால் வணங்குகின்றார்.]*

(அரும்பதவுரை) சுரகுல அதிபன்-தேவர் குலத்திற்குத் தலைவன் (தேவேந்திரன்). தூய்மலர் - தூய்மையான மலர். நந்தனம் - பூம்பொழில். பெருக - செழித்துவளர. வார்கடல்பெய்த வயிற்றினோன் - நீண்ட கடலைக் குடித்த குறுமுனிவர் (அகத்தியர்). கரகம்-கமண்டலம். மதகரி - மதத்தினையுடைய யானைத் தலையமைந்த பிள்ளையார். சரணம்-திருவடி. தலைக்கு அணி ஆக்குவாம் - தலைக்கு அணிபொருளாகக் கொள்வாம். தலைக்கணி - தலையிற்புனையும் மாலை எனவும் பொருள் கூறலாம். கண்ணி - கணி எனக் குறைந்து நின்றது.

முன் ஒரு காலத்தில் தேவர்கோன் சீகாழிப்பதியின்கண் நறுமலர்க் காவொன்றமைத்து நற்றொண்டு புரிந்திருந்தனன். அந்நாள் மழையின்மையின் மலர்க்கா வாடியது. தேவர்கோன் இறைவனை நோக்கிக் குறையிரந்தனன். இறைவனருளால் ஆனைமுகக் கடவுள் காகவடிவமெடுத்துச் சென்று குறுமுனிவரின் கமண்டலநீரைக் கவிழ்த்தருளினார். அது காவிரியாகப் பெருகிவந்து காவினை விரிந்து தழையச் செய்தது என்பது புராணக்கூற்று. அதனையுட்கொண்டு ஆசிரியர் இவ்வாறு காப்புக் கூறினார்.

---

## க. து தி கூ தி

### சிவபெருமான்

பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன்
　　கைகால் முடங்கு பொறியிலிதன்
நாவா யொழுகிற் றெனவுலகம்
　　அளந்த மாலும் நான்முகனுங்
காவா யெனநின் றேத்தெடுப்பத்
　　தானே* யுவந்தெங் கரதலத்தில்
மேவா அமர்ந்த மாமணியைத்
　　தொழுது வினைக்கு விடைகொடுப்பாம்.

(அ - ரை.) பூவாய் - மலர்கள் பொருந்திய. கோடு - கிளை. பொறியிலி - கண் பார்வையில்லாதவன். அறிவில்லாதவன் எனவும் கூறலாம். நாவாய் - நாவில். வாய்: ஏழனுருபு. நாவாய் - நாகைக் கொண்ட வாய் எனவும் கூறலாம். காவாய் - காப்பாய். மேவா - மேவி: செய்யா என்ற வாய்பாட்டெச்சம். ஒழுகிற்று என - ஒழுகினாற் போல. ஏத்தெடுப்ப - வணங்கி நிற்க. கரதலத்தில் - கையிடத்தில். மேவா அமர்ந்த - விரும்பி யெழுந்தருளிய. வினைக்கு - தீவினைக்கு. விடை கொடுப்பாம் - போயகல்கவென்று விடையளிப்பாம்.

வீரசைவர்கள், குழவி தாயின் கருவில் இருக்கும்போதே அக் குழவிக்கென ஒரு சிவலிங்கத்தைத் தாயின் கழுத்தின் கட்டி வைப்பர்; அவ்வாறு கட்டுவதற்குக் கருப்பலிங்க தாரணம் என்று பெயர். பின் குழந்தை பிறந்த பிறகு அதற்கு அவ்விலிங்கத்தை எடுத்து அணிவர். பிறந்து வளர்ந்து அறிவு முதிரப்பெற்று இறைவனை வழிபாடு செய்ய எழுந்தருளுவித்துக் கொள்ளும் ஏனைய சைவர்போலன்றித் தாம் விரும்புவதற்குமுன் இறைவனாகவே வந்து வலிந்து ஆட்கொள்ளுதலின் "தானே உவந்தெங் கரதலத்தில் மேவா அமர்ந்த மாமணி" என்றார்.

இல்லாத பொருளை ஒப்புக்காட்டுதலின் இஃது இல்பொருளுவமையணி. (க)

### உமாதேவியார்

ஆதி பகவன் தனதுடல் தணிப்பான் பணிய அவ்விறைவன்
பாதம் இறைஞ்சு மதற்கு நெற்றிப் பகையும் அல்குற் பகையுமாம்

---

* தானே வந்தெங்கரதலத்தின்; என்றும் பாடம் உளது. தணிப்பான் - நீக்குதற்கு.

சீத மதியும் அரவும்விழுஞ் செயற்கும் உவகை செயாமலை
மாது பணியு மதற்குமன மகிழும் உமையை வணங்குவாம்.

(அ - ரை.) ஆதிபகவன்-முதற்கடவுள் (சிவபெருமான்.) சீதமதி-குளிர்ந்த திங்கள். அரவு-அணியாகத் தாங்கியுள்ள பாம்பு. அலைமாது-கங்கை. நெற்றிப்பகை, சீதமதி. அல்குல் பகை, அரவு.

மாற்றாள் பணிதல் மகிழ்ச்சியை விளைக்குமாதலின், குளிர்ந்த திங்களும் பாம்பும் விழுதற்குக்கூட இறைவி மகிழாது அலைமாது பணியும் அச்செயலுக்கு மனமகிழ்வாளாயினள். இச் செய்யுளில், எளிதின் முடிபணி, விரனிறையணி, இன்பவணி, சுவையணி முதலியன கலந்து வருதலின் கலவையணியின்பாற்படும். (உ)

## ஆனைமுகக் கடவுள்

மாரன் எடுத்து வளைக்குமொரு கரும்பை ஒடித்து மலர்சிதறி
நாரி யடுத்த அளிமாலை குலையத் துரந்து நயந்தோடி
வீர மனத்து வினைப்பாகர் குறிப்பி னொழுகி விளையாடும்
ஈர மதிச்செஞ் சடைக்களிநல் யானை யிணைத்தாள் ஏத்துவாம்.

(அ - ரை.) மாரன் - காமன். நாரி அடுத்த அளிமாலை - காமன் வில்லுக்கு நாணியாகப் பொருந்திய வண்டுக்கூட்டம். குலைய - கலைந்து போக. துரந்து - துரத்தி. வினைப்பாகர் - இருவினை யொப்பினராகிய அஞ்சாமையையுடைய சிவசரணர். குறிப்பின் ஒழுகி - கருத்தின்படி நடந்து.

காமன் கரும்பு வில்லை யொடிக்கும். அவன் மலர்ப் பாணத்தைச் சிதறும். வில் நாணியாகிய வண்டுகளைத் துரத்தும். எனவே மதன்கணை பாயாது விலக்கும் என இவ்வியானையின் சிறப்புக் கூறப்பட்டது.

ஆனைமுகக் கடவுள் தம் அடியவர்க்குக் காமக்கலக்க முண்டாகாதவாறு அருள்புரிவர் என்னும் கருத்தைக் கொண்டு ஆசிரியர் இவ்வாறு கூறினார். (௩)

## முருகக் கடவுள்

யாக மொருபெண் குடியிருக்கும்
பரமன் அணியிற் பரித்தமணி
நாக நுழைவுற் றுடல்சுருண்டு
கிடந்து நருவெண் தலைப்புழையிற்

போக மெல்லத் தலைநீட்டிப்
பார்த்து வாங்கப் போகுமொரு
தோகை மயில்வா கனப்பெருமாள்
துணைத்தாட் கமலந் தொழுதிடுவாம்.

(அ - ரை) ஒருபெண்-மலைமகள். அணியில்-அணிகலனாக. பரித்து-தாங்கியுள்ள. நகுவெண் தலைப்புழையில் - நகைப்பது போல் விளங்குகின்ற வெள்ளிய தலையின் துளையில். போக - வெளியே செல்ல. வாங்க - உள்ளே இழுத்துக்கொள்ள.

பாம்பின் குலப்பண்பைக் கூறுதலின், தன்மைநவிற்சியணி இச்செய்யுளில் வந்துள்ளது. மயிலைக்கண்டு பாம்புகள் அஞ்சி ஒடுங்குவது இயல்பாகலின் முருகன் மயில் வாகனத்தில் வந்தபோது சிவன் சென்னியில் அணிந்துள்ள பாம்புகள் அங்ஙனம் அடங்கின. (௬)

அல்லமதேவர்

கலையை மதிக்கும் புலவர்தமைச் சித்தர் குழாத்தைக் கடவுளரை
நிலையை மதிக்கு முனிவரரைத் திசைமா முகனை நிரைவளையாச்
சிலையை மிதிக்கு நெடியோனை விழுங்கி உமிழாத் திறல்மாயை
தலையை மிதிக்கும் அல்லமன் செங்கமல மலர்த்தாள் தலைக்கணிவாம்.

(அ - ரை.) கலையை - அறுபத்துநான்கு கலைகளை. மதிக்கும் - உணரும். நிலையை - உண்மைப் பொருளாகிய தத்துவநிலையை. நிரைவளை - வரிசையாக வளையலையணிந்த பெண்: அன்மொழித்தொகை; ஈண்டு அகலிகையை உணர்த்திற்று. சிலை - கல். நெடியோன் - திருமால்.

புலவர்களையும், சித்தர்களையும், தேவர்களையும், முனிவர்களையும், நான்முகனையும், திருமாலையும் தன்வசப்படுத்திப் பின்னர் அவர்கள் தெளிவடையாமலே மயக்குகின்ற மாயை எனவும், அம்மாயையின் தலையை மிதிக்கும் அல்லமன் எனவும் கொள்க. "மாயையின் தலையை மிதிக்கும் அல்லமன்" என்றது, மாயையை வென்றவன், மாயையின் மயக்கத்தைக் கடந்தவன் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது. (௭)

வசவேசர்

வெள்ள வேணிப் பெருந்தகைக்கு
யாஞ்செய் அடிமை மெய்யாகக்
கள்ள வேடம் புனைந்திருந்த
கள்வ ரெல்லாங் களங்கமறும்

உள்ள மோடு மெய்யடியா
ராக உள்ளத் துள்ளுமருள்
வள்ள லாகும் வசவேசன்
மலர்த்தாள் தலையால் வணங்குவாம்.

(அ - ரை.) வெள்ளவேணிப் பெருக்தகை-கங்கையைச் சடையில் தாங்கியுள்ள இறைவன். களங்கமறு-குற்றமற்ற. உன்னும்-எண்ணும். அருள்வள்ளல்-அருட்கொடையை உடையோன். யாம்செய் அடிமை-நாம் செய்த தொண்டு. மெய் ஆக - உண்மைத் தொண்டாகும் பொருட்டு. மெய் அடியார் ஆக - உண்மைத் தொண்டராகும்படி. உன்னும் வசவேசன் எனக் கூட்டுக.

கள்ளர்கள், சிலர் கள்ளத்தனமாக உண்ணும் பொருட்டுங் களவு செய்யும் பொருட்டும் வசவர் திருமடத்துட் புகுந்திருந்தனர். அவர்கள் தம்மைப் பிறர் ஐயுருவாறு கத்தரிக்காய்களைத் துணியால் மூடிச் சிவலிங்கங்களைப்போலக் கட்டிப் பொய்க்கோலம் பூண்டு சென்றிருந்தனர். அவர்களைப் பந்தியில் அமர்த்திப் பூசனை புரியுமாறு புகன்றபோது அவர்களுடைய பொய்ம்மைத் தன்மை வெளியாயிற்று. பந்தி வழிபாட்டிற்குச் சிறிதும் தவறு வராமல் வசவர் அவர்கள்மீது அருட்கண் நோக்கஞ் செலுத்தி அக் கள்வர்கள் அனைவரையும் மெய்யடியார் களாக்கியதுடன் அவர்கள் அணிந்திருந்த கத்தரிக்காய்களையும் உண்மையான சிவவடிவங்களாக மாற்றினார் என்பது புராண வரலாறு. அவ்வரலாற்றினை யுட்கொண்டு ஆசிரியர் இவ்வாறு வணக்கங் கூறுவாராயினர். (௬)

சென்னவசவர்

பங்க வளற்று வழிமாற்றி ஒருநல் வழியைப் பகர்வார்போல்
தங்கள் மதியிற் பலபிதற்றுஞ் சமய ருரைகள் தமைநீக்கி
அங்க நிலையிற் றிலிங்கநிலை யிற்றென் றருளும் வீரசைவ
சிங்க நிலைத்த அருட்சென்ன வசவன் திருத்தாள் சிரத்தணிவாம்.

(அ - ரை.) பங்கம் அளற்று வழிமாற்றி - குற்றம் பொருந்திய சேற்று வழியை நீக்கி. தங்கள் மதியில் - தங்கள் அறிவில். அங்கநிலை இற்று - அங்கத்தினது நிலைமை இத்தன்மைத்து. இலிங்கம் நிலை இற்று-இலிங்கங்களின் நிலைமை இத்தன்மையுடையது. என்று அருளும் - என்றெடுத்துக்கூறிய, வீரசைவ சிங்கம் - வீரசைவ வழியிற் சிங்கம் போற் சிறந்தவன்; (வீரசைவ சிங்காதனத்தில் - வீரசைவ அரியணையில்; சிறப்பாக அமர்ந்திருந்தவன் எனினுமாம்.)

அங்கம் ஆறுவன: பக்தன், மாகேசன், பிரசாதி, பிராணலிங்கி, சரணன், ஐக்கியன். இலிங்கம் ஆறுவன: ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சங்கமலிங்கம், பிரசாத லிங்கம், மகாலிங்கம். (௭)

போக மெல்லத் தலைநீட்டிப்
பார்த்து வாங்கப் போகுமொரு
தோகை மயில்வா கனப்பெருமான்
துணைத்தாட் கமலந் தொழுதிடுவாம்.

(அ - ரை) ஒருபெண்-மலைமகள். அணிபில்-அணிகலனுக. பரித்த-தாங்கியுள்ள. நகுவெண் தலைப்புழையில் - நகைப்பது போல் விளங்குகின்ற வெள்ளிய தலையின் துளையில். போக - வெளியே செல்ல. வாங்க - உள்ளே இழுத்துக்கொள்ள.

பாம்பின் குலப்பண்பைக் கூறுதலின், தன்மைநவிற்சியணி இச்செய்யுளில் வந்துள்ளது. மயிலைக்கண்டு பாம்புகள் அஞ்சி யொடுங்குவது இயல்பாகலின் முருகன் மயில் வாகனத்தில் வந்தபோது சிவன் சென்னியில் அணிந்துள்ள பாம்புகள் அங்ஙனம் அடங்கின. (௩)

## அல்லமதேவர்

கலையை மதிக்கும் புலவர்தமைச் சித்தர் குழாத்தைக் கடவுளரை
நிலையை மதிக்கு முனிவரரைத் திசைமா முகனை நிரைவளையாச்
சிலையை மிதிக்கு நெடியோனை விழுங்கி உமிழாத் திறல்மாயை
தலையை மிதிக்கும் அல்லமன் செங்கமல மலர்த்தாள் தலைக்கணிவாம்.

(அ - ரை.) கலையை - அறுபத்துநான்கு கலைகளை. மதிக்கும் - உணரும். நிலையை - உண்மைப் பொருளாகிய தத்துவநிலையை. நிரை வளை - வரிசையாக வளையலையணிந்த பெண் : அன்மொழித்தொகை; கண்டு அகலிகையை உணர்த்திற்று. சிலை - கல். நெடியோன் - திருமால்.

புலவர்களையும், சித்தர்களையும், தேவர்களையும், முனிவர்களையும், நான்முகனையும், திருமாலையும் தன்னகப்படுத்திப் பின்னர் அவர்கள் தெளிவடையாமலே மயக்குகின்ற மாயை எனவும், அம்மாயையின் தலையை மிதிக்கும் அல்லமன் எனவும் கொள்க. "மாயையின் தலையை மிதிக்கும் அல்லமன்" என்றது, மாயையை வென்றவன், மாயையின் மயக்கத்தைக் கடந்தவன் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது. (௪)

## வசவேசர்

வெள்ள வேணிப் பெருந்தகைக்கு
யாஞ்செய் அடிமை மெய்யாகக்
கள்ள வேடம் புனைந்திருந்த
கள்ள செல்வங் களங்கறும்

உள்ள மோடு மெய்யடியா
ராக உள்ளத் துள்ளுமருள்
வள்ள லாகும் வசவேசன்
மலர்த்தாள் தலையால் வணங்குவாம்.

(அ - ரை.) வெள்ளவேணிப் பெருந்தகை-கங்கையைச் சடையில் தாங்கியுள்ள இறைவன். களங்கமறு-குற்றமற்ற. உள்ளும்-எண்ணும். அருள்வள்ளல்-அருட்கொடையை உடையோன். யாம் செய் அடிமை-நாம் செய்த தொண்டு. மெய் ஆக - உண்மைத் தொண்டாகும் பொருட்டு. மெய் அடியார் ஆக - உண்மைத் தொண்டராகும்படி. உள்ளும் வசவேசன் எனக் கூட்டுக.

கள்ளர்கள், சிலர் கள்ளத்தனமாக உண்ணும் பொருட்டுங் களவு செய்யும் பொருட்டும் வசவர் திருமடத்துட் புகுந்திருந்தனர். அவர்கள் தம்மைப் பிறர் ஐயுறுவாறு கத்தரிக்காய்களைத் துணியால் மூடிச் சிவலிங்கங்களைப்போலக் கட்டிப் பொய்க்கோலம் பூண்டு சென்றிருந்தனர். அவர்களைப் பந்தியில் அமர்த்திப் பூசனை புரியுமாறு புகன்றபோது அவர்களுடைய பொய்ம்மைத் தன்மை வெளியாயிற்று. பந்தி வழிபாட்டிற்குச் சிறிதும் தவறு வராமல் வசவர் அவர்கள்மீது அருட்கண் நோக்கஞ் செலுத்தி அக் கள்வர்கள் அனைவரையும் மெய்யடியார்களாக்கியதுடன் அவர்கள் அணிந்திருந்த கத்தரிக்காய்களையும் உண்மையான சிவவடிவங்களாக மாற்றினார் என்பது புராண வரலாறு. அவ் வரலாற்றினை யுட்கொண்டு ஆசிரியர் இவ்வாறு வணக்கங் கூறுவாராயினர். (௬)

சென்னவசவர்

பங்க வளற்று வழிமாற்றி ஒருநல் வழியைப் பகர்வார்போல்
தங்கள் மதியிற் பலபிதற்றுஞ் சமய ருரைகள் தமைநீக்கி
அங்க நிலையிற் றிலிங்கநிலை யிற்றென் றருளும் வீரசைவ
சிங்க நிலைத்த அருட்சென்ன வசவன் திருத்தாள் சிரத்தணிவாம்.

(அ - ரை.) பங்கம் அளற்று வழிமாற்றி - குற்றம் பொருந்திய சேற்று வழியை நீக்கி. தங்கள் மதியில் - தங்கள் அறிவில். அங்கநிலை இற்று - அங்கத்தினது நிலைமை இத்தன்மைத்து. இலிங்கம் நிலை இற்று- இலிங்கங்களின் நிலைமை இத்தன்மையுடையது. என்று அருளும் - என்றெடுத்துக்கூறிய, வீரசைவ சிங்கம் - வீரசைவ வழியிற் சிங்கம் போற் சிறந்தவன்; (வீரசைவ சிங்காசனத்தில் - வீரசைவ அரியணையில் சிறப்பாக அமர்ந்திருந்தவன் எனினுமாம்.)

அங்கம் ஆறுவன: பக்தன், மாகேசன், பிரசாதி, பிராணலிங்கி, சரணன், ஐக்கியன். இலிங்கம் ஆறுவன: ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சங்கமலிங்கம், பிரசாத லிங்கம், மகாலிங்கம். (௭)

## மடிவாலமாச்சையர்

வார்க்குங் குமமென் முலைபாக னடியார் அறுவை மாசடித்துத்
தீர்க்குஞ் செயல்போல் விச்சலமன் னவன்றன் சேனை செய்பிழையைத்
தாக்குங் கரவாள் கொடுசின்ன பின்ன மாகத் தடிந்திட்டுப்
போக்குங் கருணை மடிவால மாச்சன் பொன்னங் கழல்போற்றி.

(அ - ரை.) வார் - கச்சு. அறுவை - ஆடை. மாசு அடித்து - அழுக்குப் போக்கி. கரவாள் - கைவாள். தடிந்திட்டு - வெட்டி. வார்க்குங்கும மென்முலை: அன்மொழித் தொகை. சின்ன பின்னம் - சிறிய பல வேறுபாடு. கருணை போக்கும் எனக் கூட்டுக.

மடிவாலமாச்சையர் என்பவர் கலியாணபுரியில் வசவேசர் திருமடத்திலுள்ள அடியார்களின் ஆடைகளைத் தூய்மைப் படுத்திக் கொடுக்கும் திருத்தொண்டினைச் செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் அவற்றைத் துவைத்தற் பொருட்டுத் தண்ணீர்த் துறைக்கு எடுத்துச் செல்லும் வழியில் அவ்வாடைகளைத் தீண்டத்தகாதானொருவன் தீண்டி விட்டான். அவ்வளவில் மடிவாலமாச்சையருக்குப் பெருஞ்சின முண்டாகியது. உடனே அவர்தம் கைவாளைக் கொண்டு அவனை வெட்டிக் கொன்றார். இச்செய்தி விச்சல மன்னனுக்குத் தெரிந்தது. உடனே அவன் மடிவாலமாச்சையரைக் கொலை செய்யுமாறு தன் படையை ஏவினன் மடிவாலமாச்சையர் அப்படையையுந் தாறுமாறாகக் கொன்றொழித்தார்: இது புராண வரலாறு. இதனை யுட்கொண்டு ஆசிரியர் இவ்வாறு வணக்கங் கூறினர். (௫)

## சமயகுரவர் நால்வர்

பெண்ணிற் கரசு தானுக என்பு பெருநீற் றறைபிரச
வண்ணக் கமல மலர்ப் பொய்கை யாகச் செங்கல் மாழையாய்
நண்ணச் சிறிய நரிகள்முடங் குளைய பரியாய் நகர்புகுதப்
பண்ணற் குரிய அமுதுறழ்முத் தமிழ்நால் வரையும் பணிகுவாம்.

(அ - ரை.) என்பு பெண்ணிற்கரசு தானுக-எலும்பு பெண்ணிற்கு அரசி போன்ற ஒரு பெண்ணுருவாகத் தோன்றவும். பிரசவண்ணக் கமலமலர்ப் பொய்கை - தேன் பொருந்திய அழகிய தாமரை மலர்களையுடைய தடாகம். மாழையாய் நண்ண - பொன்னுகவும், முடங்குளையபரி - மடங்கிய பிடரி மயிரையுடைய குதிரை. பண்ணற்கு- செய்தற்கு. அமுதுஉறழ் - அமிழ்தத்தை ஒத்த.

சம்பந்தருக்குத் திருமயிலையில் என்பு பெண்ணாகியது. நீற்றறை அப்பருக்குக் குளிர்ந்தது. சுந்தரர்க்குச் செங்கல் பொன்னாக மாறியது. திருவாதவூரடிகள் பொருட்டு நரிகள் பரிகளாயினமை ஆகிய வியத்தகு செயல்கள் ஈண்டுக் குறிக்கப் பெற்றன. (௬)

## அடியார்கள்

பரவை கேள்வன் திருத்தொண்டத்
தொகையுள் அடியார் பத்தியெல்லாம்
உருவ மாகு நஞ்சோம
நாதன் துதியு ளுறுசரணர்
அரவ வணியான் அடியார்கள்
மற்றை யவர்கள் அனைவருந்தாம்
விரவி நாளும் இருப்பவிடங்
கொடுக்கு முள்ளம் விரிந்தன்றே.

(அ - ரை.) பரவை கேள்வன் - சுந்தரமூர்த்திஅடிகள். பத்தி - அன்பு. சரணர் - வீர சமய அடியார் அரவ அணியான் - சிவன். மற்றையவர்கள் - மற்றைய அன்பர்கள். விரவி - கலந்து. இடம் கொடுக்கும் உள்ளம் - இடந் தரும் மனமே. விரிந்தன்று - பெருகியது. மற்றையுள்ளம் குறுகியது என்பது கருத்து.

சைவ சமயத்தினும் வீரசைவ சமயத்தினும் உள்ள அடியார்கள் அனைவரையும் ஆசிரியர் இச் செய்யுளால் வணங்கினார். (௧௦)

## சிறப்புப் பாயிரம்

*தண்ணிலவு புனைசடிலத் திறைபுகழல்
லயதேவன் சரிதத் தீம்பால்
புண்ணியருஞ் செவிவாயில் தமிழ்ச்சங்கத்
தான்முகந்து புகட்டி னுறல்
எண்ணரிய புகழ்மலயத் திருந்தவனோர்
வடிவெடுத்தான் என்று கூறப்
பண்ணியமுத் தமிழ்க்கவிதைச் சிவப்பிரகா
சப்பெரும்பேர் படைத்து ளானே.

(அ - ரை.) தண்ணிலவு - குளிர்ந்த திங்கள். புனை - அணிந்த. சடிலத்து - சடையையுடைய. அம் செவிவாயில் - அழகிய காதாகிய வாயினிடத்தில். தமிழ்ச் சங்கத்தால் - தமிழ்ச் செய்யுளாகிய சங்கினால். எண்ணரிய - அளவிடப்படாத. மலயத்து இருந்தவன் - பொதிகை மலையிலிருந்த பெரிய தவத்தினையுடைய அகத்தியர்.

* இச் செய்யுள் சிவப்பிரகாச அடிகளின் உடன் பிறந்தார் ஒருவரால் செய்யப்பெற்றது.

அல்லமன் சரிதையைப் பாலாகவும் புண்ணியர் செவிகளை வாயாகவும் தமிழைச் சங்காகவும் உருவகப்படுத்தியிருப்பதால் இஃது உருவக அணி. (கக)

## அவையடக்கம்

அடலுறும் அல்லமன் அரிய சீரொடு
படுதலி னயந்துபா ராட்டும் பன்முறை
மடனிகும் உலகமென் மொழியை வந்துவர்க்
கடலிலு முழ்குவர் காலம் ஒன்றினே.

(அ - ரை.) அடலுறும் - எல்லாவன்மையும் பொருந்திய. படுதலின் - பொருந்துதலால். நயந்துபாராட்டும்-விரும்பிப் போற்று தலைச்செய்யும். மடன் இகும்-அறியாமையினின்றும் நீங்கிய. உலகம்-பெரியோர். உவர்க்கடல் - உப்புக்கடல். காலம் ஒன்றின் - கிரகணம் முதலிய நல்லகாலத்தோடு பொருந்துமானால். ஒருகாலத்தில் எனவும் கூறலாம்.

அல்லமன் - அரிய சீரோடு படுதலின் என் மொழியை மடன் இகும் உலகம் பன்முறை நயந்து பாராட்டும் எனக் கூட்டுக. வந்து மூழ்குவர் எனவுங் கூட்டுக. (கஉ)

## *கதித்தொகை

நாற்கதி தருமிடர் கடந்து நச்சுநர்
பார்க்கதி முதலிய பத்தைந் தாங்கதி
மேற்கதி பெறவருள் விளங்கும் அல்லமன்
சீர்க்கதி யிருபதோ டைந்துஞ் செப்புவாம்.

(அ - ரை.) நாற்கதி - தேவகதி மனிதகதி விலங்குகதி நரககதி. நச்சுநர் - விரும்புவோர். பார்க்கதி - மண்தத்துவம். இருபத்தைந் தாங்கதி - இருபத்தைந்து தத்துவங்கள் மேற்கதி - மேலாகிய வீடு பேறு. அல்லமன் சீர்க்கதி - அல்லமனது புகழைக்கூறும் பிரிவு.

தத்துவங்கள் இருபத்தைந்தாவன: பூதம் ஐந்து. பொறி ஐந்து, புலன் ஐந்து, தொழில் உறுப்புகள் ஐந்து, மூலப்பகுதி, புருடன், புத்தி, அகங்காரம், மனம் ஐந்து. இருபத்தைந்து தத்துவங்களையும் கடந்து நின்ற அல்லமன் கதையை இருபத்தைந்து கதியிற் கூறுவது பொருத்தமுடையது என்பது குறிப்பு. (கங)

---

* கதி - படலம்.

## இந்நூலின் பிறப்பு

கன்றிய வைரிகள் காதுங் காதையும்
வன்றுயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்
புன்றொழி லினர்வறும் பொழுது போக்கலும்
அன்றருள் அல்லமன் அமல லீலையே.

(அ - ரை.) கன்றிய வைரிகள் - சினங்கொண்ட பகைவர்கள், காதுங்காதையும் - ஒருவரையொருவர் கொலை செய்து கொள்ளுகிற கதையும். மதனநோய் வளர்க்கும் மாற்றம் - காமநோயைப் பெருக்குகின்ற மொழி. புன்தொழிலினர் - இழிந்த தொழிலையுடையவர். வறும் பொழுது போக்கல் - வீண் பொழுது போக்கல். அமலலீலை - குற்றமற்ற திருவிளையாடல்.

அருள் அல்லமன் அமல லீலை காதையும், மாற்றமும் போக்கலும் அன்று எனப் பொருத்துக. (கச)

## இந்நூலின் பயன்

புறங்கறை ஒழுகுசெம் புண்ணில் ஈயென
வறுங்கதை புல்லியர் கொள்வர் / மாமலர்
உறுங்களி வண்டினல் லமனொண் காதையைப்
பிறந்துள பயன்பெறு பெரியர் கொள்வரே.

(அ - ரை.) புறம் கறை ஒழுகு-பக்கத்தே குருதி வெளிப்படுகிற. வறுங்கதை - வெறுங்கதை. புல்லியர் - இழிந்தோர். பிறந்துள பயன் பெறு - இவ்வுடலெடுத்ததன் பயனாகிய வீடுபேற்றை யடைய முயல்கின்ற. கொள்வர் - சிறப்பாகக்கொண்டு கற்பர். வண்டின் - வண்டைப்போல்.

பெரியர் வண்டின் அல்லமன் ஒண் காதையைக் கொள்வர் எனக் கொள்க. (கரு)

மயலறற் றூன்றுகோல் மல்கும் அன்பெனும்
இயலெழுத் தெழுதுகோ லங்க லிங்கமாம்
வியனிலத் தளவுகோல் மதிவி ளக்கினை
அயர்வறத் தூண்டுகோல் அமல லீலையே.

(அ - ரை.) மயலறற்கு - மயக்கமாகிய சேற்றுக்கு. மல்கும் - நிரம்பிய. இயலெழுத்து - இலக்கணமுடைய எழுத்து. வியனிலத்து - விரிவான நிலத்திற்கு. மதிவிளக்கினை - அறிவாகிய விளக்கினை. அயர்வற - சோர்வுநீங்க. அமலலீலை - அல்லமன் திருவிளையாடல்.

அமலலீலை, ஊன்றுகோல், எழுதுகோல், அளவுகோல், தூண்டு கோல் ஆம் எனக்கூட்டுக.

மயல் அளறு, அன்பு எழுத்து, அங்கம் லிங்கமாம் வியனிலம், மதி விளக்கு என்பன உருவகங்கள் ஆதலால் உருவகவணி. (கசு)

நன்றிகொள் அடிகணான் குறந டந்துபோ
யென்றனி நாவினின் றெழுமிச் செய்யுளான்
வென்றிகொள் அல்லமன் சீர்த்தி மென்பயன்
கன்றலில் அன்பராங் கன்றை ஊட்டுமால்.

(அ - ரை.) நன்றிகொள்-நன்மையைக்கொண்ட. உற-பொருந்த. இச் செய்யுள் ஆன் - இந்நூலாகிய பசுவானது. சீர்த்தி மென்பயன்-மிகுபுகழாகிய சுவையையுடையபாலை. கன்றல் இல்-வருந்துதலில்லாத.

செய்யுள் ஆன் அடிகள் நான்குற நடந்து போய்ச் சீர்த்தி மென் பயனை அன்பராங் கன்றுக்கு ஊட்டும் எனக்கொள்க.

இஃது உருவக அணி. (கஎ)

## சிவத் தோற்றம்

பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
உரைமனம் இறந்து நின்ற ஒருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் தனைப்பொ ருந்தும்
அருமைகொள் ஞான சத்தி யவர்களாற் சிவனு திப்பன்.

(அ - ரை.) திரிவு - மாறுபாடு. உரைமனம் இறந்துநின்ற - வாக்கையும் மனத்தையுங் கடந்துநின்ற.

சிவலிங்கத்தினின்றும் சதாசிவன் தோன்றுவன். ஞானசத்தி அவனைப்பொருந்துதலால் சிவன் தோன்றுவன். (கஅ)

## உருத்திரன், திருமால் ஆகியவர்களின் தோற்றம்

சாற்றுமச் சிவனுக் கிச்சா சத்தியவ் விருவ ராலும்
தோற்றுவன் உருத்தி ரன்றான் சொல்லிய அவற்குச் சத்தி
மாற்றருங் கிரியை யென்பர் மற்றிவர் இருவ ராலும்
போற்றுறும் அரியு திப்பன் பொறியவன் சத்தி யாமால்.

(அ - ரை.) சாற்றும் - சொல்லும். போற்றுறும்-போற்றுதலைப் பெறுகின்ற. அரி - திருமால். பொறி - திருமகள்.

சிவனுக்கு இச்சாசத்தி சத்தியாவாள். இவ்விருவராலும் உருத் திரன் தோன்றுவன். உருத்திரனுக்குக் கிரியாசத்தி சத்தியாவாள். இவர்களிருவராலும் திருமால் தோன்றுவன். திருமாலுக்குத் திருமகள் சத்தியாவாள். (கக)

நான்முகன் தோற்றமும் உலகத் தோற்றமும்

அத்திரு மாலு மாவும் அளிப்பவந் துதிப்பன் வண்டு
மொய்த்திசை முரலுஞ் செங்கேழ் முளரிவா னவனை வற்குச்
சத்திவெண் கமலை அன்னோர் தரவரும் உலகின் தோற்றம்
நித்தனைங் குருகு கேச னினைவுமாத் திரையி னாமால்.

(அ - ரை.) மாவும் - திருமகளும். இசைமுரலும் - இசைபாடு கின்ற. செங்கேழ் முளரி வானவன் - செவ்விய நிறமுடைய தாமரை மலரில் எழுந்தருளியுள்ள நான்முகன். வெண்கமலை - வெண்டாமரை மலரிலுள்ள கலைமகள். குகேசன் - குகை + ஈசன் - உள்ளக் குகைக் கண் எழுந்தருளியிருப்பவன். நினைவு மாத்திரையின் ஆம் - மேற் கூறப்பெற்ற தோற்றங்களெல்லாம் குகேசனது எண்ணம் ஒன் றினாலே நிகழ்வதாம்.

திருமாலும் திருமகளும் நல்கலால் நான்முகன் தோன்றுவன். அவனுக்குக் கலைமகள் சத்தியாவாள். இவ்விருவராலும் உலகத் தோற்றங்களெல்லாம் உண்டாகும். இவ்வளவும் அல்லமதேவனது எண்ணத்தினாலே உண்டாவதாம். (௨0)

அல்லமதேவன் முத்தேவர்களையும் அதிகாரத்தில் நிறுத்தியது

ஆக்குறுஞ் செயலை தொன்றே அயன்றனக் காக்க லோடு
காக்குறுஞ் செயலி ரண்டுங் கண்ணனுக் காக்கல் காத்தல்
போக்குத லென்றிம் மூன்றும் புராந்தகற் களித்த வர்க்கு
நீக்கரும் இறைமை நல்கி நிறுவினன் குருகு கேசன்.

(அ - ரை.) ஆக்குறுஞ்செயல் -படைக்குந் தொழில். காக்குறுஞ் செயல் - உலகினைப் பாதுகாக்குந் தொழில். போக்குதல் - அழித்தல். புராந்தகன் - புரத்தைச் சுட்டெரித்தழித்த உருத்திரன். நீக்கரும் - யாவராலும் மாற்றப்பெறாத. இறைமை - தலைமைத் தன்மை. நிறுவினன் - அமைத்தனன்.

குருவாகிய அல்லமதேவன், நான்முகனுக்குப் படைத்தற்றொழிலை யும், திருமாலுக்கும் படைத்தல் காத்தலாகிய இரு தொழில்களையும், உருத்திரனுக்குப் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில் களையும் அளித்து அவர்களைத் தலைமைப் பதவிக்கண் அமைத் தருளினன். (௨௧)

துதிகதி முடிந்தது.

கதி க - க்குச் செய்யுள் ௨௧.

## உ. கைலாசசருக்கம்

[இக்கதிக்கண் கைலைமலையின் பலவகைச் சிறப்புக்களும், சிவபெருமான் அரசாட்சி மண்டபப் பெருமையும், திருவோலக்கச் சிறப்பும், இறைவனுடைய பெருமையும், அக்கடவுளிடத்திலே உமையம்மை யெழுந்தருளியுள்ள மேன்மையும், அவ்வம்மையின் சிறப்பும், அவை கூடும் நிகழ்ச்சியும், இறைவனுக்கும் தேவிக்கும் உரையாடல் நிகழ்ந்து அது சொற்போராய் முடிவு பெறுதலும், சிவபெருமான் அல்லமதேவருடைய சிறப்பினைக் கூறி அவரைக் காண்டல் அரிதென்றலும், இறைவியானவள் அல்லமதேவரைக் கண்டு பிடித்தல்தனக்கு எளிதேயாமென்று கூறி மாயையை நிலவுலகிற்கு அனுப்புதலும், அம்மாயை சூள்மொழி புகன்று நிலவுலகை யெய்துதலுமாகிய செய்திகள் கூறப்பெறுகின்றன.]

இச்செய்யுள் கதியின் செய்தியைத் தொகுத்துரைக்கின்றது

வெள்ளிமால் வரையின் உச்சி வீற்றிருந் தருளு முக்கண்
வள்ளலா ரொடுதே னூற்று மதரரி நெடுங்கட் செவ்வாய்ப்
பிள்ளைவாள் மதிநு தற்றம் பிராட்டியல் லமனைக் காண்பான்
கள்ளமா யையைஞா லத்து விடுத்தவக் கதியு ரைப்பாம்.

(அ - ரை.) மால் - பெரிய. வரை-மலை. மதர் அரி நெடுங்கண் - களிப்புப் பொருந்திய அரிகளையுடைய நீண்ட கண். பிள்ளைவாள் மதிநுதல் - பிறைத்திங்களைப் போன்ற நெற்றி. தம்பிராட்டி - தலைவி. கள்ளமாயை - வஞ்சகம் பொருந்திய மாயை. ஞாலம் - உலகம்.

வரையென்பது கணு; இது கணுவினையுடைய மூங்கிலுக்காகிப் பின்னர் மூங்கில் பொருந்திய மலையைச் சுட்டியது; இரு மடியாகு பெயர். தம்பிராட்டி யென்பது தம்பிரான் என்னுஞ் சொல்லின் பெண்பாற்பெயர். (க)

நான்முகன் அசுரர் முதலியோர்க்குப் படைத்த இடங்கள்

இயங்குவ நிற்ப வான யாவையுங் கலைமா தோடு
முயங்குபு முன்ன மீன்ற முளரிவா னவன்வ குத்து
வியன்புவி யண்டந் தன்னுள் விதித்தனன் தரும டங்கள்
வயங்கெழும் அசுரர் நாகர் வானவர் முதலி யோர்க்கும்

(அ - ரை.) இயங்குவ - போக்குவரத்துடையன. நிற்ப-நிலைத்து நிற்பன. முயங்குபு - சேர்ந்து. முளரிவானவன் - நான்முகன். வியன் - பரந்த. விதித்தனன் - ஏற்படுத்தினன். வயங்கெழு - வெற்றி பொருந்திய. வானவர் - தேவர். (உ)

## கைலைமலைச் சிறப்பு

நான்முக அண்டந் தன்னுள் நனிசிறந் தொப்பி கந்த(து)
ஊன்முக விழிக ளாற்கண் டும்பர்கள் உவகை பூப்பத்
தான்மிகு மருவான் மேனி சாத்திய பேரா னந்தக்
கூன்முக மதிய ணிந்த கொற்றவன் கைலைக் குன்றம்.

(அ - ரை ) நான்முக அண்டம் - பிரமனாற் படைக்கப்பட்ட உலகம். நனி சிறந்து - மிகவுஞ் சிறந்து. ஒப்பு இகந்தது - ஒப்பு இல்லாத தன்மை பொருந்தியது. ஊன்முகவிழிகளால் - ஊனையுடைய முகக் கண்களால். மேனி சாத்திய - வடிவைத் தாங்கிக்கொண்டிருக்கின்ற. கொற்றவன் - இறைவன். உவகைபூப்ப - மகிழ்ச்சியடைய.

மேனிசாத்திய கொற்றவன், பேரானந்தக் கொற்றவன், மதியணிந்த கொற்றவன் என்று தனித்தனி கூட்டுக.

கொற்றவன் கைலைக்குன்றம் உம்பர்கள் கண்டு உவகை பூப்ப அண்டந் தன்னுள் நனி சிறந்து ஒப்பிகந்தது எனக் கூட்டுக. (௧)

கொள்ளைவண் டிழிந்து தாது குடைந்துழக் குழவு டைந்து
கள்ளழிந் தொழுகு செய்பொற் கடுக்கைவேய்ந் திலகு வேணி
வள்ளல்வெண் புகழ்தி ரண்ட வளங்கெழு கைலைக் குன்றில்
வெள்ளிவந் தத்தி யாச மாகவே விளைந்த தம்மா.

(அ - ரை.) கொள்ளைவண்டு - கூட்டமாகிய வண்டுகள்; கொள்ளை கொள்ளுகிற வண்டுகள் எனினும் ஆம். இழிந்து - வந்து பொருந்தி. தாது - மகரந்தம். குடைந்து - மூழ்கி. கடுக்கைவேய்ந் திலகுவேணி - கொன்றை மலரைச் சூடிவிளங்குகின்ற சடை. வள்ளல் - இறைவன். வெண்புகழ் - வெள்ளிய புகழ்; புகழின் நிறம் வெள்ளையென்பர். அத்தியாசம் - பொய்த் தோற்றம்.

கைலைமலையானது சிவபெருமான் புகழ் திரண்டதால் வெண்மையாகத் தோன்றியது. அதனையறியாது மயங்கி வெள்ளிமலையெனக் கூறினர். இது பொய்த் தோற்றத்தால் உண்டாயது என்பது கருத்து.

வெள்ளியினிடத்தில் புகழையேற்றி வெள்ளியை ஒழித்தலின் இஃது ஒழிப்பணியின்பாற் படும். (௨)

கண்பிசைந் தொருசே யின்னுங் கலுழினுந் தனைக்கொ டுப்பன்
மண்பிசைந் துண்ட மாயன் மறித்திட வலிய னல்லன்
நண்பிசைந் திறைவ னுக்கே நாமிட னுவ மென்று
பண்பிசைந் தனைந்தி ரண்ட பனிகளின் றிடுமக் குன்றம்.

(அ - ரை.) ஒருசேய் - உபமந்யு முனிவர் போன்ற மற்றொரு குழந்தை. கலுழினும் - அழுதாலும். மண்பிசைந்துண்ட மாயன் - உலகத்தையுண்டருளிய திருமால். நண்பிசைந்து - நட்புப்பொருந்தி. இடம் - இருப்பிடம். பண்பு இசைந்து - நற்பண்புபொருந்தி. அலை - பாற்கடல். பரிசில் - தன்மையைப்போல.

உபமந்யு முனிவர் குழந்தையாகவிருந்த காலத்தில் பாலின் பொருட்டு அழச், சிவபிரான் பாற்கடலைக் கொடுத்தருளினர் என்பது புராண வரலாறு.

திருப்பாற்கடல் மாயனுக்கு நாம் இடமாக இருந்தால் சிவன் மற்றொரு சேய்க்குக் கொடுத்தால் மறுத்திட வலியனல்லன் ஆதலால் அரனுக்கே யிடமாவது நலம் என்று கருதி அது வந்து நின்றதுபோலத் தோன்றுகின்றது கைலை என்பது கருத்து. (௭)

ஒழுகுறும் அருவி யீட்டம் ஒலியினு னகுவெண் டிங்கள்
பழுகுறு முடற்க ளங்காற் பாகசா தனன்கூர்ங் கோட்டு
மழகளி றுமிழ்ம தத்தான் மலர்மிசைக் கடவு ளூர்தி
அழகுறு நடையா லன்றி அறிதரப் படாவக் குன்றில்.

(அ - ரை.) அருவியீட்டம் - அருவிகளின் தொகுதி. நகு - விளங்குகின்ற. பாகசாதனன் - தேவர் கோமான். மழகளிறு - இளமையினையுடைய வெள்ளையானை. மலர்மிசைக் கடவுள் - நான்முகன். ஊர்தி - ஊர்தியாகிய அன்னம்.

கைலைமலை வெண்ணிறமாக இருப்பதால் ஆங்கு வரும் அருவித் தொகுதியை ஒலியினாலும், திங்களைக் களங்கத்தாலும், வெள்ளை யானையை மதநீராலும், அன்னத்தை அதனுடைய அழகிய நடையாலும் அறியலாமேயன்றி வேறு வகையாக அறிதல் இயலாது. (௮)

விளங்கொளி துளும்பும் அந்த வெள்ளியங் கிரியினுச்சி
துளங்கொளி விரிக்குஞ் செம்பொற் சுடர் மணிச் செய்குன் றென்று
களங்கறு பராரைத் துய்ய கருப்புரக் குவாலின் மீது
வளங்கெழு சுடரோன் றூற்று வயங்குதல் போலு மன்றே.

(அ - ரை.) விளங்கு - விளங்குகின்ற. துளும்பும் - ததும்புகின்ற. துளங்கு - அசைகின்ற. செய்குன்று - கட்டப்பட்ட மலை. களங்கறு - குற்றமற்ற. பராரை - பருத்த அடியினையுடைய. குவால் - குவியல்.

வெள்ளிமலையின் முடியில் செம்பொன் மண்டபம் இருத்தல், கற்பூரக் குவியலின்மீது தீப்பற்றி எரிதலைப்போன்றது. (௯)

## இறைவன் அரசிருக்கை மண்டபச் சிறப்பு

இனையதிக் கைலை வெற்பில் இறையர சிருக்கை ஒன்றுண்
டனையதை யணிய மாட்டா தப்புறம் போயினனென்
றெனையிகழ் பவர்க ளில்லை யிலங்குமம் மண்ட பத்தின்
தனிவள மனந்த னுலுஞ் சாற்றிடற் கரிது மாதோ.

(அ - ரை.) இனையது-இப்படிப்பட்டது ஆகிய. கைலை வெற்பு-கைலைமலை. அரசிருக்கை - அரசிருக்கை மண்டபம். அனையதை - அதனை. அணியமாட்டாது-அழகுபடுத்திக்கூற முடியாமல். தனிவளம்-ஒப்பற்ற சிறப்பு. அநந்தன்-விலக்தாங்கும் பாம்பு. (ஆதிசேடன்). (அ)

## இறைவன் தனது இருக்கையில் இருத்தல்

அன்ன மண்டபத் தங்கண னேர்பகல்
மின்னு செம்மணி வேதிகை ஒன்றன் மேல்
மன்னு செங்கதிர் மண்டலத் துற்றனன்
என்ன வந்தங் கிருந்தன னென்பவே.

(அ - ரை.) அன்ன - அப்படிப்பட்ட அம்கணன் - இறைவன். வேதிகை - மேடை. செங்கதிர் - சூரியன். மண்டலத்து உற்றனன் என்ன - தனது மண்டலத்திருந்தனனென்று சொல்லும்படி, என்ப - என்று சொல்வர். ஏ - அசை.

இறைவன் தனது இருக்கையில் எழுந்தருளியது, கதிரோன் தன் மண்டலத்தில் அமர்ந்திருந்தாற்போன்றிருந்தது. இஃது ஒப்பணி (க)

## திங்களுந் தேவியுந் திகழ்தல்

குழவி யாயுடற் கூனிந ரைத்ததோர்
விழவு வாண்மதி வேணியின் மேவுறக்
கிழவி யாகிக் கிரிக்கோன் மகப்பெறும்
அழகு நீர்மக ளாயிடை வாழ்வுற.

(அ - ரை.) குழவியாய்-இளமையுடையதாக விருந்தும். கூனி - வளைந்து. நரைத்த - வெளுத்ததாகிய. விழவு-சிறப்புடைய. வாண்மதி-ஒளிதங்கிய திங்கள். வேணி - சடை. கிழவி - உரிமையுடையவள். கிரிக்கோன் - மலையரசன். மகப்பெறு - மகவாகப்பெற்ற. அழகு நீர்மகள் - அழகிய தன்மையையுடைய கங்கை அல்லது இறைவி.

ஆயிடை - அச்சடையினிடத்தில்; அல்லது இடப்பாகத்தில். இவை இரட்டுறமொழிதல் என்னும் உத்தி. (௧௦)

முக்கண் விளங்குதல்

அங்கி யென்றற் கடுப்பமே னோக்கிய
செங்க ணொன்று திருநுதல் சேர்தரத்
திங்க ளென்றுந் தினகர னென்றும் வாழ்
அங்கண் மல்கும் அருள்மடை போன்றுற.

(அ - ரை.) அங்கி - நெருப்பு. அடுப்ப - பொருந்த. திருநுதல் - அழகிய நெற்றி தினகரன் - கதிரோன். அங்கண் - அழகிய கண்கள். மல்கும் - நிறைந்த. அருள்மடை - அருளாகிய நீர் பெருகி வழியும் வழி. நெருப்புமேனோக்குதலும் தண்ணீர் கீழ்நோக்குதலும் இயற்கை. இதில் தகுதியணியும் தற்குறிப்பணியும் வந்தன. (௧௧)

காதில் தோடுகளும் கண்டக் கருமையும்

எண்ணு மன்பர் இதயமென் புட்படு
கண்ணி போன்றுவார் காதிடைத் தோடுற
நண்ணு மாதுமை நன்னுதற் பொட்டென
வண்ண நீல மணிமிடற் றொன்றுற.

(அ - ரை.) இதயம் என்புள் - உள்ளமாகிய பறவைகள். படும் - அகப்படும். கண்ணி - வலை. வார் - நீண்ட. வண்ணநீலம் - அழகிய கருமை. மணிமிடறு - அழகிய கண்டம். ஒன்றுற - அமைய.

காதுத்தோடுகள் அன்பர்களது உள்ளப் பறவைகளைப் பிடிக்கிற வலைகளைப் போலவும் கண்டக்கருமை உமையம்மை நெற்றிப்பொட்டைப்போன்றும் அமைந்துள்ளனவென்க.

தோட்டைக் கண்ணியாகக் குறித்தலால் தற்குறிப்பேற்றவணி. நெற்றித் திலகத்தைக் கண்டக் கருமைக்கு உவமை கூறியதால் ஒப்பணி. (௧௨)

கையின் கண்ணுள்ள மான் திரும்பியதற்குக் காரணம்

நகந்த ருங்கொடி கண்களை நாணியே
முகந்தி ரும்பு முறையில் திரும்புமான்
மகிழ்ந்தி டங்கதிர் வீர மழுவலந்
தகுந்த குந்தகு மென்று தயங்குற.

(அ - ரை.) நகம் தரும் கொடி - மலைபெற்ற பூங்கொடி போல்பவளாகிய இறைவி. முகம் திரும்பும் - முகத்தைத் திரும்பிக் கொள்ளும். முறையில் - தன்மையில். கதிர் - ஒளி. வீரமழு - வீரத்தன்மை பொருந்திய மழு. தயங்குற - விளங்க.

இறைவனுடைய இடக்கையிலுள்ள மான் இறைவியின் கண்களுக்கு நாணமடைந்து முகத்தைத் திருப்பிக்கொண்டது. வலக்கையிலுள்ள மழு 'தகும் தகும்' என்னும் ஒலியுண்டாகும்படி எரிதல், மான் திரும்பிக்கொண்டது தகும் தகும் என்று கூறுவது போல் இருக்கிறதென்று காரணங் கற்பித்தார் ஆசிரியர்; இது தற்குறிப்பு.

மான் இடக்கையினும் மழு வலக்கையினும் விளங்கின. (கக)

பாம்புக்காப்பு, பன்றிக்கொம்பு, புலித்தோல் அணிந்தமை

சொற்றெ ரிந்த சுடர்மணிக் கங்கணம்
உற்றி லங்க ஒருகருங் கேழலின்
பற்றி ருந்த மதாணியிற் பட்டெனப்
புற்ற ருங்கலை உற்றரை பொற்புற.

(அ - ரை.) சொல் தெரிந்த - சொல் இலக்கணங்களையுணர்ந்த. சுடர் - ஒளி. கங்கணம்-காப்பு. உற்று - பொருந்தி. கேழல்-பன்றி. பல் மதாணியில் திருந்த - தந்தமானது மார்புப் பதக்கத்தைப் போலத் திருத்தமாக அமையவும். புல்தரும் கலை - புலி கொடுத்த ஆடையாகிய தோல். அரை - இடுப்பு. பொற்புற - அழகு செய்ய.

சொற்றெரிந்த என்ற அடைமொழியால் ஆதிசேடன் ஆகிய பாம்புக் கங்கணம் என்பது தோன்றியது. மதாணியில் திருந்த எனவும், கலை அரையுற்றுப் பட்டெனப் பொற்புற எனவும் கூட்டுக. (கஉ)

தாள் வீரக்கழலின் தனிச்சிறப்பு

புரத்தை வென்ற நகைக்குமென் போதினேன்
சிரத்தை வென்றசெங் கைக்குஞ் சிலைமதன்
எரித்த கண்ணிற்கும் இன்றெனக் கூற்றடுஉத்
தரித்த வீரக் கழலொடு தாளுற.

(அ - ரை.) புரத்தை - முப்புரங்களை. போதினேன் - நான்முகன். சிரம் - தலை. கூற்று அடுஉ - கூற்றுவனைக் கொன்று. தரித்த - கட்டிய.

நகைக்கும், கைக்கும், நெற்றிக் கண்ணுக்கும் முப்புரங்களை வென்றும், நான்முகன் தலையைக் கொய்தும், காமனை யெரித்தும்

ஒருபயனு மில்லையென்று சொல்லும்படி, கூற்றுவனைக் கொன்ற காலுக்குமட்டும் வீரக்கழல் கிடைத்தது. இது தனிச்சிறப்பு என்க. (கசு)

இறைவனிடத்தில் இறைவி எழுந்தருளியிருத்தல்

இருந்த ஆதி யிடத்தில் இருந்தனள்
பரந்த வானும் படியும் உயிர்களும்
ஒருங்கு தோன்ற உதவிக் கருவுயிர்இ
வருந்தி லாத மணிவயிற் றன்னையே.

(அ - ரை.) இருந்த – (வேணியின் மேவுற. ஆயிடை வாழ்வுற, திருநுதல், சேர்தர போன்றுற, தோடுற, ஒன்றுற, தயங்குற, பொற்புற, தாளுற,) எழுந்தருளியிருந்த. ஆதி - கடவுள். படி - மண்ணுலகம். வான் - விண்ணுலகம். கருவுயிர்இ - சூலுற்று. மணி வயிறு - அழகிய வயிறு.

"குழவியாயுடல்" என்னுஞ் செய்யுள் முதல் இச் செய்யுள் வரையிலுங் குளகம். (கசு)

கூந்தலில் திருமாலை விளங்குதல்

இறைவன் அங்கண் எனுமுச் சுடர்களும்
உறவு கொண்ட இருளெனும் ஓதிமேல்
அறவ னென்றவவ் வண்ணல் புனைந்தருள்
நறவு மிழ்ந்த நறுமலர் தாழ்ந்திட.

(அ - ரை.) முச்சுடர்களும் - ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்று ஒளிப் பிழம்புகளும். இருள் எனும் ஓதி - இருளைப்போன்ற கூந்தல். அறவன் என்ற - அற வடிவினன் என்று கூறப்பெற்ற. நறவு உமிழ்ந்த - தேனை வெளிப்படுத்திய. தாழ்ந்திட - தொங்க. கூந்தலிலே இருள் தன்மையை யேற்றலும் முச்சுடர் உறவைச் சேர்த்தலும் மிகை யொற்றுமை யுருவக வணியாகும்.

இப் பாட்டு முதல் 'இருந்த ஆரருள் எம்பெருமாட்டிபால்' என்னும் இருபத்தாறுவது பாட்டுவரை குளகம். 'குளகம் பல பாட் டொருவினை கொள்ளும்.' (கஎ)

நெற்றியில் நெற்றிச்சுட்டி விளங்குதல்

ஏற்று வார்கொடி யெந்தை சடைப்பிறை
யாற்றுன் வீழ்வுற் றிறப்பதற் கெண்ணுறத்
தோற்ற மேவு சுடர்த்திரு நெற்றியின்
ஞாற்று மோர்மணிச் சுட்டி நலந்தர.

(அ - ரை.) ஏற்றுவார் கொடி - காளை வடிவம் எழுதப்பெற்ற நீண்ட கொடி. ஆற்றுள் - சடையிலுள்ள கங்கையாற்றுள். தோற்றம் - அழகு. ஞாற்றும் - தொங்கவிடப்பெற்ற. நலந்தர - அழகு செய்ய.

நெற்றியின் அழகிற்குத் தோற்றுக் கங்கையாற்றில் விழுந்து இறந்து போதற்கு எண்ணும்படியான அழகிய பிறை என்க.

(கஅ)

## திருநோக்கும் திருநகையும்

ஈசனூர்முக மென்னு முளரியில்
ஆசை கூடும் அளிவிழிக் காரருள்
வாச மாமலர் வாய்க்கிள வெண்ணகை
தேசு லாமணி யாகச் சிறந்தற.

(அ - ரை.) முளரி - தாமரை. அளிவிழி - வண்டுகளாகிய கண்கள். ஆர் அருள் - நிறைந்த திருவருள். இளவெண் நகை - புன்னகை. தேசு உலாம் - ஒளி விளங்குகின்ற. அணி - அணிகலன். விழிக்கு ஆர் அருளும் வாய்க்கு இளவெண்ணகையும் அணியாக என உம்மை கூட்டிப் பொருள் கொள்க.

இறைவி யணிந்துள்ள அணிகலன்களைக் கூறத் தொடங்கியவர், கூந்தலில் மாலையையும், நெற்றியில் சுட்டியையுங் கூறிக் கண்ணுக்கு அருளையும், வாய்க்குப் புன்னகையையும் அணிகலன்களாகக் கூறினார். 'கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம்' என்றார் திருவள்ளுவரும். முகத்திலே முளரியையும் விழியிலே வண்டையும் உருவகப்படுத்திக் கூறலால் இஃது உருவகவணியின் பாற்படும்.

(கக)

## காதோலை

மாணப் பூண்புனை மற்றை உறுப்பெனப்
பூணுட் பட்டிடா தோலையின் பூணென
யாணர்ச் செம்பொன் இலங்கொளி யோலைமேற்
காணக் காதெனும் வள்ளை கவின்செய.

(அ - ரை.) மாண - பெருமையுண்டாக. பூண் புனை - அணிகலன்களைத் தாங்குகின்ற. பூணுள் பட்டிடாது - அணிகலன்களுக்கு உட்படாமல். ஓலையின்பூண் என - காதோலையின் அணிகலன் என்று சொல்லும்படி. யாணர் - அழகு. கவின் - அழகு.

பிறவுறுப்புக்கள் அணிகலன்களுக்கு உட்பட்டு அணிகலன்களால் அழகைப் பெறுகின்றன. காதுகளோ அவ்வாறு உட்படாமல் தாம்

ஓலைகளின் அணிகலன்களைப்போல நின்று அவைகட்கு அழகைச் செய்கின்றன வென்க. (உ0)

பூணரசாக விளங்கும் பொன்தாலி

ஓங்கு வாவுடை உம்பன் அயனரி
தாங்கும் ஆவி தணந்தொழி நாளினும்
வாங்கு றுவெழில் மங்கல நாணொளி
தேங்கு பூணர சென்னச் சிறந்திட.

(அ - ரை.) ஓங்கு - உயர்ந்த. உவா - யானை. உம்பன்-தேவர் கோன். அயன் - நான்முகன். அரி - திருமால். தாங்கும் ஆவி - தாங்கியுள்ள உயிர். தணந்து - நீங்கி. வாங்குறு - நீக்கப்பெறுத. மங்கலநாண் - திருத்தாலிக்கயிறு. பூண் அரசு - அணிகலன்களுக்குத் தலைமை. இந்திரன், பிரமன், திருமால் இம் மூவர் அழியுங் காலத்தும் வாங்குறு மங்கலநாண் எனக் கூறியதனால் இறைவனது நித்தியத் தன்மையும் மங்கலநாணின் பெருமையும் விளங்கின. (உக)

முத்துமாலை

அரவு லாஞ்சடை அண்ணலைப் பிள்ளைதான்
பருவ மூன்றினிற் பாடஇன் பால்தரும்
பொருவில் கொங்கைப் புகழெனப் பொங்கொளி
மருவும் ஆர மணிவடந் தாழ்ந்துற.

(அ - ரை.) அரவு - பாம்பு. அண்ணல் - சிவபெருமான். பிள்ளை - சம்பந்தர். இன்பால் - இனிய திருமுலைப்பால். பொருவு இல் - ஒப்பில்லாத. பொங்கு ஒளி மருவும் - மிகுதியான ஒளி பொருந்திய. ஆரமணிவடம் - முத்தினாலாகிய அழகிய மாலை.

சம்பந்தர் மூன்றாண்டிற் பாடுவதற்கு ஆற்றலளித்த இனிய பாலுடைய கொங்கை யாதலிற் புகழ் நிறைந்தது எனவும், புகழின் நிறம் வெண்மையாதலால் அது போர்த்ததுபோல முத்து மாலையி னொளி கொங்கைமேற் பரவியது எனவும் கற்பித்தார். இது தற்குறிப் பேற்ற வணி. (உஉ)

கையில் கருங்குவளை மலரும் பைங்கிளியும்

பறந்தி டாமணி வண்டு படுமலர்
சிறந்த நீல மலரொடு சீர்பெற
மறந்தி டாது மறைமுடி யின்பொருள்
அறைந்து பைங்கிளி முன்கை அமர்ந்திட.

(அ - ரை.) மணி வண்டு-அழகிய வளையல். படுமலர்-பொருந்திய மலர்போன்ற கை. நீலமலர் - கருங்குவளைமலர். அறைந்து - சொல்லி. பறக்கும் வண்டினை விலக்குதற்குப் பறந்திடா என அடை கொடுத்தனர். அவ்வண்டு படுமலர் எனவே கை என்பது குறிப்பாகத் தோன்றியது.

கையை மலராகவும் வளையல்களை வண்டாகவும் கூறியுள்ள நயத்தினைக் காண்க. (உகூ)

## பட்டாடையும் மேகலையும்

தோலு டைப்பரன் தொல்மனை யாட்டிதன்
பால டுத்ததெவ் வாறெனும் பட்டரை
மேலு டுத்து விளங்கவொண் மேகலை
நூலி டைக்குறு நோய்புரி யாதுற.

(அ - ரை.) தோல் உடைப்பரன் - புலித்தோலையும் யானைத் தோலையும் உடையாகவுடைய கடவுள். தொல் - பழைமையை யுடைய. ஒண்மேகலை - ஒள்ளிய மேகலை. உறுநோய் - மிகுந்த நோய். தோலுடையான் மனையாட்டிக்குப் பட்டாடை யெவ்வாறு கிடைத்தது என்று வியக்கத்தக்க பட்டு அரையில் உடுத்து என்பது கருத்து. (உ௦)

## அடிகளிற் சிலம்பு

புத்த னிச்சம் படினும் பொருமையை
எய்த்து மற்றை யிருமணத் தம்மியில்
அத்தன் வைத்த அடிக்கம லங்களின்
முத்த ரிச்செஞ் சிலம்பு முழங்குற.

(அ - ரை.) புத்து அனிச்சம் - புதிய அனிச்சமலர். எய்த்தும் - உணர்ந்திருந்தும். அத்தன் - இறைவன். முத்து அரி - முத்துக்களைப் பரல்களாகக் கொண்ட.

இருமணம் என்பது மலையரசன் மகளாகப் பிறந்து மணம் புரிந்ததையும், மலயத்துவச பாண்டியன் மகளாகப் பிறந்து மணம் புரிந்ததையும் குறிக்கும். (உ௧)

## இறைவியின் இடம் அரம்பைமாதர் பலர் வருதல்

இருந்த ஆரருள் எம்பெரு மாட்டிபால்
குரும்பை நாணுமென் கொங்கைப் பொறையினால்
வருந்து நூற்பக வன்ன மருங்குலார்
அரம்பை மாதர் அளப்பிலர் எய்தினர்.

(அ - ரை) குரும்பை - பனங்குரும்பை, தென்னங்குரும்பை ஆகியன. பொறை - சுமை. நால்பகவு அன்ன - நாலைப் பிளந்தது போன்ற. மருங்குல் - இடை. அளப்பிலர் - அளவில்லாதவர்கள். மருங்குலார் ஆகிய அரம்பை மாதர் என்க. மருங்குல் ஆர் - இடை பொருந்திய எனவும் கொள்ளலாம். (உசு)

அருந்ததி முதலிய மாதர்கள் இறைவியைத் தொழுதல்

முல்லை யந்தொடை அருந்ததி முதலெழு முனிவர்
இல்ல றம்புரி துணைவிய ரமெழு வரும்போய்
வல்ல ரும்பெனக் குவிமுலைப் பனிமலை மகளைச்
சொல்ல ருந்துதி செய்துவாழ்த் தெடுத்தனர் தொழுது:

(அ - ரை.) முல்லை அம்தொடை - அழகிய முல்லைப் பூமாலை. வல் - சூதாடு கருவி. அரும்பு - தாமரை மொட்டு. வாழ்த்து எடுத்தனர் - வாழ்த்துப்பாடினர். முல்லைமாலை கற்புடை மாதர்க்குரியது. சொல் அரும் துதி செய்து - சொல்லால் அருமையான துதி புரிந்து. (உஎ)

திருமகளிர் கவரி வீசுதல்

அன்னம் ஒன்றறி யாமுடிக் கங்கையை யறிந்து
துன்ன வந்தல மருமெகி னங்களின் தொகுதி
என்ன அம்புயத் தொருசத கோடியிந் திரைகள்
முன்ன டைந்துவெண் கவரிகள் இரட்டினர் முறையால்:

(அ - ரை.) துன்ன-நெருங்க. அலமரும் - சுழலுகின்ற. எகினங்களின் தொகுதி - அன்னப்பறவைகளின் கூட்டம். அம்புயத்து - தாமரை மலர்களில் உள்ள. சதகோடி - நூறுகோடி. இந்திரைகள் - திருமகளிர் (இலக்குமியர்.) கவரிகள் - சாமரைகள். இரட்டினர் - இரு புறத்தும் வீசினார்கள்.

பிரமன் அன்னப்பறவை யுருக்கொண்டு தேடி யறியாத முடி சிவபெருமான் முடியாதலால் அன்னம் ஒன்றறியா முடி எனச் சிறப்புக் கூறினர்.

சாமரைகள் வெண்ணிறமுடையன. அவற்றை அசைத்து வீசுதல் அன்னப்பறவைகள் சுழல்வதை ஒத்துள்ளன. முன்னே ஓரன்னத்தாற் காணமுடியாத திருமுடியில் உள்ள கங்கையை அறிந்து அதில் தங்குவதற்குப் பல அன்னங்கள் வந்து சுழல்வதுபோல் என்க. தற்குறிப்பேற்றவணி. (உஅ)

## இந்திராணிகள் சிற்றாலவட்டம் வீசுதல்

அரவு கௌவிய கதிரெனப் பட்டசாந் தாற்றி
பரவை அல்குல்வெண் முத்தவாள் நகைக்கொலை பயில்வில்
புருவ மென்மலர்க் குழற்சசி கோடிகள் புகன்று
மருவி அம்பிகை மருங்குநின் றசைத்தனர் மன்றே.

(அ - ரை.) அரவு கௌவிய கதிர் - பாம்பினாலே கௌவப் பெற்ற சுடர்; (ஞாயிறு திங்கள்). சாந்தாற்றி - சிற்றாலவட்டம். பரவை அல்குல் - பரப்பினையுடைய அல்குல். கொலை பயில் - கொலையைப் பழகுகின்ற. வில்புருவம் - வில்லைப்போன்ற நெற்றி. சசிகோடிகள் - கோடி இந்திராணிகள். புகன்று - வாழ்த்துரை கூறி. மருவி - பொருந்தி. மருங்கு - பக்கம். வாள்நகை - ஒளி பொருந்திய பற்கள்.

அல்குலையும், நகையையும், புருவத்தையும், குழலையும் உடைய சசிகோடிகள் என உம்மையும் உருபும் விரித்துப் பொருள் கொள்க.

பதுமராகத்தாற் செய்யப்பட்ட சிற்றால வட்டத்திற்கு ஞாயிற்றினையும், முத்துக்களாற் செய்யப்பட்ட சிற்றாலவட்டத்திற்குத் திங்களினையுங் கொள்ளுதல் வேண்டும். ஈண்டு, 'அரவு கௌவிய கதிர்' எனப் பொதுவாகக் கூறினர். சிற்றாலவட்டங்கட்கு ஈண்டுக் காம்புகள்தாம் யாவையோ வெனின் பாம்பின் உடலைக் கொள்க. இது மயக்கவணியின் பாற்படும். (உக)

## கலைமடந்தையர் வீணை மீட்டுதல்

எடுத்து வீணைகள் உளர்நரம் பிதுமிட றிதுவென்
றடுத்த கேள்வராம் பிரமரும் அறிவரி தாகப்
படத்த பாம்பணி பரன்புடை மாதுசீர் பாட்டில்
தொடுத்து வாலிய கலைமடந் தையர்பலர் துதித்தார்.

(அ - ரை.) உளர் - தெரிக்கப்படுகிற. நரம்பு இது - நரம்பின் ஒலி இது. மிடறு இது - கண்டத்தின் ஒலி இது. அடுத்த - அக் கலைமடந்தையர்களுடன் தொடர்புள்ள. கேள்வர் ஆம் பிரமர் - கணவர்களாகிய நான்முகரும். படத்த - படத்தினையுடைய. பரன்புடை மாது - இறைவன் பக்கத்தில் அமர்ந்துள்ள இறைவி. சீர் - சிறப்பினை. பாட்டில் தொடுத்து - பாட்டில் அமைத்து. வாலிய கலை மடந்தையர் - வெண்ணிறமுடைய கலைமகளிர்.

நரம்பொலியுங் கண்டத்தொலியுந் தத்தங் கணவர்களாற்கூடக் கண்டறியவொண்ணுதவாறு அவ்வளவு பொருத்தமுறப் பாடினர் என்க. (கூ0)

### உருத்திர கணிகையர் கூத்தியற்றுதல்

செப்ப மைந்ததண் ணுமையிசை தாளமென் சிறுதாள்
துப்ப மைந்தவொண் சதிதழீஇச் சுவையபல் காயம்
உப்ப மைந்தஇன் கறியென நடித்தனர் உழையோ
டொப்ப மைந்தகண் உருத்திர கணிகையர் உவந்து.

(அ - ரை.) செப்பு அமைந்த - புகழமைந்த. தண்ணுமை - மத்தளம். சிறுதாள் - சிறிய அடிகளது. துப்பமைந்த - நன்மை பொருந்திய. ஒண் சதி தழீஇ - அழகிய மிதிப்பினைத் தழுவி. உழை - மான். உவந்து - மகிழ்ந்து.

இனிய கறியானது, எவ்வாறு அளவொத்த சுவையினையுடைய கூட்டுப்பொருள்களால் மகிழ்ச்சியை விளைவிக்கின்றதோ, அவ்வாறு மகிழ்ச்சியுண்டாக்கும்படி தண்ணுமை முதலியவற்றைத் தழுவி நடித்தனரென்க. இஃது ஒப்பணி. (கக)

### தமோகுணமாதின் தருக்கு

எந்தை பாலுமை முக்குணங் களுமுரு வெடுத்து
வந்த மாதர்கள் அருகுநின் றனர்பணி மகிழுஉ
அந்த மாதருள் தமோகுண மாதுமை அருளால்
சந்த மாயையென் பெயர்கொடு தருக்கிநின் றனளே.

(அ - ரை.) எந்தை - இறைவன். முக்குணம் - சத்துவகுணம், இராசத குணம், தாமதகுணம். பணிமகிழுஉ - குற்றேவல் செய்தலில் மகிழ்ந்து.

அங்குக் கூடிய மாதர்களுள் தமோகுணமாது, இறைவியின் திருவருளை மிகுதியும் பெற்றிருந்தமையின், நல்ல அழகையும் மாயை என்னும் பெயரையுங் கொண்டு இறுமாந்து நின்றாள். (கஉ)

### உருத்திரர்களின் கூட்டம் வருதல்

தெள்ளு வார்திரைக் கங்கையுங் கங்கையுஞ் சிறிய
பிள்ளை யாகிய மதியமும் மதியமும் பெரிது
துள்ளும் ஒரின நௌவியும் நௌவியுந் தொடர்பு
கொள்ளு மாறவன் நெருங்கின உருத்திர குழாங்கள்.

(அ - ரை.) தெள்ளு - தெளிவு. இள நௌவி - இளமான். குழாம் - கூட்டம்.

இறைவன் கூறுகிய உருத்திரர்களும் இறைவன் அணியும் கங்கை பிறை மான் முதலியவற்றைத் தாங்கியுள்ளமையின், நெருங்கிய விடத்தில் உறவு கொள்ளலாயின. (கக)

நாராயணர்கூட்டம் வருதல்

சங்க மொன்றுடன் ஒன்றுதாக் குறவொளி தழைக்குந்
துங்க நேமியும் அன்னவா யுறவலை சுருட்டும்
பொங்கு வேலைவந் தெனவரிக் கணங்களற் புதத்த
எங்கள் நாயகன் பேரவை யிடத்துவந் திறுத்த.

(அ - ரை.) சங்கம்-சங்கு. ஒளி தழைக்கும்-ஒளிபெருகும். துங்க நேமி - உயர்வினையுடைய ஆழி. அன்னவாய் உற - அப்படியே நெருக்கமாகப் பொருந்த. பொங்கு வேலை - பொங்குகிற கடல். அரிக்கணங்கள் - நாராயணர்களின் கூட்டம். அற்புதத்த - வியக்கத் தக்கபடி. வந்து இறுத்த - வந்து தங்கின. (கஎ)

பல நான்முகர் வருதல்

முகங்கள் நான்கிலும் நான்மறை விதிமுறை முழங்க
உகந்து கையிரு நான்குநான் குச்சியிற் குவியச்
சகந்த ருஞ்செயற் பிரமர்கள் அளப்பிலர் தையல்
பகுந்த மேனியன் அவையிடைப் புகுந்தனர் பரவி.

(அ - ரை.) விதிமுறை - முறைப்படி சகம் தரும்-உலகங்களைப் படைக்கும். பகுந்த - பகிர்ந்த; பங்குகொண்ட. தையல் - இறைவி. பிரமர்கள் மறை முழங்க உச்சியிற் குவிகையராய் அவையிடைப் பரவிப்புகுந்தனர் என்க. (கஅ)

பல இந்திரர் வருதல்

அயனு மாயனும் எனினுயர்ந் தவரென்ப தன்றிக்
கயிலை நாயகன் அமர்திரு வோலக்கங் காண்பான்
நயனம் ஆயிரம் இலாமையி னதிகன்நா னென்று
வயிர வான்படை யிந்திரர் எண்ணிலர் வந்தார்.

(அ - ரை.) அயனும் - நான்முகனும். மாயனும்-திருமாலும். நயனம் - கண். வயிரவான் படை - சிறந்த வச்சிரப்படை.

உயர்ந்தவர் என்பது அன்றி - உயர்ந்தவர் என்று சொல்லப்படுவதல்லாமல் (அவர் உயர்ந்தவரல்லர் செயலால்) (ஆயிரங் கண்களால் பார்க்கப்படுஞ் செயலால்) அதிகன் நான் என்று - நான் என்று நினைத்து. (கக)

### நாகர் சித்தர் முதலியோர் வருதல்

உரகர் சித்தர்கள் வித்தியா தரர்சுர ருயர்கிம்
புருடர் மெய்க்கதிர் முதலிய கோள்திசை புரப்போர்
நிருதர் மற்றுளார் விழிபிதுங் கிடவுடல் நெருங்க
வரதன் அத்திரு வோலக்கங் காணிய வந்தார்.

(அ - ரை.) உரகர் - நாகர். சுரர் - தேவர். மெய்க்கதிர் - உண்மை ஞாயிறு. திசை புரப்போர் - திக்கினை யாள்வோர். வரதன் - மேன்மை களை யளிக்கும் கடவுள். காணிய - காணும் பொருட்டு (கஎ)

### வசிட்டர் முதலிய முனிவர்கள் வருதல்

அழிவும் ஆக்கமும் உரையினுற் செயும்வலி அடைந்தார்
மொழியும் யாக்கையு மனமுநல் அறங்களின் முயன்று
கழியு மாறுமுக் காலமு முளர்தளை கழன்றார்
பழியி லாவதிட் டாதிமா முனிவரர் பரந்தார்.

(அ - ரை.) ஆக்கம் - பெருக்கம். உரை - வாய்மொழி. தளை கழன்றார் - உலகப் பற்றுக்களினின்றும் விடுபட்டவர். பரந்தார் - பரவினர்கள். முக்காலமும் உளர் - மூன்று காலத்திலும் இருப்பவர்கள். (கஅ)

### பூதக்கூட்டம் வருதல்

குழவி பால்குடிப் பதுகடல் குடிப்பது குழவி
பழகு மாறுணல் மண்ணெடுத் துண்பது படைப்பு
முழுது மோர்தளர் நடைமகச் செயலெனு முரண்கொள்
வழுவி லாவருட் கணங்களெண் ணிகந்தன வந்த.

(அ - ரை.) குழவி - குழந்தை. பழகும் ஆறு உணல் - பழகும்படி உண்ணுதல் முரண் - வலிமை. வழுவு - தவறு. எண் இகந்தன - அளவுஇல்லாதன. படைப்பு முழுதும் குட்டிப் பூதங்களின் விளையாடல். குட்டிப் பூதங்களின் பெருமையைக் கூறவே பெரும்பூதங்களின் தன்மை ஒருவாறு புலனும்.

பால் குடிப்பதுபோன்றது பூதக்குழவிகளுக்குக் கடல் குடிப்பது. பழகுமாறு உண்பது போன்றது மண் எடுத்து உண்பது என்பது கருத்து. (கக)

வீரபத்திரர் வருதல்

செருக்கொ டுஞ்சிவ நிந்தைசெய் வாய்க்கிலை தீர்வு
விரிக்கி னென்றுமுன் சிறுவிதி தலையற வெட்டி
எரிக்கு நல்கிநிந் தனைசெயா மறிமுகம் இயைத்துத்
தருக்கி நின்றவவ் வீரன்வந் தொருபுடை சார்ந்தான்.

(அ - ரை) செருக்கொடும் - ஆணவத்தோடும். தீர்வு இலை - கழுவாய் இல்லை. சிறுவிதி - தக்கன். மறிமுகம் - ஆட்டுமுகத்தை. இயைத்து - பொருத்தி. தருக்கிநின்ற - மகிழ்ந்து நின்ற, ஒருபுடை - ஒருபக்கம்.

தக்கன் தலையை வெட்டி ஆட்டுமுகத்தை அமைத்தது, இறைவனை இகழ்ந்தமைக்கும் மேலும் இகழாமல் இருக்கும் பொருட்டுமாம். (௨0)

வடுகன் வருதல்

காதி யாயிர மால்களைப் பிழிந்துமரங் கனிபோற்
கோது வீசினுங் கடல்கவிழ்த் தனையசெங் குருதி
பாதி யாயினு நிரம்புருக் கபாலபா ணியனுய்
மாது பாதியன் அவையிடைப் புகுந்தனன் வடுகன்.

(அ - ரை.) காதி - கொன்று. கோது - சக்கை. செங்குருதி - செந்நிறமுடைய உதிரம். கபாலபாணியன் - நான்முகன் தலையோட்டைக் கையிலே உடையவன். வடுகன் - வைரவன்.

ஆயிரந்திருமால் குருதியைப் பொழியினும் பாதியும் நிறையாது வைரவன் கையிலுள்ள மண்டையோடு; அவ்வளவு பெரியதென்க. (௨௧)

வீரமாகாளி வருதல்

வீர மாதருக் கில்லையென் றுரைப்பதென் விளங்க
வீர மாதென அறிகிலி ரோவென விளம்பி
வீர யோகினி வெள்ளமோ டமர்பொர விரும்பும்
வீர காளியும் புகுந்தனள் அவையிடை விரைந்து.

(அ - ரை.) விளங்க - விளக்கமாக. அமர்பொர - போர்செய்ய. யோகினி வெள்ளம் - காளிக்கு ஏவல் செய்யும் கூட்டம்.

எருமைமுக அசுரன் முதலியோரை வென்ற தன்னாற்றல் புலப்பட இவ்வாறு இயம்பி வந்தனள். (௨௨

### பிருங்கி முனிவர் மகிழல்

ஊன்று ஞானமோ டுயர்வயி ராகநல் லொழுக்கம்
மூன்று காலெனக் கொண்டரன் முகத்தின முறுவல்
தோன்று மாறுநின் றுடினன் சுடரவன் இருளைப்
போன்று மாயையைத் தொலைத்திடு பிருங்கியென் புனிதன்.

(அ - ரை.) ஊன்று-உறுதியாகத் தாங்கப்பெற்ற. வயிராகம்-வைராக்கியம்; உறுதி. முறுவல்-புன்னகை. புனிதன்-தூயோன்.

ஞானம், வைராக்கியம், நல்லொழுக்கம் இவை மூன்றும் கால்களாகக் கொண்டு ஆடினன் பிருங்கி முனிவன். அஃது அரனுக்கு முறுவலை விளைத்தது என்க.

ஞாயிறு இருளைத் தொலைத்தாற்போலப் பிருங்கி முனிவர் மாயையைத் தொலைத்தவர் என்க. (௬௧)

### நந்திதேவர் கூட்டத்தை ஒழுங்குபடுத்தல்

படிகொள் மாமுடிக் கங்கணத் திறைபதம் படுமொண்
முடிகள் யாவையும் படுகழல் நந்தியம் முதல்வன்
அடிகள் ஏந்துகை யுறவடித் தொதுக்கியவ் வவையைக்
கடிகொள் மாலையம் பிரம்பொடு திரிந்தனன் களித்து.

(அ - ரை.) படி - நிலம். பதம்படு - திருவடிகளிலே படுகின்ற. ஒண்முடி - ஒளி பொருந்திய மணிமுடிகள் கழல்-அடி. கடிகொள்-கள்மணத்தைக் கொண்ட. படிகொள் மாமுடிக் கங்கணத்து இறை-பூமியைத் தாங்கிய பெரிய தலையையுடைய சேடனாகிய பாம்புக் கங்கணத்தையுடைய இறைவன் (சிவன்.)

இறைவன் நிலவுலகைத் தாங்கும் ஆதிசேடன் என்னும் பாம்பையே காப்பாக அணிந்தவர். இறைவனை வணங்கவருவார் அனைவரும் நந்திதேவரையும் வணங்குவர்; ஆகலான், 'இறைபதம்படும் ஒண்முடிகள் யாவையும் படுகழல் நந்தி' என்றார். (௬௨)

### வாணாசுரனும் பானுகம்பனும் பேரொலி யுண்டாக்குதல்

பெய்யு மாமழை முகிலெனப் பெரியவாய் முழவம்
துய்ய மாமதி அனையவெண் சுரிமுகச் சங்கம்
ஐய வாணனும் பானுகம் பப்பெய ரவனும்
கையும் வாயுமொத் ததிர்த்தனர் செவிகரங் கவிழ்ப்ப.

(அ - ரை.) முழவம் - குடமுழா என்னும் வாத்தியம். துய்ய - களங்கமற்ற. சுரிமுகச் சங்கம் - சுழிந்த முகங்களையுடைய சங்கம். ஐயவாணன் - அழகிய வாணாசுரன். அதிர்த்தனர் - முழக்கினர். செவி கரம் கவிழ்ப்ப - காதுகளைக் கையினாலே மூடிக்கொள்ள.

வாணாசுரனுக்கு ஆயிரங் கைகள்; பானுகம்பனுக்கு ஆயிரம் வாய்கள். எனவே இருவரும் முறையே முழவங்களையடித்தும் சங்குகளை யூதியும் பேரொலியுண்டாக்குவதற்கு ஏற்றவர்களானார்கள். இது நிரனிறையணி. (௬௫)

## அவையிற் குழுமிய பலர் செயல்கள்

துதிப்ப ரோர்சிலர் பாடுவ ரோர்சிலர் துள்ளிக்
குதிப்ப ரோர்சிலர் கைகளால் தோளிணை கொட்டி
அதிர்ப்ப ரோர்சிலர் நெக்குநெக் குருகிநெஞ் சகமெய்
விதிர்ப்ப ரோர்சிலர் ஆயினர் அவையிடை மிடைந்தோர்.

(அ - ரை.) துதிப்பர் - வணக்கப்பாடல்கள் பாடுவர். மெய் விதிர்ப்பர்-உடல் நடுங்குவர். மிடைந்தோர் - நெருங்கினோர். (௬௬)

## பலவகைப்பட்ட ஒளிகள்

படைக்க லங்களின் ஒளியிமை யவரொளி பரித்த
தொடைக்க லங்களின் ஒளியரம் பையர்பணைத் தோளின்
இடைக்க லங்களின் ஒளியெலாம் இருளிடை மிடற்றின்
அடைக்க லம்புக நிறைந்தன பரந்தபே ரவையில்.

(அ - ரை.) படைக்கலங்கள் - போர்க்கருவிகள். இமையவர் - தேவர். பரித்த - தாங்கிய. தொடைக்கலன்கள் - பொன்னரி மாலைகள். பணைத்தோள் - மூங்கில்போன்ற தோள். மிடற்றில் - கண்டத்தில்.

பலவகைப்பட்ட ஒளிகளும் அவ்வவைக்கண் மிகுந்தபடியால், ஆங்கிருந்த இருளானது இறைவனது கழுத்தினிடத்திலே அடைக்கலம் புகநேர்ந்தது. இறைவன் கண்டத்திலே நஞ்சக்கறை யுளதாகலின் இவ்வாறு கூறினார். (௬௭)

## இறைவி இறைவனிடம் வினவல்

இன்னணம் அவையிடை யிருந்த எம்பிரான்
தன்னொடு வினவுமோர் தகைமை உன்னுபு
கன்னலும் அமுதமுங் கைப்ப எம்முடை
அன்னைதன் வாய்திறந் தறைதல் மேயினள்.

(அ - ரை.) இன்னணம் - இவ்வாறு. ஓர்தகைமை - ஒரு காரியத்தை. உன்னுபு - நினைந்து. கன்னல் - கரும்பு. கைப்ப - கசக்க. அறைதல் மேயினன் - சொல்லலுற்றான். (சுஅ)

இங்குக் கூடியோர் வீடு பேறு எய்துவரா? எய்தாரா? என வினவல்

தலைவநின் அவையிடைச் சார்ந்த இப்பெரு
நலனுடை யவரெலாம் நணுகி வெம்பவத்
தலைகில ராகியின் படைவ ரோவலால்
நிலையில ரோவிது நிகழ்த்துவா யென்றாள்.

(அ - ரை.) நணுகி - பொருந்தி. வெம்பவம்-கொடிய பிறப்பு. அலைகிலர் ஆகி - அலையாதவர்களாகி. நிலையிலரோ - அழிகின்றவர்களோ? நிகழ்த்துவாய் - கூறுவாய்.

இங்குக் கூடியுள்ளோரனைவரும் வீடுபேறடைவரோ; அல்லது பிறப்பிலும் இறப்பிலும் அலைவார்களோ என்பது இறைவியின் ஐயம். (சுக)

இறைவன் பதிலுரைத்தல்

விளங்கிழை நன்றுநின் வினவென் றெந்தைமண்
அளந்தவன் அயன்முத லாயி னோருமின்
புளங்கொளு நாமரு பத்தொ டொன்றுறத்
தளைந்துள கிரியையாற் சார்கிலா ரென்றான்.

(அ - ரை.) விளங்கிழை-விளங்குகின்ற அணிகலன்களை யுடையவளே! மண்ணளந்தவன் - திருமால். உளங்கொளும் - உள்ளத்திலே கொள்ளுகின்ற. நாமரூபத்தொடு-பெயர் வடிவுகளோடு. தளைந்துள - கட்டப்பெற்றுள்ள. கிரியையால் - வினையினால். சார்கிலார் - வீடுபேறடையமாட்டார்.

வினைத்தொடர்பு இருத்தலினால் வீடுபெறெய்தார் என்பது இறைவன் விடை. (எ0)

வினையை வெல்வதற்கு இறைவி சூழ்ச்சி கேட்டல்

அனையதேல் நாம ரூபக் கிரியைகள் அனைத்தும் வெல்ல
நினைவுறு சூழ்ச்சி யொன்று நீயெனக் குரைத்தி யென்னப்
பனிமலை தவஞ்செய் தீன்ற பவளவாய் மடந்தை கூற
நனையவிழ் கொன்றை வேணி நம்பன்மற் றிதனைச் சொல்வான்.

(அ - ரை.) அனையதேல்-அப்படியாயின். நினைவுறு-கருதத்தக்க. கனை அவிழ்-அரும்பவிழ்ந்த. நம்பன்-இறைவன். நாமம் ரூபம் கிரியை- பெயர் வடிவு செயல். சூழ்ச்சி - தந்திரம். என்னு - என்று. (கக)

## வீடுபே றடையும் வழியை இறைவன் கூறல்

போகபூ மியினிற் போக தனுவினுற் பொருந்த லாகா
தேகமாம் இன்ப சித்தி யியம்புறிற் கரும பூமி
ஆகமா னதுகொண் டன்றி ஆதலால் ஞாலத் தெய்தி
யோகமா நெறியி னின்ருேர் உண்மைசா தித்துக் கொள்வர்.

(அ - ரை.) ஏகம்ஆம் - ஒன்ருகிய. போக பூமி - தேவர் உலகம். போகதனு - போகத்தை நுகர்தற்குரிய உடல். பொருந்தலாகாது - அடைய முடியாது. கருமபூமி - நிலவுலகு. ஆகம்-அதற்குரிய மனித வுடம்பு. ஞாலத்து எய்தி-உலகத்தை யடைந்து. உண்மை சாதித்துக் கொள்வர் - மெய்யறிவைத் தேடிக்கொள்வார்கள்.

இன்பசித்தி கருமபூமியாகமானது கொண்டன்றிப் போகதனுவினுற் பொருந்தலாகாது, எனக் கூட்டுக. (கஉ)

## நல்லாசிரியன் யார் ? என வினவல்

என்றிது கொழுநன் கூற இளங்கொடி அனைய தாயின்
ஒன்ருெரு மக்கள் ஞாலத் துவமையின் ஞான சித்தி
நன்றுற உணர்த்த வல்ல குரவன்யார் நவிறி யென்னக்
குன்றணி மதிய மொப்பக் குனித்தவன் கூற லுற்ருன்.

(அ - ரை.) இளங்கொடி - இளங்கொடி போல்பவளாகிய இறைவி. அனையதாயின் - அப்படிப்பட்டதானுல். ஒன்ருெரு மக்கள்- ஒவ்வொருமக்களும். உவமையில் - ஒப்பில்லாத. நன்று உற - நன்ருகவடைய. குரவன் - குரு. நவிறி - கூறுவாயாக. குன்று - மேரு மலையை. அணிமதியம் ஒப்பக் குனித்தவன் - சடையில் அணிந்துள்ள பிறைத்திங்களைப் போல வளைத்தவன். (கங)

## இறைவன் யாமே அல்லமனெனல்

தொல்லையில் உயர்சுஞ் ஞானிதூய்நிராங் கார னென்போர்
எல்லையில் தவங்கள் செய்ய எமதுமெய் வடிவத் தானே
அல்லம நாம மைந்தன் ஆயினம் அனையான் தன்னை
வில்லுறழ் நுதலாய் காண்டல் மிகவுனக் கரிய தென்ருன்.

(அ - ரை.) தொல்லையில் - முன் ஒரு காலத்தில். உயர் - உயர் வினையுடைய. சுஞ்ஞானி-தாய் பெயர். தூய்-தூய்மையை உடைய. விராங்காரன் - தந்தை பெயர். மைந்தன் - பிள்ளை. வில்உறழ் - வில்லைப் போன்ற. நுதலாய் - நெற்றியை உடையவளே.

சுஞ்ஞானி விராங்காரன் என்பவர் அல்லமனுக்குத் தாய் தந்தையர். (௰௪)

## இறைவி சினந்துரைத்தல்

என்றலும் இமைய வல்லி யெனக்கரி தென்ப தென்கொல்
உன்றனி அல்ல மன்றன் உண்மையை அறிய வேண்டின்
நின்றவர் தமக்கெ லாமும் எளிதென நெகிழ்ந்து ரைப்ப
அன்றினர் புரமெ ரித்த அணிநகை யாளன் சொல்வான்.

(அ - ரை.) நின்றவர் தமக்கு எலாமும்-எனக்கு மட்டுமல்லாமல் இவ்வவைக்கண் வந்திருப்போர் எல்லோருக்கும். எளிது - எளிமை. நெகிழ்ந்து - கலங்கி. அன்றினர் புரம்-பகைவர்களின் முப்புரங்களை. அணிநகையாளன் - அழகிய நகைப்பையுடையவன். (௰௫)

## இறைவன் அல்லமதேவரின் பெருமை கூறல்

முனிவுறேல் வறிய உன்றன் மொழியள வல்லன் மாதே
வினைதபும் அன்ப ரன்பால் வேண்டிய வடிவ னாகி
அனையவர் விழியில் தோன்றி அருளுவன் அலம தேவன்
தனதியல் பியாவ ராலுஞ் சாற்றிடற் கரிய தென்றான்.

(அ - ரை.) முனிவுறேல்-சினவாதே. வறிய-வீணான. வினைதபு - வினைகளை ஒழித்துநின்ற. அனையவர் - அப்படிப்பட்ட அன்பினை யுடையவர்களது. தனது இயல்பு-அவ்வல்லமதேவனது இயல்பை. ()

## இறைவி, மாயையால் அல்லமனைக் காண்பேன் எனல்

மெய்ம்மையிம் மாற்றம் ஆகும் வேறுளார்க் கியான்செய் மாயை
பொய்ம்மலி செயலில் தப்பிப் போமெனிற் காண்ப லென்னு
அம்மலை மகள்த ருக்கி அறைதனு நின்றன் ஆற்றல்
மைம்மலி குழலாய் காண்கும் என்றிது வள்ளல் கூறும்.

(அ - ரை.) மாற்றம் - மொழி. வேறு உளார்க்கு-அல்லமனின் வேறாயுள்ளவர்கட்கு. பொய்ம்மலி செயலில் - பொய்யால் நிறைந்த செயலின் நின்றும். காண்பல் - பார்ப்பேன். தருக்கி - செருக்குற்று. என்னு - என்று. ஆற்றல் - வலிமை. மைம்மலி - கருமை நிறைந்த. காண்கும் - பார்ப்போம் (௰௭)

## இறைவி தன் சூள் பொய்யாதெனல்

இன்னணஞ் சூளி யம்பி இனிவறி திருத்தி யாயின்
பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலை மடவாய் தோல்வி
நின்னிடை வருமென் றண்ணல் நிகழ்த்தலும் இமைய வல்லி
என்னுரை தவறு தென்று நெடுமொழி யிசைத்துப் பின்னர்.

(அ - ரை.) இன்னணம் - இவ்வாறு. பொன் அவிர் - பொன் போல விளங்குகின்ற. சுணங்கு - தேமல். நெடு மொழி - தன் மேம் பாட்டுரை, வஞ்சினம்.
(௯அ)

## இறைவி மாயையை நிலவுலகிற் கனுப்புதல்

ஆயிடை அருகு நின்ற தமோகுண வடிவ மாகும்
மாயையை விளித்து நீபோய் மண்ணிடை அல்ல மப்பேர்
நாயகன் தனைய றிந்து நணுகுதி யென்று கூறி
ஏயினள் அவள்வ ணங்கி இனையதொன் றியம்ப லுற்றுள்.

(அ - ரை.) ஆயிடை - அவ்விடத்தில், விளித்து - கூப்பிட்டு. நாயகன் - தலைவன். நணுகுதி - வரக்கடவாய். ஏயினள் - ஏவுதல் செய்தாள்.
(௯௯)

## மாயை சூள்மொழி புகலுதல்

அல்லமன் இயல்ப றிந்தங் கணுகுவன் நழுவு மாயின்
வல்லிதின் வலிந்து பற்றி யீர்த்திவண் வருவ லென்று
சொல்லினள் ஒருசூள் வேலை சுவறவுண் டிடுவ லென்று
புல்லிய எறும்பொன் றுற்றல் புகல்வது போல அன்றே.

(அ - ரை.) இயல்பு - தன்மை. நழுவுமாயின் - தவறினால். வல்லிதின் வலிந்து - மிகவும் வலிமைசெய்து பற்றி. ஈர்த்து - இழுத்துக்கொண்டு. வேலை - கடல். சுவற - வற்ற. புல்லிய - அற்பமான. போல வருவல் என்று ஒரு சூள் சொல்லினள் எனக் கூட்டுக. இல்பொருள் உவமை.
(௧0)

## மாயை நிலவுலகடைய எண்ணுதல்

தன்னன வறியாள் மாழ்கித் தண்மதி தவழும் வேணி
முன்னவன் அவையுள் நின்று மொழிந்தவச் சூள்மு டிப்பான்
பன்னக முடிப ரித்த பார்மிசைச் செல்வை நெஞ்சத்
துன்னினள் எய்தி னளவ் வொளியிழை மாயை மாதோ.

(அ - ரை.) தன் அளவு - தன் தகுதி. மாழ்கி - மயங்கி. பன்னக முடி - ஆதிசேடனாகிய பாம்பின் முடி. பரித்த - தாங்கப்பட்ட. செலவை - செல்லுதலை. ஒளி இழை - ஒளி தங்கிய அணிகலன்களை யுடையவள்.

மாயை அச் சூள் முடிப்பான் செலவை நெஞ்சத்து உன்னினள் எய்தினள் என முடிக்க. (கக)

இரண்டாவது கைலாச கதி முடிந்தது

கதி உ க்குச் செய்யுள் அஉ.

---

## ௫. மாயையின் உற்பத்தி கதி

[இக்கதிக்கண் விளவல நாட்டின் பெருமையும், அந்நாட்டின், தலை நகராகிய வனவசைமாநகரின் சிறப்பும், அந்நாட்டினை யாளும் மமகாரன் என்னும் அரசனின் சீர்த்தியும், அவன் மனைவி மோகினியின் நலமும், அவ்விருவரும் மகவுக்காக நோன்புகளியற்றுதலும், மோகினி வயிற்றில் மாயை கருவாதலும், மாயையின் பிறப்பும், அவள் பிறப்பால் மகிழ்ந்த மமகாரன் விழாக் கொண்டாடுதலும், காமன் செய்கையும், தவம்புரிவோருக்கு நேரிடும் இடையூறும், அவர்கள் அவ்விடையூற்றின் காரணத்தை யாராய்தலும், துருவாச முனிவர் ஆங்குத் தோன்றி ஐயத்தைப் போக்குதலும், மமகாரன் தன் மகளுக்குப் பெயரிட்டுச் சிறப்புக் கொண்டாடுதலும், மோகினி தன் மகளை வளர்க்கும் அருமைப்பாடும், பேதைம்பை முதலிய பருவங்களைக் கடந்து, மாயை மங்கைப் பருவமடைதலும், அப்பருவத்தில் அவள் பொழுது போக்குதலும், மமகாரன் தன் மகளுக்கு மணவாளனை யாராய்தலும், அகங்காரனாகிய குரு வருதலும், அவன் மாயையைப் பார்த்துச் சிவவீரனே அவளுடைய தலைவனாகத் தக்கவன் என்று கூறுதலும், மாயைக்கு இறைவனைப் பூசனைபுரியும் முறையைப் போதித்தலும் ஆகிய செய்திகள் விரிவாகக் கூறப்பெறுகின்றன.]

பூத லத்தைப் பொருந்துபு மாயையென்
றோத லுற்ற ஒருபிடி நுண்ணிடை
மாத வத்தர் மனங்கள் கலங்குறச்
சாத முற்று வளர்ந்தமை சாற்றுவாம்.

(அ - ரை.) பொருந்துபு - அடைந்து. ஒரு பிடி நுண்ணிடை - ஒரு பிடியில் அடங்கும்படியான நுட்பமுடைய இடையுடையவள். மா - மிகுந்த. சாதமுற்று - பிறந்து. (௧)

### விளவல நாட்டின் பெருமை

களங்க வெண்மதி நெஞ்சங் கவற்றுமோர்
துளங்கு சங்குடைத் தோன்றல் மணத்தணி
வளங்கொள் மண்மகள் மார்பின்ம தாணிபோல்
விளங்கு மென்ப விளவல தேயமே.

(அ - ரை.) களங்கம் - குற்றம். மதிநெஞ்சம் - சந்திரனது மனம். கவற்றும் - கவலைப்படுத்தும். ஓர் - ஒப்பற்ற. துளங்கு - ஒளிசெய்கின்ற. தோன்றல் - திருமால். மதாணி - பதக்கம்.

வெண் திங்கள் கவலுதற்குக் காரணம் தன்னிடம் களங்க
மூடைமையும், சங்குபோன்ற வெண்மையில்லாமையுமாகும். அவ்
விளவல நாடு திருமால் மண்மகளை மணம்புரிந்த காலத்தில் அவன்
மார்பிலணிந்த பதக்கம்போல் அழகிற் சிறந்து விளங்கியது. (உ)

அந்நாட்டின் குளம், வயல், பொழில், வீடு முதலியன

வாவி யாவு மதன்பெருந் தூணிசெய்
யாவு மார னெடுக்குஞ் சிலையிடங்
காவெ லாமவன் காகள சாலைகள்
பூவை மார்மனை போர்க்கள மென்பவே.

(அ - ரை.) வாவி - குளம். மதன் - காமன். தூணி - அம்புக்
கூடு. செய் - வயல். மாரன் - காமன். சிலை - வில். கா - பொழில்.
காகளம் - சின்னம். பூவைமார் - பெண்கள்.

குளங்களில் தாமரை கருங்குவளை முதலிய காமன் கணையாகிய
மலர் மிகுதிபற்றியும், வயலிற் காமன் சிலையாகிய கரும்பு மிகுதிபற்றி
யும், பொழில்களிற் குயில்களின் மிகுதிபற்றியும் மனைகளில் இன்ப
விளையாடல்களின் மிகுதிபற்றியும் இவ்வாறு கூறினார். பிறிதி (௩)
னவிற்சியணி.

அந்நாட்டில் அறச்செயல் மிக்கவர்களின் மிகுதி

பொறைக்க யிற்றிற் புகழையின் சொல்லெனும்
விறற்க யிற்றின் விருந்தைக் குரவர்சொல்
மறைக்க யிற்றின் மனத்தைத் திருவைநல
அறக்க யிற்றின் அசைப்பவர் எங்குமே.

(அ - ரை.) பொறை - பொறுமை. விறல் கயிறு - வெற்றி
பொருந்திய கயிறு. திருவை - செல்வத்தை. அசைப்பவர் - கட்டு
வோர். பொறைக் கயிற்றிற் புகழை அசைப்பவர். எனவே
பொறுமையாற் புகழ் தம்மைவிட்டு நீங்காது நிலைபெறச் செய்யும்
அறிஞர் என்பது விளங்கும். இவ்வாறே மற்றவற்றையும் விளக்குக.

பொறுமையால் புகழையும், இன்சொல்லால் விருந்தையும்,
ஆசிரியர் நன்மொழியால் மனத்தையும், அறச்செய்கையால் செல்வத்
தையும் கட்டுப்படுத்தியுள்ளவர்கள் என்க. பொறுமையின்றெனிற்
புகழ்பெற வியலாது; இன்சொற் கூறாமல் விருந்தோம்பல் இயலாது;
குரவருரையின்றி மனமடக்க இயலாது; அறம் புரியாமல் செல்வத்தை
நிறுத்துதல் இயலாது என்பவை இதனால் விளங்கும். (௪)

அந்நாட்டில் செல்வத்தினும் அறிவினும் அழகினும் மிகுந்தவர்கள் உளர்

வறிய இவன் வடதிசை மன்னவன்
அறிவி லாள னனந்தனு மாவனோ்
சிறிய இவன் சிலைமதன் பூம்பொழில்
வெறியு லாவும் விளவலத் தெய்தினே.

(அ - ரை.) வறியன்-பொருளற்றவன். வடதிசை மன்னவன் - குபேரன். அனந்தன் - ஆதிசேடன். வெறி - மணம். ஏர் சிறியன்- அழகிற் குறைந்தவன்.

விளவலநாட்டார்களுடைய பெருஞ் செல்வத்தையும் அறிவையும் அழகையும் நோக்க, அவர்கள் சிறுமை யடையவரென்க. (௬)

விளவலநாட்டிலுள்ள வனவசை மாநகர்

இணையி லாத இனைய வளம்பல
நணுகி வாழும் விளவல நாட்டிலவ்
வணியின் நாப்பண் அழுத்தும் விலையிலா
மணியின் மேவும் வனவசை மாநகர்.

(அ - ரை.) இணை - ஒப்பு. இனைய - இப்படிப்பட்ட. நணுகி - பொருந்தி. அவ்வணி - மார்ப்புப் பதக்கம். நாப்பண் - நடுமத்தி. அழுத்தும் - பதிக்கும். மேவும் - பொருந்தும்.

வனவசை மாநகராகிய தலைநகர், விளவல நாடாகிய மார்புப் பதக்கத்தின் நடுவில் பதித்துள்ள விலைமதிக்க இயலாத தலைமை மணி போன்றதென்க. (௭)

வேர்ப்பலாப் பழுத்து நிலம் வெடித்தல்

படிக்குள் ஈரப் பலாப்பழுத் தொண்புவி
வெடித்த வாயின் அனந்தன் மணிவெயில்
அடுத்து வானத் தமர்மதி யைத்தொடாக்
கடுத்த வேள்குடைக் காம்பெனத் தோன்றுமால்.

(அ - ரை.) படி - நிலம். ஈரப்பலா - வேர்ப்பலா. ஒண்புவி - ஒள்ளிய நிலம். அனந்தன்மணி - ஆதிசேடனது முடிமணி. வெயில்- கதிர். அடுத்து - சேர்ந்து. கடுத்த - சினமுற்ற. ஒப்பாகிய தற்குறிப் பணி. வேர்ப் பலாப்பழம் பருத்து நிலம் வெடிக்க அப்பிளப்பின் வழி சேடன் மணியொளி தோன்றி வான்மதியைத் தொட அதனால் அத் தோற்றம் காமன் குடைக்காம்பு போலத் தோன்றும் என்பது.

இதனால் அந்நாட்டின் நிலம் மிகுந்த வளமுடையதென்று குறிப்பித்தார். (எ)

துறவிகளைப் போன்ற தும்பிகள்

நறவ விழ்ந்த நறுமலர் தோறும்வண்
டுறவ ருந்தி யிருளுற் றொடுங்குமால்
அறவர் தங்கள் அகந்தொறும் ஐயமுண்
துறவர் தங்குகை துன்னுதல் போலவே.

(அ - ரை.) நறவு - தேன். அவிழ்ந்த - மலர்ந்த. உற-மிகவும். இருள் - தேன்கூடு. அறவர் - அறச்செயலுடையோர். அகம் - வீடு. துறவர் - துறவிகள். துன்னுதல் - பொருந்துதல். தங்குகை-தங்கள் தங்கள் குகைகளில். ஒப்பணி. (அ)

வண்டுகள் தேனினைக் கொள்ளையிடல்

வாவிச் செங்கம லங்களில் வல்லிருள்
மேவித் துஞ்சி விடிதரு காலையில்
காவிற் சென்று களிவண் டினங்குயில்
கூவத் தண்மதுக் கொள்ளைகொண் டுண்ணுமால்.

(அ - ரை.) வல்இருள் - மிகுந்த இராப்பொழுதில். துஞ்சி - உறங்கி. காவில் - பொழிலில். தண்மது - குளிர்ந்த தேன்.

இயற்கையாகக் குயில் கூவுதலைத் தேன்கொள்ளையின் பொருட்டுக் கூவுவதாக உரைத்தார். (க)

வயல்மடை உடையாமைக்குக் காரணம்

பெடையொ டுற்றுப் பிரிவில்பைங் கிள்ளைகள்
குடியி ருக்குங் குளிர்பொழில் வாய்மலர்ப்
பொடியு திர்க்கில வேலளி போய்வயல்
மடையு டைக்கு மதுப்பெரு வெள்ளமே.

(அ - ரை.) பெடை - பெட்டை. பிரிவுஇல் - பிரிவில்லாதது. பொழில் வாய் - பொழிலினிடத்திலே. மலர்ப்பொடி - பூந்தாது. உதிர்க்கிலவேல் - உதிர்க்காமலிருந்தால். அளி - வண்டு. மடை - நீர் செல்லும் வழி. மகரந்தப் பொடியால் தேன் சேறுகிச் செல்லுதல் தடைப்பட்டு நின்றதென்க.

அளிபோய் உதிர்க்கிலவேல் வெள்ளம் மடையுடைக்கும் எனப் பொருத்துக. (௧௦)

### தண்ணீரின் போக்கு

சேலு லாவித் திரியும் நதிப்புனல்
மாலி யானை மறையக் கதிர்த்தலைச்
சாலி நீடித் தழைத்து விளைவயல்
காலி னோடிக் கடிது விழுமரோ.

(அ - ரை.) சேல் - கெண்டை. நதிப்புனல் - ஆற்றுநீர். மால் யானை - பெரிய யானை. சாலி - நெற்பயிர். காலின் ஓடி - வாய்க்கால்களில் ஓடி. கடிது - விரைவாக. (கக)

### கழனி காமன் கையைப் போன்றது

வரிக்க யல்செங் கமலம் வரிவளை
இருக்கை யால்மலர் அம்பினை யேந்தலால்
விரிக்கும் அஞ்சிறை மென்னடைப் புள்வயல்
செருக்கு வில்மதன் செங்கை நிகர்க்குமால்.

(அ - ரை.) வயல், கயலையும் தாமரையையும் வரிகளையுடைய சங்குகளையும் தாங்குதலால், மதன்செங்கை, மீன்கொடியையும் செந்தாமரை மலரம்பினையும் ரேகைகளின் வளைவினையும் மலர்ப்பாணத்தையும் தாங்குவதால் அவ்விரண்டும் நிகர்க்கும்.

கயல் மச்சரேகையையும், கமலம் பதும ரேகையையும், வளை சங்க ரேகையையும் குறிக்கும் எனவும் கொள்ளலாம். (கஉ)

### தடாகங்களில் சங்குகளின் மிகுதி

நளிர்க டல்துயில் நாரணன் தன்னுருக்
கொளவ ளிப்பவர் கையிற் கொடுத்திடும்
வளைபி றக்கும் இடமென வண்புனல்
குளம னைத்துங் குடவளை மொய்க்குமால்.

(அ - ரை.) நளிர் - குளிர். தன்னுருக்கொள - தனது வடிவத்தைப் பெற அளிப்பவர் கையில் - கொடுக்கப்படுகின்றவர்களுடைய கையில். வளை - சங்கு. வண்புனல் - நல்ல நீர். குடவளை - குடம்போன்ற சங்குகள். மொய்க்கும் - நிறைந்திருக்கும். தனது வடிவம் என்பதை வடமொழியில் சாரூபம் என்ப.

சங்குகளின் மிகுதியைக் கூறியவாறு. (கங)

## தாழ்வும் உயர்வும்

தாழ்ந்தோர் உயர்வ ரென்றுமிக
உயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறஞ்
சூழ்ந்தோர் உரைக்கும் உரைகண்டாம்
மதில்சூழ் கிடந்த தொல்கைழி
தாழ்ந்தோ ரனந்தன் மணிமுடிமேல்
நின்றன் றுயர்ந்து தடவரையைச்
சூழ்ந்தோர் வரையின் உதிப்பவன்தாட்
கீழ்நின் றதுபோயச் சூழெயிலே.

(அ - ரை.) அறஞ்சூழ்ந்தோர் - அற நூல்களை ஆராய்ந்தவர். உரை கண்டாம் - சொல்லுறுதியைப் பார்த்தோம். தொல் அகழி - பழமையான அகழி. தடவரை - மேருமலை. சூழ்ந்து - வலம் வந்து. உதிப்பவன் - ஞாயிறு. எயில் - மதில். நின்றன்று - நின்றது.

அகழியானது மிகவும் ஆழமாகத் தாழ்ந்து சென்றமையின் ஆதிசேடன் மணிமுடிமேற் சென்று நின்றது. மதில் மிகவும் உயர்ந்து சென்றமையால் வானின்கண் திரியும் கதிரோன் கால்களுக்குக் கீழே சென்று நின்றது. ஆதலால் தாழ்ந்தோர் உயர்வர் உயர்ந்தோர் தாழ்வர் என்னும் பழமொழி உண்மையெனக் காட்டினர். (கரு)

## அந்நகர் மக்கள் இயல்பு

சொற்போர் புரிவர் நான்மறையா
றங்க முணர்ந்த தொழுகுலத்தோர்
விற்போர் புரிவர் நெடியசிலை
யிராம னனைய விறல்வேந்தர்
பொற்போர் புரிவர் பிறர்பொருளுந்
தமபோற் பேணிப் புரிவணிகர்
நெற்போர் புரிவர் அந்நகரில்
வேளாண் குலத்து நெறியினரே.

(அ - ரை.) தொழுகுலத்தோர் - பார்ப்பனர். பொற்போர் - பொன் குவியல். பிறர் பொருளும் தமபோற் பேணிப் புரிதல் - கொள்வது மிகுதியாகவும் கொடுப்பது குறைவாகவும் இன்றிப் பொருள் அளவுக்குத்தக வாணிகம் செய்தல். இது சொற் பின்வரு நிலையணி. பொற்போர் புரிவர் - பொன்னைக் குவித்துவைப்பர். நெற் போர் புரிவர் என்பதும் அது. (கசு)

### அந்நகரத்திற்குள்ள ஒரு குறை

உடுப்போர்க் குடுக்குந் துகில்களால்
உண்போர்க் குண்ணும் பொருள்களால்
தொடுப்போர்க் கெடுக்கு மலர்களால்
அணிவோர்க் கணியுஞ் சுடரிழையால்
அடுப்போர்க் கடுக்கு மனைகளாற்
குறைபா டுடைய தன்றதுதான்
கொடுப்போர்க் கிரப்பா ரில்லாத
குறையொன் றுளது கூறுங்கால்.

(அ - ரை.) துகில் - ஆடை. தொடுப்போர்-கட்டுவோர். சுடர் இழை - ஒளியுடைய அணிகலம். அடுப்போர் - குடியிருப்போர். இரப்பார் - ஐயமேற்பவர்.

குறையில்லாத அந்நகரத்தினை இவ்வாறு குறையுடையதென்று கபடமாகப் புகழ்தலின், இது வஞ்சப் புகழ்ச்சியணி. (கக)

### யானை குதிரைகளின் தனிச்சிறப்பு

ஈச னளித்த ஒருகோட்டி யானைக் கியாங்கள் இணையாயின்
வாச வனைத்தாங் கீரிருகோட் டியானை யெம்மை மானுமெனும்
பாச வுரற்கால் யானையொடு பாண்டில் இழுக்கும் பகடுயரின்
தேசின் இரதப் பரிசிறந்த என்னும் பரிகள் தெருவகலா.

(அ - ரை.) ஒரு கோட்டு யானை-ஆனைமுகக்கடவுள். வாசவன் - தேவர்கோன். ஈர் இரு கோட்டுயானை - நான்கு தந்தங்களையுடைய வெள்ளையானை. மானும் - ஒக்கும். பாச உரற்கால் - இருப்புச் சங்கிலி பூட்டிய உரலைப்போன்ற கால். பாண்டில் - வண்டி. பகடு - எருமைக்கடா. தேசின் இரதப்பரி - கதிரோனுடைய தேர்க் குதிரைகள்.

இரு கொம்புகளையுடைய எங்களினும் நான்கு கொம்புகளை யுடைய ஐராவதம் உயர்வுடையது என்று கருதலாம். ஆனால், இரண்டு கொம்புகளையுடைய எங்களினும் ஒரு கொம்புடைய ஆனை முகக் கடவுளுக்கே ஏற்றம் கூறப்படுதலின், எங்களினும் மிகுந்த கொம்பு படைத்த ஐராவதம் தாழ்வுடையதே என்னும் யானைகளும்; இரண்டு உருளைகள் பூட்டிய வண்டியை இழுத்துவரும் எருதுகளினும் ஓர் உருளையையுடைய ஞாயிற்றின் தேரையிழுத்துச் செல்லும் குதிரைகள் உயர்வுடையனவாகக் கருதப்படுதலின்; ஒன்றையும் இழுத்துத் திரியாது வறிதேயிருக்கும் யாங்கள் உயர்ந்தவர்களேயாம் என்னும் குதிரைகளும் தெருவை விட்டு அகலா என்க. (கஎ)

அந்நகரின் பல்வகை ஒலிச்சிறப்பு

மறையுங் கலைகள் பற்பலவும் முழங்கும் ஒலியும் மங்கலஞ்செய்
பறையுங் குழலும் யாழுமியம் பொலியுங் கரியும் பரிமாவும்
நிறையுந் தெருவி லோடுமணித் தேரி னொலியும் நிறைகடலின்
அறையுந் திரையிற் சென்றுவிசும் பமரர் செவியி னடைந்திடுமால்.

(அ - ரை.) மங்கலஞ் செய் பறை—நற்காரியங்களின் பொருட்டு அடிக்கப்படுகிற தோற்கருவிகளின் ஒலி. கரி - யானை. பரிமா - குதிரை. அறையும் - மோதுகின்ற. திரையில் - அலைகள் போலத் தொடர்ந்து சென்று ஒலித்து. விசும்பு - வான். (கஅ)

வனவசை மாநகரின் பெருமை

வேயை நகுமென் சுடர்த்தொடிய
தோள்மா துமையை விடைகொண்டு
பேயு மகன்று வரற்கரிய
கைலை மலையைப் பிரிந்தெய்தித்
தூய மனமுங் கலங்கஅருந்
தவர்வேள் குவவுத் தோள்வீங்க
மாயை பிறந்த வனவசைமா
நகரின் வளத்தை யார்சொல்வார்.

(அ - ரை.) வேயை - மூங்கிலை. நகும் - இகழுகின்ற. தொடிய— வளையலையணிந்த. விடை கொண்டு - உடன்பாடு பெற்றுக்கொண்டு. அகன்று - நீங்கி. வேள் - காமன். குவவுத்தோள் - பருத்த தோள். வீங்க - பூரிப்படைய. அருந்தவர் தூய மனமும் கலங்க எனக் கூட்டுக. (கக)

மமகார மன்னனது சிறப்பு

இம்மா நகரிற் கரசாகி யிருந்து வாழ்வோன்
அம்மால் புணருஞ் செயன்மாதரை யாகம் வைத்தல்
சும்மா புகழன் றெனவிந்தையைத் தோளில் வைத்தோன்
கைம்மாறு வேண்டா மழைபோல்மம கார னென்பான்.

(அ - ரை.) அம்மால் - அந்தத் திருமால். புணரும் - சேரும். ஆகம் - மார்பு. சும்மா - வீணுகும். விந்தையை - வெற்றித்திருவை. மழைபோல் - முகிலைப்போன்ற. கைம்மாறு - எதிர் உதவி.

புணருஞ் செயல் மாதர் என்றது கூடி யின்பந்தருதற்குரிய திருமகளை உணர்த்தும். போல் மமகாரன் - போலும் மமகாரன் என்க.

மழைபோல் கைம்மாறு வேண்டா மமகாரன் எனவும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். (௨௦)

அவனது இயற்கைப்பண்பு

திறைதா னளக்குந் திறல்வேந்தர்க் கரிய சீரான்
குறைதான் இரக்கு மவர்க்கோடிக் குறுக நிற்பான்
நிறைதான வெற்பு மணிநாகமு நின்று தாங்கும்
பொறைதா னெடுக்கு மிகுமாற்றல் பொருந்து தோளான்.

(அ - ரை.) திறை - கப்பம். திறல் - வெற்றி, குறைதான் இரக்கும் - குறையைத் தீர்க்கும்படி இரக்கும். தானவெற்பு - மதத்தை யுடைய யானை. மணிநாகம் - ஆதிசேடன். பொறை - நிலவுலகச் சுமை. ஆற்றல் - வலிமை.

தோளான் என்பது மறத்தைத் தொலைத்து அறத்தை நிலை நிறுத்தும் தோள்வலிமையுடையான் என்பதைக் காட்டும். (௨௧)

கொடையால் மிகுபுகழ் பெற்றவன்

இரப்பா வரினோ ரடிஞால மெளிய தன்றிக்
கரப்பார் கரக்கும் பொருளன்றென ஈகை கற்றே
உரைப்பா ருரைக்கு முரையாவும் புகழில் வைத்தோன்
தரைப்பா லுவமை யிலையாகத் தருக்கி வாழ்வோன்.

(அ - ரை.) ஓர் அடி ஞாலம் - திருமாலின் ஓரடியில் அடங்கிய இந்நிலவுலகம். கரப்பார் - பிசினர்கள். கரக்கும் பொருள் - ஒளித்து வைக்கும். பொருள். தரைப்பால் - நிலவுலகில். தருக்கி - செருக்கி. ஞாலம் எளியது. கரக்கும் பொருளன்று என்று கருதி ஈகையைக் கற்று என்க, புகழ் - தன் புகழ். (௨௨)

மோகினி

அன்னான் மனைவி வணர்வார்குழல் ஐய வேற்கண்
மின்னார் மருங்குல் தளர்ந்தொல்கி மெலிய விம்மிப்
பொன்னார் சுணங்கு விரிபூண்முலைப் பூங்கொம் பன்னான்
இன்னா ரமுத மொழிமோகினி யென்னும் பேராள்.

(அ - ரை.) வணர் - வளைந்த. வார் - நீண்ட. ஐயவேற்கண் - அழகிய வேல்போன்ற கண். மருங்குல் - இடை, ஒல்கி - அசைந்து. விம்மி - பருத்து. இன் ஆர் - இனிமை நிறைந்த. பொன் ஆர் சுணங்கு - பொன் போன்ற தேமல்.

குழலையும் கண்ணையும் பூண்முலையையும் உடைய பூங்கொம்பு போன்றவள் ஆகிய மோகினி என்றும், மொழியையுடைய மோகினி என்றும் கூட்டுக. (உக)

மோகினியின் சிறப்பு

ஒன்ருன நம்பன் மருங்காயிழை உய்த்த மாயை
குன்ருத ஆற்றல் முனிவோருளங் குன்று மாறு
பொன்ருத பொற்பிங் கிவள்பூங்கருப் போந்து பெற்ருள்
என்ரு லிவளுக் கிணையாவினி யாரைச் சொல்வாம்.

(அ - ரை.) ஒன்ருன - மறைமுடிவிற் சொல்லப்பட்ட ஒரே பொருளான. ஆயிழை - இறைவி. உய்த்த - செலுத்திய. பொன்ருத பொற்பு - குறையாத அழகு. பூங்கரு - பொலிவு பொருந்திய கருப்பம். போந்து - உண்டாகி. ஆயிழை: அன்மொழித் தொகை. (உஉ)

மகவுக்காக நோன்புகள் இயற்றல்

இம்மம காரனு மோகினி யென்னும்
மைம்மலி மென்குழல் வாள்விழி மாதும்
அம்மக வின்மையின் ஆரஞ ரெய்தி
மெய்ம்மெலி நோன்பு விளைத்தன ரன்றே.

(அ - ரை.) மைம்மலி - கருமை நிறைந்த. அம்மகவு - அழகிய பிள்ளை. ஆர் அஞர் - மிகுந்த துன்பம். மெய்ம்மெலி - உடல் இளைத்தற்கேதுவான. மமகாரம் - எனது என்னும் ஆணவம். மோகம் - விரும்பத்தகாதவைகளையும் விரும்பச் செய்யும் தீக்குணம். இவ்விரண்டையும் இங்கு ஆணாகவும் பெண்ணாகவும் கற்பித்தார். (உங)

மாயை மோகினியின் கருப்பையை அடைதல்

முன்னிய நோன்புசெய் மோகினி மாதின்
தன்னுத ரத்துமை தன்னரு ளாலே
மன்னியல் மாரன் வலப்புய மாடக்
கன்னிகை மாயை கருப்ப மடைந்தாள்.

(அ - ரை.) முன்னிய - பயனை யெண்ணிய. உதரத்து - வயிற்றில். மன்னியல் மாரன் - நிலைபெற்ற இயல்பினையுடைய காமன். வலப்புயம் ஆட - வலத்தோள் துடிக்க, மாயை - இல்லாத ஒன்றை உள்ளதாக என்னும் மயக்கவுணர்வு. மன் இயல் மாரன் - அரசனியல்புடைய காமன் என்றும் பொருள் கூறலாம். (உச)

## கருப்பகாலக் குறி

முத்தணி கொங்கை முகங்கள் கறுத்தாள்
மெய்த்திரு மேனி விளர்த்து நரம்பு
பைத்தன மீது பரப்ப இருந்தாள்
பொய்த்துயில் கொண்டு புளிக்கு முவந்தாள்.

(அ - ரை.) மெய்த்திருமேனி - வடிவத்தைப் பற்றிய அழகிய உடல். விளர்த்து - வெண்மையடைந்து. பைத்தன - பசுமையுற்றனவாய். மீது பரப்ப - உடல் எங்கும் பரவும்படி.

உடல் வெளுத்தல், நரம்புபசந்து உடலெங்கும் பரவல், கொங்கைமுகங்கறுத்தல் முதலியன சூலுற்ளோர் தன்மை. இது தன்மைநவிற்சியணி. (உஎ)

## மோகினி மாயையைப் பெறுதல்

இன்னணம் ஐயிரு திங்க ளிருந்து
பின்னரு மோகினி பெண்மக வின்ருள்
தன்னிகர் கின்ற சலஞ்சல மொன்றிங்
கின்னெளி முத்தினை யின்றதை யொத்தே.

(அ - ரை.) இன்னணம் - இவ்வாறு. தன்னிகர்கின்ற - தனக்குத் தானே ஒப்பாகவுள்ள. சலஞ்சலம் - வலம்புரிச்சங்கு.

மோகினி மாயையைப் பெற்றமைக்குச் சலஞ்சலம் முத்துப் பெறுதலை ஒப்புக்காட்டினர். இஃது ஒப்பணி. (உஅ)

## மாயை பிறந்தநாட் கொண்டாடல்

சங்கொடு தண்ணுமை சச்சரி தாளம்
வங்கியம் வெந்துடி வார்முர சங்கள்
மங்கல மங்கை மகப்பெறு நாளில்
அங்கசன் வெம்முர சென்ன அதிர்ந்த.

(அ - ரை) தண்ணுமை - மத்தளம். சச்சரி - பிரமதாளம், ஒருவகை வாச்சியம். வங்கியம் - ஊதுகொம்பு. வெந்துடி - விருப்பஞ்செய்கின்ற உடுக்கை. வார்முரசங்கள் - வாரால் இறுக்கப்பட்ட முரசங்கள். மங்கல மங்கை - மோகினி. அங்கசன் வெம்முரசு - காமன் கொடிய முரசு ஆகிய கடல். கடல் காமனுக்குரிய முரசமாகும். ஆதலால், 'அங்கசன் வெம்முர' சென்ருர். (உக)

### அந்தணர்களுக்குப் பொருள் அளித்தல்

தூண்டொளி போல்மகன் தோன்ற உவப்புற்
றுண்டகை மன்னவன் அந்தணர் கொள்ளப்
பூண்துகில் மாமணி பொன்னில மற்றும்
வேண்டின யாவும் வெறுப்ப அளித்தான்.

(அ - ரை.) தூண்டு ஒளிபோல் - தூண்டப்பெற்ற விளக்குப் போல். பூண் - அணிகலன். துகில் - ஆடை. மாமணி - சிறந்த மணிகள். வெறுப்ப - வெறுக்குமளவு மிகுதியாக.

பொன் நிலம் எனப் பிரிக்க. (௧௦)

### அப்பொழுது காமன் செய்கை

இங்கொரு மாயை யென்னும் எழில்முலை தோன்ற லோடும்
பொங்குறும் உவகை நெஞ்சம் பொறுக்கல னாகி யெய்யும்
வெங்கணை மழையுந் தூவு மென்மலர் மழையு மொன்ற
எங்கணு மதன வேந்தன் றிடையறச் சொரிந்தா னம்மா.

(அ - ரை.) பொறுக்கலன் ஆகி - தாங்கமுடியாதவனாகி. எய்யும் - செலுத்தும். தூவும் - இறைக்கும். இடை அற - ஓழிவில்லாது. கணை மழையும் மலர்மழையும் சொரிந்தான் என்க. (௧௧)

### அப்போது தவஞ்செய்வோர்கட்கு நேரிட்ட இடையூறு

கண்ணகல் நிலத்த கங்கைக் கரையினும் முழையி டத்தும்
புண்ணிய வனத்து மெய்திப் புற்றுமாய் மரமா யுற்றுந்
தண்ணிய புனலில் தீயிற் சார்ந்துமுண் டுயில்து றந்து
பண்ணிய தவத்தோர் நெஞ்சும் பதைத்தன மயலின் மூழ்கி.

(அ - ரை.) கண் அகல் - இடம் அகன்ற. நிலத்த - நிலத்தில் உள்ள. முழை - மலைக்குகை. புண்ணியவனம் - நைமிசக்காடு முதலிய இடங்கள். புற்றும் ஆய் - மேலே புற்று மூடவும். உண் - உணவு. துயில் - உறக்கம். மயலில் - மயக்கத்தில்.

நெஞ்சும், என்பதிலுள்ள உம்மை அத்தவஞ் செய்வோர் ஒழிந்த பிற மக்களையுந் தழுவி நின்றது. இஃது உயர்வு சிறப்புக் காட்டும் உம்மை. (௧௨)

## முனிவர் தம் மனக்கலக்கத்தை ஆராய்தல்

ஐம்பெரும் பூதம் எல்லாம் அடுக்கழிந் தொழியும் போதும்
கம்பமில் நமது நெஞ்சங் கலங்கிய தென்னை கொல்லோ
வம்புறு செயலிஃ தீங்கு வந்தவா றெவ்வா றென்னுச்
செம்பொரு ளுணர்ந்த சீர்சால் செய்தவ ரிருந்த காலை.

(அ - ரை.) அடுக்கு அழிந்து - நிலைகுலைந்து. கம்பம் இல் - நடுக்கம் இல்லாத. என்னை கொல் - என்ன காரணம். வம்புஉறு - புதுமை பொருந்திய, அல்லது தீமையுடைய. செயல் - செய்கை. செம்பொருள் உணர்ந்த-தத்துவப்பொருளை ஆராய்ந்தறிந்த. சீர்சால்- சிறப்பு நிறைந்த.

நிலம், வளி, தீ, வான், நீர் என்பன ஐம்பெரும் பூதங்கள். (கக)

## அப்பொழுது துருவாசமுனிவர் அங்கு வருதல்

தளர்ந்துழி யுதவுங் கல்வி தானெனத் துருவா சப்பேர்
கொளுந்தனி முனிவர் கோமான் குறுகலு முனிவ ரெல்லாம்
உளங்கனி வரநின் றேத்தி உயர்தவி சிடையி ருத்தி
வளங்கெழு மலர்கள் தூவி வந்தனை செய்து சொல்வார்.

(அ - ரை.) தளர்ந்த உழி - சோர்ந்தவிடத்து. தனிமுனிவர் கோமான் - ஒப்பற்ற முனிவர் தலைவன். குறுகலும் - அடைதலும், உளம் கனிவர - உள்ளம் மகிழும்படி. தவிசு - இருக்கை. வளம் கெழுமலர்கள் - சிறப்பமைந்த மலர்கள். (கச)

## தங்கள் உள்ளக் கலக்கக் காரணம் வினவல்

என்றுமெம் முள்ள மெல்லாம் எழுதிய விளக்குப் போல
நின்றிடும் இன்றென் கொல்லோ நிலைதடு மாறு நின்ற
தென்றறன் மு னிருந்த செய்ய சிறுசுடர் போல ஐய
நன்றிதை உணரு மாறு நவின்றருள் செய்தி யென்றார்.

(அ - ரை.) எழுதிய விளக்கு - எழுதப்பெற்றதாகிய ஓவிய விளக்கு. தென்றல் - தென்றற்காற்று. சிறு சுடர் - சிறிய விளக்கு.

தென்றல் மெதுவாக வீசுமாதலின் விளக்கை அணைக்காமல் ஆடச் செய்துகொண்டிருக்கும். இஃது ஒப்பணி. (கரு)

துருவாச முனிவர் பதில் உரைத்தல்

சங்கரி யொருத்தி யாற்றன் தமோகுண வடிவ மாயை
மங்கையை விடுப்ப அன்னுள் வனவசை நகரிற் பிள்ளைத்
திங்களி னுதித்தாள் இன்று செய்தவக் கிழமை பூண்டீர்
உங்கள்நெஞ் சதனு லாற்றல் உடைந்ததென் றவனு ரைத்தான்.

(அ - ரை.) சங்கரி - இறைவி. பிள்ளைத்திங்கள் - பிறைத்திங்கள். செய்தவம் - செய்யப்படுகிற தவம். கிழமை - உரிமை. உடைந்தது - அழிந்தது. இன்று - இந்நாள், இப்போது. பூண்டீர்: விளி. (௧௬)

முனிவர்கள் தங்கள் ஐயம் நீங்கிற்று என்றல்

அருந்தவ முனிநீ கூறிற் றுண்மையே யன்றி யெங்கள்
பெருந்தவ முயலு நெஞ்சம் பிறழ்தரற் கேது வில்லை
இருந்துளம் வருந்தி யாய்ந்த எம்மிடை ஐய மெல்லாம்
பரிந்தன அருளால் நீயெம் பால்வரு கையினு லென்று.

(அ - ரை.) கூறிற்று - கூறியது. பிறழ்தரற்கு - மாறுபடுதற்கு. ஏது - காரணம். ஆய்ந்த - ஆராய்ந்த. எம் இடை ஐயம் - எம்மிடத்துத் தோன்றிய ஐயம். பரிந்தன - நீங்கின. எம்பால் - எம்மிடம். முனி: அண்மைவிளி. நீ எம்பால் அருளால் வருகையினுல் எம்மிடை ஐயமெல்லாம் பரிந்தன என்று கூறி வழுத்தி எனக் கூட்டிப் பின் வருஞ் செய்யுளுடன் முடிக்க. (௧௭)

மாயை உலகில் தோன்றியதற்குக் காரணம் கேட்டல்

முனிவரர் துருவா சப்பேர் முனிவர்கோன் தனைவ ழுத்திப்
பனிமலை வல்லி யேவப் பட்டெழில் மாயை யென்னும்
வனிதையிவ் வுலகில் வந்த வாறுநீ விரித்தி யாங்கள்
இனிதுணர் வுறுமா றேது கென்றலும் அவனு ரைப்பான்.

(அ - ரை.) வழுத்தி - வணங்கி. பனிமலைவல்லி - இறைவி. வனிதை - பெண். வந்த ஆறு - வந்ததற்குக் காரணம். ஓதுக என்றலும் - கூறுக என்று கேட்டலும். (௧௮)

துருவாச முனிவர் கைலையில் நிகழ்ந்த செய்தியைச் சொல்லுதல்

கயிலையோ லக்கத் துற்ற கண்ணுதல் அல்ல மன்றன்
இயல்பினை அறிதல் தேற்ரு யென்றுமை யுடனு ரைப்ப
மயிலிய லறிவ லென்று மாயையை விளக்கைக் காண்பான்
பயிலிரு ளினைவி டுத்த பரிசென விடுத்தா ளன்றே.

(அ - ரை.) ஓலக்கம் - திருக்கூட்டம். கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுடைய இறைவன். அறிதல் தேற்ருய் - அறியமாட்டாய். மயில் இயல் - மயில்போலுந் தன்மையினையுடைய இறைவி. பயில் - பொருந்திய. பரிசு - தன்மை. காண்பான் - பார்ப்பதற்கு. விளக்கைக் காண்பான் இருளை விடுத்த பரிசு என மாயையை விடுத்தான் எனக் கூட்டுக.

(௪௯)

கலக்கம் தீருவதற்குத் துருவாசர் வழி கூறுதல்

காரணம் இதுவே யெங்கோன் கையினை விடுத்து மாயை
தாரணி தனில்வ ரற்குத் தக்கவம் மாயை யென்னும்
மாரண விடங்க லந்த மயக்கமல் லமனென் றிட்ட
பேரணி கலுழன் தன்னை நினைந்திடிற் பெயரு மன்றே.

(அ - ரை.) தாரணி - உலகம். மாரணவிடம் - இறப்பை யுண்டாக்குகிற நஞ்சு. பேர் அணி - பெயரையுடைய. கலுழன் - கருடன். பெயரும் - நீங்கும்.

மாயை வரற்குக் காரணம் இதுவே எனக் கூட்டுக. (௫0)

அல்லமதேவரே எல்லா நன்மைகளையும் அருளுவர் என்றல்

பிணிதப வேண்டில் வாழ்நாள் பெரிதுற வேண்டிற் செல்வம்
அணிதர வேண்டிற் கல்வி அறிதர வேண்டில் வானம்
பணிதர வேண்டின் முத்திப் பயன்பெற வேண்டில் என்றும்
இணையறும் அல்ல மப்பேர் எந்தையை நினைப்ப ரென்று.

(அ - ரை.) பிணி - நோய். தப - கெட. செல்வம் அணிதர வேண்டில் - செல்வத்தை அடைய விரும்பினாலும். அறிதர - அறிய. வானம் பணிதர வேண்டில் - விண்ணுலகத்தார் பணிதலை விரும்பினாலும். என்றும் - எந்நாளும். இணையறும் - ஒப்பற்று விளங்குகின்ற. இது குளகம். அறிஞர் நினைப்பர் என எழுவாய் கூட்டுக. (௫௧)

துருவாசர் செல்ல முனிவர்கள் அல்லமரைப் போற்றல்

புகன்றவ ருளத்தில் துன்பம் போக்குபு துருவா சன்றான்
அகன்றுதன் னிடத்த டைந்தா னன்றுதொட் டருந்த வத்தோர்
மகிழ்ந்தருள் அல்ல மன்றன் மலரடி மனத்தில் தாங்கி
உகந்தவன் புகழாய் வந்த வாறெலாம் உரைக்க லுற்றார்.

(அ - ரை.) புகன்று - சொல்லி. போக்குபு - போக்கி. அன்று தொட்டு - அன்று முதல். வந்தவாறெல்லாம் - வந்தபடியெல்லாம். மலர் அடி - தாமரைப் பூப்போன்ற பாதம். உகந்து உரைக்கலுற்றார் என்க.

(௫௨)

### முனிவர்கள் தவஞ்செய்திருத்தல்

நெஞ்செனு மகலி லன்பாம் நெய்நிறைத் துள்ள மென்னும்
பஞ்சுறு திரியி னுச்சி பற்றிட அல்ல மப்பேர்
அஞ்சுட ரிலக வேற்றி யருந்தவர் மாயை யென்னுந்
துஞ்சிரு ளகன்றி ருந்தார் தொல்லைமா தவங்கள் செய்து.

(அ - ரை.) நெஞ்சு எனும் அகலில் - மனமாகிய தகளியில். அம் சுடர் - அழகிய விளக்கு. இலக - விளங்க. துஞ்சு இருள்-அழிவுக்கு ஏதுவாகிய இருள். தொல்லை - பழைய.

முனிவர்கள், மனமாகிய தகளியில் அன்பாகிய நெய்யை நிறைத்துக், கருத்தாகிய திரியின் உச்சியில் பொருந்த அல்லமதேவர் பெயர் விளக்கை ஏற்றி மாயையினால் உண்டாகிய இருளைப் போக்கினார்கள் என்க. இஃது உருவக அணி. (௩௬)

### மாயையின் செய்தி கூறப்பெறுகின்றது

மந்தர கிரிப்பேர் பெற்ற மத்தெறி கடல்போ லையர்
சிந்தனை கலங்கி மெல்லத் தெளிந்தமை தெரிந்து ரைத்தாம்
வந்துமண் பிறந்த வன்றே மாதவர் மனங்க லக்கும்
வெந்திறல் மமகா ரன்றன் மகன்திறம் விளம்ப லுற்றாம்.

(அ - ரை.) எறி - எறிந்து கலக்கப்பெற்ற. ஐயர் சிந்தனை - முனிவரின் மனங்கள். தெரிந்து உரைத்தாம் - அறிந்து சொன்னோம். வெம் திறல் - கொடிய வலிமை. திறம் - செய்தி. ஒப்பணி. (௩௪)

### மமகாரன் மகளுக்குப் பெயரிடுதல்

காந்தம் வலியும் இரும்புபோற் கண்கள் தன்னொ டுறப்பிணித்து
நேர்ந்த மனமோ ரணுவென்னல் நியாய மன்றென் றம்மனத்திற்
போந்த ஆசைப் பெருங்கடலைப் புகட்டு மகளைக் கண்டுவந்து
வேந்தன் மாயை யெனுநாமம் விளம்பிச் சிறப்புப் பலசெய்தான்.

(அ - ரை.) காந்தம் வலியும் - காந்தக் கல்லினாலே இழுக்கப் பெறுகின்ற. உறப்பிணித்து - பொருந்தக் கட்டிக்கொண்டு. அணு என்னல் - நுட்பமான மிகச் சிறு பொருள் என்றல். போந்த - உண்டாகிய. புகட்டும் - புகவிடுகின்ற. பலசிறப்பு - மற்றும் பல சடங்குகளையும். (௩௫)

### மோகினி தன் மகளுக்கு நீராட்டிப் பொட்டிடுதல்

மாயைப் பெயர்கொள் மகளைநறு மஞ்சள் திமிர்ந்து கனைக்காலின்
ஏயக் கிடத்தி நீராட்டி யிணைக்க ணுந்தி நீரூதி
நேயத் துகிலின் மெய்துடைத்து நெகிழ்மென் முலையோ டுறத்தழுவி
வாயில் திவலை கொடுதேய்த்து மண்பொட் டணிந்து நீறிட்டு.

(அ - ரை.) திமிர்ந்து - பூசி. ஏயக்கிடத்தி - பொருந்துமாறு கிடத்தி. இணைக்கண் உந்தி - இரண்டு கண்களிலும் அது விழாமல் ஒதுக்கி. நீர் ஊதி - உச்சி நீரையூதி. நேயத்துகில் - விருப்பஞ் செய்யும் ஆடை. வாயில் திவலை - எச்சில். தன்மை நவிற்சியணி. இதுமுதல் நான்கு பாடல்கள் குளகம்.

மண்ணில் எச்சிலையுமிழ்ந்து அதனை விரலாற் றேய்த்து மண்ணைக் குழைத்துக் குழந்தைக்குப் பொட்டு இடுதல் மரபு. அது கண்ணேறு படாதிருக்கக் கருதியிடுவது. (சக)

### அணிகலன்கள் அணிதல்

கண்ணிற் கமைய மையெழுதிக்
 காற்குச் சதங்கை பொற்றண்டை
நண்ணப் புனைந்து பொன்னரைஞா
 ணடுவிற் பூட்டிப் புலியுகிர்சேர்
வண்ணப் பசும்பொன் அணிமார்பில்
 வளைந்து சிறுமென் தொடிசேர்த்திப்
பெண்ணிற் கரசி திருநுதற்பொற்
 பிறைமேற் சுட்டி யொன்றணிந்து.

(அ - ரை ) அமைய - பொருந்த. அரைஞாண் - இடுப்புக் கயிறு. உகிர் - நகம். சிறுமென்தொடி - சிறிய மெல்லிய வளையல். சுட்டி - நெற்றிச்சுட்டி. நுதலாகிய பிறையில் சுட்டியணிந்து என்க. (சஎ)

### தொட்டிலில் இட்டுச் சீராட்டுதல்

போக்கும் பொருளாற் கண்மிச்சில் போக்கி யன்பான் முலையூட்டித்
தூக்கும் பவளக் காற்பசும்பொன் தொட்டில் மலியக் கிடத்தியே
யார்க்குஞ் சுவைவா யமுதமே பார்வேந் தணியே யென்துயரந்
தீர்க்குங் கரும்பே கண்மணியே திருவே யென்று சீராட்டி.

(அ - ரை.) போக்கும் பொருள் - கண்மிச்சிலை நீக்கும் பல பொருள்களால். கண்மிச்சில் - கண் பார்வையால் வந்த குற்றம். தூக்கும் - தொங்குமாறு விடப்பெற்றுள்ள. மலியக் கிடத்தி - நிறைவு

மாறு படுக்கவைத்து. பார்க்கும் சுவை வான் அமுதம் - பார்த்து மகிழ்கின்ற இனிமையையுடைய சிறந்த அமுதம். அணி-அழகு செய்பவள். பார்வேக்தற்கு அணிபோன்றவளே. (உ௮)

மோகினி மகளைப் போற்றும் அருமை

மிடிய னொருசெய் யாளனச்செய் விளையக் காக்குஞ் செயல்போலப்
படியில் கல்வி விரும்பினேன் பாடம் போற்று மதுபோல
ஒடிவில் செங்கோல் மனுவேந்தன் உலகம் புரக்கு முறைபோலக்
கொடிய நோன்பு செய்கின்ற கொடியை வளர்த்தாள் மோகினியே.

(அ - ரை.) மிடியன் - வறிஞன். ஒரு செய்யாளன் - ஒரு வயலையுடையவன். படியில் - ஒப்பில்லாத. ஒடிவில் - வளைதலில்லாத (நேரான). புரக்கும்-காப்பாற்றும். நோன்பு - தவம், விரதம். கொடி-கொடி போன்ற பெண்.

மோகினி முழுக்கருத்துடன் மாயையை வளர்த்தாள்] என்பது குறிப்பு. (உக)

மாயை கிடத்தலின் சிறப்பு

கள்ள மாயை தன்னெழில்போற்
கண்ட தில்லை யென்னமிக
உள்ளம் வியந்து தலையசைப்ப
தொப்ப அசையுஞ் சுடர்பார்த்து
மெள்ள விரலொன் றனைச்சுவைத்து
மிளிர்பூஞ் சதங்கைத் தாளுதைத்தும்
விள்ளு மலர்வாய் குவித்தழுது
மீள நகைத்துங் கிடக்குமால்.

(அ - ரை.) கள்ளமாயை - கபடமுடைய மாயை. எழில்-அழகு. சுடர்பார்த்து-விளக்கைப் பார்த்து. மிளிர் - விளங்குகின்ற. விள்ளும் மலர் வாய் - விரிந்த மலரைப் போன்ற வாய்.

மாயை தன்னெழில்போற் கண்டதில்லை யென்று வியந்து தலையசைப்பது ஒப்ப அசையுஞ் சுடர்பார்த்து என்க. (௩௦)

மாயைக்கு எதிராக மதனவேள் செய்கை

மாயை கவிழ முகங்கவிழ்ந்த
மதனன் இருந்தா னவளிருப்பப்
போய சிலையொன் றெடுத்தெழுந்தான்
பொன்னு வியன்ற பாவையெழ

மேய அனங்க வேள்நடந்தான்
வேந்தன் பயந்த மகள்நடப்பத்
தூய தவஞ்செய் தைந்தவித்த
துறவி னோர்பா லோடினன்.

(அ - ரை.) கவிழ-முகங்கவிழ் பருவமடைய. முகம் கவிழ்ந்த - அதற்கு முன்னே நாணத்தால் முகங் கவிழ்ந்து கிடந்த. பாவை - பாவைபோல்வாளாகிய மாயை. மேய - விரும்பிய. அனங்கவேள் - காமன். ஐந்து அவித்த - ஐம்பொறிகளையுங் கெடுத்த.

மாயை கவிழ இருந்தான், இருப்ப எழுந்தான், எழ நடந்தான், நடப்ப ஓடினன் என அவள், வளர வளர மதனவேளுந் தன் செய்கையை அதிகப்படுத்திக்கொண்டிருந்தான் என்றார். (௰௧)

### மாயை மழலைமொழி பேசுதல்

குழலும் யாழும் இனியவெனக் கூறு வண்ணம் மென்கனிவாய்
மழலை மொழிந்தும் உடற்கின்ப மருவ வோடி மேல்விழுந்தும்
விழையும் அமிழ்தின் மிகவினிமை விளைய நுகருஞ் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்துஞ் செய்தாள் மோகம் ஈன்றோரை.

(அ - ரை.) குழல் - புல்லாங்குழல். யாழ்-வீணை. மழலை-திரம்பா மென்சொல். மருவ - பொருந்த. விழையும் - விரும்பும். நுகரும் - உண்ணும். அடிசில் - உணவு. அளைந்தும் - குழப்பியும். செய்தாள் மோகம்: மோகம் செய்தாள் - விருப்பம் உண்டாக்கினள்.

'குழலினி தியாழினி தென்ப' 'மக்கள் மெய்தீண்ட லுடற்கின்பம்' 'அமிழ்தினும் ஆற்ற வினிதே' என்ற குறட்பாக்களின் கருத்துப் பொதிந்த கவியீது. (௰௨)

### மாயையின் விளையாடல்

பரவு பெருஞ்சீ ரல்லமனைப் பற்ற வந்த மதியாற்றன்
உருவ நிழலைப் பற்றநினைந் தோடி யோடிக் கலுழ்ந்திடுவாள்
பொருவின் மதிய மேன்முனிந்து பொங்கு மழலை வீசாமல்
மருவி உறவு கொள்வாள்போல் வாவா என்ன அழைத்திடுவாள்.

(அ - ரை.) பரவு - உலகம் முழுவதும் பரவிய. பற்ற-பிடிக்க. மதி - அறிவு. உருவநிழல் - வடிவ நிழல். கலுழ்ந்திடுவாள்-அழுவாள். பொருவு இல் மதியம் - ஒப்பில்லாத திங்கள். மேல் - பின்னரில். முனிந்து - சினந்து. பொங்கும் அழல்-கொதிக்கின்ற நெருப்பு. (௰௩)

## மாயை பெதும்பைப் பருவம் அடைதல்

மாதிப் பரிசு தந்தைதாய் மகிழ வளர்வுற் றரசிருந்த
நீதிக் கிழவன் இறப்பவவ னெறிசேர் இளஞ்சே யவன்றவிசின்
மீதுற் றதுபோல் முன்முளைத்த வெண்பல் விழவே றெயிறுதிப்பப்
பேதைப் பருவங் கடந்துமேற் பெதும்பைப் பருவம் நண்ணினுள்.

(அ - ரை.) இப்பரிசு - இத்தன்மை. நீதிக்கிழவன் - அரசன். நெறிசேர் - வழியில் தோன்றிய. இளஞ்சேய் - இளம் புதல்வன். தவிசு - அரியணை. வேறு எயிறு - வேறு பல்.

ஒரு மன்னனிறப்ப அவன் மைந்தன் அரியணை ஏறியதுபோல் மூன் முளைத்த பல் விழுந்து வேறு பல் தோன்றியது. இது உவமையணி. ()

## பெதும்பைப் பருவச் சிறப்பு

செய்ய வல்ல கம்மியன்செய் சிங்கஞ் சுமந்த மணியணைமேல்
பைய வந்து மணிமௌலிப் பார்வேந் திருக்கும் பரிசுபோல்
வெய்ய குதம்பை வளர்த்தகல விழுநீர் வள்ளைக் காதினிடைத்
துய்ய பசும்பொன் மணிகுயின்ற துணைத்தோ டமையத் தோன்றினுள்.

(அ - ரை.) கம்மியன் - கம்மாளன். பைய வந்து - மெள்ள வந்து. குதம்பை - தக்கை. விழுநீர் - சிறந்த தன்மையையுடைய. வள்ளைக்காது - வள்ளை போலுள்ள காது. துய்ய - தூய. மணி குயின்ற - மணிகள் பதித்துச் செய்யப்பெற்ற.

மணியணை வேந்திருக்கும் பரிசுபோலக் காதிற் பசும்பொற்றோடு தங்கியிருந்தது. இதுவும் உவமையணி. (கூ)

## எட்டிப்பார்க்கும் இளமுலைகள்

மட்டுக் கணைவே ளரணுக வளர்த்த குழற்கா டலர்விரவிக்
கட்டுற் றதுநம் பரன்களத்திற் கடுவும் விழிகள் சிறிதுற்ற
முட்டித் துறவாம் பறவைமயல் முடியிற் படுதல் மெல்லமறைந்
தெட்டிப் பார்ப்ப வெனமுகங்கொண் டெழுந்த மார்பில் இளமுலைகள்.

(அ - ரை.) மட்டுக்கணை - தேனையுடைய மலர்க்கணை. வேள் - காமன். அரண் - கோட்டை, ஈண்டு, காட்டைக் கோட்டை என்றார். அலர் - மலர், பழிச்சொல். பரன் - இறைவன். களம் - கழுத்து. கடு - நஞ்சு. துறவாம் பறவை - துறவியாகிய பறவைகள். முட்டி - முட்டு தலைச் செய்து. மயல் முடியில் படுதல் - மயக்கமாகிய வலையிலே அகப் படுதலை.

மாயையின் கூந்தற்காடு முடிதலைப் பெற்றது. கண்களும் நஞ்சுத் தன்மையைப் பெற்றன. கொங்கைகள் துறவியாகிய பறவைகள் மயக்கவலையிற் சிக்குதலை எட்டிப் பார்க்கலாயின.

இஃது உருவகத்தை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பணி. அநங்கனாகிய வேடன் தான் வைத்த மயலாகிய கண்ணியில் துறவியாகிய பறவைகள் சிக்குண்டனவா என்று எட்டிப் பார்க்கும் கண்களைப்போல இளமுலைக் கண்கள் தோன்றின என விரித்துக் கொள்க. (௬௯)

### மாயையின் தருக்கு

அன்ன நடையும் அன்னமிலா ஐயர் நடையுந் தளர்வெய்தக்
கன்னி நடக்கும் நடைகற்றுள் கரும்பு கசக்கும் மொழிபெற்றுள்
மன்னு மலர்வீழ் சுரும்பனைய மைந்தர் பார்வைக் குறிப்புணர்ந்தாள்
தன்னை யரிய ளெனவறிந்து தானே மனத்தில் தருக்குற்றுள்.

(அ - ரை.) அன்ன நடை - அன்னப் பறவையின் நடை. அன்னம் இலா ஐயர் நடை - உண்ணுதலில்லாத முனிவர்களது ஒழுக்கம். சுரும்பு அனைய - வண்டுகளை ஒத்த. பார்வைக் குறிப்பு - காமக் குறிப்பு. அரியள் - மிகவும் அருமையானவள். தருக்கு - செருக்கு. இவள் மொழி கேட்டார்க்குக் கரும்பும் கசக்கும் என்பது கருத்து. ()

### காமன் கணை தொடுத்தல்

இந்தக் கன்னி மதிமுழுநோக் கெய்திச் செவ்வாய் வலியடைந்து
சந்தச் சிங்கந் தனையடுத்த தக்க அரவின் வலிசார்ந்து
முந்தைக் கொடிமீ னத்தலைவன் முனிவ ராகும் பகைவெல்லக்
கந்தப் பகழி பலவேழக் கருப்புச் சிலையில் தொடுத்தனனால்.

(அ - ரை.) கன்னி - மாயை. முழுநோக்கு - முழுப்பார்வை. செவ்வாய் - சிவந்த வாய். சந்தச்சிங்கம் - அழகிய சிங்கம் போன்ற இடை. அரவு - பாம்பின் படத்தையொத்த அல்குல். முந்தைக் கொடி - முதன்மையாகிய மீனக்கொடி. கந்தப் பகழி - மணத்தையுடைய மலர்க்கணைகள். வேழக் கருப்புச் சிலை - வேழமாகிய கரும்பு வில். சொல்லப்பெறுகிற காமன் செய்தியில் கன்னி இராசியிலிருக்கிற திங்களது முழுப் பார்வையும் அங்காரக பலமும், சிங்க இராசியிலே யிருக்கிற இராகு வலியுமாகிய கோசார பலன் பார்த்துப் போருக்குச் செல்லுகிற அரசரின் செய்தியுந் தோன்றுதலால் இது சிலேடையணி. உருவக உயர்வு நவிற்சியணியையும் கொண்டுள்ளது. (௭அ)

### மங்கைப்பருவம் அடைதல்

பாக மாகப் பொங்கியெழும் பதமே போலப் பொங்குமெழில்
மோக மாயை தன்பருவ முன்னி முடிவேந் தயனுமால்
ஆகு மாட மொன்றுபுரிந் ததன்கட் கல்வி பற்பலவும்
போகு மாதர் பலர்சூழப் போற்றி யிருப்பச் செய்தனனால்.

(அ - ரை.) பாகம் - பக்குவம். பதம் - சோறு. பொங்கும் எழில் - ஒருகாலக்கொருகால் வளரும் அழகு. மிகுதியான அழகு. முன்னி - நினைத்து. அயனும் - நான்முகனும். மால் ஆகும் - விருப்பமடையத் தக்க. கல்வி பற்பலவும் - கற்கவேண்டிய ஆடல் பாடல் முதலிய நானாவித வித்தைகளையும். போகும் - முடிவுறக் கற்றுவல்ல. போற்றி - பாதுகாத்து. (௫௯)

### பாடல் பயிலுதல்

வாய்த்துள அம்மணி மாடம் நண்ணுபு
பாத்தொடை பற்பல பயின்றுந் தந்திரி
நாத்தனி யாழைமா ணுக்க னென்றுதான்
பேர்த்துளர் விரல்களாற் பேசு வித்துமே.

(அ - ரை.) வாய்த்துள - பொருந்தியுள்ள. நண்ணுபு - அடைந்து. பாத்தொடை - பாமாலை. பயின்றும் - பழகியும். தந்திரிநா - நரம்பாகிய நாவையுடைய. மாணுக்கன் என்று - தனக்கு மாணுக்கன் என்று சொல்லும்படி. பேர்த்து உளர் - இயங்கும்படி வருடும்.

மாணுக்கன், ஆசிரியன் கற்பித்த விதமெல்லாம் படிப்பது போல மாலை பாடுவதுபோல் யாழையும் விரல்களாற் நடவிப் பாடுவித்தான் என்பது கருத்து. (௬௦)

### பாடி ஆடுதல்

அங்கொரு மடவர லதிர்ப்பத் தண்ணுமை
மங்கையர் சிலரிசை மரபிற் பாடுறக்
கொங்கவிழ் மலரளி குமுறத் தென்றலால்
பைங்கொடி யசைதல்போற் பாடி யாடியும்.

(அ - ரை.) மடவரல் - மங்கை. தண்ணுமை - மத்தளம். அதிர்ப்ப - முழக்க. மரபில் - முறைப்படி. கொங்கு அவிழ் - மணம் விரிந்த. குமுற - ஒலிசெய்ய. (௬௧)

### பந்தடித்தல்

வருமுலை யிறைக்கிளை யாக வந்துறக்
கரமெனும் ஏவலன் புடைக்குங் காட்சிபோல்
விரைமல ரோதிமேல் மிஞ்சி ரைந்தெழப்
பருமணி குயின்றமென் பந்த டித்துமே.

(அ - ரை.) வருமுலை இறைக்கு - வளருகின்ற முலையாகிய அரசனுக்கு. கரம் எனும் ஏவலன் - கையாகிய வேலையாள். புடைக்குங் காட்சிபோல் - அடித்து விரட்டுந் தோற்றம்போல். விரை - மணம்.

ஓதி - கூந்தல். மிஞிறு - வண்டு. பருமணி குயின்ற - பெருத்த மணிகள் பதித்துச் செய்யப்பட்ட.

பந்து கொங்கை போலிருத்தலையின், கொங்கையின் வேலையாளாகிய கை அதனை அடித்து விரட்டுதல்போலப் பந்தடிக்குந் தோற்றம் இருந்தது. (௬௨)

மாலை புனைதல் முதலியன

பூந்தொடை வார்குழல் புனைந்து நல்விரைச்
சாந்தமும் நானமும் தயங்கப் பூசியும்
ஏந்திழை பலவுறப் பிசையத் தாங்கியும்
மாந்துறு சுவைபல வகைய மாந்தியும்

(அ - ரை.) வார்குழல் - நெடிய கூந்தல். விரை - மணம். நானம் - கத்தூரி. தயங்க - விளங்க. இழை - அணிகலன். மாந்துறு - உண்ணுதற்குரிய. மாந்தியும் - உண்டும். (௬௩)

கிளி வளர்த்துப் பேசப் பழக்குதல்

தீங்கனி பாலொடு செம்பொற் பஞ்சரம்
தாங்குறு பைங்கிளி ஊட்டித் தன்மொழி
ஆங்கது பயில்வுற அளித்துங் கற்பகப்
பூங்கொடி யனையவள் பொழுது போக்குநாள்.

(அ - ரை.) பஞ்சரம் - கூடு. தாங்குறு - தாங்கியுள்ள. பயில்வுற - கற்கும்படி. அளித்தும் - பேசுமாறு கற்றுக்கொடுத்தும்.

பேசுவித்தும் (60) பாடியாடியும் (61) பந்தடித்தும் (62) மாந்தியும் (63) அளித்தும் (64) பொழுது போக்கும் நாள் என வினை முடிவு செய்க. (௬௪)

மமகாரமன்னன் தன் மகள் திருமணங்குறித்து எண்ணுதல்

தென்னவன் செம்பியன் சேரன் கொங்கண
மன்னவன் மாளுவன் மகத நாட்டிறை
என்னுமிங் கிவர்தமுள் யாவர் கண்ணதோ
கன்னிதன் மணவினைக் கடனென் றுன்னியே.

(அ - ரை.) தென்னவன் - பாண்டியன். செம்பியன் - சோழன். யாவர் கண்ணதோ - எவரிடத்தோ. மணவினைக்கடன் - திருமணச் செயல். உன்னி - நினைத்து.

மணவினைக் கடன் யாவர் கண்ணதோ என்று உன்னி மமகாரன் ஆய்ந்திருந்தனன் எனப் பின்வருஞ் செய்யுளிற் கொண்டு கூட்டுக. (௬௫)

மமகாரமன்னன் தன் குரு வரக்கண்டு வணங்கல்

ஆய்ந்திருந் தனன்மம கார னுயிடைப்
போந்தன னவன்குரு வாகப் போற்றுறும்
சாந்தவாங் காரனுந் தகுதிப் பேரினேன்
வேந்தனு மெதிர் கொளீஇ விதியில் தாழ்ந்தனன்.

(அ - ரை.) ஆய்ந்திருந்தனன் - எண்ணியிருந்தான். ஆ இடை - அவ்விடத்து. போந்தனன் - வந்தான். தகுதிப் பேரினன் - தகுந்த பெயரையுடையவன். எதிர்கொளீஇ - எதிர்கொண்டு. விதியில் - முறைப்படி. (கசு)

அகங்காரன் மாயையைக் காண்டல்

மன்னவன் வந்தன மரபிற் கொண்டவன்
கன்னித னெழில்நலங் காணப் போயினுன்
அன்னவ ளெதிர்நடந் தாரி யன்றனைச்
சென்னியின் வணங்குபு சிறப்புச் செய்தனள்.

(அ - ரை.) வந்தனம் - வழிபாடு. கன்னி - மாயை. அன்னவள் - மாயையாகிய அவள். ஆரியன்றனை - ஆசிரியனை. வணங்குபு - வணங்கி. (கஎ)

மாயையைக் காரணமாதென ஆங்காரன் அறிதல்

மாந்தளிர் ஆலிலை வயங்கு கோங்கரும்
பேந்தெழில் மரைமல ரெய்தி யற்புதப்
பூந்துணர் வல்லிநேர் பொன்னைக் கண்டவன்
ஓர்ந்தனன் காரண மாதென் றுன்னியே.

(அ - ரை) வயங்கு - விளங்குகின்ற. ஏந்து எழில் - மிகுந்த அழகு. பூந்துணர் - பூங்கொத்து. பொன்னை - திருமகள் போன்றவளை. ஓர்ந்தனன் - உணர்ந்தனன். காரணமாது - ஒரு காரணம் பற்றி உலகில் தோன்றியவள். உன்னி - நினைத்து. மாந்தளிர் - கை. ஆலிலை - வயிறு. கோங்கரும்பு - கொங்கை. மரைமலர் - முகம். வல்லி - மாயை வடிவம் ஆகக் கொள்க.

மாந்தளிர், ஆலிலை, கோங்கரும்பு, தாமரை மலர் இவற்றை எய்திய பூந்துணர் வல்லியொத்த பொன். வல்லி - கொடி. வேறுபட்ட தளிர் இலை யரும்பு மலர் தாங்கியதால் அற்புதக் கொடி என்றார். (கஅ)

குரு 'உன் மகளுக்கு மணவாளன் யாவன்?' என்று அரசனைக் கேட்டல்

மாதுரு வுறுகுறி மதித்த றிந்தவன்
ஆதர வொடுமுடி யரசை நோக்கிநின்
கோதையை யார்கொலோ தோளிற் கொள்பவர்
ஓதுக என்றலும் உரைத்தல் மேயினன்.

(அ - ரை.) மாது உரு உறுகுறி - மாயையினது வடிவத்திலுள்ள குறியை. மதித்து அறிந்தவன் - நன்றாக உணர்ந்தவன். ஆதரவு - அன்பு. கோதை - பெண். தோளில் கொள்பவர் - மணப்பவர். உரைத்தல் மேயினன் - கூறலானான். (சுக)

'நான் அறியேன் நீயே கூறுக' என்று அரசன் கூறல்

உணர்ந்திலன் அடியனே னொருநங் கோதைதன்
மணந்தனக் குரியவர் மனிதர் வானவர்
கணங்களு ளொருவரைக் கருத்தில் தேர்ந்துநீ
இணங்குற எனக்கிவண் இயம்பு கென்றனன்.

(அ - ரை.) ஒரு - ஒப்பற்ற. கணங்களுள் - கூட்டத்தில். தேர்ந்து - தெரிந்து. இணங்கு உற - பொருந்த. இவண் - இங்கே. இயம்புக - சொல்க. (௫0)

சங்கரனே மாயைக்குத் தலைவன் என்று குரு கூறுதல்

கொங்கவிழ் தொடையினாய் கூன்கொக் கன்றுவான்
கங்கையை யடைவது கடவு ளன்னமே
மங்கையை யணைபவர் மனித ரல்லர்நம்
சங்கர னேயிவள் தலைவ னென்றனன்.

(அ - ரை.) தொடையினாய் - மாலை புனைந்தவனே. கூன் - வளைவு. வான் - உயர்வினையுடைய. சங்கரன் - இன்பத்தைச் செய்பவன்.

அன்னம் கங்கையை யடைவதுபோல இவளையணையும் தலைவன் சங்கரனே என்றனன். (௫க)

இறைவன் இவளுக்கு எளியனோ எனல்

மாலுநான் முகனுநா டரிய வள்ளலிவ்
வேலவார் குழலினுக் கெளிய னோவென

ஆலமார் மிடற்றினே னன்பர் வேண்டிய
கோலமாய் நணுகுமீ துண்மைக் கூற்றென்றான்.

(அ - ரை.) மால் - திருமால். ஏலவார் குழலினுள் - மயிர்ச் சாந்து பூசப்பெற்ற கூந்தலையுடையவள். ஆலம் - நஞ்சு. மிடறு - கண்டம். கோலம் - வடிவம். நணுகும் - சேருவன். ஈது - இது. (எ)

## குரு மாயைக்கு இறைவழிபாட்டு முறையை உணர்த்தல்

இன்னணம் அரசனே டியம்பி மாயையாம்
கன்னியை விளித்தவள் கருத்தி னங்குறச்
செந்நிலை தனையுப தேசித் தேகினன்
தன்னிகர் குருபரன் தனதி டத்தரோ.

(அ - ரை.) இன்னணம் - இவ்வாறு. விளித்து-அழைத்து. செந்நிலை - செம்மையான வழிபாட்டு முறை. உபதேசித்து - கூறி. தன்னிகர் - தனக்குத்தானே நிகராகிய.

குருபரன் கன்னியை விளித்து உபதேசித்துப் பின் தனது இடத்துக்கு ஏகினன் என முடிக்க. (அ)

## மாயை மதுகைநாதனை வழிபடல்

குருவருள் மொழிநெறி கொண்டு மாயைதான்
வரவன வசைநகர் மதுகை நாதனைப்
பரவினள் அருச்சனை பயின்று பூசனைக்
கருவிகள் முழுவதுங் கடைப்பி டித்தரோ.

(அ - ரை.) வர - மேலான. பரவினள் - வழிபட்டாள். பூசனைக் கருவிகள் - பூசனைக்கு வேண்டிய பொருள்கள். கடைப்பிடித்து - தேடிக் கொண்டு. மதுகைநாதன் - மதுகேசுரன். இஃது அங்குள்ள ஈசன் பெயர்.

மாயை நெறிகொண்டு கடைப்பிடித்து அருச்சனை பயின்று மதுகை நாதனைப் பரவினள் என்க. (கூ)

மூன்றாவது மாயையின் உற்பத்தி கதி முடிந்தது.

கதி ௩-க்குச் செய்யுள்-௧௪௫.

---

## ௪. மாயை பூசை கதி

[இக்கதிக்கண், மாயை படுக்கையைவிட்டு எழுந்து நீராடுதல், ஆடையணிதல், அணிகலச் சாலைக்குச் செல்லுதல், பலவகையான அணிகலன்களைப் பூணுதல், மதுகைநாதனைப் பூசனை புரியச் சிவிகையிற் புறப்படுதல், அவள் செல்லும் ஆரவாரம், அரிவையர் கூட்டத்தைக் கண்ட ஆடவர்கள் தன்மை, கோயிலையடைந்து பூசனை புரிந்து வழிபாடு இயற்றுதல், இறைவன் முன்னிலையில் தேவர்களும் வியக்கும்படியாகத் திருக்கூத்து இயற்றுதல் ஆகிய செய்திகள் விரிவாகக் கூறப்படுகின்றன.]

பதியை மேவுறுங் காதல்நெஞ் சகத்தினுட் பதித்து
மதுகை நாதனை வரன்முறை வரிவிழி மாயை
உதய காலையில் பூசைசெய் நாள்களு ளொருநாள்
விதியை யோதுவன் குவிமனத் தவர்கொள விரித்து.

(அ - ரை.) பதியை - தலைவனை. பதித்து - அமைத்து. வரன்முறை - விதிப்படி. வரி - கோடு. குவிமனத்தவர் - குவிந்த மனத்தினையுடையவர். குவி, விரித்து இது முரண் தொடை.

மனத்தவர் கொள விரித்து விதியை யோதுவன் என வினை முடிக்க. (க)

### கதிரோன் எழுதல்

விதுவைச் சேய்மையிற் கண்டலர் குவளைகள் மேவிய
முதிர்விற் பூணிள முலையெழில் மாயைதன் முகமாம்
மதியைச் சேர்தரு வரிக்கருங் குவளைகண் மலரக்
குதிரைத் தேரவன் எழுந்தனன் குணதிசைக் குன்றில்.

(அ - ரை.) விது - திங்கள், சேய்மை - தூரம். அலர் - மலர்ந்து. முதிர் வில் பூண் - மிகுந்த ஒளியையுடைய அணிகலம். குணதிசைக் குன்று - கிழ்த்திக்கில் ஞாயிறு தோன்றும் மலை.

முகமதி சேர்தரு வரிக் கருங்குவளைகள் என்பது குறிப்பினால் கண்களை யுணர்த்தியது.

கதிரோனவன் மாயையின் கருங்குவளை மலர்களைப்போன்ற கண்கள் மலர எழுந்தான். (உ)

### மாயை படுக்கையை விட்டு எழுந்து நீராடுதல்

அனைய காலையில் அன்னமென் றூவிபெய் யணைமேல்
தனியன் மாமயில் போல்துயின் றவள்துயில் தணந்து
வினையி னுன்மலி மஞ்சனச் சாலையுள் மேவி
இனிய வாசநீ ராடினள் சேடிய ரேந்த.

(அ - ரை.) அனைய காலையில் - அந்தக் காலப்பொழுதில். தூவி - இறகு. துயில் தணந்து - உறக்கம் நீங்கி. வினையினுன் மலி - தொழிற் பாட்டினுற் சிறந்த. மஞ்சனச்சாலை - நீராடும் இடம். சேடியர் - தோழிப் பெண்கள்.

துயின்றவள், தணந்து, மேவி ஏந்த நீராடினள் என வினை முடிவு செய்க. (௪)

### ஆடையணிதல்

விலைவ ரம்பறி யாமணிக் கோவைசூழ் விளிம்பு
கலையு ணிந்தொரு தலைமுலை மேலலங் கரித்தாள்
மூலையொ டுந்துகில் கண்டநாள் முதல்தொடர்ந் தன்றே
இலகு றுங்கலை வல்லவர் கடபடா மென்றல்.

(அ - ரை.) விலை வரம்பு - விலையின் எல்லை. மணிக்கோவை — மணிமாலை. சூழ் - சூழ்ந்துள்ள. விளிம்பு - கரை. கலை - ஆடை. ஒரு தலை-அவ்வாடையின் ஒரு தலைப்பை. இலகுறும் - விளங்குகின்ற. கலை வல்லவர் - அறிஞர். கடபடாம் - குடமும் ஆடையும். கடபடா மென்று எடுத்துக்காட்டிக் கூறுதல் அறிஞர் வழக்கு. கடம் - குடம். இது முலையை யுணர்த்தியது.

மாயை முலையில் ஆடையணிந்ததைக் கண்ட நாள் முதல் புலவர்கள் கடபடாம் என்று கூறினர் எனக் கற்பித்தனர். (௫)

### அணிகலன்கள் பூணுமிடத்தை அடைதல்

மணிய மைந்தபொற் பாதுகை யொருத்திமுன் வைப்பப்
பிணிய விழ்ந்தசெந் தாமரைப் பதங்கொடு பெயர்ந்தே
அணிய ணிந்திடும் மண்டபத் தணைமிசை யமர்ந்தாள்
பணிய ணிந்திடு மங்கைய ரடைந்தனர் பலரே.

(அ - ரை.) பாதுகை - மிதியடி. பிணி அவிழ்ந்த - கட்டுவிரிந்த. அணி - அணிகலன். அணைமிசை — இருக்கைமீது. பணி அணிந்திடு — அணிகலன் பூட்டி விடுகின்ற.

ஒவ்வோர் அணி பூட்டுவதில் ஒவ்வொருவர் சிறந்தவராக இருப்பதால் பலர் அடைந்தனர் என்றார். (௯)

சடை பின்னிவிடுதல்

மார வேள்சிலை வளைந்திடப் பூட்டிய வண்டு
நாரி யோர்தலை நெகிழ்த்துவிட் டெனவொரு நாரி
கார வாமலர்க் குழற்சடை கைபுனைந் தியற்றி
வீர வேனெடுங் கண்ணிதன் முதுகுற விடுத்தாள்.

(அ - ரை.) சிலை - வில். நாரி - நாணி. ஓர் தலை - ஒரு பக்கம். நெகிழ்த்து விட்டென - கழற்றிவிட்டாற் போன்ற. ஒரு நாரி - ஒரு வண்ண மகள். கார் அவாம் - முகிலும் விரும்புகின்ற. முதுகு உற - முதுகில் தொங்க.

காமன் வில்லிற்பூட்டிய வண்டாகிய நாணியை ஒரு பக்கம் அவிழ்த்து விட்டதுபோல இருந்தது சடை. (௧௦)

நெற்றியில் திருவும் பிறையும் அணிதல்

பின்னும் வேணிவார் குழலெனுங் கரியபே ரரவம்
முன்ன மார்தரு சுடர்களை உமிழ்ந்திடு முறைபோல்
கன்னி வாணுதல் மிசைக்கதிர் பிறையொடு கவினப்
பொன்ன வாஞ்சுணங் கவிர்முலை ஒருத்திகை புனைந்தாள்.

(அ - ரை.) கரிய பேர் அரவம் - கரிய பெரிய பாம்பு. ஆர்தரு - விழுங்கிய. சுடர்களை - ஞாயிறு திங்கள்களை. உமிழ்ந்திடு - கக்கிய. வாள்நுதல் - ஒளிபொருந்திய நெற்றி. கவின - அழகு செய்ய. பொன் அவாம் - பொன்னும் விரும்பும். சுணங்கு - தேமல்.

சடை கரும்பாம்பு போலவும், நெற்றியிலணிந்த 'திருவும் பிறையும்' ஆகிய அணிகள் அப்பாம்பு உமிழ்ந்த சூரியன் சந்திரன் போலவும் தோன்றின. (௧௧)

மாணிக்கச் சுட்டி அணிதல்

ஓதி யாகிய அறல்மிசைச் சுவடுற வூர்ந்து
தீதி லாதவொண் சந்தனத் திலகவெண் மதிக்குப்
போது மோர்சிறு பாம்பென மயிர்வகிர்ப் பொருந்தச்
சோதி மாமணிச் சுட்டியோர் ஒருத்திதொட் டிணைத்தாள்.

(அ - ரை) ஓதி - கூந்தல். அறல் - கருமணல். சுவடு - வடு. ஒள் - ஒள்ளிய. திலக வெண் மதி - பொட்டாகிய வெள்ளிய திங்கள். போதும் - செல்லும். மயிர்வகிர் - மயிரை வகிர்ந்த இடம் (உச்சி). தூக்கினள் - தொங்கவிட்டாள்.

நெற்றிச் சுட்டியைச் சிறு பாம்பாகவும், திலகத்தைச் சந்திரனாகவும், அச்சந்திரனைப் பற்றுதற்காக அப்பாம்பு கூந்தலாகிய கருமணல்வழியூர்ந்து வந்ததாகவும், உச்சி வகிர்ந்ததை அதன் சுவடாகவும் கற்பித்தனர். (அ)

## காதிற் குவளைமலர் அணிதல்

வேன லம்பதி கொலைவிட மூட்டிய வெவ்வேல்
மான அஞ்சனம் எழுதிய விழி பொர வரலால்
தான தன்பகை தனைத்துணை கொண்டுறுந் தகைபோல்
பான லஞ்செவி மிசையணிந் தனளொரு பாவை.

(அ - ரை.) வேனல் அம் பதி - வேனிற் காலத்திற்குத் தலைவனாகிய அழகிய காமன். மான - ஒப்பாக. அஞ்சனம் - மை. பொர - போர் செய்ய. தகைபோல் - தன்மைபோல். பானல் - கருங்குவளை. பாவை - பெண்; ஆகுபெயர். குவளை மலர் கண்போறலின் கண்ணுக்குப் பகையாகவும், கண்கள் காதளவும் நீண்டு செல்லுதலால் விழி பொர வருவதாகவுங் கூறினர்.

செவிமேல் நீலமலரை யணிந்தது தன்மேற் போர்செய்ய வரும் விழிகளுக்கு அஞ்சி அவ்விழிகளுக்குப் பகையாகிய நீலமலரைத் துணை சேர்த்துக்கொண்டிருப்பதுபோலத் தோன்றியது. (கூ)

## காதிற் பொன்னோலைச் சுருளணிதல்

அடுத்து மாதவம் அழியினென் றனங்கவேள் தமக்கு
விடுத்த வோலையைக் கண்கள்தம் மேற்பழி விளம்பில்
கொடுத்த வேள்மிசை நிந்தைகூ றுதற்குவைத் திருத்தல்
கடுத்து வாழ்தர ஒருத்திபொன் னோலைகா தணிந்தாள்.

(அ - ரை.) அடுத்து - போய். அனங்கவேள் - காமன். விடுத்த ஓலை - அனுப்பிய வோலை. பழி விளம்பில் - நிந்தை கூறினால். கடுத்து - ஒத்து. வாழ்தர - தோன்றும்படி. மாயை கண்கள் மாதவத்தை யழிக்கும் ஆற்றலுடையன ஆதலால் அனங்கன் கண்களுக்குத் தன் ஆணைபொறித்த ஓலையனுப்பியதாகக் கூறினர்.

முனிவர்கள் தவத்தை அழிக்குமாறு காமவேள் தமக்கனுப்பிய வோலையைக் கண்கள் தம்மேற் பழிச்சொல் வந்தால் எடுத்துக் காட்டிப் பழியைக் காமன்மீது போடுமாறு காதுகளிலே செருகி வைத்துள்ளன என்க. (௧௦)

மூக்கிலே முத்து மூக்கணி புனைதல்

தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேற்பழி சார
மன்னி யங்கது நிகரற வாழ்மனை வாய்தன்
முன்னி றந்திடு வேனென ஞான்றுகொள் முறைமை
என்ன வெண்மணி மூக்கணி யொருத்திநின் றிட்டாள்.

(அ - ரை.) வெள் நகை - வெண் பல. மன்னி - நிலைபெற்று. நிகர் அற - ஒப்பில்லாமல். வாய்தல் - வாசல். ஞான்றுகொள் - தூக்குப்போட்டுக்கொள்கிற. வெண்மணி மூக்கணி-வெள்ளை முத்துக் கோத்த மூக்கணி; புல்லாக்கு. இது மூக்கின் நடுத்தண்டிற் றுளைத்துப் புனைந்து மேலுதட்டில் படுமாறு அணியும் ஒரு முத்துக் கோத்த அணி.

வெண் பற்கள், முத்துக்களையும் பழிக்கும் வண்ணம் உள்ளன வாகையால், ஒரு முத்துத் தூக்குப்போட்டுக் கொள்கின்றாற்போ லிருந்தது என்க. உங்கட்குப் பழிவருமாறு உங்கள் மனை வாசலில் நான்று உயிர்விடுகின்றேன் என்று கூறித் தூங்குவது போல என்பது கருத்து. (௧௧)

கழுத்தில் அட்டிகை அணிதல்

கற்றை யங்குழல் நறுமலர்த் தொடை யொடுகனமாய்
உற்ற ணங்குமென் றிலகுபூண் பிடித்ததை யொப்ப
விற்ற யங்குவாள் நுதலெழில் மாயைதன் மிடற்றில்
பொற்ற டந்தகட் டணியொரு மடவரல் புனைந்தாள்.

(அ - ரை.) கற்றை - சேர்க்கை. அணங்கும் - வருந்தும். வில் தயங்கு - விற்போல் விளங்குகின்ற. மிடறு - கண்டம். தடம் - பெரிய. தகட்டு அணி - தகட்டு வடிவத்தையுடைய அட்டிகை.

கூந்தற்சுமை அதன்மேல் மலர்ச்சுமையுந் தாங்கிக் கழுத்து வளையும் என்று அதற்குப் பூண் பிடித்ததுபோல இருந்தது. (௧௨)

கைகளில் வளையல்கள் அணிதல்

தன்னி யத்தம்வந் தினமணிக் கற்கட கத்தின்
மன்னி யுற்றதற் புதமென வளைபல காக்க
வின்னு தற்கருங் கண்மட மாதுகை விளங்கப்
பொன்னின் நற்கட கம்புனைந் தனளொரு பூவை.

(அ - ரை.) கன்னி - மாயை; கன்னி இராசி. அத்தம் - கை; அத்த நாள் - (கன்னி இராசியில் இருக்கின்ற) அத்த நாள் வந்து. இன மணி - ஒரே வகையுள்ள மணி. கல் கடகம் - மணி பதித்துச் செய்யப் பட்ட கடகம்; கற்கடக இராசி. மன்னி உற்றது - நிலை பெற்று நின்றது. கடகம் என்பது வளையல்கள் கரத்தை விட்டு நழுவி விழாமற் காக்கும் ஓர் அணி.

மாயையின் கைகள் ஒரேவிதமான மணிக்கற்களைப் பதித்த கடகத்துக்குள்ளே வந்து நிலைபெற்றிருக்கிறதெனவும், கன்னி இராசிக்குரிய அத்த நாள் கற்கடக இராசியில் வந்து நிலைபெற் றிருக்கிறதெனவும் இருபொருள் காண்க. பின் கூறியது வெளிப் பொருள். (கக)

### செம்பவளக் கோவை அணிதல்

ஆயும் இன்சுவை தரச்செலுங் கையுட னடுத்து
வாயி னொண்கவின் காணிய மருவுறு மாபோல்
மாயை தன்கையிற் பொற் கட கத்தின்முன் வனைந்தாள்
தூயசெம்பவ ளங்களைக் கோத்தொரு தோகை.

(அ - ரை.) ஆயும் - ஆராய்ந்துகொள்ளப் பெறும். ஒண் கவின் - சிறந்த அழகு. காணிய - காணும் பொருட்டு. வாய் செம்மை நிறத்தால் பவளம்போல் விளங்குதலின், பவளக்கோவையானது உணவு கொண்டு செல்லுங் கைகளோடு வாயின் அழகு காணச் சென்றுற்றபோலிருந்தது என்க.

வளையல்களுக்கு முன் கடகமும் கடகத்துக்குமுன் பவளக் கோவையும் அணிவது இயற்கை. (கஉ)

### மார்பில் மணிக்கோவை அணிதல்

மங்க லத்தொழில் ஆடவர் மனநடக் கிற்காக்
குங்கு மப்பெருஞ் சேற்றினைக் குறித்திடு கற்போல்
மங்கை யர்க்கொரு திலகமா கியவெழில் மாயை
கொங்கை யிற்புனைந் தனளொரு பெண்மணிக் கோவை.

(அ - ரை.) நடக்கிற்கா - நடப்பதற்காக. மணிக்கோவை - ஒன் பதுவகை மணிகளாலாகிய மாலை. ஆடவர் உள்ளம் குங்குமச் சேற்றிலே வழுக்கி விழாதபடி கற்களை வரிசையாகப் பதித்தாற் போன்றிருந்தது மணிக்கோவையணிந்தது. மணிக்கோவை - முத்து மாலை; பலவகை மணிகளாற்கோத்த மாலையும் ஆம். (கங)

### மணிமேகலை அணிதல்

பாயும் வெண்டிரைக் கருங்கடல் நிலச்சுமைப் பாம்பின்
ஆயி ரம்படங் களுந்திறை யிட்டன வனைய
மீயி லங்கொளி விரிமணி மேகலை வேய்ந்தாள்
மாயை மங்கைத னல்குலி னொருதிரு மடந்தை.

(அ - ரை.) பாயும் - பாய்கின்ற. நிலச்சுமைப் பாம்பு - ஆதி சேடன். திறையிட்டன - கப்பம் கொடுத்தன. அனைய - ஒத்த. மீ - மேலாக. வேய்ந்தாள் - அணிந்தாள்.

மணிமேகலை என்பது அரையில் அணியும் ஓர் அணி. மாயையின் அல்குல் ஆகிய அரசனுக்கு ஆதிசேடன் படங்களாகிய சிற்றரசர் அஞ்சித் திறை கொடுத்த மணிகள்போலப் பல மணிகள் கோத்த கோவை என்க. (கசு)

### காலிற் சிலம்பணிதல்

கறைய டிக்கனி யானையின் வரவினைக் கண்டு
மறுகி னுற்றவர் இரிதர மணிமருங் கிடல்போல்
உறுத வத்தினர் அறிந்தனர் ஓடவொண் ணுதற்கு
நறும லர்ப்பதத் தணிந்தனள் சிலம்பொரு நங்கை.

(அ - ரை.) கறை அடி - உரல்போலும் அடி. மறுகு - தெரு. இரிதர - கலங்கியோட. மருங்கு - பக்கம். உறுதவம் - மிக்க தவம்.

யானை வருவதை யறிவதற்கு இருமருங்கிலும் மணிதொங்க விடுவது போல் மாயை வரவை யறிவதற்குச் சிலம்பு அணிந்தனர். (கஎ)

### சந்தனக் குழம்பணிதல்

கூடை மென்மலர் மணத்தினால் அறிந்ததைக் குறுகப்
பாடும் வண்டினஞ் சூழ்தல்போல் இளைஞர்கண் பரப்பத்
தேட ரும்பொரு ளனையவட் குறுநறுந் தேய்வை
பீடு றுங்குவி முலைக்கணிந் தனளொரு பேதை.

(அ - ரை.) கூடை - குடலை. கண் பரப்ப - கண்ணினைச் செலுத்த. உறு நறுந் தேய்வை - மிகவும் நல்ல சந்தனக் குழம்பு. பீடுறும் - பெருமை பொருந்திய.

இளைஞர்கள் கண்ணாகிய வண்டு வாசனையறிந்து படிவதற்காகக் கொங்கையிற் சந்தனக்குழம்பு பூசினர் என்க. (கஅ)

### கண்ணாடி காட்டுதல்

நின்றன் விம்பமே நினக்கெதி ரன்றிவே றில்லை
என்று கண்கொளத் தெரிந்தபே ராடியொன் றெடுத்தாண்
குன்றெ னுங்குவி முலையவ ளெதிர்கொடுங் குழைமேல்
சென்று சென்றுபா யரிமதர் மழைக்கணேர் தெரிவை.

(அ - ரை.) விம்பம் - வடிவம். கண் கொள - கண்களாற் பார்க்க. தெரிந்த - விளக்கம் பொருந்திய. பேர் ஆடி - பெரிய கண்ணாடி. கொடுங் குழைமேல் - வளைவாகிய குண்டலங்களையுடைய காதுகளின்மேல். அரி - கோடு. மதர் - களிப்பு. மழை - குளிர்ச்சி. தெரிவை - பெண்.

தெரிவை பேராடி யெடுத்துத்தர, மாயை தன்னுருவைப் பார்த்தனள் என்பது குறிப்பிற் கொள்க. (௧௯)

### அழகுபடுத்தப்பெற்ற மாயையின் தோற்றம்

வீர வேள்வளை யாதசெங் கரும்பவன் வில்லின்
நாரி மேலிடா மலர்மறு விலாநகை மதியம்
காரு றாதமின் கடற்பிற வாதவின் னமுதம்
வேரி லாதபூங் கொடியென விளங்கினள் மாயை.

(அ - ரை) வீரவேள் - காமன். நாரிமேல் இடா மலர் - நாணியின் மேல் தொடுக்கப்படாத மலர். மறுவு இலா நகை மதியம் - குற்றம் இல்லாத வெள்ளிய திங்கள். கார் உறாத மின் - முகிலைச் சேராத மின்னல்.

காமனால் வளைக்கப்படாக் கரும்பு, தொடுக்கப்படா மலர், களங்கமில்லா மதி, மேகத்திற்றோன்றாத மின்னல், கடலிற் பிறவா அமுதம், வேரில்லாப் பூங்கொடிபோல விளங்கினள் என்க. (௨௰)

### ஒரு மாது மாயையைப் பூசனைக்கு எழச் சொல்லுதல்

மாத ரிவ்வகை யணியலு மதுகைநா யகன்றன்
பாத தாமரை யருச்சனைப் பொருள்கள்பற் பலவும்
நீதி யாலமைந் தனவினி நிகரிலெம் பிராட்டி
போது வாயென வொருமட மாதெதிர் புகன்றாள்.

(அ - ரை.) அணியலும் - அழகு படுத்தலும். நீதியால் அமைந்தன - முறைமைப்படி அமைந்துள்ளன. நிகர் இல் - நிகரில்லாத. போதுவாய் - புறப்படுவாயாக. (௨௧)

### மாயை எழுந்த பொழுதுண்டாகிய நிகழ்ச்சி

மயிலெ ழுந்தென எழுந்தனள் கோமகள் வாழ்த்திக்
குயிலெ ழுந்தென எழுந்தன மடந்தையர் குழாங்கள்
துயிலெ ழுந்தென எழுந்தன நூபுரத் துழனி
வெயிலெ ழுந்தென எழுந்தன மணியணி விளக்கம்.

(அ-ரை.) கோமகள் - மாயை. மடந்தையர் குழாங்கள் - பெண்கள் கூட்டம். துயில் - உறக்கம். நூபுரத்துழனி - சிலம்பு களின் ஒலி. வெயில் - கதிரோன் ஒளி. மணி அணி விளக்கம் - மணிகளாலாகிய அணிகளின் ஒளி. எழுந்தது + என = எழுந்தென - அகரம் தொக்கது விகாரம்.

மயில் எழுந்தாற்போல மாயை எழுந்தாள். குயில்கள் எழுந்தாற்போல மடந்தையர் கூட்டம் எழுந்தது. சிலம்புகளின் ஒலி தூக்கத்தினின்றும் நீங்கினாற்போல எழுந்தது. அணிகலன்களின் ஒளி கதிரோன் ஒளியெழுந்தாற்போல எழுந்தது என்க. (௨௰)

### மாயை சிவிகையிலேறிப் புறப்படல்

பொன்னி லங்கிய சிவிகைமுன் கொணர்ந்தனர் பொறுப்போர்
மன்னி யங்கதை யேறினள் மதர்விழி மாயை
சின்னம் வெண்பணி லம்பணை தண்ணுமை திமிலை
முன்னி ரைந்தன மதியெழக் கடல்முழங் குதல்போல்.

(அ-ரை.) பொன் இலங்கிய - பொன்னாற் செய்யப்பெற்ற. மன்னி - விரும்பி. மதர்விழி - களிப்புப் பொருந்திய கண். சின்னம் - திருச்சின்னம். பணிலம் - சங்கு. திமிலை - பம்பை. இரைந்தன - ஒலித்தன. திங்களின் தோற்றங்கண்டு கடல் முழங்குதல் இயல்பு. பொறுப்போர் - சிவிகை சுமப்போர். (௨௧)

### வேய்ங்குழல் ஊதுதல்

ஆன்றி ரட்டுறும் கண்ணன் வாய்க் குழலிஃதணிபூண்
மான்றி ரட்டுறு மெனக்குழ லூதினர் மலர்வில்
தோன்றி ரட்டிய வமுதனை யான்முனங் குறுகி
மூன்றி ரட்டிய முகமுடை முருகனு முருக.

(அ-ரை.) திரட்டுறும் - சேர்க்கும். அணி - அழகிய. பூண் மான் - அணிகலன்களையுடைய மான்போலும் பெண்கள். மலர்வில்

கோன் - அரசன். முனம் குறுகி - முன்னே சென்று. மூன்று இரட்டிய முகம் - மூன்றான இரட்டித்த முகம்; அஃதாவது ஆறுமுகம்.

மாயை முன்சென்று பெண்களை இவ்விசை திரட்டும் என்று கருதி முருகனும் உருக வேய்ங்குழலூதினர் என்க. (உ௪)

மாயையை மாதர் பலர் சூழ்ந்து செல்லல்

வயங்கு மாயையங் கரும்பினில் தாழ்ந்தவர் மாவின்
உயர்ந்த மாதரார் ஊற்றிருந் தொழுகுகண் மலரை
நயந்து சூழ்தரு மளியினண் ணினர் பிறர் காலால்
இயங்கு மாதிரு புடையினும் இடையற ஈண்டி.

(அ - ரை.) வயங்கும் - விளங்கும். மாவின் - திருமகளில். ஊற்று இருந்து - ஊற்றாக இருந்து. கள் மலரை - தேனையுடைய பூவை. நயந்து - விரும்பி. அளியில் - வண்டுகளைப் போல. நண்ணினர் - சென்றார். இடை அற - இடைவெளி இல்லாமல். ஈண்டி - நெருங்கி.

மாயை சிவிகையின்மீது அமர்ந்து, அச் சிவிகையைத் தாங்கிச் செல்லும் பிறர் கால்களின் உதவியினாற் சென்றாளாகலின், 'பிறர் காலால் இயங்கும் மாது' என்றார்.

மாயை அம் கரும்பு - மாயையாகிய அழகிய கரும்பு. இஃது உருவகம். அழகில் மாயைக்குத் தாழ்ந்தவர் திருமகளினும் உயர்ந்தவராயிருந்தனர் எனக் கொள்க.

மலரைச் சூழ்ந்து செல்லும் வண்டுகள்போல மாயையைச் சூழ்ந்து சென்றனர் மங்கையர் என்க. (உ௫)

குடை பிடித்தலும் கவரி வீசுதலும்

வேள வித்தனன் தன்குடை யெனக்குடை விதிர்க்கும்
வாளெ னப்பிறழ் மதர்நெடுங் கண்ணிபால் மருவக்
காள மொத்தகண் மடந்தையர் பலரிளங் கமுகின்
பாளை யொத்தவெண் கவரிவீ சினரிரு பாலும்.

(அ - ரை.) விதிர்க்கும் - அசைக்கும். வாள் - ஒளி. பிறழ் - விளங்குகின்ற. மருவ - பொருந்த. காளம் - நஞ்சு. கமுகு - பாக்கு. வேள் - மன்மதன். குடை - அவன் குடையாகிய சந்திரன்.

மாயைக்கு மன்மதன் தன் குடையைக் கொடுக்க அக் குடையானது ஒளிவீசி பருகிச் செல்வதுபோல வெண்சாமரை வீசத் தோற்றம் இருந்தது என்பது கருத்து. (உ௬)

## விசிறி வீசுதலும் மலர் சொரிதலும்

காம வெந்தழல் மூட்டல்போற் கடிமலர்ச் சிவிறி
தாம சைந்தன பொய்க்கணை சொரிந்துவில் தடக்கைக்
கோம கன்றிருந் திழையுள மறிதல்போற் குறுகிப்
பூம டந்தையை வென்றவர் பூமழை பொழிந்தார்.

(அ - ரை.) வெந்தழல் - கொடிய நெருப்பு. மலர்ச்சிவிறி - மலர்களாற் செய்யப்பட்ட விசிறி. திருந்திழை : மாலை. பூமடந்தை - திருமகள். வென்றவர் என்பது அழகினால் திருமகளினும் சிறந்தவர் என்பதை யுணர்த்தும்.

பெண்கள் மாலைக்குமுன் மலர்மாரி சொரிந்ததைக் காமன் பொய்க்கணை சொரிந்து உள்ளம் அறிவதுபோல் எனக் கற்பனை செய்தனர். (உஎ)

## பலவகைப் பொருள்கொண்டு பாவையர் செல்லல்

பாகு வெள்ளிலை சந்தனம் குங்குமம் பனிதம்
ஓகை மான்மதம் வண்டிமிர் நறுமல ரொலியல்
பேர்கெ ழும்பணிப் பெட்டிமென் துகிலுடைப் பேழை
தோகை மார்பலர் மருங்கினிற் சுமந்துபோ யினரால்.

(அ - ரை.) பாகு வெள்ளிலை - பாக்கு வெற்றிலை. பனிதம் - பச்சைக் கற்பூரம். ஓகை மான்மதம் - உவகையைத் தரும் கஸ்தூரி. இமிர் - ஒலிக்கின்ற. ஒலியல் - மாலை. பேர் கெழும் - பெருமை பொருந்திய. பணிப்பெட்டி - அணிகலப் பேழை. (உஅ)

## அரிவையர் செல்லுந் தெரு ஆறு போன்றது

கொங்கை யங்குவி முகிழ்விழிக் கயலிதழ்க் குமுதம்
அங்கை யம்புய முந்தியஞ் சுழியிவை யடுத்துப்
பொங்கு றுங்கவி னீர்பெரு காற்றினைப் புரையும்
மங்க லந்திகழ் வுறுமணி மாவிகை மறுகு.

(அ - ரை.) பெண்களது கொங்கையாகிய தாமரையரும்பு களாலும், கண்களாகிய கெண்டைகளாலும், வாயாகிய ஆம்பலாலும், அழகிய கைகளாகிய தாமரை மலர்களாலும், உந்திச் சுழியாலும் பெண்கள் சென்ற தெரு ஆற்றினையொத்து விளங்கியது. முகிழ் - அரும்பு. அம்புயம் - தாமரை. கவின் - அழகு. மறுகு - தெரு. (உக)

## பலவகை ஒலிகள் கலந்து பேரொலியாதல்

திங்கள் வாணுதல் மடந்தையர் செஞ்சிலம் பொலியும்
சங்கி னொடணி கலன்களின் சிற்றொலி தாமும்
கொங்கு லாமலர்த் தொடையளி யிசைகளுங் குழுமிப்
பொங்கும் ஆழியிற் பஃறுலி பெருகுதல் போன்று.

(அ - ரை.) சிலம்பொலியும், சங்கொலியும், அணிகலன்களின் ஒலியும் மாலையில் இசைபாடும் வண்டுகளின் ஒலியும் ஒன்று சேர்ந்து கடலின் ஒலிபோல மிகுவதாயிற்று. வாள் + நுதல் = ஒளி பொருந்திய நெற்றி. கொங்கு உலாம் - மணம் வீசுகின்ற. அளி - வண்டு.

குழுமி பெருகுதல் போன்று பொங்கும் எனக் கூட்டுக. (௧௦)

## மாயை சென்ற தோற்றம்

துன்று பெண்படை சூழ்வர மாயையந் தோகை
வென்றி யங்கனல் மழுவினேன் விதியினுல் வேளைக்
கொன்ற தென்னெனக் கேட்பமென் றுளவலி கொண்டு
சென்று ளுஞ்செய லென்னவத் தெருவிடைச் சென்றுள்.

(அ - ரை.) துன்று - நெருங்கிய. அம்தோகை - அழகிய மயில்; மாயையாகிய மயில். வேளை - மதனை. படை - சேனை. மழுவினேன் - மழுப்படையுடையவனாகிய சிவன். உளவலி - மனத் துணிவு. (௧௧)

## அரிவையர் கூட்டத்தைக் கண்ட ஆடவர் தன்மை

அரிமதர் மழைக்கணல் லரிவை தன்புடை
வருமட வரலியர் வனப்புக் காண்டலும்
எரிபுரை விழியரி யேறு போல்பவர்
கரிநுகர் வெள்ளில்அங் கனியை யொத்தனர்.

(அ - ரை.) அரிவை - மாயை. புடை - பக்கம். மடவரலியர் - இளம் பெண்கள். வனப்பு - அழகு. எரிபுரை - தீயை ஒத்த. அரி யேறு - ஆண் சிங்கம். கரி - யானை. வெள்ளில் அம் கனி - அழகிய விளாம்பழம்.

மங்கையர் கூட்டத்தைக் கண்ட ஆடவர், யானையுண்ட விளாங் கனி போன்றவர்களானார்கள். (௧௨)

## ஆடவர் அறிவு கொள்ளை போதல்

இடையொரு சற்றுவா ணுதல்சற் றேழையர்
படைவிழி சற்றுவாய்ப் பவளஞ் சற்றிணைக்
குடமொரு சற்றிவண் கொள்ளை கொள்ளநம்
புடைபெயர் அறிவெலாம் போயிற் றேயென்பார்.

(அ - ரை) சற்று - சிறிது. ஏழையர் - பெண்கள். படை விழி- வாள் போன்ற விழி. இணைக்குடம் - கொங்கைகள். நம்புடை - நம் மிடம். பெயர் - விளங்கிய.

இடை, நுதல், விழி, வாய், கொங்கைகள் ஒவ்வொன்றும் சிறிது சிறிதாக எம் அறிவைக் கொள்ளை கொள்ள எல்லாம் போயிற்றே என்பார். (கக)

## திருநீறும் மயலை உண்டாக்குதல்

இனத்தியல் பாமறி வென்ப துண்மையே
மனத்துயர் செயுமயல் மாற்று நீறுதான்
அனிச்சமென் லடியினர் நுதல டுத்தலும்
பனித்துடல் வெதும்புமால் படுத்தலா லென்பார்.

(அ - ரை.) இனத்து இயல்பு ஆம்-ஒரே இடத்தினது தன்மையை உடையதாம். மயல் மாற்றும் - மயக்கினைக் கெடுக்கும், அனிச்சம் - அனிச்சப்பூ. நுதல் அடுத்தலும் - நெற்றியை அடைதலும். பனித்து- நடுங்கி. வெதும்பும் - வேகும். மால் படுத்தலால் - மயக்கினை உண் டாக்கலரல். மாந்தர் மனமயலை மாற்றுந் திருநீறு, நமக்கு மனமயலை யுண்டாக்கியது. இதற்குக் காரணம் மங்கையர் நெற்றியைச் சார்ந் ததுவேயாம். இனத்தியல்பாம் அறிவு என்பது மெய்தான் என்று சிலர் கூறினர். (கஉ)

## கண் நஞ்சின் கடுமை உரைப்பேம் எனல்

தொல்லைநஞ் சடர்துயர் சொல்லக் காத்தவன்
வல்லிபங் குடையருள் மதுகை நாயகன்
செல்லுமங் கையர்விழி நஞ்சு செய்வதும்
சொல்லுதும் அவனொடு தொழுதுநா மென்பார்.

(அ - ரை.) தொல்லை முன்னாளில். வல்லி - கொடிபோன்ற இறைவி. அடர்துயர் - வருத்திய துன்பத்தை. விழிநஞ்சு செய் வதும் - கண்ணாகிய நஞ்சு செய்யும் துன்பத்தையும். (கங)

## மகளிர் அனைவரும் சிறந்த அழகினர்

இக்குழு மகளிருள் யார்வ னப்பினுல்
மிக்கவ ளென்த்தமை வினவி னுரெதிர்
முக்கனி களுட்சுவை முதிர்ச்சி பெற்றன
தெக்கனி யதனைநீர் இயம்புவீ ரென்பார்.

(அ - ரை.) இக்குழு - இக்கூட்டம். முக்கனி - வாழை, மா, பலா. முதிர்ச்சி - சிறப்பு. வினவுக்கு எதிர் வினவினுர் என்க.

இது மகளிர் கூட்டங் கண்டு காதல்கொண்டு மயங்கிய ஆடவர்க ளிருவர் வினவியதாகக் கொள்க. முக்கனியும் சுவையுடையவையாம். அவை போல எல்லோருஞ் சிறந்த அழகுடையவர்களே என்பது கருத்து. (கூச)

## இதுவும் அது

கரும்பினும் இனியசெங் கயற்க ணுரிளம்
குரும்பையும் பயன்படாக் கோவை தன்னையும்
விரும்பினம் உலகர்முன் வினில் நெஞ்சகம்
வருந்துதல் நகைதரு மடமையே யென்பார்.

(அ - ரை.) கயல்கணுர் - கயல்போலுங் கண்ணையுடையவர். கோவை - அதரமாகிய கோவை. நகைதரு - இகழ்ச்சியைத் தருகிற. மடமை - அறியாமை. இளங்குரும்பை - கொங்கை. கோவை-இதழ். இதுவும் ஆடவர் கூற்று. (கூஎ)

## உடல் முழுதும் மூடினுல் உயிர் பிழைக்கலாம் என்றல்

விடங்குலா மதர்விழி விரைத்தண் பூங்குழல்
நுடங்குநூ லிடைப்பிறை நுதற்பொற் கொம்பனுர்
குடங்கள்நா ணுறுமிளங் குவவுக் கொங்கைபோல்
உடம்பெலா மூடினு லுய்யலா மென்பார்.

(அ - ரை.) விடம் குலாம் - நஞ்சு உலாவுகின்ற. நுடங்கும் நூல் இடை - துவள்கின்ற நூலைப் போன்ற இடை. குவவு-பருத்த. உய்யலாம் - நாம் உயிர் பிழைக்கலாம். இதுவும் ஆடவர் கூற்று.

கொம்பனுர் தம் கொங்கைகளை மூடியிருப்பதுபோல் அவர்கள் உடம்புகளையும் மூடியிருந்தால் நாம் வருந்தாது பிழைக்கலாம் என்று கூறினர் என்க. (கூஅ)

### மாயை கோயிலை அடைதல்

இவ்வனங் கருத்தழிந் திளைஞர் மாழ்குறக்
கொவ்வையங் கனியிதழ்க் கோதை மாரொடு
மௌவலங் குழலெழில் மாயை யென்பவள்
அவ்வரன் கோயிலின் அருகு போயினள்.

(அ - ரை.) மாழ்குற - மயங்கி நிற்க. கொவ்வை அம் கனி இதழ்-கோவைப்பழம் போன்ற அழகிய உதடு. மௌவல் - மல்லிகை. (௧௯)

### சிவிகையினின்று இறங்கிச் செல்லுதல்

சிவிகையின் இழிந்துதன் சென்னி தாங்கிய
குவிகையி னெடுபுகாக் கோபு ரத்துள்வெண்
கவிகைய னெனுமம கரரன் கன்னிகட்
செவிகையி னணிபர னெதிர்சென் றனரோ.

(அ - ரை.) இழிந்து - இறங்கி. சென்னி - தலை. குவிகை - குவிந்த கை. புகா - புகுந்து. வெண்கவிகை - வெண்கொற்றக் குடை. கட்செவி - கண்ணையே காதாகவுடைய பாம்பு. கையின் அணிபரன் - கையிற் கங்கணமாக அணிந்த சிவன். (௨௦)

### பூசனை புரியத் தொடங்குதல்

வேண்டிய அனைத்தையும் ஏவல் மெல்லியர்
ஆண்டரு குறவமைத் தளிப்ப மாயைதான்
காண்டகு நுதல்விழிக் கடவுட் கன்புளம்
பூண்டனள் அருச்சனை புரிதல் மேயினள்.

(அ - ரை.) ஏவல் மெல்லியர் - ஏவற் பெண்கள். ஆண்டு - அங்கே. அமைத்து அளிப்ப - வைத்துக்கொண்டு கொடுக்க. காண் தகு - காணத்தக்க. புரிதல் மேயினள் - செய்யத் தொடங்கினள். அன்பு உளம் பூண்டனள் - அன்பு மனம் கொண்டவளாய். (௨௧)

### இறைவற்கு நீராட்டத் தொடங்குதல்

ஆதிய வரன்முறை செய்த ருக்கியம்
ஆதிய கொடுபர னணிந்தி ருந்தபூ
ஆதிய களைந்துமந் திரம றைந்து நம்
ஆதியை மஞ்சன மாட்டல் மேயினள்.

(அ - ரை.) ஆதிய - முதலிலே செய்ய வேண்டியவைகளை. வரன் முறை - முறைப்படி. பூ ஆதிய களைந்து - பூ முதலானவைகளைக்

போக்கி. ஆதியை - கடவுளை. மஞ்சனம் ஆட்டல் - நீராட்டல். அருக்கியம் ஆதிய கொடு என்பது - அருக்கியம், ஆசமனம், பாத்தியம் என்பன பூசனைவகைகள். ஆதலால் அருக்கிய முதலாகிய பூசனைக் குரிய பொருள்களைக்கொண்டு என்று பொருள் தரும். (௬௨)

எண்ணெய் முதலிய பொருள்களால் நீராட்டல்

தயிலமுடன் ஆனிடத்தைந் தையமுத
நறுநெய்பால் தயிர்செ ழுந்தேன்
வயலினெழு கரும்புடைத்துக் கொள்சாறு
பழம்பிழிந்த மதுரச் சாறு
புயலளவு தாழையிள நீர்நறுஞ்சந்
தனக்குழம்பு போற்று நூலின்
இயலினமை தபனமிவை யொன்றன்பி
னொன்றுமுறை யிறைவற் காட்டி.

(அ - ரை.) தயிலம் - எண்ணெய். ஆன் இடத்து ஐந்து - ஆன் இடத்துளவாகும் பால் முதலியன. ஐயமுதம் - பஞ்சாமிர்தம். அது தேன், வாழைப்பழம், சர்க்கரை, நெய், கற்கண்டு இவற்றைச் சேர்த்துச் செய்தது. புயல் அளவு - முகில்மண்டலத்தையளாவிய. தாழை இளநீர் - தெங்கின் இளநீர். தபனம் - குடப் பூசைநீர். (௬௩)

முத்தால் அக்கதை இடுதல்

சங்குலவு மென்கைநெடுஞ் சுடரிலைவேல்
விழிமாயை சாம்பற் பூத்து
மங்கலமா கியமேனி முழுவதுஞ்சந்
தனத்திரளை மலியச் சாத்தித்
திங்களெனும் ஒருசிறுகூன் முதுகிப்பி
யீன்றதெனச் சினவெள் ளேற்றுன்
கங்கைமுடி மீதினில்வெண் ணிலவெறிக்கு
நித்திலவக் கதையு மிட்டாள்.

(அ - ரை.) சங்கு - வளையல். சாம்பல் பூத்து - நீறுபூத்து. மலியச்சாத்தி - மிகுதியாக அப்பி. கூன் முதுகு - வளைந்த முதுகு. இப்பி - முத்துச் சிப்பி. சினவெள் ஏறு - சினந்தங்கிய வெள்ளிய காளை. வெண் நிலவு - வெள்ளிய ஒளி. நித்தில அக்கதை - முத்தாலாகிய அட்சதை; அட்சதை - மங்கலவரிசி. அது முடியிலிருக்கும் பிறை முத்தினையீன்றது போலத் தோன்றியது. (௬௪)

மாலையணிந்து பூண் பல புனைதல்

பிறைதவழு நெடுஞ்சடையெம் பெருமானைச்
சார்ந்துசர்ப்ப பிராந்தி மேவ
நறுமலர்மென் தொடைமாலை பலவனைந்து
கூர்ங்கோட்டு நால்வாய்ச் சீற்றக்
கறையடியி னுரிசுமந்த திருமேனி
யழகுறநுண் கலைபு னைந்திட்
டிறைவனெனும் பணிநாண அவிர்மணிப்பூண்
பற்பலவு மெடுத்த ணிந்தான்.

(அ - ரை.) பிறை - திங்கள். சார்ந்து - அடுத்து. சர்ப்ப பிராந்தி - பாம்பு என்னும் திகைப்பு. தொடைமாலை - தொடுக்கப்பட்ட மாலை. வனைந்து - அணிந்து. நால்வாய் - தொங்குகின்ற வாய். கறை அடி - உரல் போன்ற அடியையுடையது (யானை). ஈர் உரி - உரிக்கப்பட்ட தோல். நுண் கலை - நுண்ணிய நூலினுலாகிய ஆடை. அவிர் - விளங்குகின்ற. சர்ப்ப பிராந்திமேவ மாலை பல வனைந்து எனக் கொள்க. (சஞ)

உணவு படைத்துப் பூசித்தல்

நற்றூமங் கமழ்நித்ய கலியாணி
மணாளர்க்கு நானஞ் சாத்திப்
பெற்றூனங் கடிதலிலாக் கறிமருவு
போனகங்கள் பிச்சை யல்லால்
மற்றூணொன் றில்லாத பெருந்தகைக்கு
நிவேதித்து வண்டு கிண்டி
உற்றூதுங் கடிமலர்மென் குழல்மடவாள்
வெள்ளிலையும் உவந்த ளித்தான்.

(அ - ரை.) நல் தூமம் - நல்ல புகை. நானம் சாத்தி - கத்தூரி அணிந்து. பெற்று ஊனம்: ஊனம் பெற்று - இழிவு அடைந்து. கடிதல் - விலக்கல். போனகங்கள் - உணவுகள். கிண்டி - கிளறி. வெள் இலை - வெற்றிலை. பெருந்தகைக்குப் போனகங்கள் நிவேதித்து எனக் கூட்டுக. (சகூ)

மற்றுமுள்ள சிறப்புக்கள் செய்தல்

நறியபுகை செழுஞ்சுடர்மென் சிவிறியொடு
வெண்கவரி நாடும் ஆடி
நெறிமுறையி னெடுங்கடல்போல் இயமுழங்க
நின்றுதவி நிமலன் தன்னைப்

பிறைநுதலிவ் வகைபூசை புரிந்துதுதி
பலசெய்து பெருகு மன்பால்
மறைபுகலு மஞ்செழுத்தும் அறைந்துவலம்
வந்துமுனம் வணங்கிப் பின்னர்.

(அ - ரை.) நறிய புகை - மணந்தங்கிய புகை. மென் விசிறி - மெல்லிய விசிறி. நாடும் ஆடி - நிழல் பார்க்கும் கண்ணாடி. இயம் முழங்க - வாத்தியங்கள் ஒலிக்க. (௩௭)

## ஆடும் அரங்கை அடைதல்

அன்பினுள முருகிவிழி சொரிநீரா
லெழுதியமை யழிந்தி ருப்பப்
பொன்புரையும் வடிவமயிர் பொடிப்பவெயர்
வாணுதலின் பொட் டழிந்து
மின்புரையு நெடுஞ்சடிலப் பொன்மலையி
னனந்த வெள்ள மூழ்கி
இன்பினடிப் பவனென்ன வந்துநட
நவிலரங்கில் எய்தி னான்.

(அ - ரை.) பொன்புரையும் - பொன்னைப் போன்ற. மின்புரையும் - மின்னலையொத்த. நெடுஞ்சடிலப் பொன்மலையின் - நெடிய சடையையுடைய பொன்மலைபோலுள்ள கடவுளது. ஆனந்த வெள்ளம் மூழ்கி - சிவானந்தப்பெருக்கில் அமிழ்ந்தி. நடம் நவில் - கூத்து ஆடுகின்ற. அழிந்து - அழிய என எச்சமாக்குக.

அழிந்திருப்ப, மயிர்பொடிப்ப, பொட்டழிந்து எய்தினான் என்க. (௩௮)

## ஆடுதற்கு ஏற்பக் கோலங் கொள்ளுதல்

அரங்கினிடை நடநவிலுஞ் செயற்கேற்ப
உடையணிந்திட் டரும்பை வென்ற
குரும்பைமுலை யினைவம்பு கொண்டணிந்து
தவங்களெல்லாங் கொள்ளை கொள்ளும்
கருந்தடங்கண் மலர்க்கோதை சிற்றடியிற்
கையுனையக் கற்ற மாதர்
சுரும்புமுரல் மல்லிகைமென் போதணைய
சிறுசதங்கை துலங்க ஆர்த்தார்.

(அ - ரை.) நடம் நவிலும் - கூத்தியற்றும். வம்பு-கச்சு. கருந் தடம் கண் - கரிய பெரிய விழி. கை புனைய-அழகு செய்ய. துவங்க- ஒலி செய்யும்படி. ஆர்த்தார் - கட்டினார்கள்.

மல்லிகைப்பூ சதங்கைக்கு உவமை எனக் காண்க. (௫௯)

பல்வகைப் பக்க இயக்கங்கள் முழங்கல்

மாலைமுலைக் கிணையெனவென் முன்தானும்
வந்ததென வலக்கைத் தாளம்
போயிடக்கைத் தாளமதைப் பொருமையினுல்
தாக்குதல்போற் புடைத்தொ லிப்ப
வாயுரைக்கு மொழிபோலத் தண்ணுமைசெங்
கைகளால் வார்த்தை சொல்ல
மேயகலைப் பெண்விளர்ப்ப எழில்மாதர்
இசைபாட வீணை கொண்டு.

(அ - ரை.) புடைத்து ஒலிப்ப - அடித்து ஒலிசெய்யவும். தண்ணுமை - மத்தளம். கலைப்பெண் - கலைமகள். விளர்ப்ப - நாண.

தாளம் அடிப்பது, மாலையின் முலைக்கு இணையென்று நீ என் முன் வந்தனையோ போ என்று கூறி வலக்கைத் தாளமானது இடக்கைத் தாளத்தை யடித்ததுபோலத் தோன்றியது எனக் காண்க. (௬௦)

கூத்து இயற்றுதல்

என்னெருகை யொடுமற்போர் புரிகவென
நிற்பவள்போ லிடையி னேர்கை
மன்னியுற வைத்தொருகை நீட்டியர
னெதிர்நின்று மாலை வல்லி
கன்னல்மதன் தனைவருக வெனவிளித்தல்
போல்தழங்கக் காற்ச தங்கை
பொன்னினியல் ஒருபாவை நடிக்கின்ற
தென்னநடம் புரிய லுற்ருள்.

(அ - ரை.) மன்னி உற வைத்து - பொருந்த வைத்து. கன்னல் மதன் - கரும்பு வில்லையுடைய காமன். விளித்தல் - அழைத்தல். தழங்க - ஒலி செய்ய. பொன்னின் இயல் - பொன்னுற் செய்யப்பட்ட. மதனை வருக என அழைப்பதுபோற் காற்சதங்கை தழங்க என்று கூட்டுக. (௬௧)

### தாளம் முதலியவற்றிற்குத் தக நடித்தல்

தண்ணுமை விளங்கலுறு தாளமிசை யெல்லாம்
வண்ணமலர் மெல்லடி வழிச்சதியி னிற்பக்
கண்ணிணைகொள் பல்வளைய கைவழி நடப்பப்
பெண்ணமுத மன்னவள் பெயர்ந்தனள் நடித்தாள்.

*(அ - ரை.) விளங்கல் உறுதாளம் - விளங்குகிற தாள ஒலி. சதி வழியில் நிற்ப - தாளவோத்துக்கு ஒத்து நிற்ப. கண் இணை - இரண்டு கண் பார்வைகளும். கொள் பல் வளைய - கொண்ட பல வளையலை யுடைய. கைவழி நடப்ப - கைகளின் வழியே செல்லவும். பெயர்ந் தனள் நடித்தாள் - புடைபெயர்ந்து ஆடினாள். (௩௨)*

### சைகையோடு ஆடுதல்

வாயுரைசெய் சொற்பொருள் மலர்க்கரம் உரைப்ப
மீயுயர் விசும்பினெழு மென்புளொலி யெல்லாம்
பாயொளிய பஞ்சுறு பதத்துற மிதித்துப்
பேயொடு நடித்தஇறை பித்துற நடித்தாள்.

*(அ - ரை.) வாயாற் சொல்லப்பெற வேண்டியவற்றைக் கை சொல்ல. மீ உயர் - மிகவும் உயர்ந்த. பாய் ஒளிய - பரவுகின்ற ஒளியை உடைய. புள்ளொலியெல்லாம் பதத்தில் உண்டாகும்படி மிதித்து என்பது பொருள். பித்துற - மயக்கமுறும்படி. (௩௩)*

### மாயையின் கூத்துக்குத் தேவர்களும் மயங்கல்

அந்தணனி ருங்கலை அணங்கினை உமிழ்ந்தான்
செந்திருவை நேமியிறை சீயென வெறுத்தான்
இந்திர னருஞ்சசியை யெண்ணிலன் மறந்தான்
பைந்தொடி நடிப்பநரர் பட்டதெ னுரைப்பாம்.

*(அ - ரை.) அந்தணன் - நான்முகன். கலையணங்கு - கலைமகள். பைந்தொடி - மாயை. நரர் - மக்கள். நேமி - சக்கரம். நேமி இறை - சக்கரத்தையுடைய இறைவன். இது திருமாலுக்கு ஆயிற்று. சசி - இந்திராணி. (௩௪)*

### மாயையைப் பார்க்க விரும்பிய மைந்தர்கள் செயல்

பொன்னெயிலின் ஒன்றிய புழைக்குள் முகம்வைத்தும்
துன்னிமுனர் நின்றவவர் தோளிடை யிவர்ந்தும்
மின்னென நடம்புரியு மெல்லியல் மருங்குல்
என்னும்வெளி காணிய இடர்ப்படுவர் மைந்தர்.

(அ - ரை.) பொன் எயில் - பொன் மதில். புழை-துளை. துன்னி-பொருந்தி. இவர்ந்து - ஏறி. மருங்குல் - இடை. காணிய - காணும் பொருட்டு. மைந்தர் - காளைகள். முனர் நின்ற அவர் - முன் நின்றவர்களுடைய: இவர்ந்தும் - ஏறியும். காணிய - காணுதற்கு. (௬௫)

இளைஞர்கள் செயலற்றிருத்தல்

பற்றுமன மோடியிரு பார்வையினு மெய்தி
மற்றைய புலன்களை மறந்து நடமாடும்
பொற்றொடியை நண்ணவுயர் பொன்மதி லுறுப்பின்
உற்றபொறி போலசை வொழிந்திளைஞர் நின்றார்.

(அ - ரை.) பற்றும் - பலவற்றையும் பற்றும். இளைஞர் மனம் கண்வழியாகச் சென்று, மற்றைப் புலன்களை மறந்தமையால் வேறு செயலற்றிருந்தனர் என்க. அவர் செயலற்றிருந்தமைக்கு உவமை மதிலுறுப்பின் பொறி. (௬௬)

கூத்துமுடிந்தபின் சேடம் பெறுதல்

இளங்கொடி மருங்குலவள் இன்னணம் நடிப்பக்
களங்கனியை வென்றமணி கண்டனை அருச்சித்
துளங்குளிர் அருந்தவன் உவந்திறை அணிந்த
வளங்கெழுமு சந்தமலர் மாலையொ டளித்தான்.

(அ - ரை.) கொடி மருங்குல் அவள் - கொடி போன்ற இடையை யுடையவள். களங்கனி - களாப்பழம். மணிகண்டன் - கரிய கழுத்தையுடைய இறைவன். அருந்தவன் - கோயிற் பூசகன். வளம் கெழுமு - வளம்பொருந்திய. சந்தம் - சந்தனம். (௬௭)

சேடம் பெற்றபின் அரங்கில் இருத்தல்

வணங்கிமது கேசனிரு மாலியம தேற்றங்
கணங்குமட வாருடன் அரங்கிடை யிருந்தாள்
நுணங்கிழை மருங்குல்மிக நோமென விரைந்து
பிணங்குறு சதங்கையமு பிள்ளையின் அடங்க.

(அ - ரை.) நிருமாலியம் - இறைவனைப் பூசித்துக் கழித்த பொருள்கள். அங்கு - அவ்விடத்தில். அணங்கு - மாயை. அரங்கு-கூத்தியற்றும் இடம். நுணங்கு இழை மருங்குல் - நுண்ணிய நூல் போன்ற இடை. பிணங்குறு சதங்கை - பிணக்குற்ற சதங்கை. அமுபிள்ளையின் அடங்க - அழுதபிள்ளை அடங்கியிருந்தாற்போல்

அடங்கியிருக்க சதங்கை ஒலி அடங்கியது; அமுதபிள்ளை ஒடுங்கியது போலும் என்க. (௩௰)

## மாயையின் வழிபாட்டை அல்லமதேவர் அறிதல்

மைத்தட நெடுங்கணிள வல்லிநிகர் மாயை
பத்தியொ டருச்சனை பயின்றதை அறிந்தான்
நித்தனுல கெங்கணு நிறைந்தவன் அனாதி
முத்தனருள் அல்லம முதற்பெயரி னனே.

(அ - ரை.) மை - மை இடப்பெற்ற. தடம் நெடுங்கண் - அகன்ற நீண்ட கண்கள். பத்தி ஒடு - அன்போடு. அருச்சனை பயின்றதை - வழிபாடு செய்ததை. அநாதிமுத்தன் - இயல்பாகவே பந்தங்களில் நீங்கியவன். நித்தன் - அழியாதவன். பெயரினன் அறிந்தான் என்று கூட்டுக. (௩௧)

நான்காவது மாயை பூசை கதி முடிந்தது

கதி ௪ - க்குச் செய்யுள் - ௨௧௯

—

# ௫. பிரபுதேவர் வந்த கதி

¶ இக்கதிக்கண், அல்லமதேவர் மாயை பூசனைபுரிந்து கூத்தியற்றிக் கொண்டிருந்த இடத்திற்கு அழகிய வடிவங்கொண்டு செல்கிறார். மிக வியக்கத்தக்க முறையில் மத்தளத்தை யடிக்கிறார். மத்தள வொலி மாயையின் காதிற் படுகிறது. 'இவ்வாறு சிறந்த முறையில் மத்தளம் அடிப்பது யாரென்று பார்த்து வாருங்கள்' என்று தோழிகள் சிலரை ஏவுகிறாள். தோழிகள் சென்று அல்லமதேவரைக் காண்கிறார்கள். அவருடைய அழகு அவர்களுடைய உள்ளத்தைக் கவருகிறது. அவர்கள் திரும்பிச் சென்று மாயையிடஞ் செய்தியைச் சொல்லுகிறார்கள். மாயை அல்லமதேவரை அழைப்பிக்கிறாள். அல்லமதேவருடைய அழகு மாயையின் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது. மாயையின் உயிர்த் தோழிகள் மாயையின் உள்ளப்போக்கை உணர்ந்துகொண்டு அல்லமதேவரைத் தங்களுடன் தங்கியிருக்குமாறு வேண்டிக் கொள்ளுகிறார்கள். அதன்பொருட்டு அரசனுடைய உடன்பாட்டையும் பெறுகிறார்கள். அல்லமதேவர் அவர்களுடன் தங்கியிருத்தற்கு மிகவரிதில் உடன் படுகிறார். மாயைக்கு அல்லமதேவரிடம் காமக்காழ்ப்பு அதிகரிக்கிறது. மதமானி என்பவள் அல்லமதேவரிடஞ் சென்று அவருடைய உள்ளப்போக்கை மெல்ல ஆராய்கிறாள். மாயைக்குத் தக்கபடி பக்குவமாகப் பேசுவதில் வல்லவராகிய அல்லமதேவர், மாயைக்கு இணங்குபவரைப் போலக் குறிப்புக்காட்டி நயமாகப் பேசுகிறார். சில நற்குறிகளைக் கண்டு மாயையின் தோழிகள் மாயையின் எண்ணங் கைகூடுமென்று மாயைக்குக் கூறுகிறார்கள். மதமானி என்பவள் திரும்பிவந்து அல்லமதேவரின் உடன்பாட்டைத் தெரிவிக்கிறாள். அவள்மொழி மாயைக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது. அரசனுக்குத் தெரியுமாயின் யாதாக முடியுமோ வென்று தோழிகள் அஞ்சுகின்றார்கள். பகற்காலம் போய் மாலையும் இரவும் வருகின்றன. காமங் கைம்மிகப்பெற்ற மாயை, திங்களையுந் தென்றலையுங் காமனையும் வெறுத்துப் பலவாறு புலம்புகிறாள். மதமானி அல்லமதேவரை அழைத்து வந்து ஓர் அறையில் தங்கியிருக்கச் செய்து மாயையை அங்கு அனுப்புகிறாள். மாயை அல்லமதேவரைத் தழுவுதற்கு முயல்கிறாள். அல்லமதேவரின் உருவங் கட்புலனாகின்றதேயன்றி மாயையின் கைக்குப் பிடிபடவில்லை. அல்லமதேவரைத் தழுவச் செய்த முயற்சிகள் பலனளியாமல் மாயை களைத்து வாடி உறங்குகின்றாள். கனவின்கண் அல்லமதேவரைத் தழுவினதுபோலக் காண்கிறாள். இச் செய்திகள் தோழிகள் சிலரால் மோகினிக்குத் தெரிகின்றன. மோகினி மாயையின் இருப்பிடம் போந்து அவளுடைய செய்கைகளைக் கண்டிக்கிறாள். பிறகு, அல்லமதேவரைத் தழுவுதற்குத் தன்

னுடைய உடன்பாட்டைத் தெரிவிக்கிறான். 'மணமாகும்வரை மன்னனுக்குத் தெரியாமல் மறைத்து வைத்திருங்கள்' என்று சொல்லிச் செல்லுகிறான். சகளை யென்பவள் அல்லம தேவரை வெளியே வைத்திருக்க வேண்டுமென்று எண்ணி, அவரிடஞ் சென்று தனித்துறையுமாறு கூறுகிறாள். அல்லமதேவரோ, மாயையைப் பிரித்து தனித்து இருக்கமுடியாதென்று கபடமாகப் பதிலுரை கழறுகின்றார். வழக்கம்போல் மத்தளம் அடித்தலாகிய தம்முடைய தொழிலைச் செய்துகொண்டிருக்கிறார் என்னுஞ் செய்திகள் விரிவாகக் கூறப்பெறுகின்றன.]

## நூலாசிரியர் கூறல்

நிரந்தரம் அடியார் வேண்டும் நினைவெலாம் நிரப்பா நின்ற
பெருந்தகை அல்ல மையன் பெயர்ந்தொரு மனித னாகி
வருந்துறு மயல்ம னத்தால் வந்தனை புரிந்தாள் தன்பால்
பொருந்துறு பவன்போற் செய்த புணர்ப்பினைப் புகன்று ரைப்பாம்.

(அ - ரை.) நிரந்தரம் - எப்பொழுதும். வேண்டும்-விரும்பும். நினைவு - எண்ணம். நிரப்பாநின்ற - முடிக்கின்ற. வந்தனை-வழிபாடு. புணர்ப்பினை - சூழ்ச்சியாகிய செயல்களை. பொருந்துறுபவன்போல்- கூடுவோன்போல். புகன்று - விரும்பி. (க)

## அல்லமதேவர் மத்தளக்காரனாதல்

தாமுறு நுகர்வும் வீடுந் தந்திட வல்லன் தானே
ஆமென இயம்ப லாலே அல்லம தேவன் உண்மை
நாமமும் மறைய வேறோர் நாமமுற் றம்மா யைக்குக்
காமிய வினைப்ப யன்றான் கடைப்பிடித் தருள எண்ணி.

(அ - ரை.) தாம் உறும் - உயிர்கள் தாம் நுகரும். நுகர்வு - இன்பப்பேறு. காமிய வினை - உள்ளத்தின்கண் பயனைக் கருதிச் செய்யுங் காரியங்கள். கடைப்பிடித்து அருள எண்ணி - உறுதியாக அருளிச்செய்ய நினைத்து.

காமிய வினையால் இன்பப்பேறும், நிட்காமிய வினையால் வீடு பேறும் உண்டாம் என்பர். (உ)

## அழகிய வடிவங் கொள்ளுதல்

கதந்தரு திருநு தல்தீக் கண்ணினுல் நீறு பட்ட
மதன்செயல் செய்ய அன்னான் வடிவுதான் கொண்ட தென்னு
முதிர்ந்தழ கொழுகும் ஆறு முகங்களுட் சிறந்த ஒன்றே
டெதிர்ந்துள முருகன் என்ன இளமையோ டழகு வாய்ப்ப.

(அ - ரை.) கதம் - வெம்மை, கோபம். மதன் செயல் செய்ய - காமனது தொழிலைச் செய்தலுக்காக. முதிர்ந்து - முற்றி. வாய்ப்ப - பொருந்த. (௳)

கோலத்தின் சிறப்பு

அவிர்சடை முனிவர் மாதர் அழுங்குறக் கொண்ட கோலம்
கவினுமிவ் வடிவங் கொள்ளக் கற்றுமுன் விட்ட தென்னக்
குவிமுலை மகளிர் ஆவி கூட்டுணுங் கோலம் என்னப்
புவியுறும் இரவி யென்னப் பொங்கொளி உருவொன் றுற்றுன்.

(அ - ரை.) அவிர் சடை - விளங்குகின்ற சடை. அழுங்குற - மயங்கி வருந்த. கவினும் - அழகு செய்யும். கூட்டுணும் - கொள்ளை கொண்டுண்ணும். புவி உறும் இரவி - நிலவுலகில் வந்த கதிரோன். பொங்கு ஒளி உரு - மிகுந்த அழகையுடைய உருவம்.

முன் சிவபிரான் தாருகாவனஞ் சென்றபொழுது எடுத்த அழகிய வடிவம்; இப்பொழுது எடுத்துள்ள கோலத்தைக் கொள்வதற்கு முன்னால், பழக்கஞ்செய்து வைத்ததைப் போன்றது என்க. இதனால் இக் கோலம் மிகுந்த பேரழகுடையது என்பது பெறப்படும். (௮)

திருமுக அழகும் திருமயிர் அழகும்

விளிம்புற நடுக்க ளங்கம் வீழ்ந்துசூழ் மதியொன் றுண்டேல்
வளங்கெழு மயிரொ ழுங்கு வள்ளல்வான் முகநி கர்க்கும்
துளங்குறும் உந்தி மேற்போய் மார்பிடைத் தோன்று ரோமம்
இளங்கரு நளினம் உண்டேல் ஏய்க்குமென் றியம்ப நின்றுன்.

(அ - ரை.) விளிம்பு - ஓரம். நடுக் களங்கம் - (மதியின்) நடுவிலுள்ள மறு. துளங்கு உறும் - ஒளி செய்கின்ற. உந்தி - கொப்பூழ். கருநளினம் - கருந்தாமரை. ஏய்க்கும் - ஒக்கும்.

விளிம்பில் களங்கமுள்ள திங்களும், கருந்தாமரையும் யாண்டும் இன்மையால் இஃது இல்பொருளுவமை. (௯)

நல்லாடை முதலியன புனைதல்

விலைவரம் பறியா ஆடை விரித்துடுத் தரையி லங்க
மலைவரும் புதிய சந்தம் மான்மதங் காத நாறக்
கலைவரம் பறிந்து ளோர்தங் கருத்தினுக் கரிதா யென்முன்
தலைவருங் கமலப் பொற்றுன் தம்பிரான் மலியச் சாத்தி.

(அ - ரை.) விலை வரம்பு - விலையின் எல்லை. அரை இலங்க - இடுப்பு விளங்க. கலை வரம்பு - அறிவு நூல் எல்லை. புன் தலை - இழிந்த தலை. மலியச் சாத்தி - நிறையப் பூசி. (௰)

### தலையில், மாலை, தலைப்பாகை அணிதல்

தளிர்த்ததண் பொழிலில் தேமாந் தடஞ்சினைக் குயில்மு கம்போல்
துளித்தலை முகில்க வற்றுஞ் சுரிகுழற் சிகழி ஆர்த்திட்
டளித் தொடர்மாலை வேய்ந்தவ் வலங்கனைக் குறுவோர்க் கெல்லாம்
வெளிற்றுரைப் பொருள்போல் தோன்ற மென்தலைச் சாத்த ணிந்து.

(அ - ரை.) தளிர்த்த - துளிர்த்த. தேமாந் தடஞ் சினை - இனிய மாமரத்தினது பெரிய கிளை. துளித்தலை முகில் - மழைத் துளியைத் தன்னிடத்தே கொண்ட மேகம். கவற்றும் - வருத்தும். சுரி குழல் - சுருண்ட தலை மயிர். சிகழி ஆர்த்திட்டு - முடியாகக் கட்டி. அளித் தொடர் மாலை - வண்டுகள் தொடருகின்ற மாலை. தலைச் சாத்து - தலைப் பாகை. குயில்முகம்போலத் தலைமயிரைக் கொண்டையாகக் கட்டி என்க. (௭)

### நெற்றியிற் பொட்டிட்டுக் குண்டலம் அணிதல்

களத்திடை இருப்பின் உண்மை காண்குவர் என்ன ஆலம்
குளத்திடை வாங்கி வைத்த கொள்கைபோல் திலதந் தீட்டி
ஒளித்தனி மதிதன் பாங்கர் உரோணியோ டொருபெண் கூட்டி
அளித்துற வைத்த தென்ன அணிமணி செவிக்க ணிந்து.

(அ - ரை.) களம் - கழுத்து. ஆலம் - நஞ்சு. குளம் - நெற்றி. திலதம் - பொட்டு. தனி மதி - ஒப்பற்ற திங்கள். வாங்கி - எடுத்து. கொள்கை - செய்கை. அளித்து - அருள்செய்து.

நெற்றிப்பொட்டுக் கழுத்திலுள்ள நஞ்சக் கருமையைப் போன்றது. காதுக்குண்டலங்களோ, திங்கள் உரோகணியோடு மற்றுமொரு பெண்ணைச் சேர்த்து இரண்டுபக்கங்களினும் வைத்தாற் போன்றிருந்தது. (அ)

### பலவகை அணிகலன்கள் சூடுதல்

விலையில்வெண் தரளக் கோவை விரசங் கிலிகே யூரம்
இலகுசெம் மணிப்பொன் னாழி யிவைமுத லாய எல்லாக்
கலனுமொண் கவினை னுஞ்செங் கனலிற்பெய் நறுநெ யென்ன
மலைவினங் குருகு கேசன் வயங்குறுப் பெலாம ணிந்து.

(அ - ரை.) கேயூரம் - தோளணி. ஆழி - விரலணி. மலைவு இல் - எதனினும் மயங்குதல் இல்லாத.

அழகுமிக்க அல்லமதேவர் அணிகலன்களையும் அணிந்தது, நன்றாக எரிந்துகொண்டுள்ள தீயில் நெய்யையும் ஊற்றினாற்போன்றிருந்தது. (௯)

முதுகில் மத்தளம் தாங்குதல்

இந்திர திருவிற் கேற்ற இலக்கணம் முழுதும் வாய்ந்த
சுந்தர குமரற் காவா இதனைத்தான் சுமப்ப தாக
வந்துள தெதுகொ லோவென் றெண்ணிமா னிடர்ம யங்க
நிந்தையின் முதுகின் பால்தண் ணுமையொன்று நிகழத் தாங்கி.

(அ - ரை.) இந்திர திருவிற்கு ஏற்ற - தேவர்கோனுடைய செல்வத்தை நுகருதற்குத் தக்க. ஆ ஆ - அந்தோ அந்தோ. வந்துளது - வந்துள்ள தீவினை. நிந்தை இல் - பழிப்பற்ற. தகுதியின்மை உணீ தண்ணுமை - மத்தளம். (௧௦)

மாயையிடஞ் சென்று மத்தளம் அடித்தல்

சென்றருள் மதுகை நாதன் திருமுன்வான் சுடர்வ லஞ்சூழ்
குன்றுறழ் கொடிநெ டும்பொற் கோபுரத் தெதிர்போய் நின்று
மன்றிடை நவில்கூத் தாடி மத்தளத் தொழில்கைக் கொண்டான்
என்றுள மருள எங்கோன் எறிந்துதண் ணுமைய திர்த்தான்.

(அ - ரை.) வான் சுடர் - விண்ணிற் செல்கின்ற ஞாயிறு திங்கள் முதலிய சுடர்கள். குன்று உறழ் - சிறிய மலையை ஒத்த. மன்று இடை நவில் கூத்தாடி - அம்பலவாணன். உளம் மருள - யாவரும் உள்ளந் தியங்க. அதிர்த்தான் - முழக்கினன். (௧௧)

மத்தளம் முழக்குதல்

உரலசைந் திடாத டுக்கி உறியில்நெய் யெடுத்த யின்றோன்
குரலசைந் தூதும் ஓர்வேய்ங் குழல்மொழி மாதர் மாழ்கச்
சிரலசைந் தாடா நின்ற சிறகர்போல் மத்த ளத்தை
விரலசைந் தறைத லன்றி மெய்யசை யாமல் நின்றான்.

(அ - ரை.) அயின்றோன் - உண்டவன் (கண்ணன்). குரல் - கண்டம். சிரல் - மீன்கொத்திப் பறவை. அறைதல் - அடித்தல். மெய் - உடல். ஓர் வேய்ங்குழல் மொழி மாதர் - ஒரு புல்லாங் குழலினிசைபோன்ற மொழி பேசும் மங்கையர். மாழ்க - மயங்க. விரலசைவதற்கு அப் பறவையின் சிறகசைவது உவமை. அப் பறவை உடலை அசையாமல் சிறகை மட்டும் அசைத்து நிற்கும். வியப்பணி (௧௨

மத்தள ஒலி கேட்ட மாயை வியப்பு

சுத்தமெய்ஞ் ஞான னந்த சூரியன் கரத்தா லார்க்கும்
மத்தள முகில்மு ழக்கம் நடித்துறு மயில்கேட் டம்மா
இத்தரை மனிதர் கையா லெஞ்செவிப் படாதி திருந்த
புத்தொலி யிதுவென் றுள்ளம் வியந்திது புகலு மன்றே.

(அ - ரை.) கரத்தால் அடிக்கும் - கையினால் அடிக்கும். நடித்து நடம் - கூத்தாடுதல் செய்து விட்டு உட்கார்ந்திருந்த. மயில் - மாயை: ஆகுபெயர். ஞானமென்ற சூரியன் என்றது அல்லமதேவனை. அம்மா: வியப்பிடைச் சொல். (கஎ)

மத்தளம் அடிப்பார் யாரென அறியுமாறு கூறல்

மோட்டின முலையீர் இன்ன தண்ணுமை முழக்கங் காதால்
கேட்டிலம் இவ்வா றுண்டென் றுரைப்பவுங் கேட்டி லேமால்
வேட்டுல கனைத்து நின்று வியக்குமிவ் விஞ்சை கற்றுக்
காட்டிய அவன்யார் கொல்லோ காண்கவென் றணங்கு ரைத்தாள்.

(அ - ரை.) மோடு - உயர்ச்சி. வேட்டு - விரும்பி. விஞ்சை - வித்தை. அணங்கு - மாயை. ஆல்: அசைநிலை. கொல்: ஐயம். கேட்டிலேம் + ஆல்: அசை. காண்க - கண்டுவருவீராக. (கஅ)

தோழிகள் அல்லமதேவரைக் காண்டல்

மாதர்வல் விரைந்து சென்று மத்தள முழக்கி நின்ற
சோதியை விழியால் தாஞ்செய் தொல்லைமா தவத்தாற் கண்டு
காதொடு பொருது மீளுங் கயனெடுங் கருங்கட் செவ்வாய்க்
கோதைதன் மருங்கின் மீண்டு வந்திது கூற லுற்றார்.

(அ - ரை.) மாதர் - தோழிகள். வல் விரைந்து சென்று - மிக விரைவாகச் சென்று. சோதி - அல்லமதேவர். பொருது - போர் செய்து. கருங்கண் செவ்வாய்க்கோதை - கரிய விழியையும், சிவந்த வாயையும் உடைய மங்கை (மாயை). மருங்கு - பக்கம். (கக)

மாயை அல்லமதேவரை அழைப்பித்தல்

கற்றதன் விஞ்சை போலக் கவினுநாங் கண்ட தில்லை
விற்றெழில் அனங்க வேளே மேனிகொண் டடைந்தான் என்ன
உற்றனன் ஒருவன் என்ன ஒண்தொடி விளிமி னென்றாள்
மற்றவர் விளித்து வந்து மாயைமா தெதிர்வி டுத்தார்.

(அ - ரை.) விஞ்சை - வித்தை. கவின் - அழகு. அனங்கவேள் - காமன். விளிமின் - கூப்பிடுங்கள். மற்றவர் - தோழிகள். மேனி - வடிவம். (உ)

### அல்லமரைக் கண்ட மாயை மயங்கல்

அந்நிலை அலமை னுமத் தண்ணலைக் கண்ட போதே
செந்நிலம் உகுநீர் போலச் செல்விமால் மயமே யாகிப்
பொன்னவிர் ஒருபூம் பாவை போன்றசை வறவி ருந்தாள்
கன்னல்வில் மதவே ளெய்து கையினைத் தருகு நின்றான்.

(அ - ரை.) அந்நிலை - அவ்வழகிய கோலநிலைமையையுடையவன். செந்நிலம் - செம்மண் நிலம். உகும் நீர் - விழுந்த நீர். செல்வி: மாயை. மால் மயம் - மயக்க வடிவம். அவிர் - விளங்குகின்ற. செம் மண்ணில் விழுந்த நீர் அந்நிறமாவதுபோல வடிவ முழுவதும் காமம் பரவ என்க. (கஎ)

### தோழிகள் அல்லமதேவரின் ஊர் முதலியன வினவல்

மயக்குமென் பதுபோய் மாயை மயங்குமென் றிடவி ருப்ப
வியக்குநின் தேயம் யாது விரவேள் அனையா யின்பம்
பயக்குநின் பெயர்யா தெங்குப் பயின்றுறை குவைசொல் லென்று
நயக்குமென் மொழியார் கேட்ப ஞானவா ரிதியு ரைக்கும்.

(அ - ரை.) வியக்கும் - வியந்து கூறத்தகுந்த. விரவேள் - காமன். பயக்கும் - உண்டாக்கும். பயின்று உறைகுவை - பழகியிருப்பாய். நயக்கும் - விரும்பப்பெறும். ஞானவாரிதி - அறிவுக்கடல் (அல்லமன்). மொழியார் - தோழியர். (கஅ)

### அல்லமதேவர் பதில் உரைத்தல்

சென்னுறழ் குழலீர் தேய மோபர தேயஞ் சூளால்
வல்லவ ரென்ன வந்தோர் வலிநிலை அல்ல வென்னும்
அல்லமன் என்பே ரென்றும் அன்புசெய் பவரி டத்தில்
புல்லுவன் தொடர்பி லாமல் என்றனன் பொய்ம்மை யில்லான்.

(அ - ரை.) செல் உறழ் - முகிலையொத்த. பரதேயம் - வேற்று நாடு (வீட்டுலகம்). புல்லுவன் - சேர்ந்திருப்பேன். தொடர்பு - பற்றுக்கோடு. சூளால் - வஞ்சினத்தால். என்னும் - என்று காட்டு கின்ற. (கக)

### அல்லமதேவரைத் தோழிகள் வேண்டுதல்

உலகுள விஞ்சை எல்லாம் உணர்ந்தவெம் பிராட்டி தன்பால்
மலைவற விஞ்சை கற்றோர் தம்மொடு மருவி அப்பால்
செலவினை ஒழிந்தி ருத்தி செல்வமோ டைய என்று
இலவிதழ் அமுதம் அன்னார் இயம்பினர் இணங்கும் வண்ணம்.

(அ - ரை.) பிராட்டி - தலைவி. மலைவு அற - திகைப்பு இல்லாமல். செலவினை - செல்லுதலை. இலவு இதழ் - இலவமலர் போன்ற உதடு. விஞ்சை - கலை. அப்பாற் செலவு - வேறு இடஞ் செல்லுவது. (உ0)

அஃதறிந்த மாயை மகிழ்ச்சியடைதல்

தன்கனி வாய்தி றந்து சாற்றவேண் டியசொல் லெல்லாம்
மின்குழு வனைய மாதர் விளம்பலும் மகிழ்வுற் றீது
புன்சடை மதுகை நாதன் பூசனைப் பயனென் றெண்ணி
இன்குழல் மொழிம டந்தை யிருந்தனள் உரையா டாமல்.

(அ - ரை.) சாற்ற - சொல்ல. மின் குழு - மின்னற்கூட்டம். இன் குழல் மொழி-இனிய வேய்ங்குழல் இசையைப் போன்ற சொல். புன்சடை - அற்பமான சடை. இன் - இனிய. (உக)

அல்லமதேவருக்குச் சிறப்புச் செய்தல்

மோகினி தவஞ்செய் தீன்ற முகிழ்முலை மாயை தன்கைப்
பாகுவெள் ளிலையை வித்துப் பரிந்தரு குறும டைப்பைப்
போகியென் பவள்சி றந்த போகிபோல் நடித்து நின்ற
யோகிதன் கரத்த ளிப்பித் துரியன பலவுஞ் செய்தாள்.

(அ - ரை.) முகிழ் - அரும்பு. பாகு வெள்ளிலை - பாக்கு வெற்றிலை. போகி - அடைப்பைத் தொழில் புரிபவளின் பெயர் யோகி - அல்லமதேவர். போகிபோல் - இன்பத்தை நுகர்ந்தவன் போல. (உஉ)

சிறப்புக்களை அல்லமர் ஏற்றுக்கொள்ளுதல்

அடிக்கம லங்கள் போற்றும் அடியவர் வேண்டிற் றெல்லாம்
கொடுத்தருள் கருணை வள்ளல் கொண்டகோ லத்திற் கேற்ப
நடிப்பவன் ஆத லாலே நாமவேல் தடங்கண் மாயை
எடுத்துத வுறுவ தங்கை யேற்றனன் இழிந்து ளோன்போல்.

(அ - ரை.) வேண்டிற்று எல்லாம்-விரும்பியவற்றையெல்லாம். ஏற்ப நடிப்பவன் - இசையச் செயல் செய்து காட்டுபவன். நாம வேல் - அச்சமுண்டாக்கும் வேல். உதவுறுவது - கொடுத்ததாகிய பாக்கு வெற்றிலையை. இழிந்துளோன்போல் மாயை எடுத்துத வுறுவது அங்கையேற்றனன் என்க. (உ௩)

### மாயை தன் இருப்பிடம் செல்லுதல்

விடைக்கொடி அமலன் தன்னை விடைகொடு புறம்போந் தங்கண்
மடக்கொடி மதவேள் வாளி மருமம்பாய்ந் துருவ நைந்து
நடக்கரி தாகி அம்பொன் நகைமணிச் சிவிகை யூர்ந்து
தொடிக்கைநுண் இடைம ருங்குல் தோழியர் சூழச் சென்றாள்.

*(அ - ரை.) அங்கண் - அழகிய கண்ணையுடைய. அங்கண்-அவ்விடமுமாம். மடக் கொடி - இளங்கொடிபோன்ற மாயை. மருமம் - மார்பு. நகைமணிச் சிவிகை - ஒளி தங்கிய மணிகள் பதித்துச் செய்யப்பட்ட பல்லக்கு. மதவேள்: இருபெயரொட்டு. நடக்க அரிது ஆகி - நடப்பதற்கும் இயலாமல். (௨௪)*

### மாயை அல்லமருடன் இருத்தற்குத் தன் தந்தை உடன்பாடு பெறல்

நண்ணிவெண் குடைவேந் தன்பால் நடம்புரி தொழிற்கி சைந்த
தண்ணுமை அல்ல மன்றன் சதுருரைத் துடனி ருப்பக்
கண்ணகல் ஞாலங் காக்குங் காவலன் இசைவு கொண்டு
பெண்ணமு தனைய மாயை பிறங்குதன் மாடம் புக்காள்.

*(அ - ரை.) நண்ணி - சென்று. சதுர் உரைத்து - மேம்பாடுகளைச் சொல்லி. கண் அகல் - இடம் அகன்ற. இசைவு-உடன்பாடு. மாடம் - மாளிகை. தண்ணுமை அல்லமன் - மத்தளத் தொழிலையுடைய அல்லமன். உடன் இருப்ப - தன்னுடன் இருப்பதற்கு. மாயை அல்லமன்றன் சதுருரைத்துத் தன்னுடன் இருப்பதற்குக் காவலன் உடன்பாடு பெற்று மாடம்புக்காள் என்க. (௨௫)*

### மாயை அல்லமதேவரோடு பேசத் தொடங்குதல்

வலம்புரி வளைய னந்தம் மருங்குசூழ்ந் துறச்சி றந்த
சலஞ்சலம் இருப்ப தென்னத் தமனிய மணிமா டத்தில்
பொலங்குழை மகளிர் சூழப் பூந்தவி சிருந்து விஞ்சை
நலந்தெரி பவன்போல் எங்கள் நம்பனோ டுரைவி ழைந்தாள்.

*(அ - ரை.) வலம்புரி வளை அனந்தம் - வலம்புரிச் சங்குகள் பல. தமனிய மாடம் - பொன்னாற் செய்யப்பெற்ற மாடம். பொலம் - பொன்: ("பொன்னென் கிளவி ஈறுகெட முன்னர்த் தோன்றும் லகார மகாரம்" தொல்.) விஞ்சை நலம் - வித்தையின் மேன்மை. நம்பன் - அல்லமதேவர். உரை விழைந்தாள் - பேசுதலை விரும்பினாள். (௨௬)*

## மாயையின் நினைவு முதலியன மாறுபடல்

நினைவின் புணர்ச்சி மேற்று நெடுங்கணேக் கனங்கன் அன்னான்
தனிமிகும் அழகின் மேற்று நாவெறுங் கூற்றின் மேற்று
புனைமலர் வணர்வார் கூந்தற் பொற்றொடிக் கிதனா லன்றே
மனமொழி மெய்யொ ருங்கு மங்கையர் அரியர் என்பார்.

(அ - ரை.) நினைவு - எண்ணம். மேற்று - மேலது. வெறுங் கூற்றின் மேற்று - பயனில்லாத சொல்லின்மேலது. வணர்வார் கூந்தல் - வளைந்த நீண்ட கூந்தல். மனம் மொழி மெய் ஒருங்கு மங்கையர் - உள்ளம் மொழி உடல் எல்லாம் ஒரே தன்மையாக அமைந்த பெண்கள். புனைமலர்-மலர் புனைந்த. (௨௭)

## மாயையின் மடமை

தீதறு கழைக்க ரும்பின் தீஞ்சுவை இரத நீத்துக்
கோதினை விரும்பிக் கொள்ளுங் கொள்கைபோல் நாவி யின்கண்
போதுறு மதம்வி டுத்துப் புன்மலங் கொள்ளு மாபோல்
பேதையெம் பிரானான் முத்தி பெறாதுபுன் போகம் வேட்டான்.

(அ - ரை.) தீது அறு - குற்றம் அற்ற. கழைக் கரும்பு - கழையாகிய கரும்பு. இரதம் - சாறு. கோது - சக்கை. நாவின் கண் - கத்தூரி விலங்கினிடத்தில். மதம் - கத்தூரி. பேதை: மாயை. புன் போகம் - சிற்றின்பத்தை. கரும்பின் சாற்றை விரும்பாது அதன் சக்கையை விரும்புவது போலவும், கத்தூரியை விரும்பாது அப் பூனையின் மலத்தை விரும்புவதுபோலவும் இருந்தது மாயை செயல். (௨௮)

## மாயை காமப் பெருக்கடைதல்

ஒன்றிரண் டொழிய வாளி உளவெலாம் மாரன் தூர்த்தான்
குன்றிரண் டனைய கொங்கை கோமகள் ஆற்றா ளாகி
மின்திரண் டனைய மேனி விமலன்மேற் சாய்ந்து வீழ்வாள்
பொன்திரண் டனைய மாதர் பொருந்தலால் நாணி நின்றாள்.

(அ - ரை.) வாளி - மலர்க்கணை. மின் திரண்ட அனைய மேனி - மின்னல் திரண்டுவந்தாற் போன்ற அழகிய உடல். பொன் திரண்ட அனைய மாதர் - திருமகளிர் பலர் சேர்ந்துவந்தாற் போன்ற பெண்கள். பொருந்தலால் - அங்கு இருத்தலால். வீழ்வாள் - விழ நினைத்தவள்; அவ்வாறு செய்யாது நாணி நின்றாள். (௨௯)

பெருகிய காமம் வளர்ந்து முறுகுதல்

தளிரியல் காமத் தீயிற் சருகுபட் டாற்று ளாகி
உளநிகர் மகளிர் சில்லோர் உடன்வர எழுந்துட் போகி
அளிமலர் அளகஞ் சோர அணிமுலைத் துகில்வி லங்க
வளமலி அணையின் மீது வாயுயிர்ப் பெறிந்து விழ்ந்தாள்.

(அ - ரை.) தளிர் இயல்-தளிர்போலுந் தன்மையுடைய மாயை. சருகு பட்டு-சருகைப்போல் அகப்பட்டு. உளம் நிகர்-தன் னுள்ளத்தை யொத்த. சில்லோர் - சிலர். துகில் விலங்க - ஆடை விலக. அளகம்- கூந்தல். வாய் உயிர்ப்பு எறிந்து - வாயாற் பெருமூச்சு விட்டு. (௯௦)

மாயை, தோழிகள்பால் அல்லமர் இருப்பிடம் வினவல்

அள்ளிக் கொளும்பே ரழகனருள்
நாமம் புகலும் அவாவாலும்
உள்ளக் கருத்தை உயிர்போலும்
மகளிர்க் குணர்த்தும் உளத்தாலும்
மெள்ளப் பவள வாய்திறந்து
விடே தலமன் மேவுதற்குப்
பிள்ளைப் பிறைவாள் நுதல்மடவீர்
என்றுள் பிறரை வென்றுளே.

(அ - ரை.) அள்ளிக்கொளும் பேர் அழகன் - கைகளால் அள்ளிக் கொள்ளத்தக்க மிகுந்த அழகை யுடையவன். அருள் நாமம் - திரு வருளை யுடைய பெயர். அல்லமன் மேவுதற்கு வீடு ஏது என்று வினவினள்; அல்லமன் பெயரைக் கூறவேண்டும் என்ற விருப்பாலும், கருத்தைத் தோழியர்க்குணர்த்தும் விருப்பாலும் அங்ஙனம் வினவினள். (௯௧)

தோழிகள் மாயையின் விருப்பம் வினவல்

இறங்கு துறையில் நீத்தாயிற்
றென்ன மாயை இடத்துமயல்
பிறந்த பொழுதே உயிரளவாய்
நின்ற தென்னும் பெற்றிமையை
அறிந்து மகளிர் நின்கருத்தை
அறிய உணர்த்தில் அல்லமற்குச்
சிறந்த மனையோன் றளிக்குதுமென்
றுரைத்துப் பின்னுஞ் செப்புவார்.

(அ - ரை.) பெற்றிமை - தன்மை. மாயையிடத்தில் மயல் தோன்றியபொழுதே அளவுகடந்ததாக இருந்தது. ஆற்றில் இறங்கு துறையில் நிற்கும் அளவு நீர் இருந்ததுபோல என்க. (கஉ)

மாயை நோயை அறிந்ததாகத் தோழிகள் கூறல்

காம முனிவநோன் றிற்றனக்கென் றெங்கள் கருத்தில் தோன்றிற்று
வாம மணிமே கலைமருங்குல் வடிவேல் மருட்டும் மதர்விழியாய்
யாமும் நினது நெஞ்சகமும் வேற லேநின் இதயத்தில்
சேம மதனை நானுமற் செப்பு கென்றார் திருந்திழையார்.

(அ - ரை.) வாமம் - அழகு. மருங்குல் - இடை. வடிவேல் மருட்டும் - வடித்த வேல் என்று எண்ணுமாறு மருட்சியை உண்டு பண்ணும்; வடித்த வேலையே மருளச்செய்யும் எனினும் ஆம். சேமம் - மறைக்கப்பட்டுள்ளதை. செப்புக என்றார் - சொல்வாய் என்று கேட்டனர். இதில் அகரந் தொகுத்தல் விகாரம். (கக)

மாயை பேசாதிருத்தல்

கன்னித் தன்மை அழியுமெனும்
நாணும் உலகங் காக்குமொரு
மன்னற் குரிய மகளென்னும்
பெருமை தானும் மத்தளிகன்
தன்னைப் புணர்ந்தாள் என்றுவருந்
தகாத மொழியுந் தன்னுளத்தில்
உன்னிக் கருங்கண் மடமாயை
ஒன்றும் உரையா திருந்தனளால்.

(அ - ரை.) மத்தளிகன் - மத்தளம் அடிப்பவன். உன்னி - நினைத்து. தகாத மொழி - பழிச்சொல். நாணையும் பெருமையையும் தகாதமொழியையும் உன்னி என்க. (கச)

சகனை, விலாசினிபால் நோய்பற்றிக் கேட்டல்

இறைவி ஒன்றும் உரையாமல் வாளா இருப்ப ஏவல்புரிந்
துறவி னின்ற சகனையெனும் மாது பிராட்டி உரையொடுதான்
பிறவும் இன்று வேறுபட்டாள் என்னே பெண்ணே அறியேனென்
றறிவு கலங்கி ஒருவுகளா விலாசி அன்னங்கை வினவினள்.

(அ - ரை.) இறைவி: மாயை. வாளா - பேசாமல்; வறிதே. உறவில் நின்ற - மிக நெருங்கிய உறவாக அமைந்து நின்ற. இருவு கலா - மாயையை விட்டு நீங்காத. சகளை என்னும் மாது - சகளை என்ற பெயருடைய தோழி. விலாசி அணங்கை நோக்கி "பெண்ணே! பிராட்டி உரையொடு...வேறுபட்டாள் என்னே அறியேன் என்று வினவினள்" எனக்கொள்க.

(௧௬)

மாயை கொண்ட மயலை விலாசினி கூறல்

இனியான் மறைப்ப தென்கொல்நுமக்
  கின்று வந்த அல்லமனும்
தனிநா யகன்பே ரழகென்னும்
  நறவை உண்டு தரியாமல்
கனிவாய் மடந்தை உளமழிந்தாள்
  என்று விலாசி கட்டுரைக்க
முனியாள் இயைந்து புன்னகைகொண்
  டிருந்தாள் மாயை முகங்கவிழ்ந்து.

(அ - ரை.) நறவை - தேனை. தரியாமல் - பொறுக்கமாட்டாமல். முனியாள் - சினவாதவளாய். இயைந்து - கூறியதை உடன்பட்டு. அழகு என்னும் கள்ளுண்டு அறிவழிந்தாள் என்க. விலாசி வுரைத்த போது மாயை முனியாளாய் இயைந்து முகம் கவிழ்ந்து, புன்னகை கொண்டிருந்தாள் என்க.

நுமக்கு யான் இனி மறைப்பது என்கொல் என மாற்றுக. (௧௭)

மாயை அல்லமரிடம் மையல் கொண்டுள்ளதை அறிதல்

மாயை இடையை உளன் முனியான் மற்றை மாதர் போலென்று
தூய மதிஞர் அனுமிதித்துச் சொல்லு மருங்குல் தோகைதான்
வாயின் இளவெள் நகைதோன்ற வாளா இருப்பக் கண்டுமயல்
ஆயி னுடையள் எனமாதர் அறிந்தார் அருத்தா பத்தியினால்.

(அ - ரை.) மதிஞர் - அறிஞர். அனுமிதித்து - அனுமானத்தால் அறிந்து. தோகை - மாயை: ஆகுபெயர். ஆயின் - ஆராயுமிடத்து. அருத்தாபத்தி - பகலுண்ணான் ஒருவன் பருத்திருத்தல் கண்டு அவன் இரவில் கள்ளத்தனமாக உண்பான் என்று உணருதல் போன்றது.

(௧௮)

(அ - ரை.) பெற்றிமை - தன்மை. மாயையிடத்தில் மயல் தோன்றியபொழுதே அளவுகடந்ததாக இருந்தது. ஆற்றில் இறங்கு துறையில் நீந்தும் அளவு நீர் இருந்ததுபோல என்க. (கஉ)

மாயை நோயை அறிந்ததாகத் தோழிகள் கூறல்

காம முனைநோன் றிற்றனக்கென் றெங்கள் கருத்தில் தோன்றிற்று
வாம மணிமே கலைமருங்குல் வடிவேல் மருட்டும் மதர்விழியாய்
யாமும் நினது நெஞ்சகமும் வேற லேநின் இதயத்தில்
சேம மதனை நாணுமற் செப்பு கென்றார் திருந்திழையார்.

(அ - ரை.) வாமம் - அழகு. மருங்குல் - இடை. வடிவேல் மருட்டும் - வடித்த வேல் என்று எண்ணுமாறு மருட்சியை உண்டு பண்ணும்; வடித்த வேலையே மருளச் செய்யும் எனினும் ஆம். சேமம் - மறைக்கப்பட்டுள்ளதை. செப்புக என்றார் - சொல்வாய் என்று கேட்டனர். இதில் அகரந் தொகுத்தல் விகாரம். (கக)

மாயை பேசாதிருத்தல்

கன்னித் தன்மை அழியுமெனும்
நாணும் உலகங் காக்குமொரு
மன்னற் குரிய மகளென்னும்
பெருமை தானும் மத்தளிகன்
தன்னைப் புணர்ந்தாள் என்றுவருந்
தகாத மொழியுந் தன்னுளத்தில்
உன்னிக் கருங்கண் மடமாயை
ஒன்றும் உரையா திருந்தனளால்.

(அ - ரை.) மத்தளிகன் - மத்தளம் அடிப்பவன். உன்னி - நினைத்து. தகாத மொழி - பழிச்சொல். நாணையும் பெருமையையும் தகாதமொழியையும் உன்னி என்க. (கச)

சகனை, விலாசினிபால் நோய்பற்றிக் கேட்டல்

இறைவி ஒன்றும் உரையாமல் வாளா இருப்ப ஏவல்புரிந்
துறவி னின்ற சகனையெனும் மாது பிராட்டி உரையொடுதான்
பிறவும் இன்று வேறுபட்டாள் என்னே பெண்ணே அறியேனென்
றறிவு கலங்கி ஒருவுகலா விலாசி அணங்கை வினவினள்.

(அ - ரை.) இறைவி: மாயை. வாளா - பேசாமல்; உறவில் நின்ற - மிக நெருங்கிய உறவாக அமைந்து நின்ற. வறிதே கலா - மாயையை விட்டு நீங்காத. சகலை என்னும் மாது - சகலை என்ற பெயருடைய தோழி. விலாசி அனங்கை நோக்கி "பெண்ணே ஒருவு பிராட்டி உரையொடு...வேறுபட்டாள் என்னே அறியேன் என்று வினவினள்" எனக்கொள்க.

([illegible])

மாயை கொண்ட மயலை விலாசினி கூறல்

இனியான் மறைப்ப தென்கொல்நுமக்
கின்று வந்த அல்லமனும்
தனிநா யகன்பே ரழகென்னும்
நறவை உண்டு தரியாமல்
கனிவாய் மடந்தை உளமழிந்தாள்
என்று விலாசி கட்டுரைக்க
முனியாள் இயைந்து புன்னகைகொண்
டிருந்தாள் மாயை முகங்கவிழ்ந்து.

(அ - ரை.) நறவை - தேனை. தரியாமல் - பொறுக்கமாட்டாமல். முனியாள் - சினவாதவளாய். இயைந்து - கூறியதை உடன்பட்டு. அழகு என்னும் கள்ளுண்டு அறிவழிந்தாள் என்க. விலாசியுரைத்த போது மாயை முனியாளாய் இயைந்து முகம் கவிழ்ந்து, புன்னகை கொண்டிருந்தாள் என்க.

நுமக்கு யான் இனி மறைப்பது என்கொல் என மாற்றுக. ([illegible])

மாயை அல்லமரிடம் மையல் கொண்டுள்ளதை அறிதல்

மாயை இடையை உளள் முனியான் மற்றை மாதர் போலென்று
தூய மதிஞர் அனுமிதித்துச் சொல்லு மருங்குல் தோகைதான்
வாயின் இளவெள் நகைதோன்ற வாளா இருப்பக் கண்டுமயல்
ஆயி னுடையள் எனமாதர் அறிந்தார் அருத்தா பத்தியினுல்.

(அ - ரை.) மதிஞர் - அறிஞர். அனுமிதித்து - அனுமானத்தால் அறிந்து. தோகை - மாயை: ஆகுபெயர். ஆயின் - ஆராயுமிடத்து. அருத்தாபத்தி - பகலுண்ணான் ஒருவன் பருத்திருத்தல் கண்டு அவன் இரவில் கள்ளத்தனமாக உண்பான் என்று உணருதல் போன்றது.

([illegible])

### அல்லமர் உளமறிய மதமானி செல்லல்

வல்லி உள்ளம் அறிந்தனமிம் மாயை தனையும் மயக்கவல்ல
அல்ல மன்றன் கருத்தையினி அறிய வேண்டும் என்றவர்தாம்
சொல்ல ஒல்லை மதமானி என்பாள் யானத் தோன்றல்தனை
மெல்ல உள்ளம் அறிவலெனச் சென்றாள் விநோத விமலன்பால்.

(அ - ரை.) வல்லி - மாயை. ஒல்லை - விரைவில்.
மதமானி என்பது ஒரு தோழியின் பெயர். தோன்றல் - தலைவன்.
விமலன் - அல்லமன். யான் + அத்தோன்றல் எனப் பிரிக்க. (௧௮)

### அல்லமதேவர் தம் இருப்பிடம் கூறல்

மங்கை வருமவ் வரவையறிந்
தவனோர் மாற்றம் வகுத்திடுமுன்
தங்கு மனையிற் சென்றிருப்பன்
உங்கள் தலைவி யெனைத்தேடில்
திங்கள் நுதல்வெண் நகைக்கருங்கட்
செவ்வாய்த் திருவே செப்புகவென்
றெங்கள் தலைவன் இயம்பமத
மாணி யியம்பல் மேயினள்.

(அ - ரை.) மாற்றம் வகுத்திடுமுன் - மொழியைச் சொல்வதற்கு
முன்பு. தங்கும் - யான் தங்கியிருக்கும். வெண்நகை, கருங்கண்,
செவ்வாய் என அமைந்திருத்தலால் முரண்தொடை.
திங்கள் நுதலையும் வெண்ணகையையும் கருங்கண்களையும் செவ்
வாயையும் உடைய திருவே என விரித்துப் பொருள் கொள்க. செப்
புக என்று இயம்ப எனக் கூட்டுக. (௧௯)

### மதமானி அல்லமரை வேண்டல்

வீடு புறநீ வேண்டற்க ஐய எமது விளங்குமணி
மாட நினதே இவணுறைக அரசர் கோமான் மகளிதய
பீட மதனில் உனைவிடா திருத்தி யிருந்தாள் பிரிவறநீ
கூட உறையும் விருப்புடையள் என்றாள் குறிப்பு வெளிப்படவே.

(அ - ரை.) வேண்டற்க - விரும்பற்க. இவண் உறைக - இங்,
கேயே தங்கியிருக்க. இதயபீடம் - மனமாகிய ஆசனம். ஐய! நீ,
வீடு புறம் வேண்டற்க - தலைவனே நீ தங்குவதற்கு வீடு புறத்தே
சென்று பார்ப்பதை விரும்பாதே. (௨௦)

### அல்லமர் காரணங்காட்டி மறுத்தல்

ஒன்றும் இல்லேன் நானீவிர் மிகவும் உடையீர் உம்மிறைவி
வென்றி அரசர் குலமடந்தை சாதி அறியா விகிர்தன்யான்
அன்றி மகளிர் நீயிர்நான் மைந்தன் என்றால் அடாதம்மா
என்றும் உங்க ளுடனுறைவென் றெந்தை நகைகொண் டியம்பினன்.

*(அ - ரை.) வென்றி - வெற்றி. சாதி அறியா விகிர்தன் - இன்ன குலம் என்று அறியப்படாத வேறுபாட்டையுடையவன். நகை கொண்டு - புன்சிரிப்புக்கொண்டு. நான் ஒன்றும் இல்லேன் நீவிர் மிகவும் உடையீர் எனக் கூட்டுக. என்றும் உங்களுடன் உறைவு அடாது எனக்கூட்டுக.* (சக)

### மதமானி, மாயை தன் நட்டார்பால் வேறுபாடு காட்டாள் எனல்

நள்ளா தொழியின் அன்றியவள் நட்டா ளாயின் பினைப்பேதம்
கொள்ளாள் ஒருவர் மாட்டுமெனில் உயிர்போற் சிறப்பிற் கொண்டவுனை
எள்ளாள் என்ன வேண்டுமோ என்சொல் எல்லாம் இருந்தறிதி
வள்ளால் எனஇன் மொழிபுகன்றுள் மாற்றம் அறிந்த மதமானி.

*(அ - ரை.) நள்ளாது ஒழியின் அன்றி - ஒருவரிடம் நட்புக் கொள்ளாமல் இருந்தால் அல்லாமல். நட்டாள் ஆயின் - நட்புக் கொண்டு விட்டாளாயின். எள்ளாள் - இகழாள். மாற்றம் அறிந்த - நன்கு பேசக்கற்ற. பினை - பின்பு. பேதம் - வேறுபாடு. இருந்து அறிதி - அவளுடன் தங்கியிருந்து பின் அறிவாய்.* (சஉ)

### அல்லமர் கூறுதல்

காரிற் சிறந்த மலர்க்குழலாய் நின்சொல் எல்லாங் கவர்பொருளைப்
பாரித் திருந்த தேறுகிலேன் பணியொன் றொருவர் பாற்புரிவோர்
தூரத் திருந்து வருங்காலந் துணிந்து வருதல் துணிவென்றான்
நாரிக் கிணங்கு மவன்போல நடித்து விடுத்து நழுவுவோன்.

*(அ - ரை.) காரில் சிறந்த - முகில்போலச் சிறந்த. கவர் பொருள் - இரட்டைப்பொருள். பாரித்து இருந்த - உள்ளடக்கிக் கொண்டு இருக்கின்ற. தேறுகிலேன் - உண்மைப்பொருளை உணர வில்லை. பணி - தொழில். வருங் காலந் துணிந்து - வரவேண்டிய*

காலத்தைத்தெரிந்து. நாரிக்கு - மாயைக்கு. நழுவுவோன் - நழுவுவதற்கு எண்ணியிருப்பவனாகிய அல்லமன் என்க. (௫௧)

மதமானி மாயையின் எண்ணங் கூறல்

மன்னர் மன்னன் மகன் திருவோ லக்கங் காணு மைந்தரோ
டுன்னை உன்னும் அவளல்லள் தலைவனாக உன்னினளால்
என்ன அன்னம் அனையாய்நுந் தலைவிக் கியற்கை உயர்த்திடுதல்
முன்னம் என்ன அடங்கியொழு குறுதல் எனக்கு முறையென்றான்.

(அ - ரை.) திருவோலக்கம் - திருப்பேரவை. அன்னம் அனையாய் - அன்னப்பறவையைப் போன்றவளே. முன்னம் என்ன - முன்போல. ஒழுகுறுதல் - நடத்தல். உன்னினள் - நினைத்தனள். ஆல்: அசை. என்ன - என்று சொல்ல. (௫௨)

மதமானி, மாயையின் மையல்நிலை கூறுதல்

சொற்போர் செய்து மறைப்பதினி என்னும் யாங்கள் தொழும் இறையாள்
நிற்போய் நின்னை எதிர்ந்தளவே கரியுண் விளவின் நிறையழிந்தாள்
கற்போல் நின்ற அருந்தவருங் காணு முன்னம் உனைக்கண்ட
தற்போல் நின்று தடுமாற நினைப்போல் இருந்த தலைவியே.

(அ - ரை.) எதிர்ந்த அளவே - எதிர்ப்பட்டுக் கண்ட அளவே. கரி உண் விளவில் - யானையால் உண்ணப்பட்ட விளாம்பழத்தைப் போல. கல்போல - மலையைப்போல். காணும் முன்னம் - தன்னைக் காண்பதற்கு முன்பு. நின்னை எதிர்ந்த அளவே-உன்னை எதிர்ப்பட்ட அளவிலே. நிறையழிந்தாள் - மனதை நிறுத்த முடியாது மயங்கினள்.

மலையைப்போன்ற அசையாத தவத்தினரையும் அலைக்கழித்து வருத்தித் தான்மட்டும் (அல்லமதேவனாகிய) நின்னைப்போலக் கலங்காதிருந்த மாயை, இப்பொழுது தன்னைக் கண்ட அத்தவத்தினர்போல உன்னைக் கண்டு கலங்கலானாள் என்க. (௫௩)

அல்லமதேவர் மறுமொழி

என்று மங்கை கூறுதலும் தலைவி இதயம் நீயறிவை
அன்றி யின்று புதியன்யான் அறிவ ஞேவிங் காப்தமாய்
நின்ற உன்றன் மொழிகேட்டு மதுவே யெனக்கு நெறியென்றான்
குன்றை வென்ற குவிமுலையாள் களிப்ப எமையாட் கொள்ளுவோன்.

(அ - ரை.) இதயம் - உள்ளம். ஆப்தமாய் நின்ற - கட்புடைமையாய் நிற்கின்ற. நெறி - முறைமை. குவி முலையாள் : மாயை.

மாயை களிப்படையும் பொருட்டு எமை யாட்கொள்ளுவோன் ஆகிய அல்லமன் உன்றன் மொழிகேட்கும் அதுவே நெறி என்றுன் னைக் கொள்க. (சகூ)

நீ வரும்போது நற்குறி கண்டு வந்தாய் எனல்

நல்ல சகுனம் என்னவெதிர்
கண்டு வந்தாய் நம்பிநீ
வல்ல அசுரர் சுரர்முனிவர்
எல்லாம் மயங்கு மாயையையோர்
புல்லின் எளியள் எனப்புல்ல
நின்று யெனப்புன் முறுவலொடு
சொல்லி மகிழ்வு கொண்டிறைவி
பால்மீண் டனளச் சுடர்த்தொடியே.

(அ - ரை.) புல்லின் எளியள் - புல்லைப் பார்க்கினும் எளிமையையுடையவள். புல்ல நின்றாய் - தழுவுதற்கமைந்தாய். சுடர்த்தொடி - மதமாணி.

நல்ல சகுனம் என்ன கண்டு வந்தாயோ நான் அறியேன் என்பது குறிப்பு. நின்றாய் எனச் சொல்லி மீண்டனள் என்க. (சஎ)

மாயையின் மனத்தளர்ச்சி

அங்கு மாயை மதமாணி சென்ற தற்பின் அகந்தளர்ந்து
மங்கை வாய்மை கூறியுடம் படுக்கு மோமன் மகள்தனக்குப்
பங்க மாமென் றென்னுயிரைச் சீறி அகலப் பண்ணுமோ
இங்கு நானென் செய்வனென அறியேன் என்ன இருந்தயர்வாள்.

(அ - ரை.) வாய்மை கூறி - உண்மையைச் சொல்லி. மன்மகள் - அரசன் மகள். பங்கம் - கற்பழிவு. உயிரை - அல்லமதேவரை. மதமாணி அங்கு சென்றதற்பின் மாயை அகம் தளர்ந்து எனக் கூட்டுக. செய்வன் - செய்வேன். (சஅ)

மாயை வருந்துதல்

என்றோ வறிந்து போயினுன் சந்து பொருந்தா தெய்துமோ
அன்றோ அரசன் மகளென்ன அஞ்சி அழகன் அகலுமோ
இன்றோ ரன்ன நினைவின்றி யெனையே நினைந்திட் டிருக்குமோ
பொன்றோ றுமும் வான்முகங்கண் டலது துயரம் போகாதே.

காலத்தைத்தெரிந்து. நாரிக்கு - மாயைக்கு. நழுவுவோன் - நழுவுவதற்கு எண்ணியிருப்பவனாகிய அல்லமன் என்க. (௫௯)

மதமானி மாயையின் எண்ணங் கூறல்

மன்னர் மன்னன் மகள் திருவோ லக்கங் காணு மைந்தரோ
டுன்னை உன்னும் அவளல்லள் தலைவனாக உன்னினளால்
என்ன அன்னம் அனையாய்நுந் தலைவிக் கியற்கை உயர்த்திடுதல்
முன்னம் என்ன அடங்கியொழு குறுதல் எனக்கு முறையென்றான்.

(அ - ரை.) திருவோலக்கம் - திருப்பேரவை. அன்னம் அனையாய் - அன்னப்பறவையைப் போன்றவளே. முன்னம் என்ன - முன் போல. ஒழுகுறுதல் - நடத்தல். உன்னினள் - நினைத்தனள். ஆல்: அசை. என்ன - என்று சொல்ல. (௬௦)

மதமானி, மாயையின் மையல்நிலை கூறுதல்

சொற்போர் செய்து மறைப்பதினி என்னும் யாங்கள் தொழும் இறையா
நிற்போய் நின்னை எதிர்ந்தளவே கரியுண் விளவின் நிறையழிந்தாள்
கற்போல் நின்ற அருந்தவருங் காணு முன்னம் உனைக்கண்ட
தற்போல் நின்று தடுமாற நினைப்போல் இருந்த தலைவியே.

(அ - ரை.) எதிர்ந்த அளவே - எதிர்ப்பட்டுக் கண்ட அளவே. கரி உண் விளவில் - யானையால் உண்ணப்பட்ட விளாம்பழத்தைப் போல. கல்போல - மலையைப்போல். காணும் முன்னம் - தன்னைக் காண்பதற்கு முன்பு. நின்னை எதிர்ந்த அளவே-உன்னை எதிர்ப்பட்ட அளவிலே. நிறையழிந்தாள் - மனதை நிறுத்த முடியாது மயங்கினள்.

மலையைப்போன்ற அசையாத தவத்தினரையும் அலைக்கழித்து வருத்தித் தான்மட்டும் (அல்லமதேவனாகிய) நின்னைப்போலக் கலங்காதிருந்த மாயை, இப்பொழுது தன்னைக் கண்ட அத்தவத்தினர்போல உன்னைக் கண்டு கலங்கலானாள் என்க. (௬௧)

அல்லமதேவர் மறுமொழி

என்று மங்கை கூறுதலும் தலைவி இதயம் நீயறிவை
அன்றி யின்று புதியன்யான் அறிவ தேவிங் காப்தமாய்
நின்ற உன்றன் மொழிகேட்டு மதுவே யெனக்கு நெறியென்றான்
குன்றை வென்ற குவிமுலையாள் களிப்ப எமையாட் கொள்ளுவோன்.

(அ - ரை.) இதயம் - உள்ளம். ஆப்தமாய் நின்ற - நட்புடைமையாய் நிற்கின்ற. நெறி - முறைமை. குவி மூலையாள் : மாயை.

மாயை களிப்படையும் பொருட்டு எமை யாட்கொள்ளுவோன் ஆகிய அல்லமன் உன்றன் மொழிகேட்கும் அதுவே நெறி என்றுள் எனக் கொள்க. (சகூ)

நீ வரும்போது நற்குறி கண்டு வந்தாய் எனல்

நல்ல சகுனம் என்னவெதிர்
கண்டு வந்தாய் நம்பிநீ
வல்ல அசுரர் சுரர்முனிவர்
எல்லாம் மயங்கு மாயையையோர்
புல்லின் எளியள் எனப்புல்ல
நின்று யெனப்புன் முறுவலொடு
சொல்லி மகிழ்வு கொண்டிறைவி
பால்மீண் டனளச் சுடர்த்தொடியே.

(அ - ரை.) புல்லின் எளியள் - புல்லைப் பார்க்கினும் எளிமையை யுடையவள். புல்ல நின்றாய் - தழுவுதற்கமைந்தாய். சுடர்த்தொடி - மதமானி.

நல்ல சகுனம் என்ன கண்டு வந்தாயோ நான் அறியேன் என்பது குறிப்பு. நின்றாய் எனச் சொல்லி மீண்டனள் என்க. (சஎ)

மாயையின் மனத்தளர்ச்சி

அங்கு மாயை மதமானி சென்ற தற்பின் அகந்தளர்ந்து
மங்கை வாய்மை கூறியுடம் படுக்கு மோமன் மகள்தனக்குப்
பங்க மாமென் றென்னுயிரைச் சீறி அகலப் பண்ணுமோ
இங்கு நானென் செய்வனென அறியேன் என்ன இருந்தயர்வாள்.

(அ - ரை.) வாய்மை கூறி - உண்மையைச் சொல்லி. மன் மகள் - அரசன் மகள். பங்கம் - கற்பழிவு. உயிரை - அல்லம தேவரை. மதமானி அங்கு சென்றதற்பின் மாயை அகம் தளர்ந்து எனக் கூட்டுக. செய்வன் - செய்வேன். (சஅ)

மாயை வருந்துதல்

என்றே வறிந்து போயினுன் சந்து பொருந்தா தெய்துமோ
அன்றே அரசன் மகளென்ன அஞ்சி அழகன் அகலுமோ
இன்றே ரன்ன நினைவின்றி யெனையே நினைந்திட் டிருக்குமோ
பொன்றே றமும் வான்முகங்கண் டலது துயரம் போகாதே.

(அ - ரை.) நோவு - காமநோய். சந்து - தூது. பொருந்தாது - கைகூடாமல். அன்றோ - அந்தோ. இன்ன ஓர் அன்ன - இத்தகையவும் பொன்றோடு உறழும் - பொன்னைப்போன்று விளங்கும். எய்துமோ - அடைவாளோ. வாள்முகம் - ஒளிபொருந்திய அவனது முகம். அகனுமோ - நீங்குவானோ. (௪௯)

## தோழிகள் எண்ணுதல்

என்னப் பலவும் நினைந்துமட மாயை யிருப்ப இருளைமார்
மின்னற் கருங்கண் இடனுடக் குறிகள் நல்ல விளங்குதலால்
கன்னிக் குவகை கைகூடும் என்ன இருக்குங் காலைதனில்
அன்னப் பெடைபோல் நடந்துமத மானி களிப்புற் றடைந்தனளால்.

(அ - ரை.) இருளைமார் - தோழிகள். மின்னற் கருங்கண் - மின்னலைப்போல் ஒளிவிடுங் கரிய கண்கள். உவகை - மகிழ்ச்சி. இடன் ஆட - இடப்பக்கம் துடிக்க. நல்ல குறிகள்-நல்ல சகுனங்கள். மகளிர்க்கு இடப்பக்கம் துடிப்பதும் ஆடவர்க்கு வலப்பக்கம் துடிப்பதும் நன்மையறிவிக்குங் குறியாம். (௫௦)

## காரியங் கிட்டிற்றென மதமானி செப்புதல்

வண்டா மரைபோல் முகமலர்ந்து வந்தாள் சென்ற மதமானி
கண்டார் மகளிர் அவனுள்ளங் காயோ பழமோ கழறென்றார்
தண்டார் வளைமென் குழல்மடவீர் பழமே யென்று சாற்றினள்
கொண்டார் உவகை யவர்மாயை உவகை யாரே கூறுவார்.

(அ - ரை.) வண் தாமரை - வளம் பொருந்திய தாமரை. காயோ பழமோ - இணங்கியதா, இணங்கவில்லையா? : குறிப்பு மொழி. கழறு - சொல்லு ; ஏவல் வினை. தண் தார்வளை மென் குழல் மடவீர் - குளிர்ந்த மாலைபுனைந்த மெல்லிய கூந்தலையுடைய மங்கையரே. அவரே உவகை கொண்டனரெனின் மாயையின் உவகையைக் கூறமுடியுமோ என்பது கருத்து. (௫௧)

## தோழிகள் அச்சமும் மாயையின் களிப்பும்

மன்னன் அறியின் என்னுமோ
அறியோம் இதனை மறைமினெனப்
பன்னி மகளிர் உளத்தடக்கிக்
கங்குல் வரவு பார்த்திருந்தார்

அன்னம் அனையான் அல்லமன்றன்
உடம்பா டுரைத்த அம்மொழியே
கன்னல் மதவேள் எய்தபசும்
புண்ணின் மருந்தாக் கவிப்புற்றாள்.

(அ - ரை.) இதனை - இச்செய்தியை. மறைமின் - வெளியே தோன்றாமல் செய்யுங்கள். பன்னி - மொழிந்து. கங்குல் - இரவு. அல்லமதேவர் உடன்பட்டார் என்ற மொழியே மாயையின் காம பாணப் புண்ணுக்கு மருந்தாயிற்று. கன்னல் மதவேள் - கரும்பு வில்லையுடைய மன்மதன். "எய்த பசும்புண்" என்பது மன்மதன் எவிய அம்பு பட்டுப் புண் உண்டாயிருந்தது என்பதும் அது புதுப் புண் என்பதும் குறிப்பாய்க் காட்டியது. (கஉ)

திங்களின் தோற்றம்

புனலின் விளையா டிருமைந்தர்
தம்முள் எழுந்து போயோடிப்
புனலின் விழுவான் போல்விழுந்த
தொளிஞா யிறுபோய்ப் புணரியிடைப்
புனலின் விழுந்து மூழ்குபுவந்
தெழுவான் போலக் குணதுகடல்
புனலின் மிசைவந் தெழுந்ததிருள்
பருகிப் புதுவெண் திங்களே.

(அ - ரை.) புனலின் - நீரில். புணரி - கடல். மூழ்குபு - முழுகி. குணது கடல் - கிழக்குக் கடல். பருகி - குடித்து. நீர்மூழ்கி விளையாடு மிருவரில் ஒருவன் நீருள் மறைந்ததுபோல் ஞாயிறு மறைந்தது. ஒருவன் எழுந்ததுபோல் திங்கள் எழுந்தது என உவமைகொள்க. (கங)

அப்போது தாமரை முதலியவற்றின் நிலை

தொக்க கமலம் வாய்மூடக்
கள்ளுண் டிடறுஞ் சுரும்பினங்கள்
மொய்க்கு நறுமென் குவளைவாய்
திறந்த முகில்துஞ் சிளம் பொழிலில்
புக்க மணிநீர்க் கயத்திரைதேர்
குருகு விண்மீன் பூத்தனவால்
செக்கர் எனுஞ்செந் தீயினிடைப்
பொரிந்து தெறித்த பொரிபோல.

(அ - ரை.) தொக்க - நெருங்கிய. இடறும் - தியங்கும். துஞ்சு இளம் பொழிலில் - தூங்குகிற இளமரக்காவில். புக்க - புகுந்தன. கயத்து - குளத்தில். குருகு - நாரைகள். செக்கர் - செவ்வான். செவ்வானாகிய நெருப்பில் பொரிக்கப்பட்ட பொரி போல விண் மீன்கள் பூத்தன.

கமலம் வாய்மூடக் குவளை வாய்திறந்த எனவும், கயத்து இரை தேர் குருகு பொழிலிற் புக்க எனவும், பொரிபோல விண்மீன் பூத்தன எனவுங் கூட்டுக. (௬௪)

## செவ்வானத்தின் சிறப்பு

தூய சோதிப் பகலவன் போய் மேலைப்புணரி தோய்ந்திடலும்
மாலை நாமங் கொண்டிருந்த மணிமென் கலாப மயிலைவான்
ஆய கோம்பி கண்டுசினந் துடலஞ் சிவப்புற் றடங்கல்போல்
மேய மாலைப் பொழுதிலருஞ் செக்கர் தோன்றி வீந்ததால்.

(அ - ரை.) பகலவன் - கதிரோன். மேலைப் புணரி - மேல் கடல். மணிமென் கலாபம் - அழகிய மெல்லிய தோகை. வான் ஆய - விண்ணாகிய. கோம்பி - பச்சோந்தி. செக்கர் - செவ்வானம். வீந்தது - மறைந்தது.

பச்சோந்தியைக் காணின் மயில் மயங்கிவிடுமெனவும், அக்காலை பச்சோந்தி மயிலின் கண்ணைப் பிடுங்கிவிடுமெனவுங் கூறுப. மயிலைக் கோம்பி கண்டு சினந்தது போலச் செவ்வானந் தோன்றியது. சினந் தணிந்ததுபோலச் செவ்வானம் மறைந்தது என்க. (௬௫)

## மாயைக்குக் காமநோய் வளருதல்

காலை அரும்பிப் பகலெல்லாம் போதா யிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பொருமலொரு மாயை நாம மணிவல்லி
மூலை யிருந்து புறம்போந்து விரிவெண் ணிலாமென் முற்றத்தில்
பீலி மஞ்ஞை யெனவீழ்ந்து மதநோய் மிகவாய் பிதற்றுமால்.

(அ - ரை.) அரும்பி - தோன்றி, போது - மலரும் பருவத் தரும்பு. விரி - விரிந்த. பீலி - தோகை. மதநோய் - மதம் மிகுதலால் உண்டாகும் காமநோய். "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" என்பதை அடியொற்றியது.

மலர் விரிந்ததுபோலக் காமம்மிகுந்து அதனைப் பொறுக்கலாற்றாது புறம்போந்து முற்றத்தில் மஞ்ஞைபோல் நோய் மிக வாய் பிதற்றும் என்க. வாய் பிதற்றல் - புலம்புதல். (௬௬)

### திங்களை வெறுத்தல்

**தாய்வா யடைந்து மிருந்தலையை மோதி மோதிச் சலித்தலறக்**
**காய்வாய் நிலவே உடன்பிறந்தாள் இருந்து வாழுங் கடிமனையை**
**நீவான் எழுந்து வந்தழிப்பா யென்றால் அந்தோ நிலையின்றித்**
**தேய்வாய் நின்றே டியைபில்லா என்னை என்ன செய்யாயே.**

(அ - ரை.) தாய் வாய் அடைந்து - தாயினிடத்தில் தோன்றி. முழுத்திங்கள் தோன்றுங் காலையில் கடல் பொங்கிக் கொதித் தெழுதல் இயல்பு. அதனைக் கருதி இவ்வாறு கூறினர். சலித்து அலற - ஆடிக்கொண்டு இரைச்சலிட. காய்வாய்-சினப்பாய். உடன் பிறந்தாள் - திருமகள். பாற்கடல் கடைந்த காலத்தில் திங்களும் திருமகளும் அங்குத் தோன்றினர்; ஆதலின் கடலைத் திங்களுக்குத் தாயென்றும், திருமகளை உடன்பிறந்தாள் என்றுங் கூறினர். திங்கள் தோன்றின் தாமரை வாய்மூடுமாகலின் மனையை அழிப்பாய் என்றார். தேய்வாய் - தேய்கின்ற திங்களே! இயைபு - தொடர்பு.

நிலவுமுன் பிறந்த இடம் கடல் ஆதலால் தாய்வாய் அடைந்து என்றார். அலைமோதி மோதிச் சலித்து அலறும்படி தாயைக் காய் வாய் என்க. வாய் - இடம். தாயின் வாயிற் சென்று தலையை மோதி மோதி அவனைக் காய்வாய் என வெளிப்பொருள் ஒன்று தோன்றுதல் காண்க. சலித்து - நடுங்கி. (௧எ)

### நீ நஞ்சினுங் கொடியாய் என்றல்

**தக்கன் மகத்தில் ஒருஞான்று தாளிற் படுநீ தலையேறி**
**மிக்க முனிவர் மந்திரநீர் இறைப்ப இன்னும் மீண்டிலாய்**
**நக்கன் பவள வாய்ப்பட்டுக் களத்தே யிறங்கு நஞ்சுநினை**
**ஒக்கு மென்ப தறியாமை அன்றோ ஒளிர்வெண் மதியமே.**

(அ - ரை.) மகத்தில் - வேள்வியில். தாளில்படும் நீ - காலில் அகப்பட்டுக்கொண்ட நீ. தலை ஏறி - சிவபிரான் திருமுடியில் ஏறி. மிக்க முனிவர் - சிறந்த தவத்தினையுடைய முனிவர். நக்கன் - சிவன். களம் - கழுத்து. தாளிற்படுநீ என்றது தக்கன் யாகத்திற் சந்திரனைக் காலாற் றேய்த்ததைக் குறித்தது. முனிவர் மந்திரங் கூறி நீரிறைப் பதை நிலவாகிய நஞ்சு கீழிறங்கும் பொருட்டு இறைப்பதாகக் கற்பித்தார்.

நிலவாகிய நஞ்சு சிவன் காலிற்பட்டுத் தலைக்கு ஏறி நீரிறைத்தும் இறங்காமலிருக்கிறது. வாயில் உண்ட நஞ்சு கண்டத்தில் இறங்கி நிற்கின்றது. ஆதலால் நஞ்சினும் கொடிய நஞ்சு நீதான். நஞ்சு போலும் என்று உன்னைக் கூறுவது பேதைமை. (௧அ)

உன்னை அமுதகலை என்பது மங்கல வழக்கெனல்

அங்க மதினஞ் சிருத்தினேன் அங்க மல்லா அவிர்சடைமேல்
தங்க நினைவைத் திட்டதுநின் கொடுமை கருதித் தானன்றோ
பொங்கும் அமுத கலையென்ன நின்னைப் புகறல் வெண்திங்காள்
இங்கு மனிதர் காராட்டை வெள்ளா டென்ப தொக்குமால்.

(அ - ரை.) அங்கம் - கழுத்து. அங்கம் அல்லா - உறுப்புக்களோடு சேராத. பொங்கும் - மிகுதிப்படும். புகறல் - சொல்லல். நஞ்சுக்கலை என்று நின்னைக் கூறுமல் அமுதகலை என்பது காராட்டை வெள்ளாடு என்று கூறும் மங்கல வழக்குடன் சேர்ந்தது, இயல்பு வழக்கு அல்ல. (௪௯)

நெருப்பை வெண்ணிறமென்றற்குக் காரணம்

உருப்ப மிகுவன் தழல்சிவப்புற் றுலகர் காண ஒளிதரவும்
நெருப்பு வெண்மை யென்பதுநல் நியாயர் நின்னைக் குறித்தன்றோ
பொருப்பு நறுஞ்சந் தனச்சேறு புலர்த்து பொரியப் பூவணையும்
விருப்ப மலருங் கொளுந்தவழல் வீசி யெழுந்த வெண்திங்காள்.

(அ - ரை.) உருப்பம்மிகு - வெம்மை மிகுந்த. ஒளிதரவும் - விளங்கவும். பொருப்பு-பொதியமலை. புலர்த்து - காய்ந்து. விருப்ப மலரும் - விருப்பத்தைச் செய்யும்; மலரும். கொளுந்த - எரிய. நெருப்பு வெண்மையென்று கூறியது நீதான் நெருப்பு என்று கருதியல்லவா என்பது கருத்து.

தீயின் நிறம் சிவப்பு; நியாய நூலோர் வெண்மையென்பார்; அவர்கள் அவ்வாறு கூறுவதற்குக் காரணம், வெண்ணிறமுடைய நின் கொடிய செய்கையைக்குறித்தே அவ்வாறு கூறுகின்றனர். நீயே அவ் வெண்ணெருப்பு என்கின்றாள் மாயை. (௫௦)

திங்கள் வளர்தல் தேய்தலுக்குக் காரணம்

இன்றோர் உலகில் எனக்கொன்று பிறர்க்கொன் றாகி யிருக்கின்றாய்
நன்றோ உனக்கு மதியமே ஞாயி றேபோல் வாழாமல்
முன்தோ கையர்கள் யாவரையும் ஒப்பக் காணு முயற்சியால்
அன்றோ தேய்ந்து போகின்றாய் அந்தோ அதனை அறியாயோ.

(அ - ரை.) இன்று ஓர் உலகில் - இப்பொழுதைய உலகத்திலே. ஞாயிறு - கதிரோன். தோகையர்கள் - அசுவினி முதலிய இருபத்தேழு பெண்கள். ஒப்பக் காணு - ஒரேபடியாகப் பாராத. முன் தோகையர் பலரையும் ஒப்புக்காணுததால் தேய்வதையறிந்தும் பெண்ணாகிய எனக்கு வெம்மையாகவும் பிற பெண்களுக்குக் குளிர்ச்சியாகவும் இருக்கின்றாய் என்பது கருத்து. (௫௧)

## தென்றலை வெறுத்தல்

கொல்லா நோன்பு முனிமலையில்
    தோன்றி என்னைக் கொல்கின்றாய்
பொல்லா மந்த மாருதமே
    என்னே கருணை பூண்டிலாய்
சொல்லாய் திருப்பாற் கடலினிடைத்
    தோன்றுங் கடுவின் தன்குணமே
அல்லால் அமுத குணமுண்டோ
    நின்னை வெறுப்ப தறிவன்றே.

(அ - ரை.) முனி - அகத்தியர். மந்த மாருதமே - இளந் தென்றலே. கடு - நஞ்சு. முனிமலையிற்றோன்றிய உனக்கு அருள் இல்லை, அமுதுடன் பிறந்த நஞ்சுக்கு அதன் குணம் மாறுதது போல. வெறுப்பதிற் பயனில்லை என்பது கருத்து. (கூ)

## குயிலை வெறுத்தல்

உயிர்த்த பொழுதே நின்குரல்கே ளாமுன் னோடிற் றீன்றதாய்
நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட் டலுமே நடுங்கத் துரந்ததால்
பயத்த மலர்ப்பூங் காவகத்தில் இருந்து பல்காற் கூவினுல்
செயிர்த்து நின்னைக் குயிலே நான் வெறுத்தல் செப்ப வேண்டுமோ.

(அ - ரை.) உயிர்த்த பொழுது - முட்டையிட்டபோதே. ஈன்ற தாய் - பெற்ற தாய்க்குயில். வளர்த்த தாய் - இரையூட்டிக் காப் பாற்றிய தாயாகிய காகம். துரந்தது - துரத்திவிட்டது. பயத்த - பயனையுடைய. செயிர்த்து - சினந்து. குயில் காக்கையின் கூட்டில் முட்டையிட்டுப் போய்விடும் என்றும் காக்கை தன் முட்டையென்று அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும் என்றும், வளரும்போது வேறுபாடு கண்டு குயிற் குஞ்சினைத் துரத்திவிடும் என்றும் கூறுவது கருதி இங்ஙனம் கூறினர். (கூக)

## காமனை முனிதல்

கன்னற் சிலையாய் என் மனத்தைக் கலக்குங் காளை கவின்கண்டு
முன்னிற் பதற்கு நாணியோ இங்கே நின்று முனிகின்றாய்
தன்னிற் பெரியார் இல்லையெனும் அவனைச் சமரில் தாக்காமல்
நன்னர்த் தனிசின் மெலியாரை அடர்த்தாய் ஆண்மை நன்றரோ.

(அ - ரை.) கன்னற்சிலையாய் - கரும்பு வில்லுடையாய்! (மன் மதனே). காளை - அல்லமதேவர். கவின் - அழகு. சமரில் - போரில்.

அன்னர் - நல்ல. அடர்த்தாய் - வருத்தினாய். இஃது இயைபு கவிற்சியணி. தளிரின் மெலியார் - தளிரினும் மெலியவராகிய மங்கையர். (கூ)

மதமானி, அல்லமதேவரிடத்து மாயையை விடுத்தல்

என்று புலம்பி மயல்முதிர்ந்து மாயை இரங்கி இருந்தயர
மன்றல் மலர்பெய் மெல்லணைப்பூம் பள்ளி யறையின் மதமானி
சென்று நம்பி அல்லமனை முன்தந் திருத்தித் தேரையூண்
வென்றி மடங்கற் கிடுதல்போல் அவளை விடுத்தாள் அவ்வறையுள்.

(அ - ரை.) என்று புலம்பி - மேற்கூறியவாறு புலம்பி. அயர - தளர்ச்சி அடைய. மன்றல் - மணம். முன் தந்து இருத்தி - முன்னே அழைத்துக்கொண்டுவந்து இருக்கச்செய்து. தேரை ஊண் - தவளையாகிய உணவை. மடங்கல் - அரிமா (சிங்கம்). ஒப்பணி, சிங்கத்திற்குத் தவளையூண் முன்வைத்ததுபோல அல்லமனிருந்த அறையுள் மாயையை விடுத்தாள் என்க. (கூ)

மாயை அல்லமதேவரைத் தழுவ முயலல்

வேனில்நண் பகலின் வெய்யபா லையுள்நீர்
வேட்டவன் அந்நிலத் துறுநீர்
தானெதிர் கண்டு பருகவோ டுதல்போல்
தண்மலர் அணைமிசை அமர்ந்த
ஞானநல் விளக்கை விழியுறக் கண்டு
நகையொடு திருமுக மலர்ந்து
பானலங் கண்ணி புணர்முலை விம்மப்
பரிந்துமேல் விழுந்துபுல் லினளால்.

(அ - ரை.) வேனில் - வெய்யிற் காலத்தில். வெய்ய பாலை - கொடிய பாலைநிலம். வேட்டவன் - விரும்பியவன். பானல் அம் கண்ணி - குவளை மலர்போன்ற கண்களையுடையவள் (மாயை). பரிந்து - விரும்பி. ஞான நல்விளக்கு என்பது அல்லமனையுணர்த்திற்று. (கூ)

அல்லமதேவர் தன் கைக்கு அகப்படாமையால்
மாயை வருந்தல்

நாடிய ஆடி நிழலென அணைமேல்
நண்ணுறத் தோன்றிய இறையை
ஓடினள் விழுந்து தழுவுறத் தழுவ
உருமையால் அணைமிசை விழுந்தே

ஆடியி னிழலைப் பற்றிநீட் டியகை
ஆடியில் தாக்கநின் றழுது
வாடுறு மழலைப் பேதையே போல
வருந்தினள் மதர்விழி மாயை.

(அ - ரை.) ஆடி - கண்ணாடி. கண் உற - பொருந்த. பேதை - இளங்குழந்தை. மதர் விழி - களிப்புப்பொருந்திய விழி. தழுவுற - தழுவ. தழுவ உருமையால் - கையாற் பற்றப்படாமையால் - கண்ணாடியிற்றோன்றும் நிழலைப் பற்றுவதற்கு நீட்டிய கை அக் கண்ணாடியில் மோதக் கண்டு அழுது வருந்தும் மழலைப் பேதைபோல வருந்தினள் என்க. (கஎ)

அல்லமரை உருவெளித் தோற்றமென மாயை ஐயுறல்

சொல்லரும் அழகன் திருவுரு விழியில்
தோன்றலான் மீளவும் எழுந்து
புல்லினள் மலர்மென் கைகளால் வெளியைப்
புல்லல்போற் சுவைத்தனள் வெறுவாய்
வல்லியிவ் வாறு வெளிமயக் குற்று
வள்ளல்தன் கைப்படா மையினுல்
அல்லமன் அலனீ துருவெளி யென்ன
அயிர்த்தனள் உண்மையை அன்றே.

(அ - ரை.) மீளவும் - மீண்டும். ஒருமுறை புல்லினள் - தழுவினுள். சுவைத்தனள் வெறுவாய் - வெறுவாயைச் சுவைத்தாள். வல்லி : மாயை. உரு வெளி - உருவெளித் தோற்றம். அயிர்த்தனள் - ஐயப்பட்டாள். வெளியைப் புல்லல்போற் புல்லினள் - வெறுவாய் சுவைத்தாள் போற் பயனற்றிருந்தாள் என்க. (கஅ)

ஆசிரியர் கூற்று

அருந்தவ நெடுநாள் முயன்றுதான் பெற்ற
அமுதைவாய் வைத்திடு மளவில்
கரந்தவ றுதல்போல் அல்லம தேவன்
கட்புலத் துற்றுமென் தோளில்
பொருந்துற வெளிபோல் வராமையால் தீயிற்
புழுவெனப் பதைபதைத் தரிவை
வருந்தினள் காமம் அல்லமன் அன்றி
வடிவுளார் யார்கடந் திடுவார்.

(அ - ரை.) கரம் - கை. பொருந்துற - அணைக்க. தீயில் புழு என - தீயில் அகப்பட்ட புழுவைப்போல. மென்தோளில் - மெல்லிய தோளில். வடிவுளார் யார் கடந்திடுவார் என்ற பொதுப் பொருளால் அல்லமனே கடந்தான் என்ற சிறப்புப்பொருள் சாதிக்கப்பட்டது. வேற்றுப்பொருள் வைப்பணி. (௬௯)

மாயை வருந்தியிருத்தல்

கன்னிகை யென்றும் இறைமகள் என்றுங்
கருதிடா தவாவிளைத் திட்டும்
என்னிணை முலைகள் மார்புறத் தழுவி
யிதழ்சுவைத் தணைமிசைப் புணர்வுற்
றின்னலில் இன்பக் கடலிடை மூழ்க
இவன்றனுற் பெற்றிலேன் என்று
தன்னக நைந்து வெய்துயிர்ப் பெறிந்தாள்
தவத்தரை அலைத்தவம் மடந்தை.

(அ - ரை.) இறை - அரசன். அவா விளைத்திட்டு - விருப்பத்தை யுண்டாக்கிவிட்டு. இன்னல் இல் - துன்பம் இல்லாத. அகம் - உள்ளம். வெய்து உயிர்ப்பு - வெவ்விய பெருமூச்சு. அலைத்த - வருத்திய. தன் அகம் நைந்து - தனது மனம் வருந்தி. தவத்தரை - முனிவர்களை. (௭௦)

அல்லமரை மாயையால் மயக்கலாகாதெனல்

பொழிந்திழி மழையால் வளிநனைந் திடுமேற்
புகைத்தெழும் எரியில்வான் வேமேல்
முழங்குவெண் திரைப்பே ராழியக் கலய
முனிவனை அழுத்துமே னஞ்சம்
எழுந்தரன் தன்னை வருத்துமேல் மயக்க
மெய்துவன் அல்லம தேவன்
ஒழிந்தவர் தம்மை யொழிவற மயக்கும்
ஒருத்தியும் அவன்றனை மயக்கும்.

(அ - ரை.) பொழிந்து - பெய்யப்பட்டு. வளி - காற்று. வான் - விண். முழங்கு-ஒலிக்கின்ற. கலயமுனிவன் - அகத்தியன்.

மழையிற் காற்று நனையாது; தீயால் வானம் வேவாது; கலயமுனிவனைக் கடல் அழுத்தாது; நஞ்சம் அரனை வருத்தாது; மாயை அல்லமனை மயக்கமாட்டாள் என்பது கருத்து. மற்றவர்களையெல்லாம் மயக்குவாள் எனக் காண்க. (௭௧)

### மாயை, கனவு காண்டலும் பொழுதுவிடிதலும்

விண்ணினைக் குத்திக் கையிளைப் பவர்போல்
வேனெடுங் கண்ணியங் கிருந்த
அண்ணலைத் தழுவித் தழுவிமெய் வருந்தி
அவசமுற் றணைமிசை உறங்கி
எண்ணுறு நினைவால் அவன்புணர்ந் ததுபோல்
இன்கன வொன்றுகண் டெழுந்தாள்
கண்ணகல் நிலத்தின் இருள்குடிப் பவனுங்
கருங்கடல் முகட்டினில் எழுந்தான்.

(அ - ரை) அவசம் உற்று - காமமயக்கம் அடைந்து. கண் அகல் நிலத்தில் - இடம் அகன்ற நிலவுலகில். இருள் குடிப்பவன் - கதிரோன். முகடு - மேலிடம். மாயை அல்லமனைத் தழுவித்தழுவி மயக்கமுற்றதற்கு விண்ணினைக் குத்திக் குத்திக் கைவருந்துவது உவமையாம். (எஉ)

### இரவு நிகழ்ச்சியை மாயை தன் தோழியர்க்குக் கூறல்

காலையில் மாலை வார்குழல் மாதர்க்
கண்டுரை செய்வள்அல் லமன்தன்
கோலமென் சொல்வேன் விழியெதிர் தோன்றிக்
குறுகிலென் கைப்படான் அதனுல்
சாலவும் நைந்து துயின்றனன் கனவில்
தடமுலை குழைந்திடப் புல்லி
மேலுநல் அருள்செய் துன்னைநான் என்றும்
விடுகிலேன் என்றனன் என்றுள்.

(அ - ரை.) மாலை - பூமாலை வார் குழல் - நீண்ட கூந்தல். கோலம் - அழகு. குறுகில் - நெருங்கினுல். சாலவும் - மிகவும். மேலும் - பின்னும். விடுகிலேன் - பிரியேன். (எங)

### அல்லமரை வியந்து தோழிகள் மாயைக்கு உரைத்தல்

அருந்தவம் அழிக்கும் அழகுடை அணங்கிற்
ககப்படா விறலினன் யாரோ
புரந்தரன் அயன்மால் சுரர்முனி வரர்கிம்
புருடர்வித் தியாதரர் என்னப்

பரந்தவர் தம்முள் அலனிவ னொருவன்
பார்த்திடிற் பராபரன் என்று
திருந்திழை மகளிர் மனத்துளே வியந்து
தெரிவையோ டுரைத்தல்மே யினரால்.

(அ - ரை.) அணங்கிற்கு - மாயைக்கு. விறலினன்-வெற்றியை யுடையவன். புரந்தரன் - தேவர்கோன். பரந்தவர் தம்முள் - விரிவாகக் கூறப்படுவோரில். பராபரன் - கடவுள். உரைத்தல் மேயினர் - சொல்லலானார்கள். இவன் ஒருவன் அலன் - அவர்களில் ஒருவன் அல்லன் இவன். தெரிவை - பெண். (மாயை) (ஏசு)

தோழிகள் அல்லமன் தின்னை அணைவன் எனல்

ஆசைநின் உளத்தின் மிகவளர்ப் பதற்கா
யல்லமன் இவ்வகை நடித்தான்
பேசுறு கனவின் பயனுனக் குரைப்பிற்
பின்புனை மெய்யுற அணைவன்
வாசமென் குழலா யென்றவள் மனத்தின்
வருத்தமற் றிடவறிந் துரைத்தார்
காசணி மருங்குல் மடந்தையர் மாயை
கவலைதீர்ந் துள்ளுளே களித்தாள்.

(அ - ரை.) மெய் உற - உடல் பொருந்த. காசு அணி - மேகலையை அணிந்த. உள் உளே களித்தாள் - உள்ளத்திற்குள்ளே மகிழ்ந்தாள்.

வாசமென்குழலாய் : விளி. இவ்வகை நடித்தான் பின்பு அணைவன் என்று மாயை வருத்தம் அற்றிட மடந்தையர் உரைத்தார் எனவும் மாயை களித்தாள் எனவுங் கூட்டுக. (ஏ௭)

மோகினி தன் மகள் இடத்திற்கு வருதல்

இன்னண மாயை மாதிடை நிகழ்ந்த
இயல்பினை மோகினி சிலர்போய்ப்
பன்னுற அறிந்து மானமீக் கூரப்
பருவரற் கடலிடைப் படிந்து
தன்னொரு மகள்வாழ் மாளிகை யெய்தித்
தனயையைப் பாங்கிமா ரொடுகூய்
என்னிது செய்தாய் ஐயகோ பேதா
யென்றுநைந் தின்னன புகன்றாள்.

(அ - ரை.) இன்னணம் - இவ்வாறாக. பன்னுற - சொல்ல. மானம் - பெருமை. மீக்கூர - அதிகரிக்க. பருவரல் - துன்பம். தனயை - மகள். கூய் - கூப்பிட்டு. ஐயகோ - ஐயோ. பேதாய் - அறிவில்லாய். நைந்து - வருந்தி. இன்னன - இத்தன்மையுடைய சொற்கள். (எக)

மோகினி, தன் மகள் செயலை வெறுத்துரைத்தல்

மானமும் உயிரும் ஒருங்குநில் லாத
வழியுயிர் தன்னையே விடுத்துத்
தானுறு பொருளாய் மானமே கொளுமுன்
தந்தைதன் செவிப்படில் என்னும்
பானுவும் மதியும் இயங்குறு மளவும்
பழியிது வழிவழி வராதோ
யானுனை வருந்தி யின்றதும் இதற்கோ
என்செய்தாய் பாவியென் றிசைப்பாள்.

(அ - ரை.) ஒருங்கு - ஒன்றாக. தான் உறு பொருளாய் - தான் அடையவேண்டிய பொருளாக. பானு - கதிரோன். மதி - திங்கள். இயங்குறும் - போக்குவரவு செய்யும். இசைப்பாள் - சொல்லுவாள். (எஎ)

கன்னியர் கடமை

குரவர்தாம் இயைந்து கெடுத்தில ராயிற்
குமரவே ளனையவ ரேனும்
அருவரா நிற்பர் தந்தைதாய் தங்கள்
ஆணையி னொழுகு கன்னியர்தாம்
உருவிலார் எனினுங் குரவருள் மகிழ்வுற்
றுதவுறி னனையவர் தம்மைப்
பரவுவான் கடவு ளாகவே நினைந்து
பண்பொடும் பயிலுவர் அன்றே.

(அ - ரை.) குரவர் - இருமுதுகுரவராகிய தாய் தந்தையர்கள். அனையவர் ஏனும் - ஒப்பானவர்களானாலும். அருவரா நிற்பர் - வெறுப்பார்கள். உருவு இலார் - அழகற்றவர். பரவு - போற்றப் பெறுகிற. வான் கடவுள் - மேலான கடவுள். பயிலுவர் - கூடி வாழ்வர்.

தந்தை தாய் தங்கள் ஆணையின் ஒழுகு கன்னியர் அருவரா நிற்பர் எனவும் பண்பொடும் பயிலுவர் எனவும் தனித்தனி கூட்டிப் பொருள் கொள்க. (எஅ)

பெண்கள் தம் மனம்போல் நடத்தற்குரியர் அல்லர் எனல்

மணம்புரி வதன்முன் குரவரா ணையினும்
மணவினை முற்றிய பின்னர்
இணங்குற அருள்செய் கொழுநனு ணையினும்
இருப்பர்தம் வயமில ரென்றும்
அணங்கனை யவர்தாம் என்பதை அறிந்தும்
அடாதவிச் செயலினைச் செய்தாய்
பிணங்குவார் இலையென் றிருந்தனை போலும்
பேதைநீ என்றுதாய் முனிந்தாள்.

(அ - ரை.) இணங்குற - பொருந்த. பிணங்குவார் இலையென்று - உன்னைச் சினப்பவர் இல்லையென்று. முனிந்தாள் - சினந்தாள். அணங்கனையவர் - தெய்வத்தை யொத்தவர்களாகிய பெண்கள். அடாத-தகாத. (எக)

மாயை வருந்த மோகினி சினம் நீங்கல்

தான்செயுந் தவறும் தாய்செயு முனிவும்
தன்மனந் தனைநனி வருத்த
நான்செய்வ தென்னென் றிருநில நோக்கி
நாணிநீர் விழியுக இருந்தாள்
தேன்செய்மென் மொழியாள் மோகினி கண்டு
சினந்தவிர்ந் தகங்கரைந் துன்மேல்
மான்செயும் விழியாய் பிழையிலை யென்றுள்
மனங்கரை வன்னைபோல் உண்டோ.

(அ - ரை.) நீர்விழிஉக - கண்களினின்றும் நீர் சிந்த. தேன்செய் - தேன்போலும் இனிமை தருகின்ற. தவிர்ந்து - நீங்கி. அகங்கரைந்து - மனம் உருகி. மான்செயும் - மானினது கண் போன்ற. மனம். கரைவு - மனது உருக்கங் கொள்ளல். அன்னைபோல் மனங்கரைவு உண்டோ என்பது பொதுப்பொருள். மோகினி பிழையிலையென்றுள் என்பது சிறப்புப்பொருள். இது வேற்றுப்பொருள் வைப்பணி. (அ0)

தோழிகள் மாயையின் மோகப்பெருக்கை
மோகினிக்கு மொழிதல்

மங்கைமீர் நீயிர் சூழ்ந்தனர் இருந்தும்
வளைதரு வேலியில் பயிர்போல்
எங்கள்தம் மடந்தை நிறையழிந் தொழிய
என்செய்தீர் பாவிகாள் என்றுள்

அங்குறு மடவார் சொல்வரெம் பிராட்டி
அருளொடு கேண்மதி மதனுல்
உங்குல மடந்தை உயிர்விடா திருந்த
துன்தவ மென்றுநைந் துரைத்தார்.

(அ - ரை.) சூழ்ந்தனர் இருந்தும் - சூழ்ந்திருந்தும். நிறை - கற்பு. அங்குறு - அங்குள்ள. கேள்மதி-கேள்: மதி; முன்னிலையசைச் சொல். மதனுல்-காமனுல். வேலியில்லாத பயிர்போல நிறையழிந் தொழிய என உவமைகொள்க. (அக)

மோகினி சகளையைப் பார்த்து வினவல்

பாங்கியர் பகரச் சினஞ்சிறி தவிந்து
பாங்கியர் குழுவினுட் சிறப்புற்
ருேங்கிய சகளை தன்முக நோக்கி
உரைப்பள்மோ கினியெனும் அரசி
பூங்களை மதவே எளையஅல் லமனைப்
புறத்துநின் றகற்றிடா தெங்கள்
ஈர்ங்கதிர் முகமெல் லியல்முனம் விடுத்தாய்
என்கொலோ எனவவள் உரைப்பாள்.

(அ - ரை.) பகர-சொல்ல. புறத்துநின்று அகற்றிடாது-வெளியே நின்று துரத்திவிடாமல். ஈர்ங்கதிர் முகம் - குளிர்ந்த ஒளியையுடைய திங்கள் போன்ற முகம்.

மோகினி, சகளைதன் முகநோக்கி என்கொலோ என அச் சகளை உரைப்பாள் என்று கூட்டுக. (அஉ)

மாயையை வெறுப்பது கூடாது என்று சகளை கூறுதல்

மானிடப் பிறவி அரிததில் அரசர்
மக்களா குதலரி ததனில்
ஊனுறுப் பமைதல் அரிததில் அரிதால்
உணர்வொடு போகங்கள் நுகர்தல்
தானெனப் பெரியர் கூறலால் அன்னுய்
தவம்பல முயன்றுநீ பெற்ற
மீனெனப் பிறழுங் கண்ணியை வெகுண்டு
வெறுப்பது தகாதென உரைத்தாள்.

(அ - ரை.) ஊன் உறுப்பு அமைதல் - உறுப்புக்கள் குறை வின்றிப் பிறத்தல். மீன் எனப் பிறழும்-மீன்போலப் புரளும்.

மானுடப் பிறவியெடுப்பது, அறிவுடன் வாழ்ந்து பல்வகைப் போகங்களையும் நுகர்வதற்காகவே என்று அறிஞர் கூறலால் மாயை போகம் நுகரக் கருதியது குறித்து வெகுளல் தகாது என்பது கருத்து. (அஉ)

மோகினி தன் கருத்துரைத்தல்

மோகினி சகலை புகல்மொழி கேட்டு
முகமலர்ந் தென்தவப் பயனும்
பாகெனு மொழியாள் தவறிலள் யாழோர்
பயில்மணம் அரசர்மேற் றென்பர்
ஆகலில் இவளுக் கல்லமன் தானே
அருமணத் தலைவனங் கவன்பால்
போகம்வேண் டியவா கொள்கெனப் புகன்று
புகன்றனள் பின்னுமோர் மாற்றம்.

(அ - ரை.) பாகு எனும் மொழியாள் - வெல்லப்பாகை யொத்த சொல்லையுடையவள் (மாயை). அரசர் மேற்று - அரசர் மேலது. வேண்டியவா-வேண்டியவாறு. மாற்றம் - மொழி. யாழோர் பயில் மணம் - காந்தருவமணம் (இது கொடுப்பாரின்றித் தாமே கூடுவது). (அச)

மன்னனுக்கு இச் செய்தி தெரியலாகாது என்றல்

உலகெலாம் அறிய வதுவைசெய் காறும்
உலகமன் னவனறி யாமல்
திலகவாள் நுதலாள் ஒழுக்கநீர் மறைமின்
தேமொழி யிரிவள் தீமை
நலமெலாம் நுமதே ஆதலால் நுமக்கு
நான்சொல்வ தென்எனு மகளுக்
கலகிலா உவகை செய்துபோ யினன்தன்
அகத்தினுஞ் முனிவுற வந்தான்.

(அ - ரை.) வதுவை செய்காறும் - திருமணஞ் செய்யும் அளவும். உலக மன்னவன் - மமகாரன். திலக வாள் நுதலாள் - மாயை. தேமொழி - மதுரமான மொழி. அலகு இலா - அளவு இல்லாத. முனிவுற - கோபமுற்று. என் எனு-என்ன என்று சொல்லி. (அடு)

### மாயை, சகளையிடம் தன் தாயைப் பாராட்டிக் கூறல்

என்பிழை பொறுமல் அன்னையோ டென்பால்
இருந்தவ ரேசொலின் அதனல்
அன்புடை அன்னை முனியுமோ என்ன
அறைந்தனள் மாயைகேட் டறைவாள்
பொன்புரை சகளை நங்குரு உனக்குப்
புராரியே தலைவனென் றிருப்பப்
பின்பிது நீசெய் தனையெனி னின்னைப்
பிழைசொல்வார் மேற்பிழை உண்டோ.

(அ - ரை.) பொன்புரை - திருமகளையொத்த. புராரி - புரங்களை யெரித்த கடவுள். மாயை அறைந்தனள் எனவும் பொன்புரை சகளை கேட்டு அறைவாள் எனவும் கூட்டுக. நின்னைப் பிழை சொல் வார்மேற் பிழையுண்டோ என்பது சகளை கூற்று. (அசு)

### அல்லமரை வெளியே அனுப்பவேண்டுமெனச் சகளை கூறல்

மானனை யாய்நந் தாயறிந் தமையான்
மறைந்தது நொய்துபட் டன்றிக்
கோனிதை அறிவன் எனினெளி தாமோ
கோமள வல்லிநீ கேண்மோ
போனது போக இனியவன் றன்னைப்
புறத்தினில் விடுவதே யறிவு
தானென உரைத்தாள் மாயைகேட் டயர்ந்து
தாங்கருந் துயரமோ டிருந்தாள்.

(அ - ரை) நொய்துபட்டு - அற்பமாய். கேண்மோ - கேள்; மோ: முன்னிலை யசை. புறத்தினில் - வெளியே. அயர்ந்து-சோர்ந்து. நொய்துபட்டு-மறைந்தது. கோனிதை யறிவன் எனின் எளிதாமோ? போனது போக; அறிவுதான் எனச் சகளை யுரைத்தாள் என்று கொள்க. (அஎ)

### அல்லமர் வினவுதல்

அல்லமன் அறிந்து நும்திரு மடந்தைக்
கடுத்ததென் புகலெனச் சகளை
வல்லிநின் மாயை வலையிடைப் பட்ட
மறையெலாம் இறைமனை நிறைந்த

தொல்லைநல் வினையால் அறிந்திலன் வேந்தன்
ஒருவனும் யாமுய்ய வேண்டிச்
சொல்லுவ தொன்றுண் டையநீ புறத்தோர்
சூழலில் இருத்தல்நன் றென்றாள்.

(அ - ரை.) புகல்என - சொல் என்று கேட்க. மறைஎலாம் - மறைவுச் செய்திகள் எல்லாம். இறைமனை விறைந்த - அரசன் வீடு நிரம்பின. புறத்து - வெளியே. சூழல் - இடம். வேந்தன் ஒருவனும் அறிந்திலன் எனவே மனையில் உள்ளோர் எல்லார்க்கும் மறை வெளிப்பட்டது என்றாள் என்க. ஐய! யாம் செய்யவேண்டிச் சொல்லுவது ஒன்று உண்டு. (அஅ)

அல்லமர், 'மாயையைப் பிரிந்து இருக்க இயலுமோ' என ஏளனஞ் செய்தல்

மாயையை அகன்றால் நடக்கக்கால் எழுமோ
வாயிடை மாற்றமொன் றுண்டோ
போயொரு விடயம் உணமனம் வருமோ
பொருந்துறும் பகலிர வுளவோ
காயமும் உயிருங் கலந்துவாழ் வுறுமோ
கண்டனம் எனவெனை ஒருவர்
நீயறி வுறவிங் குரைப்பவர் உளரோ
நேரிழா யென்றனன் அண்ணல்.

(அ - ரை.) போய் ஒரு விடயம் உண - ஒரு காரியத்திற் செல்ல. மாயையைப் பிரிந்தால் உயிர் நிலைத்திராது என்கிறார், அல்லம தேவர். காயமும் - உடம்பும்.

நீ அறிவுற இங்கு எனைக் கண்டனம் என உரைப்பவர் ஒருவர் உளரோ என்றனன் எனக் கூட்டிப் பொருள் கொள்க. (அக)

மாயை கிட்டுவள் எனல்

கருத்தினை அறியா தவன்மொழி தனக்குக்
காங்கிய பொருளையே கொண்டு
விரைத்துணர் மலர்மென் குழலினள் புணரும்
விதியுள தென்னிலெங் கொடியைத்

தரித்தெவ ளெருநீ யிருப்பினும் உனக்குத்
தருமிதில் ஐயம்வேண் டாவென்
றுரைத்தனள் கருணை யென்றுசெய் குவனென்
றுழன்றவள் அண்ணலை நோக்கி.

(அ - ரை.) காட்டிய பொருளையே கொண்டு - வெளிப்படைப் பொருளையே மதித்து. விரைத்துணர்மலர் - மணமுள்ள பூங்கொத்து. தரித்து - விலைத்து. என்று கருணை செய்குவன் என்று உழன்றவள் - எப்போது மாயையுடனிருப்பதற்கு அருள் புரிவாரோ என்று தூது கூறித் திரிந்தவள் (சகளை).

எங்கொடியைப் புணரும் விதி (உனக்கு) உளது என்னில் எங்கு நீ இருப்பினும் தரும் எனக் கூட்டுக. விதிதரும் என்றுவது மாயையின் தந்தை தரும் என்றுவது கூறலாம். (௧௦)

அல்லமர் மத்தளம் அடித்தல்

சகளையிவ் வாறு மொழிதர நங்காய்
சாலவும் நன்றுநன் றென்று
நகைமதி தவழுஞ் செஞ்சடை மதுகை
நாயகன் திருமுனஞ் சென்று
முகிழ்முலை நடிக்கும் பொழுதுதன் செயல்செய்
முயற்சியி னின்றனன் தனக்குத்
தகுமென வளர்பே றறிவினுல் தன்னைத்
தானலா தறிதரப் படாதான்.

(அ - ரை.) சாலவும் - மிகவும். நகை - ஒளி. மொழிதர - சொல்ல. முகிழ்முலை: மாயை. தனக்குத் தகும் என - தனக்குத் தக்கதாக. நன்று நன்று: உடன்பாட்டைக் காட்டிய அடுக்கு மொழி. முகிழ்முலை - அரும்புபோலும் முலையினை உடையாள் என விரியும்; அன்மொழித் தொகை. அறிவினுல் தன்னைத்தானே யறிவது அன்றிப் பிறராலறியப் படாதவன் என்பது கருத்து. (௧௧)

ஐந்தாவது பிரபுதேவர் வந்த கதி முடிந்தது.

கதி ௫-க்குச் செய்யுள் - ௩௦௪

## ௬. விமலை கதி

[இக் கதிக்கண், தன்னால் நிலவுலகிற்கு அனுப்பப்பெற்ற மாயை நெடுங்காலமாகியும் மீண்டு வராமையைக் கண்ட இறைவி, விமலையை நிலவுலகிற்கு அனுப்புதலும், அவள் வந்து மாயையைக் காண்டலும், மாயை நிலவுலகிற்கு வந்த செய்தியை நினைவுறுத்தலும், மாயை அல்லமதேவரது இயல்பைப் பற்றி விமலையைக் கேட்டலும், விமலை அல்லம தேவர் வரலாற்றை இறைவன் இறைவிக்குக் கூறியவாறு சொல்லத் தொடங்கி, நிராங்காரனும் சுஞ்ஞானியும் அருந்தவஞ் செய்து அல்லம தேவரைப் பிள்ளையாகப் பெற்றதையும், அல்லம தேவரின் இளமைக்கால விளையாட்டையும் பின்னர் உலகெலாஞ் சென்று திருவிளையாடல் நிகழ்த்தும் பொருட்டு நிராங்காரனையும் சுஞ்ஞானியையும் பிரிந்து செல்ல விரும்பி அவர்களுடைய உடன்பாடு கேட்டதையும், அவர்கள் 'நீ யெமைப் பிரியின் நாங்கள் வீடுபேறு அடையாமல் வருந்துவோம்' என்றுரைக்க, அவர்கட்கு அருள் புரிந்ததையும் மாயைக்கு விளக்கமாக எடுத்துரைக்குஞ் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

அமலை யேவ அகனிலத் தெய்துபு
சமல மாயை தனக்கருள் மூர்த்தியாம்
நிமலன் அல்லமன் நீதியை அன்பினால்
விமலை கூறிய வண்ணம் விளம்புவாம்.

(அ - ரை.) அமலை - இறைவி. எய்துபு - அடைந்து. விமலை - இரசோகுண வடிவினள். சமல மாயை - மலத்தோடு கூடிய மாயை. நீதியை - ஒழுக்கத்தை. (௧)

### மாயை, மயல் மிகுந்திருந்தாள் என்றல்

மதுகை நாதனை நாடொறு மாயைதான்
அதிக வந்தனை ஆற்றிநம் அல்லமன்
உதவு மால்மனத் தோங்க இருந்தனள்
திதிகள் எண்ணில செல்ல நிலத்தினே.

(அ - ரை.) வந்தனை - வழிபாடு. மால் - மயக்கம். திதிகள் - நாள்கள். (௨)

### இறைவி, விமலையை நிலவுலகிற் கனுப்புதல்

ஆய காலையில் அம்பிகை ஞாலமேல்
மாயை போய்நெடு நாளினும் வந்திலள்
போயி ராதவட் கொண்டிவண் போதென
ஏயி னுள்நல் விமலையை என்பவே.

(அ - ரை ) ஞாலமேல் - நிலவுலகில். இராது - தங்காது. இவண் - இங்கு. போது - வா. ஏயினுள் - ஏவினுள். (க)

### விமலை, நிலவுலகிற்கு வருதல்

கறையில் சோதிக் கயிலையில் நின்றுநம்
இறைவி யேவ இறைஞ்சி வருமுலைப்
பொறையி னுல்விழுந் தாளெனப் பூமிசை
மறுவி லாமதி போல்பவள் வந்தனள்.

(அ - ரை.) கறைஇல் - குற்றமற்ற. இறைஞ்சி - வணங்கி. பொறையினுல்-பாரத்தால். மறுவு இலாமதி-களங்கம் அற்ற திங்கள். (உ)

### மாயையைக் காணுதல்

வந்து பொன்னெயில் வட்ட வளவசை
நந்து பொன்மணி மாட நணுகியே
சந்த மாயை தனதெதிர் நின்றனள்
கந்த மென்மலர்க் கற்பக வல்லிபோல்.

(அ - ரை.) எயில் - மதில். நந்து-செல்வம் மிகுந்த. சந்தம் - அழகு. கந்தம் - மணம். (ங)

### மாயை, விமலைக்கு இருக்கை யளித்தல்

நின்ற போதெதிர் கண்டு நிலவுல
கன்று போலுமிவ் வாயிழை வாழிடம்
என்று மாயை யெழுந்து தொழுதணை
ஒன்று மேவி யிருப்ப உதவினுள்.

(அ - ரை.) ஆயிழை : விமலை. அணை - இருக்கை. இருப்ப - இருத்தற்பொருட்டு. ஆயிழை: அன்மொழித்தொகை. (ச)

### இவர்களைக் கண்ட மாதர்கள் வியத்தல்

அருகி ருந்த அனையர் இருவரும்
இருக ரங்களும் ஏந்து மணியென
உருவ மைந்திவண் ஒத்தனர் என்றுசூழ்
புரம டந்தையர் புந்தி வியந்தனர்.

(அ - ரை.) *அனையர் - அத்தன்மையர். உருவு அமைந்து-அழகமைந்து. இவண் - இங்கு. புரமடந்தையர் - நகரமாதர். புந்தி - அறிவு. புரமடந்தையர் என்பதற்கு அந்தப்புரப் பெண்கள் எனினுமாம்.* ஒப்பணி, (எ)

### மாயை, விமலையை வினுதல்

மாயை வந்த மடந்தையை நோக்கியே
நீயி ருந்ததெங் குன்பெயர் யாதுநீ
மேய தன்மையென் என்று வினுவலும்
தேயும் நுண்ணிடை செப்புதல் மேயினுள்.

(அ - ரை.) *மேயதன்மை என்-வந்த காரியம் யாது என்று. தேயும் நுண் இடை-தேய்ந்துகொண்டிருக்கும் நுட்பமான இடையையுடைய விமலை.* (அ)

### விமலை மறுமொழி உரைத்தல்

கயிலை யென்னிடங் கற்பக வல்லியென்
பெயரி யம்பின் விமலை பெருங்குல
சயில மங்கைநின் தன்புடை ஏவினுள்
வியனி லந்தனில் வந்துனை மேவினேன்.

(அ - ரை.) *கற்பகவல்லி - கற்பகக் கொடி போன்ற மாயையே! பெருங்குலம் - பெருமைபொருந்திய குலம். சயில மங்கை-மலைமகள்: இறைவி. நின்தன் புடை - உன்னிடம். வியன் நிலம் - அகன்ற நிலம்.* (௯)

### மாயை வினுவல்

என்ன மன்மகள் எம்பெரு மாட்டிதான்
மன்னும் வெந்துயர் மக்கட் பிறப்பினேன்
தன்னை உன்னிநின் தன்னை விடுத்ததென்
பன்னு கென்னப் பகர்தரல் மேயினுள்.

(அ - ரை.) *மன் மகள் - மமகார மன்னன் மகளாகிய மாயை. மன்னும்-நிலைபெற்ற. பன்னுக-கூறுக. பகர்தரல்-கூறல்.* (௧0)

### விமலை, மாயையின் வரலாறுரைத்தல்

அல்லமன் வலிநிலை அறிந்து வாவென
நல்லுமை நினைவிட நன்றென் றெங்கைநீ
வல்லமை பேசியிம் மண்ணில் வந்தபின்
சொல்லிய நின்பெருஞ் சூள்ம றந்தனை.

(அ - ரை.) எங்கை - என் தங்கை. சொல்லிய - கைலையிற் கூறிய. சூள் - வஞ்சினவுரை. (கக)

### நீ, உன்னையும் அறியவில்லை என்றல்

நின்னையும் அறிந்திலை நீயென் றலிவண்
உன்னுறு மனமொழி உறாத அல்லமன்
தன்னைநீ அறிவுறுந் தன்மை உண்டுகொல்
கன்னிமா துமைதம கலையை அல்லையோ.

(அ - ரை.) உன்னுறும் - எண்ணும். மனமொழி உறாத - மன வாக்கிற்கு எட்டாத. தம கலையை அல்லையோ - தமோகுண வடிவினள் அல்லளா? (கஉ)

### இறைவி, தன்னை யனுப்பிய காரணத்தை இயம்பல்

ஓடுற மருந்தயின் றுறங்கல் போலுரை
ஆடிய சூள்மறந் தயர்ந்தி ருத்தலால்
நாடிநின் றனைத்தரற் கென்னை நல்லுமை
ஏடவிழ் மலர்க்குழால் ஏவினள் என்றாள்.

(அ - ரை.) ஓடுற - ஓடுவதற்கு. அயின்று - உண்டு. அயர்ந்து - சோர்ந்து. நாடி - தேடி. ஏடு அவிழ் - இதழ்கள் விரிந்த. (கங)

### மாயை, தன் வரலாறுணர்தல்

கதிரெழு பகலெனக் கண்டி டாதுதண்
மதியெழும் இரவென மனந்தெ ளிந்துதன்
திதியொடு நினைவுமோர் சிறித றிந்தனள்
விதியுணர் இறைமகள் விமலை சொல்லினால்.

(அ - ரை.) கதிர் - ஞாயிறு. தண்மதி - திங்கள். திதி-நிலைமை. நினைவு - சூள்மொழி; சொல்லவந்ததின் எண்ணம். விதிஉணர் - அரசாட்சி முறைமையை உணர்ந்த. இறை - அரசன்.

கதிரோன் ஒளியிற் பொருள்களை உணராது, திங்களின் ஒளியில் அறிதல் போல மாயை அறிந்தனள். (கசு)

மாயை கூறுதல்

மூலகா ரணனெனச் சிலர்மொ ழிந்திடும்
மாலுமோ மானிடப் பிறப்பில் வந்துதன்
சீலமோர்ந் திலனெனிற் சிறிய பேதைநான்
ஞாலமேல் மயங்குதல் நவிறல் வேண்டுமோ.

(அ - ரை.) மூலகாரணன் என - முதற்காரணன் என்று. மாலும் - திருமாலும். சீலம் - பழைய நிலைமை. ஞாலம் - உலகம். நவிறல் - சொல்லுதல். (கஇ)

மாயை, அல்லமதேவரின் இயல்பை விமலைபால் கேட்டல்

அல்லமன் இயல்பெலாம் அறியப் பூந்துணர்
வல்லிநின் குமுதவாய் மலர்ந்து கூறெனச்
சொல்லிநின் றிணையடி தொழுத மாதொடு
வில்லுறழ் நறுநுதல் விமலை கூறுவாள்.

(அ - ரை.) பூந்துணர் வல்லி - பூங்கொத்தமைந்த கொடிபோல் பவளே. வில் உறழ் - வில்லை ஒத்த. (கஅ)

விமலை கூறுதல்

கயிலையின் உமையொடு கண்ணு தற்பிரான்
செயலுறும் அல்லமன் செய்தி கூறலும்
அயலுற இருந்துநான் அறிந்து ளேனதை
மயிலியல் கேளென வகுத்தல் மேயினள்.

(அ - ரை.) கண்நுதல்பிரான்-நெற்றிக்கண்ணை யுடையவனாகிய கடவுள். செயல் உறு - வியத்தகு செய்கைகள் அமைந்த. அயல் உற - பக்கத்திற் பொருந்த. மயில் இயல் - மயிலினது இயல் பமைந்தவள். வகுத்தல் மேயினாள் - கூறலானாள். மயில் இயல்: அன்மொழித்தொகை. (கஎ)

நிராங்காரனும் சுஞ்ஞானியும்

படியில் வள்ளி காவையெனும் பதியில் தனக்கு நிகரில்லான்
ஒடிவில் கருணை நிராங்காரன் என்னும் உண்மைப் பெயரினன்
மடிவில் கற்பின் அவன்தேவி மாசு தீர்ந்த சுஞ்ஞானி
கடிவில் மறையா கமவிதிகள் கண்ணுற் றறிய ஒழுகுவார்.

(அ - ரை.) படியில் - இந்நிலவுலகத்தில். ஒடிவுஇல் கருணை - இடையறாத அருள். மடிவுஇல் - கெடுதல் இல்லாத. கடிவுஇல் - நீக்கப்படாத. கண்ணுற்று - தெரிந்து.

நிர் ஆங்காரன் - நான் என்னும் ஆணவம் அற்றவன். சுஞ்ஞானி- நல்ல அறிவினையுடையவன். (கஅ)

அவ்விருவரின் தன்மை

மெய்ம்மை சிவமே அல்லாத
விரியும் உலகம் பொய்யென்பார்
இம்மை மறுமை நிலையல்ல
என்ன நிகழ்ந்த கருத்தினோர்
செம்மை நெறியிற் புறமொடகந்
திரியுங் கரணங் காமாதி
பொய்ம்மை வினையில் அவர் குருநூல்
பொருளாத் துணிந்து வீடுவப்பார்.

(அ - ரை.) விரியும் உலகம் - விரிந்துள்ள உலகம். புறமொடு அகம் - வெளியிலும் உள்ளிலும் குருநூல் - அறிவாசிரியனால் உரைக்கப்பட்ட நூல். வீடு உவப்பார் - வீட்டை விரும்புவார்கள். கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய உட்கருவிகள். ()

மக்கட்பேறில்லாத வாழ்வு

இனையர் ஆகி இருக்குநாள் இல்வாழ்க் கையினின் றிடுதலால்
தனையர் இன்மை யானெஞ்சந் தளர்வான் போன்று நிராங்காரன்
நினையுந் தியானம் இல்லாத நெஞ்சு ஞானம் இல்லாத
வினையும் போலு மக்களிலா மிக்க வாழ்வென் றியம்பியே.

(அ - ரை.) இனையர் - இத்தன்மையை உடையவர். தனையர் - மக்கள். தியானம் - உள்ளம் ஒருவழிப்பட்டு நிற்றல். (உ0)

நன்மக்கட்பேறு விரும்பாதவன் பதடி ஆவன்

இந்த உலகிற் குதவியாய் இயன்ற தொழில்கள் பலசெய்யும்
மைந்தன் வேண்டும் எனநிற்போன் மக்கட் பதடி ஆகுவான்
அந்த உலகிற் காநினைப்போன் அறங்கூர் மகனும் அத்துவிதா
னந்தம் உதவும் மகவிருப்போன் ஞானி யாகும் என்றெண்ணி.

(அ - ரை.) மக்கட் பதடி - மக்களுட் பதர் போன்றவன். அந்த உலகிற்கு - மேல் உலகிற்கு. அறங்கூர் மகன் - அறத்தின் தன்மை

புணர்ந்தவன். அத்துவிதானந்தம் - வீடுபேற்றினால் உண்டாகும் இன்பம். மகவிருப்போன் - மகனை விரும்புவோன். (உக)

நன்மக்கட்பேற்றை நாடுதல்

உடம்பைப் பொறியைக் கரணத்தை
உயிரைத் தானென் றுழலாமல்
அடங்கத் துறந்து தனையறிந்து
பேதா பேதம் என்னுமயல்
கடந்திட் டிருக்கும் பரமுத்தி
காட்டும் புதல்வன் வேண்டுமென
இடும்பைப் பிறவி நோய்தணிப்ப
எண்ணும் மனத்தான் எண்ணினன்.

(அ - ரை.) பொறி - மெய், வாய், கண், மூக்கு, காது என்னும் ஐம்பொறி. பேதாபேதம் என்னும் மயல் - பலவகை வேறுபாடுகளாகிய மயக்கம். இடும்பைப் பிறவி - துன்பத்தைச் செய்யும் பிறப்பு. எண்ணு மனத்தான் : விராங்காரனுக்கு வினையாலணையும் பெயர். (உஉ)

இறைவனால் தன் எண்ணத்தை முடிக்க எண்ணுதல்

இரண்டோ டிரண்டு மூவிரண்டை
இரண்டா றிரண்டு மீமிசையெண்
இரண்டோ டிரண்டு கொண்டிருந்த
இதழ்ப்பங் கயங்கள் கடந்துபோய்
இருந்த குளத்தின் மேலோரா
யிரந்தோட் டமல கமலமிசை
இருந்த சோதி தனைக்கண்டேம்
எண்ணம் முடிப்பேம் எனவெழுந்து.

(அ - ரை.) இரண்டோடிரண்டு-நான்கும்; மூவிரண்டு-ஆறும்; ஐயிரண்டு - பத்தும்; ஆறு இரண்டு - பன்னிரண்டும், மீமிசை - இவற்றின் மீது. எண் இரண்டு - பதினாறும், இரண்டும், கொண்டு இருந்த - ஆகிய இவ்வெண்களைக் கொண்டிருந்த, இதழ்ப் பங்கயங்கள் - இதழ்களையுடைய ஆறுதாரத் தாமரைகளையும், கடந்து போய் - தாண்டிச் சென்று, இருந்த குளத்தின்மேல் - நெற்றியின் மீதிருந்த, ஓர் ஆயிரம் தோட்டு - ஒப்பற்ற ஆயிரம் இதழ்களையுடைய, அமல கமலமிசை - நின்மலமாகிய தாமரையின்மேல், இருந்த சோதி தனைக் கண்டு - எழுந்தருளி யிருக்கின்ற ஒளிவடிவாகிய சிவத்தைப்

பார்த்து, எம் எண்ணம் முடிப்போம் என - எம்முடைய எண்ணத்தை நிறைவேற்றுவோம் என்று. ஆருதாரத் தாமரைக்கு இதழ்கள் மூலாதாரத்திற்கு - ச. சுவாதிட்டானத்திற்கு - கூ. மணிபூரகத்திற்கு-கo. அநாகதத்திற்கு - கஉ. விசுத்திக்கு - ககூ. ஆக்ஞைக்கு - உ. (உரு)

### விரும்பித் தவஞ் செய்தல்

வேரும் ஒருவன் உடனிருப்பும்
　　வேண்டா தவத்திற் கென்பதொடு
மாருய் மனையுங் கொழுநனும்போய்
　　வனத்திற் கமலா சனத்திருந்து
தேருர் புனல்போல் தெளிந்தமனத்
　　திறந்துந் திறவா விழியொடுதம்
பேரும் இட்ட லிங்கத்திற்
　　பிறழா தமையும் படிவைத்து.

(அ - ரை.) மாருய் - மாறாய். கமலாசனத்திருந்து - தாமரை மலர்போன்ற இருக்கைகொண்டு அமர்ந்திருந்து. தேருர் - தெளிவு பொருந்திய. புனல் - நீர். திறந்தும் திறவாவிழி - சிறு பார்வை. பேறு ஆம் - பயனாகும். பிறழாது - தப்பாது. (உசு)

### தவஞ்செய்திருந்த தன்மை

தறிபோல் உடலம் நேரிருந்து தயங்கு மருங்கின் இருநாடி
நெறிபோய் மீளும் வளியதனை நிறுவி நடுநா டியிற்செலுத்தி
அறிவோர் சிறிதுஞ் சலியாமல் அன்னப் பெயர்மந் திரமாறிக்
குறிபோ யிருந்த ஒருகுறியைக் குறித்துக் கொண்டங் கிருந்தனரால்.

(அ - ரை.) தறிபோல் - தூண்போல். தங்கும் - விளங்கும். மருங்கின் இருநாடி - இடை, பிங்கலை என்னும் இருநாடியின். நெறி போய் மீளும் வளியதனை - வழியே போய்த் திரும்புங் காற்றை. நிறுவி - ஓடாது தடைப்படுத்தி நிறுத்தி. சலியாமல் - அசையாமல். அன்னப் பெயர் மந்திரம் மாறி - அம்ச மந்திரத்தை மாறிக்கொண்டு. குறிபோய் இருந்த ஒருகுறி - பரம்பொருள். (உஎ)

### அறிவுச்சுடரைக் கண்டிருத்தல்

வாயு திற்ப மனநின்று மனந்தான் நிற்பப் பொறிநின்று
பாய பொறிகள் நிற்பஇடர் படுபுன் புலன்கள் நின்றனவால்
ஆய புலன்கள் நின்றமையால் அகிலந் தோன்று துள்ளத்தே
தூய பரமா னந்தபரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார்.

(அ - ரை.) இடர்படு புன்புலன்கள் - துன்பப்படுகின்ற சிற்றறிவுகள். அகிலம் தோன்றாது - உலகம் தோன்றாமல். பரஞ்சோதி - மேலான அருட்சுடர். (உக)

## கடவுள் குழவியுருவாகத் தோன்றுதல்

ஒருங்கு மனமோ டினையசிவ யோக சமாதி நவதிங்கள்
நிரம்ப இருந்த காலத்து நெற்றி மிசையிற் பரஞ்சோதி
திரண்டு குழவி உருவாகிச் சென்று புறமுற் றிடவதனை
விரும்பும் இருவர் தாமுமுடன் விழிகள் திறந்து கண்டனரால்.

(அ - ரை.) ஒருங்கு மனமோடு - ஒன்றுபட்ட உள்ளத்துடன். இனைய - இத்தன்மையுடைய. நவ - ஒன்பது. நிரம்ப - நிறைய. புறம் உற்றிட - வெளியில் தோன்ற. (உஎ)

## அக் குழந்தையின் அழகுத் தன்மை

வெம்மை ஒழிந்து நிலத்திழிந்து விளங்கு கதிரோ பனிநீங்கி
எம்மை ஆள வருமதியோ இடுமிந் தனங்கள் நுகராத
செம்மை ஒளிவான் பேரழலோ தெரியா தென்ன ஒளிர்ந்ததவர்
தம்மை அறியா உவகையுளந் தழைப்பச் சோதி மதலையே.

(அ - ரை.) வெம்மை ஒழிந்து - வெப்பம் நீங்கி. பனி-குளிர்ச்சி. இடும் இந்தனங்கள் நுகராத - போடுகிற விறகுகளை எரிக்காத. ஒளிர்ந்தது - விளங்கியது. (உஅ)

## யாரும் இத்தகைய மக்கட் பேற்றை அடையார் எனல்

அலைந்து பிறப்பில் ஆங்கார அஞ்ஞா னிகளாம் மானிடரும்
மலிந்த சுரரும் முனிவரரும் மற்றை யோரும் பெறுவரோ
தொலைந்த மாயை நிராங்கார சுஞ்ஞா னிகள்போல் மலவிருளை
நலிந்து வளர்சச் சிதானந்த நந்தா விளக்காம் மதலையையே.

(அ - ரை.) மலிந்த - மிகுந்த. தொலைந்த மாயை-மாயையினால் நீங்கப்பெற்ற. நலிந்து - கெடுத்து. நந்தா - கெடாத. மதலை - குழந்தை. (உக)

## எவரையும் இவ்விருவர்க்கும் ஒப்பாக உரைக்க முடியாது எனல்

பேரா னந்தம் பிள்ளையாப் பெற்ற அவர்க்கு விடயத்துள்
ஓரா னந்தம் பெற்றுடனே ஒழியும் உலகர் தம்மைநாம்
நேரா இயம்ப லாகுமோ நிகர்தாம் தம்மில் தாமென்று
வாரார் இளமென் முகிழ்முலைநன் மடவாய் உரைப்ப தன்றியே.

(அ - ரை.) விடயத்துள் - இன்பங்களுள். ஓர் ஆனந்தம் - ஓர் இன்பம். நேரா - ஒப்பா. வார்ஆர் - கச்சணிந்த. (கூ0)

இருவரும் உலகிற்குக் கடவுளைக் காட்டிய சிறப்பினர் எனல்

பண்டு பாசந் தபுசிலரும் பரஞ்சோ தியைத்தாம் தம்முள்ளே
கண்டு வாழ்வு பெறுநரலாற் கண்ணிற் காட்டும் அவரில்லை
தொண்டு படுமிந் நிராங்கார சுஞ்ஞா னிகள்தம் உட்கண்டு
கொண்ட ஒளியை உலகுய்யக் குழவி ஆக்கிக் காட்டினரால்.

(அ - ரை.) பண்டு - முன்னுளில். பாசம் - பிறவித்தளையை. தபு - நீங்கிய. பெறுநர் அலால் - அடைந்தார்களே யல்லாமல். தொண்டுபடும் - அடிமைப்படும். குழவியாக்கி - குழந்தையாக்கி. ()

கடவுட்குழவி பிறந்தபோது உண்டாகிய புதுமை

சங்கும் தெய்வ துந்துமியும் தழங்க மலர்மா மழைபொழிந்த
எங்கும் திசைகள் விளங்கினகள் றீன்ற மலடு தறிதளிர்த்த
பங்கம் கலந்த புனல் தெளிந்த பதகர் மனமும் தெளிந்தவருள்
பொங்கும் துறவர் மனமகிழ்ந்த புனிதன் மகவாய்த் தோன்றுநாள்.

(அ - ரை.) தழங்க - ஒலிக்க. விளங்கின - விளக்கமடைந்தன. தறிதளிர்த்த - வெட்டப்பட்ட மரத்துண்டுகள் தழைத்தன. பங்கம் - சேறு. பதகர் - கொடியோர். துறவர் - துறவிகள். (கூஉ)

நிராங்காரன் குழந்தையைத் தழுவியெடுத்தல்

நையா மனத்து நிராங்காரன்
ஞானத் திரளாம் பிள்ளைதனை
மெய்யாம் உளக்கண் அன்றியுமிவ்
விழியுங் காணப் பெற்றனமென்
றெய்யா உவகைக் கடல்மூழ்கி
யேறுன் மார்போ டுறத்தழுவிக்
கையால் எடுப்ப எங்குநிறை
கனவான் கனவான் நொய்தாகி.

(அ - ரை.) நையா - வாடாத. ஞானத்திரளாம் பிள்ளைதனை - மெய்யறிவு வடிவாகிய பிள்ளையை. எய்யா - அறியாத. ஏறுன் - கரையேறுதவனுய். உற - பொருந்த. கனவான் - பெருமையை உடையோன். கனவான் - சுமையில்லாதவனுகி. நொய்தாய் - எடுத்தற்கு எளிய பொருளாய். (கூகூ)

## சுஞ்ஞானி கணவனைக் கேட்டல்

செவ்வாய் ஞான மயில்கொழுநன்
செந்தா மரைத்தாள் வணங்குபுநம்
இவ்வாய் மகன தியல்புநீ
யியம்பா யென்ன அவன்தெரிந்து
சைவா கமமும் ஆரணமும்
சாற்றற் கரிய நம்மகவை
எவ்வா றுரைப்பன் யான்மடவாய்
என்று வியந்து கூறுவான்.

(அ - ரை.) செவ்வாய் - சிவந்த வாய். ஞானமயில் - அறிவினை யுடைய மயில்போல்பவளாகிய சுஞ்ஞானி. வணங்குபு - வணங்கி. இவ்வாய் - இங்கு வந்து வாய்த்த. சைவாகமம் - சிவாகமம். ஆரணம்- மறை. (கூ)

## இறைவனே குழவியாகப் பிறந்தான் எனல்

நாம்பார்க் குழவி ஆகாமல் நம்பாற் குழவி ஆயினன்
தீம்பாற் கடலில் துயில்வோனும் செந்தா மரைமேல் உறைவோனும்
தாம்பார்க் கரிய அடிமுடியோன் தானே ஐயம் இதற்கில்லை நீ
காம்பாற் புரிந்த தனையதோட் கனிவாய்த் தடங்க ணென்றான்.

(அ - ரை.) பார்க்குழவி ஆகாமல் - உலகத்தில் குழந்தையாகப் பிறவாமல். தீம் - இனிய. துயில்வோன் - திருமால். காம்பால் புரிந்தது அனைய - மூங்கிலினாற் செய்ததையொத்த. கனிவாய் - சிவந்த வாய். தடங்கணாய் - பெரிய கண்களையுடையாய் : விளி. ( )

## அதுகேட்டு சுஞ்ஞானி களிப்படைதல்

ஆன்ற மயல்செய் சையோகத்
தன்றித் தவயோ கத்தினுல்
ஈன்ற பொழுதின் தன்மகனை
யிருந்து சான்றேன் எனக்கேட்டுத்
தோன்றும் உவகைக் கடற்படிந்தாள்
சுஞ்ஞா னித்தாய் பசும்பொன்மலை
போன்று வளர்ந்தும் மருங்குல்மிடி
போக்க அறியா இளமுலையாய்.

(அ - ரை.) ஆன்ற மயல்செய் - மிகுந்த மயக்கத்தைச் செய்கின்ற. சையோகத்து அன்றி-சேர்க்கையினால் அல்லாமல். மருங்குல் மிடி - இடையின் வறுமையை. 'ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும்' என்னுங் குறளை அடியொற்றியது இரண்டாம் அடி. (கக)

அல்லமப்பிரபு என்று பெயரிடுதல்

மத்த நெஞ்சக மோடுதம் மதியின் ஒன்றை அறைந்திது
மெய்த்து றும்பொரு ளென்றதை வேதம் ஆகமம் ஓதுமென்
றுத்தி கொண்டுரை செய்தெதிர் ஒன்றை நிந்தைசெய் சமயர்தம்
பித்தை அல்லெனும் அல்லமாப் பிரபுஎனும் பெயர் இட்டனர்.

(அ - ரை.) மத்த நெஞ்சகமோடு - மயக்கம் பொருந்திய மனத்தினுடன். மெய்த்துறும்பொருள் என்று - உண்மைப் பொருளென்று. உத்திகொண்டு உரைசெய்து - சூழ்ச்சியினாற் சொல்லி. எதிர் ஒன்றை - கண்கூடாகக் காணும் பொருளை. பித்தை - மயக்கத்தை. ()

அல்லமதேவரின் சிறு விளையாடல்கள்

வினையி னுலொரு வன்றரு மேனி யாளன லாதொரு
மனிதன் ஆகிந டித்திடு வடிவன் ஆதலின் அல்லமன்
நினையு மாறு தவழ்ந்துபின் நின்று மெல்ல நடந்துபோய்
வளையு மாமணி மாளிகை மறுகின் ஆடல் பயின்றனன்.

(அ - ரை.) வினையினால் - இருவினையால். ஒருவன் - கடவுள். மேனியாளன் அலாது - உருவமுடையவனல்லாமல். வளையும் மாமணி மாளிகை - மாணிக்க மணிகள் பதித்துச் செய்யப்பெற்ற பெரிய மாளிகைகளையுடைய. மறுகில் - தெருவில். (கஅ)

அன்னை அழைக்க வருதல்

வருக எங்கள்தம் ஆவியே வருக கண்துகர் அமுதமே
வருக எங்குல தீபமே வருக கேடறு செல்வமே
வருக பாச வினாசனே வருக ஞான விநோதனே
வருக என்றனை உளமகிழ்ந்திட வந்து மேல்விழும அல்லமன்.

(அ - ரை.) எங்கள் தம் ஆவியே - எம்முடைய உயிரே. கண்துகர் - கண்ணினால் உண்ணப்படுகின்ற. கேடு அறு - கெடுதல் அற்ற. மகிழ்தர - மகிழ்ச்சியடைய. (கக)

## சிற்றில் சிதைத்தல்

மாயை யாலுள ஆகிய வடிவு நாமம் அழித்துள
தாய வேர்பிர மந்தனை அறியு மாறறி வித்தல்போல
மேய பேதையர் மணலமை விடு தாள்கொ டழித்தனன்
போயு லாவுவன் மானிடன் போல வேலினை யாடுவோன்.

(அ - ரை.) வடிவு நாமம் அழித்து - உருவம் பெயர் முதலிய வற்றைக் கெடுத்து. தாள் கொடு - அடிகளைக்கொண்டு. (௬0)

## சிறு தேருருட்டலும் பம்பரம் ஆடுதலும்

நானியக்கின் இயங்குறும் ஞாலம் என்றறி வித்தல்போல்
தானு ருட்டுநல் வீதியில் தமனி யச்சிறு தேரினை
யான டக்கரு நெஞ்சகம் இதனை ஒக்குறும் என்பது
போன மக்குயிர் ஆயினேன் புதிய பம்பரம் ஆடுமால்.

(அ - ரை.) இயக்கில் - இயங்குமாறு செய்தால். ஞாலம் - உலகம். தமனியச் சிறுதேர் - பொன்னாற் செய்யப்பட்ட சிறுதேர். யான் அடக்கரும் நெஞ்சகம் - யான் தேருத உள்ளம். (௬௧)

## கல்வி கற்றல்

ஆடி ஒன்றெதிர் கொண்டுதம் ஆன னந்தெரி வார்கள்போல்
கூடி ஒண்குரு வெதிர்கொடு கொண்டு தன்பெரு விஞ்சைகள்
நாடி ஒண்கலை கற்றல்போல் நாட கம்பல செய்தனன்
பீடு றும்பழ மறைகளும் பேச ரும்புக ழாளனே.

(அ - ரை.) ஆடி - கண்ணுடி. ஆனனம் - முகம். பெரு விஞ்சைகள் - பெரியதாகிய வித்தைகளை. நாடி - ஆராய்ந்து. பீடு உறும் - பெருமை பொருந்திய. (௬௨)

## அல்லம தேவர் எங்கும் செல்ல எண்ணுதல்

தந்தை தாயுளம் இன்புறத் தனது பேரரு ளாலின
மைந்த னுகி யிருந்தொரு வால லீலை நடித்தருள்
எந்தை தானுல கெங்கணும் எய்தி மக்கள்தம் வல்வினை
சிந்து மாறு நினைந்திது செப்பல் மேயினன் என்பவே.

(அ - ரை.) வால லீலை - இளமை விளையாட்டு. எய்தி - சென்று. சிந்துமாறு-கெடுக்கும்படி. செப்பல் மேயினன்-சொல்லத் தொடங்கினன். (௬௩)

### அல்லம தேவர் தாய் தந்தையர்க்கு உரைத்தல்

உங்கள் பாவனை ஒருமையால் உருவ மாமகன் ஆகிநான்
இங்கு மேவி இருந்தனன் இனிந டந்துல கெங்கணும்
தங்கு மாதவர் முதலியோர் தங்கள் எண்ணம் முடிப்பனென்
றெங்கள் நாதன் இயம்பவிவ் விருவ ரும்புகல் கின்றனர்.

(அ - ரை.) பாவனை ஒருமை - ஒருமைப்பட்ட எண்ணம். மேவி யிருந்தனன் - பொருந்தியிருந்தேன். எங்கள் நாதன் - அல்லம தேவர். (சச)

### இருமுதுகுரவரின் பதில்

பிறப்பெ னுங்கட லிற்படும் பிழை யேமுறு புணையனுய்
துறப்பின் வீடெனும் ஒண்கரை துன்னு ருதமிழ் வேமெனு
மறப்பி லாஇரு குரவரும் மனமு வந்துரை செய்திடச்
சிறப்ப ஞான சிகாமணி தெளியு மாறுரை யாடினன்.

(அ - ரை.) படும் - தோன்றிய. பிழையேம் - குற்றத்தை யுடையேம். உறுபுணையனுய் - கிடைத்த தெப்பத்தை ஒத்தவனே. துறப்பின் - நீ எம்மை நீங்குவாயானுல். துன்னுருது - சேராது. மறப்பிலா - மறவாத. உவந்து - மகிழ்ந்து. சிறப்ப - விளங்க. (சரு)

### உங்களை நான் பிரியேன் என்று உரைத்தல்

சற்றும் நும்மை அகன்றிடேன் தளரன் மின்மனம் என்றுநான்
சொற்ற தையம் உமக்கெனில் துணியும் ஆகம வேதநூல்
கற்று ளோரை வினுய்நிராங் கார ஞானிகள் தலைமயிவண்
உற்ற அல்லமன் அகல்வனேல் உரைமின் என்றுணர் மின்கனே.

(அ - ரை.) சற்றும் - சிறிதுபோதும். சொற்றது - சொன்னது. துணியும் - உறுதியாகக் கொள்ளப்பெறும். வினுய் - கேட்டு. அகல்வனேல் - நீங்குவானுகில். (சசு)

### உண்மைப் பொருளை உணர்த்துதல்

என்று பொன் றுமிவ் வுடல்முதல் யாவும் வேறென நீக்குபு
நின்ற தம்மில்வே றலனெனும் நிலையை நின்றுதா தான்மியம்
ஒன்று றும்பரி சுரைசெயூ உணரும் வண்ணம் உணர்த்தினன்
பின்றல் இன்றிய அல்லமப் பிரபு எனுங்குரு ராயனே.

(அ - ரை.) பொன்றும் - இறக்கும். நீக்குபு - தள்ளி. நிலையை நின்று - நிலையிலேயிருந்து. தாதான்மியம் - ஐக்கிய நிலை. ஒன்றும் - பொருந்தும். பரிசு - தன்மை. உரைசெயூ - கூறி. (சஎ)

நிராங்காரன் சுஞ்ஞானியை உலகினர் போற்றுதல்

தந்தை தாயிலன் ஆகிய தாணு வாகிய சங்கரன்
மைந்த னும்மக வில்லெனு மனவ ருத்தம கற்றவும்
முந்து தேசிகன் ஆகிநல் முத்தி நல்கவும் எய்தினோர்
இந்த மாதவ ரலதிலை யென்று மக்கள் துதித்தனர்.

(அ - ரை.) தாணு ஆகிய - எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடு ஆகிய. முந்து - முதன்மையை உடைய. தேசிகனும் - ஆசிரியனும். (சஅ)

விமலை கூறி முடித்தல்

ஆத லாலெழில் அல்லமன் அருவி னுறு கின்றது
வாத மாறுநன் முத்திதான் மலைத ருங்கொடி அறிதியென்
றோதி னரன் அதுபொழு துடனி ருந்தனன் என்றவண்
மேதை மாயை அறிந்திட விமலை கூறினள் என்பவே.

(அ - ரை.) உறுகின்றது - அடைகின்றது. வாதம் மாறும் - வாதித்தல் இல்லாத. மலை தருங்கொடி : இறைவி. அரன் - சிவன். (சக)

அல்லமர் அன்பர் உள்ளத்தில் விளங்குவர்

எள்ளில் எண்ணெய் எனப்பட ரிந்த னத்தெரி யென்னவாய்
விள்ளு மென்மலர் மணமென விரவி யெங்கணும் நிற்பினும்
வள்ளல் அல்லமன் அன்பர்தம் மனம டைந்து விளங்குவன்
தெள்ளும் இன்சுவை விம்முபால் திரள்மு லைக்கனின் ஒழுகல்போல்.

(அ - ரை.) இந்தனத்து எரி - விறகில் நெருப்பு. விள்ளும் - வாய் மலரும். விரவி - கலந்து. தெள்ளும் இன் சுவை விம்மு - தெள்ளிய இனிய சுவை மிகுந்த. திரள் - திரண்ட. (சo)

ஆகுவது விமலை கதி முடிந்தது.

கதி ௩-க்குச் செய்யுள் - ௩௫௩.

———

## எ. மாயை கோலாகல கதி

[இக் கதிக்கண், மாயை விமலையைப் பார்த்து அல்லம தேவரை எவ்வாறு அடையலாம் என்று கேட்டலும், இறைவழிபாட்டால் அல்லம தேவரை அடையலாமென்று விமலை கூறுதலும், நான் இறைவனை வழிபட்டேன்; அதனாற் பயனில்லை என்று மாயை பதிலளித்தலும், இறை வழிபாடு பயனில்லையென்றதைக் கேட்ட விமலை கலங்கி, இறை வழிபாடில்லாமல் யாருக்கும் எக்காரியமும் கைகூடாது என்றலும், தேவர்கோன் முதலிய தேவர்கள் வழிபட்ட கோயிலை நீ நிலவுலகில் பார்க்க வில்லையோ என்று கேட்டலும், மக்கட் பேற்றை யடைந்தும் இறைவழிபாடற்றவர்கள் மிகவும் இழிந்த பிறப்பினர் என்றலும், இறைவழிபாட்டைக் குருமுகமாக வுணர்ந்து செய்யில் பயனேற்படுமென்றலும், அன்பின்றிச் செய்யும் வழிபாட்டால் பயன் ஏற்படாதென்றலும், நீ செய்த வழிபாட்டில் ஏதோ தவறு நேரிட்டிருக்கிறதென்றலும், மாயை தான் காமன் கணைக்கு ஆளானதைத் தெரியப்படுத்தலும், மாயை விமலையைத் தன்னுடன் கோயிலுக்கு அழைத்துக்கொண்டு சென்று அல்லம தேவரைக் காட்டுதலும், விமலையால் அந்த அல்லம தேவரே இறைவன் கூறுன அல்லம தேவர் என்பதை யுணர்ந்து அவரைத் தழுவ முயலுதலும், மாயையின் கருத்தை யுணர்ந்த அல்லம தேவர் மத்தளத்தை எறிந்து விட்டு ஓடுதலும், மாயை விமலை முதலிய மகளிர் அல்லம தேவரைத் தேடிப் பாலை நிலத்தில் அலைந்து மிகவும் வருந்துதலும், மாயை முதலியோரின் முன்னர் அல்லம தேவர் எதிர்ப்பட்டு மாயையுடன் சொற்போர் விடுதலும், மாயை அல்லம தேவரைப் பற்ற முயலுதலும், அல்லம தேவர் மறைந்துவிடுதலும், முனிவர்கள் அல்லம தேவரைப் போற்றுதலும் ஆகிய செய்திகள் விரித்துரைக்கப் படுகின்றன.]

நூலாசிரியர் கூறல்

நல்லெழில் விமலைஇன் னணம்நவின்றிட
முல்லைவெண் ணகைவரு முயற்சி எண்ணியே
புல்லுவன் அவனையென் றெழுந்த போதினில்
அல்லமன் அகன்றமை அறியக் கூறுவாம்.

(அ - ரை.) இன்னணம் - இவ்வாறாக. நவின்றிட - சொல்ல. முல்லை வெண் நகை - முல்லை மலர்போலும் வெள்ளிய பற்களையுடைய மாயை. புல்லுவன் - தழுவுவேன். (க)

### மாயை, விமலையை வினவல்

முகிழ்மதி அணிபவன் முதல்விக் கோதிய
வகைபெற விமலைதான் வகுப்ப மாயைகேட்
டகநெகிழ் வுற்றநாம் அல்லமப்பெருந்
தகைதனை அடைவதெவ் வாறுசாற் றென்றாள்.

(அ - ரை.) முகிழ்மதி - இளந் திங்கள். முதல்வி - இறைவி. வகைபெற - விரிவு தோன்ற. வகுப்ப - சொல்ல. அகம் - உள்ளம். நெகிழ்வுற்று - தளர்ந்து. தகைதனை - தகுதியுடையவனை. (உ)

### விமலை, இறைவழிபாட்டால் அல்லமர் தோன்றுவர் எனல்

மழுவலம் உயரிய வள்ளல் வந்தனை
அழகுற இயற்றினை ஆயின் அல்லமன்
விழியெதிர் தோன்றிநீ மனத்து வேண்டிய
தொழிவற நல்குவன் உனக்கென் றோதினள்.

(அ - ரை.) மழு - மழுப்படையினை. வலம் - வலப் பக்கத்தில். உயரிய - உயர்த்திய. வள்ளல்-இறைவன். ஒழிவற - முற்றும். (கூ)

### அதனாற் பயனில்லையென மாயை கூறுதல்

முதல்விநீ உரைசெயும் முன்ன மேயருள்
மதுகைநா யகன்றனை வழிபட் டேத்தினேன்
அதுதரும் பயனிலை அறிந்து ளேனெனப்
புதுமயல் முழ்கினள் புலர்ந்து கூறினள்.

(அ - ரை.) முதல்வி - தலைவியாகிய விமலையே. புதுமயல் - புதிதாகத் தோன்றிய காதல் மயக்கம். புலர்ந்து - மனம் வாடி. (௪)

### அதுகேட்ட விமலை கலக்கமுறல்

வெருவற இவளக விழியி லாமையால்
பரசிவ பூசனைப் பயனில் என்றனள்
அரகர என்றுகா தங்கை வைத்திஃ
துரைசெயும் விமலைதன் உளங்க லங்கியே.

(அ - ரை.) வெருவு அற - அச்சமில்லாமல். அகவிழி - உளக் கண். அரகர - சிவசிவ. காது அங்கை வைத்து - காதினிடத்து உள்ளங்கையால் பொத்தி. (௫)

இறைவழிபாடின்றி ஒன்றும் நடவாதெனல்

பயனிலை அருச்சனை பயின்றும் என்றனை
அயனரி முதலிய அமரர்க் காயினும்
நயமொடு சதாசிவ நாதன் பூசனை
முயலுதல் அன்றியோர் எண்ணம் முற்றுமோ.

(அ - ரை.) பயின்றும் - செய்தும். அயன் - நான்முகன். அரி - திருமால். முயலுதல் அன்றி - செய்தால் அல்லாமல். முற்றுமோ - நிறைவேறுமோ. (சு)

தேவர்கோன் முதலியோர் வழிபட்ட கோவில்களைப் பார்க்கவில்லையோ எனல்

வாசவன் அரியயன் வான நாட்டுளோர்
பாசமில் முனிவரர் பலரும் மண்ணிடைப்
பூசனை விதிமுறை புரிந்த ஆலயம்
காசணி அல்குலாய் காண்கி லாய்கொலோ.

(அ - ரை.) வாசவன் - தேவர்கோன். பாசம் இல்-பந்தம் இல்லாத. விதிமுறை - ஆகம முறைப்படி. காசு அணி - மேகலையை அணிந்த. (எ)

மலைமகள் முதலியோர் வழிபட்ட கோயிலைக் காண்கிலையோ நீ எனல்

மலைமகள் சூரர மகளிர் பாற்கடல்
அலைமகள் முனிவரில் லறக்கி ழத்தியர்
கலைமகள் விழிநுதற் கடவுட் பூசையால்
நிலைமைகள் அடைந்தமை நினைந்தி லாய்கொலோ.

(அ - ரை.) சூர் அர மகளிர் - தெய்வப் பெண்கள். பாற்கடல் அலைமகள் - திருமகள். நிலைமைகள் - உயர்ந்த நல்லிடங்கள். (அ)

இறைவழிபாட்டால் எல்லாப்பேறும் எய்தலாமெனல்

சித்தியும் ஆயுளுஞ் சிறப்புங் காமிய
புத்தியர் அடைவரப் புத்தி நீக்கினோர்
முத்தியை அடைவரெம் முதல்வன் பூசையால்
சத்தியம் சத்தியம் தளர்ம ருங்குலாய்.

(அ - ரை.) சித்தியும் - அணிமா, மகிமா, லகிமா, கரிமா முதலிய எண்வகைப் பேறுகளையும். காமிய புத்தியர் - இம்மைச் செல்வம்

மக்கட் பேறு முதலியவற்றில் அவாவுடையோர். முத்தியை - வீடு பேற்றை. சத்தியம் சத்தியம் - உண்மை உண்மை: அடுக்கு மொழி. தளர்மருங்குலாய் - தளருகின்ற இடையை உடையவனே. (க)

இறைவனை வழிபடாதவர் அறிவிலார் எனல்

பீடுறு மானிடப் பிறப்பு வாய்த்துநல்
ஏடவிழ் மலரினுல் இறையைப் பூசியார்
பாடமை நாளெலாம் பாழ்க்கி றைப்பவர்
மூடரை எண்ணுங்கால் முந்தி நிற்பரே.

(அ - ரை.) பீடு உறும் - பெருமை பொருந்தும். ஏடு அவிழ் - இதழ்கள் விரிந்த. பாடு அமை - பெருமை பொருந்திய. பாழ்க்கு இறைப்பவர் - வீணாகக் கெடுப்பவர். முந்தி நிற்பர் - முதன்மையாக நிற்பர். (க0)

இறைவனை வழிபடுவோர் இறைவன் போன்றார் எனல்

காம்படு தோளிமுக் கண்ணன் தாள்மலர்
தேம்படு மலர்கொடு பூசை செய்பவர்
பாம்பொடு பழகினாப் பரமன் என்றவர்
பூம்பத மனமகிழ்ந் துலகம் போற்றுமே.

(அ - ரை.) காம்பு அடு தோளி - மூங்கிலை வென்ற தோளினையுடையவளே. தேம்படு - மணம் பொருந்திய. உலகம் போற்றும் - உயர்ந்தோர் போற்றுவார்கள். (கக)

இறைவனைப் போற்றார் நாயினும் கடையர் எனல்

நோய்ப்பிறப் பினைதகண் ணுதலைப் பூசியா
வாய்ப்புறத் தலைக்கொரு மதிபெ றாநர
னுய்ப்பிறப் புற்றதின் அறிஞர் எள்ளுறு
நாய்ப்பிறப் பாற்றவும் நன்று நன்றரோ.

(அ - ரை.) நோய் பிறப்பு - நோயும் பிறப்பும்; நோயைத் தரும் பிறப்பு எனினும் ஆம். வாய்ப்பு உற - பொருந்த. மதி பெறா - அறிவைப் பெற்றுக்கொள்ளாத. நரனாய்ப் பிறப்புற்றதின் - மனிதனாகப் பிறந்திருத்தலைப் பார்க்கினும். எள்ளுறு - இகழாத. ஆற்றவும் - மிகவும். நன்று நன்று; இழிவைக் குறிக்கவந்த அடுக்கு.

தலைக்குத் திங்களைப் பெற்றுக்கொள்ளுதல் எனப் பொருள் கூறி, இறைவழிபாட்டால் இறைநிலையை எய்துதல் என்பர் சிலர். (கஉ)

### சிவ வழிபாடு குருவின் ஆணைப்படி செய்தல் வேண்டும்

பொருவிலி ஆகமம் புகன்ற மந்திரக்
கிரியைகள் வழுவறக் கிளக்கும் நல்லருள்
குருபரன் அருளினுற் கொண்டு செய்குநர்
பரசிவ பூசனைப் பயனை நண்ணுவார்.

(அ - ரை.) பொருவு இலி ஆகமம் - ஒப்பில்லாத சிவாகமம். வழுவு அற - குற்றமற. கிளக்கும் - சொல்லும். நண்ணுவார் - அடைவார். (கக)

### அன்பில்லா வழிபாடு வீண் எனல்

அண்ணல்ஐம் முகங்களும் அருளும் ஆகமம்
நண்ணிய விதிமுறை நன்கு செய்யினும்
எண்ணரும் அன்புளத் தில்லை யேயெனில்
பண்ணிய பூசனை பயன்த ராதரோ.

(அ - ரை.) அண்ணல் - பரமசிவன். நண்ணிய - பொருந்திய. எண்ண அரும் - அளவிடப்படாத. ஐம்முகங்கள் - ஈசானம், தற்புருடம், வாமம், அகோரம், சத்தியோசாதம் என்னும் இறைவனின் ஐந்து முகங்கள் (கஉ)

### தன் இயல் முதலியன ஆசிரியனால் அறிதல் வேண்டும்

பூசைசெய் தன்னையும் பூசிக் கப்படும்
ஈசன தியல்பையும் இறைவன் பூசைசெய்
ஆசறு பொருளையும் அறிவ றிந்துயர்
தேசிகன் அருளினுல் தெளிய வேண்டுமால்.

(அ - ரை) ஆசு அறு பொருள் - குற்றமற்ற வழிபாட்டுப் பொருள். அறிவு அறிந்து - அறியவேண்டிய எல்லாவற்றையும் உணர்ந்து. தெளிய வேண்டும் - உணரவேண்டும். (கங)

### உன் வழிபாட்டிற்குப் பயனில்லாதது ஏன் எனல்

மந்திர தந்திர வழுக்கள் வந்தவோ
சிந்தனை புறவிட யத்திற் சென்றதோ
பைந்தொடி பூசனை பயனில் என்றுநீ
நிந்தனை செய்ததென் நிகழ்த்து வாயென்முன்.

(அ - ரை.) சிந்தனை - மனம். புற விடயத்தில் - வெளிப்புலன்களில். பைந்தொடி - பசிய வளையல்களை யுடையவளே. (கச)

### மாயை பதிலுரைத்தல்

என்றுநல் விமலைமா தியம்பப் பூசையால்
வென்றிகொள் அல்லமன் விழியில் தோன்றிய
நன்றியை அறிந்திலன் தழுவி நிற்றலால்
வன்துயர் மனமுற மாயை கூறுவாள்.

(அ - ரை.) வென்றி கொள் - வெற்றியைக் கொண்ட. நன்றியை - நன்மையை. தழுவி நிற்றலால் - தன் கைக்கு அகப்படாது நிற்றலால். வன் துயர் - மிகுந்த துன்பம். (கஎ)

### இறைவழிபாடு பயனளிக்கவில்லை எனல்

### (வேறு)

ஒன்றையும் உணர்கி லேனுன் எங்குரு உரைத்த ஆற்றல்
இன்றள விலிங்க பூசை இயற்றியும் பயனென் றில்லை
என்றனள் பருவ முற்றோர்க் கிருமறை உபதே சிப்ப
தன்றிவன் மனிதர்க் கோதின் அதுபயன் படுவ துண்டோ.

(அ - ரை.) உணர்கிலேன் - அறியேன். பருவம் உற்றோர்க்கு - பக்குவப் பட்டவர்களுக்கு, இருமறை - பெரிய மறைப்பொருளை. வன் மனிதர் - பக்குவப்படாதவர். (கஅ)

### மாயை மயக்கங்கண்டு விமலை மனந்தளரல்

நெறிபல முறையு ரைத்து நினைந்திலள் அதனை அந்தோ
மறுகுறு மனத்த ளாகி மாயைமால் கொண் டிருந்தாள்
அறிவிலர்க் கறிவிப் பார்தாம் அறிவிலார் ஆவர் என்று
வெறிமலர் வணர்வார் கூந்தல் விமலைதன் மனந்த ளர்ந்து.

(அ - ரை.) முறை உரைத்தும் - முறைமையாகச் சொல்லியும். மறுகுறும் - கலங்கும். மால் - மயக்கம். வெறி மலர் - மணம் பொருந்திய மலர். வணர் - தாழ்ந்த. (கக)

### உண்மையைக் கூறுமாறு உரைத்தல்

இவன்மனங் கவன்றி ருந்த திதனைநான் அறிவல் என்று
குவிமுலை விமலை சொல்வாள் கோற்றொடி மடந்தாய்! நின்மேல்
அவிழ்மலர் அம்பு பட்ட தாயிருந் தன்றெ னக்கு
நவிலுதி மறையேல் அன்னை நகமகள் ஆணை என்றாள்.

(அ - ரை.) கவன்றிருந்தது - கவலைகொண்டிருந்தது. அறிவல் - அறிவேன். கோல்தொடி மடந்தாய் - அழகிய வளையலை யணிந்த மாயையே. அவிழ்மலர் அம்பு - மலர்ந்த மலர்க்கணை. நகமகள் - மலைமகள். (உ0)

மாயை தன் மையலைக் கூறுதல்

ஆணையை வெருவி மாயை அம்பலத் தாடா நின்ற
தாணுவும் உளம்வி ரும்பும் தண்ணுமைத் தொழிலான் கண்கட்
கூனெனும் அழகின் மிக்கான் ஒருவன்வந் தனனன் னிணைக்
காணலும் எனைநான் காணேன் என்றனள் கற்றூர் போல.

(அ - ரை.) வெருவி – அஞ்சி. தாணுவும் - கடவுளும். தண்ணுமைத் தொழிலான் - மத்தளத் தொழிலையுடையவன். ஊண் - உணவு. மோக மேலீட்டினால் மாயை தன்னையுங் காணளாயினள். (உக)

அன்னான் பெயர் அல்லமதேவன் என்றல்

அல்லமன் அனையன் நாமம் அவன்றனைக் கலதென் நெஞ்சக்
கல்லுரு குருது முக்கண் கடவுளுக் கன்றி மேரு
வில்லுரு ஆவ துண்டோ விளங்கிழாய் நின்னைக் காணும்
நல்வினை ஒன்றி ருப்ப நானுயிர் தரித்தேன் என்றாள்.

(அ - ரை.) அனையன் - அத்தகையோன். வில் உரு - வில்வடிவம். விளங்கு இழாய் - விளங்குகின்ற அணிகலன்களையுடையவளே. உயிர் தரித்தேன் - உயிரைத் தாங்கியிருந்தேன். (உஉ)

நீ கூறியோனே நான் கூறிய அல்லமர் எனல்

நீ நவில் அல்ல மன்வேல் நெடுங்கண்வாள் நுதல்ம டந்தாய்
நானவில் அல்ல மன்றான் நச்சுமுன் தனக்குத் தக்க
மானிட வடிவங் கொண்டு வந்தனன் போலும் அன்னான்
ஞானநல் விழியின் அன்றி நயந்துதன் உண்மை காட்டான்.

(அ - ரை.) நீ நவில் - நீ சொல்லிய நச்சும் உன் தனக்குத் தக்க - விரும்பிய உனக்குத் தகுந்த. நயந்து - விரும்பி. (உ௩)

அவன் மத்தளம் அடிப்பவன் எனல்

என்னநல் விமலை கூற இலங்கிலை நெடுவேற் கண்ணி
தன்னிகர் அல்ல மன்சச் சிதானந்த சம்பு என்ருய்
அன்னவன் அலனி வன்றான் மத்தள அல்ல மன்காண்
முன்னெடு பின்ம யங்க மொழிந்தனை அணங்கே என்றான்.

(அ - ரை.) இலங்கு - விளங்குகின்ற. இலை - இலைத் தொழில் அமைந்த. தன் நிகர் அல்லமன் - தனக்குத் தானே நிகராகிய அல்லமன். சச்சிதானந்த சம்பு - உண்மை, அறிவு, இன்ப வடிவினனும் எவர்க்கும் இன்பஞ் செய்வோன். (உ௪)

அல்லம தேவர் ஆடல்களை நின்னால் அறியமுடியாது எனல்

வேண்டிய வடிவங் கொண்டு வேண்டிய வாறு செய்யும்
ஆண்டருள் அல்ல மற்கீ தாமென்றும் ஆகா தென்றும்
கோண்தரு நினது நெஞ்சாற் குறித்திடப் படுவ துண்டோ
பூண்திகழ் இளமென் கொங்கைப் பொற்றொடி என்று சொன்னான்.

(அ - ரை.) ஆண்டு அருள் - யாவரையும் அடிமைகொண்டருளும். கோண்தரு - கோணலாக மாறுபட்ட. குறித்திடப்படுவது - உணரப்படுவது. பூண் திகழ் - அணிகலன்கள் விளங்குகின்ற. (உ௧)

அல்லம தேவரை அரங்கிற் காட்டுகிறேன் எனல்

தருக்கநின் னுடனு ரைத்தல் தகாதினி அரங்கில் என்றன்
கருத்துறும் அனையன் தன்னைக் காட்டுவல் கண்டு நீபின்
புரைத்தருள் இனையன் என்ன உணர்ந்தறி வரியன் என்று
தெரித்தவன் ஆயின் அன்னான் திறலினைக் காண்பல் என்றாள்.

(அ - ரை) தருக்கம் - சொற்போர். கருத்து உறும் - உள்ளத்திற் பொருந்திய. காட்டுவல் - காட்டுவேன். இனையன் என்ன - இத்தன்மையனென்ற. உணர்ந்து அறிவரியன் - தெரிந்து அறிதற்கு அருமையானேன். தெரித்தவனாயின் - கூறிய அல்லம தேவனாயின். திறலினை - வலிமையினை. (உ௨)

மாயை, விமலையைக் கோவிலுக்குக் கூட்டிச் செல்லல்

கண்டுகொள் மணியின் தன்மை
காட்டுதற் கறிந்து வோரைக்
கொண்டுசெல் பவர்போல் வந்த
கோதையை உடன்கொண் டேகிப்
பண்டுதன் பூசைக் கெய்தும்
பரிசுபோல் மகளிர் சூழத்
தொண்டையங் கனிவாய் மாயை
சுடர்மணிக் கோயில் புக்காள்.

(அ - ரை.) கண்டுகொள் மணியின் தன்மை - பார்த்து வாங்குகின்ற மணியின் இயல்பை. காட்டுதற்கு - தெரிந்து சொல்வதற்கு. வந்த கோதையை - விமலையை. பண்டு - முன்பு. எய்தும் - செல்லும். பரிசுபோல் - தன்மையைப்போல. தொண்டை அம் கனிவாய் மாயை - அழகிய கோவைக் கனிபோன்ற வாயையுடைய மாயை. (உ௩)

### மாயை நாடக அரங்கிற்கு வருதல்

அருச்சனை முன்பு போனான் ருற்றுபு மதுகை நாதன்
திருச்சர ணங்கள் போற்றிச் சேயரி நெடுங்கண் செவ்வாய்
விரைத்துணர் மலர்மென் கூந்தல் விமலைமா தோடும் வந்து
நிருத்தமண் டபம்பு குந்தாள் நிரைவளைத் தவிர்க்கை மாயை.

(அ - ரை.) நன்று ஆற்றுபு-நன்றாகச் செய்து. திருச்சரணங்கள்— திருவடிகள். சேயரி - செவ்வரி. விரைத்துணர் மலர்மென் கூந்தல் — மணம் பொருந்திய கொத்தாகிய பூவையணிந்த மெல்லிய கூந்தல். (உஅ)

### அல்லமர் மத்தளமடிக்க மாயை கூத்தாடல்

அல்லமர் இவர்தாம் தாமென் றறிதர வறிதி ராமல்
சொல்லுக எனவ டிக்குந் தோற்றம்போல் மத்த ளத்தை
வல்லவன் அறைத லோடும் மாயைநெஞ் சூச லாடச்
சில்லரி மணிச்சி லம்பு சிலம்புற ஆடு கின்றாள்.

(அ - ரை.) அறிதர - அறியும்படி. வறிது - சும்மா. தோற்றம் போல் - காட்சிபோல். வல்லவன் எல்லாம் - வல்லவராகிய அல்லம தேவர். அறைதலோடும் - அடித்தலோடும். சில் அரி - சிலவாய பரலையுடைய. (உக)

### மாயையின் கண்ணும் கருத்தும்

முன்னுற நின்ற ஞான மூர்த்திமேல் விழியும் ஆர்த்துப்
பின்னுற நின்ற மூர்த்தி மால்மிசைப் பெயரும் நெஞ்சு
மன்னுற இருத்தி நின்று மாயைதான் நடித்தாள் கண்டோர்
தன்னய னமுமால் நெஞ்சுந் தன்மிசை வந்து வீழ.

(அ - ரை.) ஞானமூர்த்திமேல் - மதுகேசன்மேல். ஆர்த்து - மத்தளம் அடித்து. மூர்த்தி மால்மிசை - அல்லம தேவரிடத்தில். பெயரும் - பலவற்றிற்கும் பெயர்ந்து செல்கிற. மன்னுற இருத்தி - நிலை பெற வைத்து. கண்டோர் - பார்த்தவர்களுடைய. நயனமும்— கண்களும். மால் நெஞ்சம் - மயக்கம் பொருந்திய மனமும். (கூ௦)

### மாயையின் வழிபாட்டிற்கேற்ப அல்லமர் விளங்கல்

அரத்தம துறுப லிங்கா அரிமதர் மழைக்கண் மாயை
கருத்துறு காமம் தன்பாற் கானுறத் தோன்றி நின்றான்
வருத்துறு செயல்கொள் மாயை மருவிய குணம டுத்துப்
பரத்தினில் தோன்றும் என்று பகர்வதும் உண்மை யன்றே.

(அ - ரை.) அரத்தம்-செந்நிறம். அளி-கோடு. மதர்-களிப்பு. மழை - குளிர்ச்சி. கருத்துஉறு காமம் - கருத்தில் கொண்ட விழைவு. மருவிய - பொருந்திய. பரத்தினில் - பரம் பொருளிடத்தில். உண்மை அன்றே - மெய்ம்மையல்லவோ? கண்ணாடி தன்னையடுத்த பொருளைக் காட்டுதல் போல பரவடிவினராகிய அல்லம தேவர் மாயையின் காமிய வழிபாட்டிற்குத் தக்கபடி தம்மைக் காட்டியருளினார். (கூக)

## விமலைக்கு அல்லமரைக் காட்ட மாயை நாணுதல்

கூத்துக்குப் புகுந்த நம்பி கொட்டுக்கு நாணு ருமல்
சீர்த்தப்பு நடந வின்று சிந்தைவே ருகி நின்ருள்
வார்த்தைக்குட் படாத ஞான வாரியை வாயாற் சொல்ல
மூத்துக்கு மதியை வென்ற முகத்தியர் குழாத்துள் நாணி.

(அ - ரை.) கூத்துக்கு - ஆட்டுவித்தலின் பொருட்டு. நம்பி - அல்லம தேவர். கொட்டுக்கு - மத்தள அடிக்கு. சீர்த்தப்பு - ஒழுங் கில்லாத. நடம் நவின்று - கூத்தினையாடி. மூத்து உக்கு - முதிர்ந்து குறைந்த. முகத்தியர் குழாம் - மகளிர் கூட்டம். மத்தள அடிக்குத் தகக் கூத்தியற்றத் தவறிய மாயை அதற்குச் சிறிதும் நாணமல் அல்லம தேவர் இவர் தாம் என்று விமலைக்குச் சொல்லுதற்கு மட்டும் நாணினுள் என்க. (கூஉ)

## விமலைக்கு அல்லமரைக் கடைக்கண்ணால் அறிவித்தல்

கையொடு செல்லா நின்ற கடைக்கணுன் மாயை காட்ட
ஐயனை விமலை கண்ணுற் றதிசயம் உடைய ளாகி
வையக மதனின் மிக்க மனிதருள் இனையன் போல
மெய்யழ குடையான் தன்னை வேறுகண் டிலனென் றுள்ளி.

(அ - ரை.) ஐயனை - அல்லம தேவரை. இனையன்போல - இத் தன்மையுடையவன்போல. உள்ளி - எண்ணி. (கூக)

## அல்லமர் விமலையையும் மயங்கச் செய்தல்

மாறரும் அமல னேயிவ் வடிவுகொண் டவள்செய் பூசைப்
பேறரு ளுதற்குற் ருனே பெருந்தவத் தாற்பி றந்த
வேறொரு மகனே என்று விமலையை யத்த ளாகித்
தேறிலள் நிற்ப மாயஞ் செய்துநின் றனனெங் கோமான்.

(அ - ரை.) மால்தரும் - விருப்பத்தைச் செய்யும். ஐயத்தள் - ஐயமுடையளாய். தேறிலள் - தெளியாதவளாய். மாயம் - வஞ்சம்; மயக்கம். (கூஎ)

விமலையே மயங்கினால் மாயையைப் பற்றிச் சொல்லுவதென்ன

தமமில்வே லையினிற் சேய்மைத் தடத்தொரு வனைக்கண் டன்னான்
அமைவுற வருதல் போதல் ஐயமுற் றறியார் போல
நிமலனை விகாரி என்றும் நிகழ்நிரு விகாரி என்றும்
விமலையே மயங்கும் என்னின் மாயையை வெறுப்ப தென்னே.

(அ - ரை.) தமம் இல் வேலையினில் - இருளில்லாத பொழுதில். சேய்மைத் தடத்து - தொலைவான இடத்து. அமைவுற - பொருந்த. விகாரி - விகாரமுடையவன். நிருவிகாரி - விகார மில்லாதவன். கருவயப்படாது தோன்றிய சிறப்புத் தோன்ற விமலையே என்று பிரி நிலை ஏகாரங் கொடுத்தார். (கூஅ)

அல்லமரை மாயைக்கு விமலை கண்ணால் காட்டல்

நீர்நிலை கோலாற் காணும் நீர்மைபோல் இங்கு நின்றேன்
சீர்நிலை மாயை தன்னால் தெளிவுற அறிவல் என்று
ஏர்நிலை வடிவ மாயைக் கினையனே அலமன் என்று
வார்நிலை முலைம டந்தை வடிக்கணாற் காட்டி னாளால்.

(அ - ரை.) நீர்நிலை - தண்ணீரின் ஆழம். கோல் - தடி. நீர்மை - தன்மை. ஏர்நிலை வடிவம் - அழகின் இருப்பிடமான உருவம். வார்நிலை - கச்சணிந்த. வடிக்கண் - கூர்மை பொருந்திய கண். (கூக)

மாயை உண்மை தெளிதல்

கண்ணினாற் கேட்குஞ் சீர்சால் கங்கணத் திறைவன் முன்னர்
கண்ணினாற் குமரர் நெஞ்சக் கட்டவிழ்த் தாடு வாட்குக்
கண்ணினாற் கூற வந்த கயிலைமா தறிந்தாள் அன்னாள்
கண்ணினாற் கண்டு ஞானக் கண்ணினாற் காண்பான் தன்னை.

(அ - ரை.) கண்ணினால் கேட்கும் - கண்ணையே காதாகக் கொண்டறிகின்ற. சீர்சால் - சிறப்புப் பொருந்திய. கங்கணம் - காப்பு. கண்ணினால் - தன் கண் பார்வையால். நெஞ்சக்கட்டு அவிழ்த்து - மனப் பாசத்தை நீக்கி. வந்த கைலை மாது கண்ணினாற் கூற - விமலை குறிப்பாற் காட்ட. அறிவுக் கண்ணினாற் காணப் பெறும் பரனை விமலை கடைக்கண்ணால் காட்ட, மாயை தன்னுடைய ஊனக்கண்ணாலும் அறிவுக் கண்ணாலும் கண்டுணர்ந்தாள் என்க.

மாயை அல்லம தேவரைத் தழுவ முயலுதல்

வல்லிதன் மனத்திற் காமம் மாய்ந்துவண் கயிலைக் குன்றில்
சொல்லிய தூள்நெஞ் சத்தில் தோன்றலுஞ் சுழன்று டிப்போய்
அல்லமன் மீது வீழ்வாள் ஆகமேல் வீழ்ந்து பற்றிப்
புல்லிய நினைந்து சென்றாள் புல்லிய நெறியில் நின்றாள்.

(அ - ரை.) வல்லி - கொடி போன்றவளாகிய மாயை. காமம் மாய்ந்து - இன்பநோக்கம் அழிந்து. வண் - வளம் பொருந்திய. சுழன்று ஆடிப்போய் - சுற்றியாடிச் சென்று. புல்லிய - தழுவிக் கொள்ள. புல்லிய - இழிந்த. நெறியில் - வழியில். (கஅ)

அல்லமர் மத்தளத்தை எறிந்துவிட்டு ஓடுதல்

கண்டனன் அவள் கருத்தைக் காரிகை மனத்திற் காமம்
மண்டலம் உணரக் காட்டி வழிக்கொள்வல் என்று எத்தில்
கொண்டுகை தவறி வீழ்ந்த குடமென மத்த ளந்தான்
விண்டுக எறிந்து போகட் டோடினன் விரைந்து வீரன்.

(அ - ரை.) காரிகை மனத்தில் காமம் - மாயையின் உள்ளத்தி லுள்ள இன்ப நோக்கம். மண்தலம் உணரக்காட்டி - இவ்வுலகம் அறியச்செய்து. வழிக்கொள்வல் - போவேன் விண்டு உக - உடைந்து சிதற. போகட்டு - போட்டுவிட்டு. வீரன் - அல்லம தேவர். (கக)

அதைக்கண்டு மாதர்கள் வியப்படைதல்

இத்தனை ஆட்டம் எல்லாம் இவட்கித னுலென் றெண்ணி
மத்தளம் அதனை வீசிப் போகல்போல் வள்ளல் போகப்
பித்தடைந் தனன்கொல் என்று பித்துறீஇ மாத ரெல்லாம்
கைத்தளிர் விரன்மு டக்கிக் கவுளடி வைத்து நின்றார்.

(அ - ரை.) வள்ளல்போக - அல்லம தேவர் செல்ல. பித்து உறீஇ - மயக்கங்கொண்டு. கைத்தளிர் விரல் - தளிர்போன்ற கை விரல். கவுள் அடி - கன்னத்தின் கீழ். (௨௦)

தோழிகள் வருந்தல்

பறையடித் தின்று காறும் மறைத்தவிப் பாவை செய்கை
பறையுடைத் தொழிந்து காலை பாரெலாம் அறியச் செய்தான்
துறையடிக் களிநல் யானைக் கருங்கழற் சீற்றத் துப்பின்
இறைமகட் குயிர்நி லாதென் றிகுளையர் மனமு லைந்தார்.

(அ - ரை.) பறை அடித்து - மத்தளம் அடித்து. இன்று காறும் இதுவரை. பாவை - மாயை: ஆகுபெயர். கறை அடி-உரல் போன்ற கால்களையுடைய. கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக் கழல். சீற்றத்துப்பின்-சினத்தையும் வலிமையையும் உடைய, இகுளையர் - தோழிப்பெண்கள். உளைந்தார் - வருந்தினார்கள். (சக)

மாயை வருந்துதல்

சிலைமதன் இன்று செய்யுஞ் செருவினுக் கன்றி வெள்ளி
மலைதனில் இயம்பு மாற்றம் வழுவிற்றென் றுளம ழிந்தாள்
கலவிசெய் தலைவன் நீங்கக் கைப்பொருட் கழுதி ரங்கும்
முலைவிலை மகளிர் போல முத்தவாள் நகைப்பொற் கொம்பு.

(அ - ரை.) சிலைமதன் - காமன். செரு - காமப்போர். இயம்பும் மாற்றம் - சூள் மொழி. வழுவிற்று - தவறியது. கைப் பொருட்கு- வரவேண்டிய பொருளுக்கு. முத்தவாள் நகை - முத்தம்போன்ற வெள்ளிய பற்களையுடைய. பொன் கொம்பு - பொன் கொம்பைப் போன்ற மாயை. (சஉ)

விமலை, அல்லம தேவரைத் தேடுவோம் என்றல்

மாலைவாய் மரையே போலும் மாயைவாள் முகத்தைக் கண்டு
வேலுலாங் கருங்கண் செவ்வாய் விமலைமா தவளு ளத்தில்
சாலுமார் அஞர றிந்து தடங்கணாய் தளரேல் நீநின்
சீலநா யகன்போந் தேத்தும் தேடிநாம் காண்போம் என்றாள்.

(அ - ரை.) மாலைவாய் - மாலைக்காலத்து. மரை - தாமரை. வாள் முகம் - ஒளிதங்கிய முகம். வேல் உலாம் - வேலைப்போல் விளங்குகின்ற. சாலும் ஆர் அஞர் - மிகவும் நிறைந்த துன்பம். சீல நாயகன் - நல்லொழுக்கமுடைய தலைவன். தேத்தும் - தேயத்தும்; இடத்தும்: இடைக்குறை. மரை: முதற்குறை. (சங)

மாயை, அல்லமரைத் தேடிச் செல்லல்

சிலைநுதல் விமலை சொல்லால் தெளிந்துளம் இறையை நோக்கிக்
கலைதொடர் உழைபோல் மாயை காட்டினில் தொடர்ந்து போனாள்
மலர்தொடர் அளிகள் போல மாயையைத் தொடர்ந்து சென்றார்
கொலைபடும் அயில மர்த்துக் குழைபொரு தடங்கண் நல்லார்.

(அ - ரை.) சிலை நுதல் - விற்போன்ற நெற்றி. இறையை நோக்கி - அல்லம தேவரைத் தேடிக்கொண்டு. கலை தொடர் உழை போல் - ஆண் மானைத் தொடருகின்ற பெண்மான்போல். அளிகள் -

வண்டுகள். கொலைபடும் - கொல்லுதலையுடைய. அயில் அமர்த்து-வேலோடு போர்செய்து, குழைபொரு - காதுக்குண்டலம் வரை சென்று போர் செய்கின்ற. (சுஅ)

மாயையின் செயலைக்கண்டு மக்கள் இகழ்தல்

மெய்த்தவம் பயின்று பெற்று வேந்தர்க்குங் கொடாமல் முக்கண்
அத்தனுக் கென்று வாளா அரசன்வைத் திருந்த பாவை
மத்தளி கன்பின் போனுள் மகள்தனை அந்தோ ஆண்டு
பத்தின்மேல் வைத்தி ருத்தல் பாவமென் றிகழ்ந்தார் கண்டோர்.

(அ - ரை.) மெய்த்தவம் பயின்று - உண்மையான தவத்தைச் செய்து. முக்கண் அத்தன் - இறைவன். வாளா-சும்மா. பாவை - பாவை போல்பவளாகிய மாயை. பத்தின்மேல் - பத்து ஆண்டுக்கு மேற்சென்றும்: தொகைக் குறிப்புச் சொல். வைத்திருத்தல் - திருமணஞ்செய்து கொடாது வைத்திருத்தல். (சுகூ)

காமத்தின் சிறுமை

பாவமும் பழியும் நல்கும் பல்வகைப் புகழ றுங்கள்
யாவையும் அழிக்கும் எய்தும் இன்பமும் அதனு லெய்தும்
நோவுநன் மரபுஞ் செய்பு நோன்புநல் லொழுக்கு மேன்மை
சாவுமென் னுருமல் நிற்கும் தயங்குபுன் காமம் என்பார்.

(அ - ரை.) நல்கும் - கொடுக்கும். எய்தும் இன்பமும் - தன்னுல் வருஞ் சிற்றின்பத்தையும். அதனுல் எய்தும் நோவும் - அவ்வின்பத்தால் வருந்துன்பத்தையும், நல்மரபும்-நல்ல வழியையும். தயங்கு-விளங்குகிற. புன் காமம் - இழிந்த காமம். (எ0)

மாயை, அல்லமரையே குறிக்கொண்டு செல்லல்

(வேறு)

பஞ்சின் மேல்மிதிப் பினும்பதை பதைக்குமென் பதங்கள்
அஞ்சு ருன்பரல் மிதிப்பதை நீருண அவாவாள்
விஞ்சு ஞாயிறு முதிர்கதிர் வெதுப்பினை வெருவாள்
நெஞ்சி யோகிமேல் இருத்தியந் திரைவளை சென்ருள்.

(அ-ரை.) பதைபதைக்கும் - துடித்து வருந்துகின்ற. பரல் - பருக்கைக் கற்கள். அவாவாள் - விரும்பாள். விஞ்சு ஞாயிறு-மிகுந்த வெப்பத்தினையுடைய ஞாயிற்றின். முதிர் கதிர் - முதிர்ந்த ஒளிக் கற்றைகள். வெதுப்பினை - வெப்பத்தை. வெருவாள் - அஞ்சாள். திரைவளை: வரிசையான வளையல்களையுடைய மாயை. (எக)

### மாயையைப் பாலைநிலஞ் சுடாமைக்குக் காரணம்

காம வெந்தழ லாலுடல் வெந்துளங் கரிந்த
கோம டந்தைய் லாலலை மேல்வரு குளிர்தண்
பூம டந்தையப் பாலையில் போமெனிற் புனலில்
தாமி ளங்கயல் சுடுமணல் வீழ்ந்தெனத் தளரும்.

(அ - ரை.) உளம் கரிந்த-உள்ளங் கருகிய. கோமடந்தை-மாயை. அலைமேல் வரும் - பாற்கடலில் பிறந்த. குளிர்தண் பூமடந்தை: திருமகள். புனல் - நீர். இளம் கயல் - இளமைபொருந்திய கெண்டை மீன். சுடுமணல் - வெப்பமேறிய மணல் மீது.

காமத்தீயால் உடலும் உள்ளமுங் கருகியிருந்தமையின் மாயை பாலைநில வெப்பத்தைத் தாங்கினாள். திருமகள் அப் பாலையில் அகப் படுவாளாயின் இளங்கயல் சுடுமண்ணில் அகப்பட்டாங்கு வருந்து வாள். (சஅ)

### பாலைநிலத்தின் வெம்மை மிகுதி

பான லங்கருங் கண்ணிபோ கியகொடும் பாலை
யானை தன்புழைக் கைநிகர் துளியிடை விடாமல்
வான நின்றுபெய் யினுந்தழற் பட்டவல் இரும்பின்
மேன கந்தெறி திவலைபோற் சுவறுறும் விரைந்து.

(அ - ரை.) பானல் அம் கருங்கண்ணி - கருங்குவளை மலரை யொத்த அழகிய கருமையான கண்களையுடைய மாயை. போகிய - சென்ற. புழைக்கை நிகர் - துதிக்கையை ஒத்த. துளி - நீர்த்தாரை களை. வானம் - முகிலானது. நின்று பெய்யினும் - நெடுங்காலம் இடைவிடாமல் நின்று பெய்தாலும். தழற்பட்ட-தீயிற்காய்ந்த. நகம் தெறி திவலைபோல் - நகத்தால் தெறித்த நீர்த்துளிபோல. சுவறு றும் - காய்ந்துபோம். (சக)

### திருமால் உலகை விழுங்கியபோது பாலையைக் கக்கினான் எனல்

மால ருந்திய போதுதன் வயிற்றிடை யிராதிப்
பாலை அன்றுடன் உமிழ்ந்திலனாகின்மெய் பதைத்து
வேலை யின்றலை வீழ்ந்தத னுளுமுண் வெண்ணெ
யாலும் வெந்தழல் தணிந்துயிர் உய்குவ னலனே.

(அ - ரை.) உடன் உமிழ்ந்திலனாகில் - உடனே வெளியே துப்பி யிராவிட்டால். வேலையின் தலை-பாற்கடலினிடத்தில். உண்-உண்ட. வெந்தழல் - வெப்பக்கொடுமை. உய்குவன் அலன் - பிழைத்திருக்க மாட்டான். (ரு0)

### மாயையைத் தொடர்ந்து சென்ற மாதர்களின் வருத்தம்

நாயின் நாவினீர் சிறுமுயற் குருளைகள் நக்கும்
தீய பாலையில் தனைமறந் தவசத்திற் சென்ற
மாயை மாதுபின் தொடர்ந்துசெல் மலர்முக மாதர்
வாயின் நீரறீஇக் கண்கணீர் சுரந்தன வந்து.

(அ - ரை.) நாவின் நீர் - நாவில் ஊறிவரும் நீர். குருளைகள் — குட்டிகள். அவசத்தில் - மயக்கத்தில். வாயின் நீர் அறீஇ-வாயினூறு நீரற்று.

வாயின் நீரற்றுக் கண்களில் கண்ணீர் சுரந்தன என்க. (௬௧)

### கானலை நீரென்று போய்க் களைத்து வருந்துதல்

கானல் நீரெனச் சிறிதிடங் கடிதுசென் றிளைப்பார்
மான னார்சிலர் வாய்க்கடை நாவினால் வருடித்
தானை ஓர்கர முகத்தெதிர் அசைத்துமெய் தளர்வார்
வேனில் ஆகொடி தென்றுதம் விதியினை வெறுப்பார்.

(அ - ரை.) கானல் நீர் என - மிகுந்த வெம்மையினால் நீர் போலத் தோன்றும் பேய்த்தேரினைத் தண்ணீர் என்று எண்ணி. சிறிது இடம் - சிறிது தூரம். கடிது சென்று - விரைந்துசென்று. வாய்க்கடை - கடைவாயை. தானை - முன்தானையை. ஓர் கரம் - ஒரு கையினால். முகத்து எதிர் அசைத்து - முகத்துக்கெதிரே வீசி. வேனில் - வேனிற்காலமானது. (௬௨)

### மாயைக்கு முன்னால் மான்கள் ஓடுதல்

மாதர் இவ்வணந் தொடர்ந்துபின் வரவெழில் மாயை
பாத தாமரை வருந்தின பாலையுள் நடந்தவ்
ஆதி நாயகன் தனைமறித் துதவிசெய் தறல்மேல்
ஓதி யோடுற வாவமென் றுழைகள்முன் னோடும்.

(அ - ரை.) ஆதிநாயகன் - அல்லம தேவர். மறித்து - மடக்கி. அறல்மேல் ஓதியோடு - கருமணலையொத்த கூந்தலையுடைய மாயையுடன். உழைகள் - மான்கள். உறவு + ஆவம் - உறவு கொள்வோம்.

காட்டிலுள்ள மான்கள் மாயையையும் அவளுடைய தோழி முதலாயினோரையுங் கண்டு மருண்டோடுங் காட்சி அல்லமதேவரை வழிமறித்து மாயைக்குக் காட்டி அவளோடு உறவு கொள்வோம் என்று எண்ணி ஓடுதலை ஒத்திருந்தது. (௬௩)

## மாயை வருதல்

கூந்தல் மேல்விரி முகில்தரக் கோபம்வாய் காட்ட
ஏந்து கொங்கையின் வடம்மலை அருவியை யேய்ப்பக்
காந்தள் அங்கைகள் தரவருங் காரெனக் கலாபம்
வாய்ந்த மஞ்ஞைகள் மகிழவந் தனள்பெரு வனத்தில்.

(அ - ரை.) மேல்விரி - மேலே பரந்த. முகில்தர - முகிலின் தோற்றத்தைத் தர. கோபம் - இந்திர கோபத்தை. வாய்காட்ட - உதடு காட்டவும். வடம் - முத்துமாலை. ஏய்ப்ப - ஒத்திருக்க. காந்தள் - காந்தள்மலரின் தோற்றத்தை. அங்கைதர - அழகிய கைகள் கொடுக்க. கார் என - கார் காலம் என மயங்கி. கலாபம் - தோகை. மாயையைக் கார்காலமாக உருவகஞ் செய்தமையின் இஃது, உருவக அணி. (௩௪)

## மாயைக்கு அஞ்சிய மாதவர் ஓட்டம்

சிங்க முங்கரி யும்பணி செயத்தவஞ் செய்யூ
அங்கு றுந்தவர் மாயைதன் முலையிடை ஆமா
தங்க முஞ்சிறு சிங்கமுங் கண்டுளந் தளர்ந்து
பொங்கு றுந்துய ரோடெழுந் திரிந்துபோ யினரால்.

(அ - ரை.) கரி - யானை. பணி - ஏவல். செய்யூ - செய்து. இரிந்து போயினர் - ஓடிப்போனார்கள்.

சிங்கமும் யானையும் தாம் ஏவியதைச் செய்யத் தவஞ் செய்து கொண்டிருந்த முனிவர்கள் மாயையின் கொங்கைகளாகிய யானைகளையும் இடையாகிய சிங்கத்தையும் கண்டு மிகுந்த துன்பத்தோடு ஓடினார்கள்: உருவக அணி. (௩௫)

## அல்லம தேவர் அருள்செய்ய எண்ணுதல்

'கொடிய வாள்வரி வேங்கையைக் கண்டமான் குழாம்போல்
'நெடிய வார்சடை முனிவரர் கலங்குறு நிலையும்
'தொடியு லாவுமென் தோள்மட வார்வரு துயரும்
முடியு மாறருள் செயநினைந் தனனருள் மூர்த்தி.

(அ - ரை.) வாள் வரி வேங்கை - வாள்போன்ற கோடுகளையுடைய புலி. மான்குழாம் - மான் கூட்டம். தொடி உலாவும் - வளையல்கள் உலாவுகின்ற. (௩௬)

அல்லமர், முனிவர்கட்கருளி மாயைமுன் வரல்

மாயை போகவேர் கணத்தினில் துரப்பனீர் மனத்தில்
நோயு றீரென் ஒருமுனி போல்நின்று நுவன்று
தூய மாதவர்க் கருள்செய்து தொல்லைநல் உருவாய்த்
தேயும் நுண்மருங் கணங்கெதிர் தோன்றினன் சிரித்து:

(அ - ரை.) மாயை போக-மாயை நீங்கும்படி. துரப்பன்-ஓட்டு வேன். நோய் உறீர் - வருத்தமடைய வேண்டா. நுவன்று-சொல்லி தொல்லைநல் உருவாய் - பழைய அல்லமதேவர் வடிவாய். நுண் மருங்கு - நுட்பமான இடை. அணங்கு - மாயை. (ஏ)

அல்லமரைக் கண்ட மாதர்கள் வருத்தம் நீங்கி மகிழ்தல்

பொங்கும் ஆரழல் வெஞ்சுரம் புக்கபூ வையர்க்குக்
கங்கை யாறெதிர்ந் தாலெனக் கண்ணெதிர் தோன்றும்
எங்கள் நாயகன் திருவடித் தாமரை இணையைத்
தங்கள் ஆகுலம் தீர்ந்துமெய் குளிர்தரச் சார்ந்தார்.

(அ - ரை.) பொங்கும் - மிகுந்த. அழல் வெம்சுரம் - நெருப்புப்போல் சுடுகின்ற வெப்பமுள்ள பாலைநிலம். பூவையர்க்கு-மாதர்களுக்கு எதிர்ந்தால் என - எதிர்ப்பட்டதுபோல. ஆகுலம் - வருத்தம். மெய்குளிர்தர - உடல் குளிர்ச்சியடையும்படி. சார்ந்தார் - அடைந்தார்கள். (௭௮)

'மாயையை ஏன் துறந்தாய்' என அல்லமரைத்
தோழியர் கேட்டல்

பெருக ளற்றினில் அழுந்தியங் கெழுபவன் பிடித்த
கரநெ கிழ்த்துவிட் டகல்பவன் போலிளங் காளாய்
விரைம லர்க்கணை பட்டுள நையுமெல் லியலை
அருள றத்துறந் தனையென்கொல் என்றனர் அவர்தாம்.

(அ - ரை.) அளற்றினில் - சேற்றில். கரம் நெகிழ்த்துவிட்டு - கையை நீக்கிவிட்டு. விரைமலர்க்கணை - மணந்தங்கிய பூவாளி. (௭௯)

அல்லமர், 'நீவிரே எம்மைத் துறந்தீர்' எனல்

பற்றி ஆயிடை விடுத்தது நீயிரே பற்றி
இற்றை நாளுமை விடுத்திலேன் இதனையிவ் வுலகம்
முற்று மோதுறுந் தம்பிழை மொழிகுநர் உளரோ
குற்ற நாடியே பிறரிடை கூறுநர் அல்லால்.

(அ - ரை.) பற்றி - பிடித்து. ஆயிடை - அவ்விடத்தில். இற்றை நாள் - இந்நாள் உரை. ஓதலும் - சொல்லும். மொழிகுநர் - சொல்பவர். ஏதிலர் இடை - பிறர் இடத்தில். (கo)

'இன்றுதான் நீ சினமடைந்தாய்' எனல்

என்ன ஓதலும் அல்லமன் ஏந்திழை மடவார்
மன்னன் மாமகன் மனத்தெழு காமநோய் வளரும்
முன்னம் நீமுனி யாதிருந் தின்றுதான் முனிந்தாய்
என்னை ஏறவிட் டேணியை வாங்கினை என்றார்.

(அ - ரை.) ஏந்திழை மடவார் - அணிகலன்களைத் தாங்கிய தோழிப்பெண்கள். முனியாது இருந்து - சினங்கொள்ளாமலிருந்து. (கக)

மாயை, அல்லமரைக் கபடக் கூத்தாடி எனல்

தொல்லை நின்திரு மேனிபோல் உள்ளமும் தூய்தாய்
நல்லை என்றுனை நம்பினேன் வஞ்சக நடிப்பு
வல்லை என்பதை அறிந்திலேன் நானென வன்சொல்
சொல்லி நின்றனள் மாயையெம் பிரானிது சொல்லும்.

(அ - ரை) தொல்லை - முதலில். திருமேனிபோல் - அழகிய உடல்போல். உள்ளம் - மனம். தூய்து ஆய் - களங்கமற்றதாகி. வன்சொல் - கடுஞ் சொல். (கஉ)

அக் கூத்தினைத் தேவர், முனிவர்களைக் கேட்டறிக எனல்

வஞ்ச நாடகம் நடிப்பது மாயைதன் செயலோ
தஞ்ச அல்லமன் தன்செய லோவெனத் தடங்கண்
பஞ்சின் மெல்லடி யாய்கட வுளரையும் படிறில்
நெஞ்ச மாதவர் தமையுங்கேட் டறிதிநீ என்றான்.

(அ - ரை.) தஞ்ச அல்லமன் - அடைக்கலமென்று வந்த அல்லமன்; தஞ்சம் என்று அடைந்தோரைப் புரக்கும் அல்லமன். கடவுளர் - தேவர். படிறு இல் - பொய்மை இல்லாத. (கங)

மாயை பதிலுரைத்தல்

கள்ளன் மங்கையைக் களவுசெய் பொருளினைக் கண்டு
கொள்ளு நன்குறி புகல்விப்ப தொக்குமென் கூத்தைத்
தள்ள ருஞ்சுரர் முனிவரால் சொல்விக்குந் தகைமை
வள்ள லென்றுபுன் னகைகொளீஇ உரைக்குமம் மாயை.

(அ - ரை.) தள்ளரும் - நீக்கக்கூடாத. தகைமை - தன்மை. வள்ளல் - வள்ளலாகிய அல்லமதேவரே. புன்னகை கொளீஇ - புன்னகை கொண்டு.

என் இயல்பைத் தேவரிடமும் முனிவர்களிடமுங் கேட்கச் சொல்லுதல், களவுபோன பொருள்களிருக்கும் இடத்தையறிவதற்குக் கள்ளனுடைய மனைவியிடமே குறி கேட்கச் சொல்லுவதை யொக்கும் என்கின்றாள் மாயை. (௩௫)

மாயை, தன் பெருமையை உரைத்தல்

நெஞ்சம் யாதினல் எனையகன் றிடவரி நினைக்கும்
கஞ்சன் மாயையை இல்லெனக் கழறவா யுண்டோ
விஞ்சும் வானிறை என்னையெம் மெய்யினல் விடுவான்
தஞ்ச மாயையென் றிகழ்தரத் தக்கசொற் கற்றோய்.

(அ - ரை.) அரி - திருமால். கஞ்சன் - நான்முகன். விஞ்சும் வான் இறை - சிறந்த புகழையுடைய தேவர்கோன். எம்மெய்யினல்- எவ்வுடலால். தஞ்சம் - எளிமை. இகழ்தரத்தக்க -இகழத்தக்க.

திருமாலுக்கு மார்பில் திருமகள் இருத்தலானும் நான்முகனுக்கு நாவில் கலைமகளிருத்தலானும், தேவர்கோனுக்கு உடலெங்கும் பெண்குறி யிருத்தலானும் அத்தேவர்களும் மாயையாகிய தன்னைக் கடந்தவர்கள் அல்லர் என்கிறாள் மாயை. (௩௬)

மாயை, என்னை யாரும் வெல்வது அரிதெனல்

என்னை அஞ்சிமா வழங்குகாட் டிருக்குமா தவரென்
தன்னை வென்றிட வல்லரோ வல்லரென் தன்னைப்
பின்னை வென்றிட வல்லரியார் பேசுதி யென்று
மின்னை வென்றநுண் இடைசொல அல்லமன் விளம்பும்.

(அ - ரை.) என்னை அஞ்சி - எனக்கு அஞ்சி. மாவழங்கு - விலங்குகள் போக்குரவு செய்யும். பின்னை வென்றிடவல்லர்-பிறகு வெற்றி கொள்ளத்தக்கவர். மின்னை வென்ற - மின்னற் கொடியை வெற்றி கொண்ட. (௩௭)

அல்லம தேவர் பதிலுரைத்தல்

என்றன் ஆணையைக் கடப்பவர் இலையிலை யென்று
வென்றி கூறினை யேலவர் நிற்கவேல் விழியாய்
நின்ற ஆருயிர் முயற்சியால் நிகழ்த்திய மாற்றம்
அன்றி வாழ்மறை ஆகமத் தறிதியென் றறைந்தான்.

(அ - ரை.) ஆணை - கட்டளை ; உத்தரவு. இலைஇலை - இல்லை இல்லை; லகரம் தொகுத்தல் விகாரம். வென்றி கூறினை - வெற்றி மொழிகளைச் சொன்னாய். நின்ற ஆர் உயிர் முயற்சியால் - நிலை பெற்று நின்ற உயிரின் செய்கையால். மாற்றம் - சொல். வாழ் மறை - நிலைபெற்ற வேதம். (கஎ)

மாயை மீண்டும் செருக்கொடு புகலுதல்

நாலு வாக்குநீ பார்ப்பினும் நானவற் றினுக்கு
மூல காரணம் ஆகுவன் மொழிந்தஇம் மாற்றம்
நூலெ லாமுரைத் திடுமெனச் செருக்கொடு நுவன்றுள்
மாலெ லாம்பிறப் பதற்கிட மாகிய மாயை.

(அ - ரை.) நாலுவாக்கு - சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்கின்ற நான்கு வாக்கினையும். செருக்கொடு - களிப் போடு. மூல காரணம் - முதற்காரணம். காரணம் : ஒரு பொரு ளோடு வேறு பிரிக்கமுடியாதபடி ஒன்றாக இருப்பது. மண் குடம் என்பதுபோல; அது மண்ணால் செய்யப்பட்டது. மண்ணைக் குடத்தி னின்றும் வேறாகப் பிரிக்க முடியாது. எனவே இது மூலகாரணம் அல்லது முதற்காரணம். (கஅ)

அதற்கு அல்லம தேவர் கூறுதல்

ஆட்டு கிற்பனிவ் வகிலமும் என்றனை நின்னை
ஆட்டு கிற்பவர் ஆரென அறிந்திலை பேதாய்
கேட்டு நின்னையோர் பொருளென மூடரே கிளப்பார்
நாட்டும் என்னைநன் கறிந்துயர் ஞானிகள் நவில்வார்.

(அ - ரை.) ஆட்டுகிற்பன் - ஆட்டுவேன். இவ் வகிலமும் - இவ்வுலகங்களையெல்லாம். மூடரே கிளப்பார் - மூடரே சொல்லு வார்கள். நாட்டும் என்னை - எல்லாவற்றையும் நிலைநிறுத்துகிற என்னை. நவில்வார் - சொல்லுவார் (கக)

மாயை அல்லமரை வேண்டுதல்

ஆரை யாிருந் தாட்டுவ ரோவதை அறியேம்
மார வேள்செயும் நோய்மறித் ததன்பினென் வாதம்
பாரெ னுமியம் பினள்பசிக் கனமிடிற் பசிநோய்
தீரும் மமருந் துதவுவன் என்பவர் சீர்போல்.

(அ - ரை.) ஆரை - யாரை; யார் என்பதன் மரூஉமொழி. மார வேள் - காமன். மறித்து - கெடுத்து. என் வாதம் - என் சொற் போரை. உதவுவன் - கொடுப்பேன். (௨0)

## அல்லம தேவர் பதில்

காமி யாகிநீ அருச்சனை கடைப்பிடித் தமையால்
நாம வேல்நெடுங் கண்ணினுய் காமிபோல் நடித்தேன்
தீமை நெஞ்சினுற் சூன் நினைந் தனைநினைத் தீண்டேன்
போமி ளுருடன் என்றனன் வன்சொல்லாற் புனிதன்.

(அ - ரை.) காமி - காமத்தையுடையவள்; இ: ஆண் பெண் பால் உணர்த்தும் விகுதி. கடைப்பிடித்தமையால் - உறுதியாகக் கொண்டமையால். நாமவேல் - அச்சம் பொருந்திய வேல். மினார் - மின்னார்; இடைக்குறை. மின்னாருடன் - மின்னற்கொடி போன்ற தோழிப் பெண்களுடன். வன்சொல் - கொடுஞ்சொல். 'வன்சொல் யவனர் வளநாடு' என்ற சிலப்பதிகாரத்து, வன்சொல் இப்பொருள் தருதல் காண்க. (எக)

### மாயை வருந்தல்

(வேறு)

மண்ணுலகில் இழிகுலமத் தளத்தொழிலோன்
தனைவிரும்பி வறிது மீண்டாள்
அண்ணல்மக ளெனும்பழியை மாளாமல்
திறவிப்போய் அங்கை கொட்டி
விண்ணுலக நகைசெய்யச் சூள்முடியா
தெவ்வாறு விமலன் பங்கில்
பெண்ணரசி தன்முகத்தில் விழிப்பலெனா
மாயையுளம் பீழை உற்றாள்.

(அ - ரை.) வறிது மீண்டாள் - வீணே திரும்பினாள். அண்ணல் மகள் - அரசன் மகள். திறவிப்போய் - சிறத்திச்சென்று. அங்கை கொட்டி - உள்ளங்கையால் அடித்து. பெண் அரசி-இறைவி. பீழை உற்றாள் - துன்பத்தை அடைந்தாள். (எஉ)

### அல்லமர் நான் அன்புக்கு எளியன், வன்புக்கு அரியன் எனல்

அன்பினால் அன்பர்பெறற் கெளியனும் என்னைச்சூளொன் றுரைத்து வந்து
வன்பினாற் பெறவேண்டி நின்றழிந்தாய் இதுதகுமோ மாயை மாதே
முன்பினுக் கடுவிளைதத்துக் கரும்பாக வேண்டிமிக முயன்று நெஞ்சில்
துன்பராய்த் திரியுமவர் போலென்றான் மாயைதனைத் துக்க வல்லான்

(அ - ரை.) சூள்-வஞ்சினம்; சபதங் கூறல். வன்பினால்-வலிய தன்மையினால். முன்பு இறைகடு விதைத்து - முன்னர் வெறுத்தற்குரிய கசப்புப்பொருளை விதைத்து. தூரக்கவல்லான் - தூரத்துதற்கு வல்லமையை உடையவன். (௭௬)

விமலை அல்லமரை வேண்டுதல்

கரைகுறுக வந்தகலங் கவிழ்ந்தநாய்
கன்போலக் கலங்கி நின்ற
வரைபுரைமென் முலைமாயை தனைக்கண்டு
விமலையுள மறுகி மாழ்கி
இரதமுறு களிம்புமலி செம்பினியல்
நோக்குறு இயல்பு போல
அருள்புரிதி ஐயஇவன் குணநோக்கா
தென்றுதொழு தஞ்சிச் சொன்னாள்.

(அ - ரை.) கரைகுறுக - கரையைக் கிட்ட. கலம் - கப்பலை. நாய்கன் - வாணிபன். வரைபுரை - மலையை ஒத்த. மறுகி மாழ்கி - மனஞ் சுழன்று மயங்கி. இரதம் - இரச குளிகை. உறு - தன்னைச் சேர்ந்த. களிம்புமலி - களிம்பு நிறைந்த. செம்பின் இயல் - செம்பினது தன்மையை. (௭௭)

அல்லமர் மறுமொழி கூறுதல்

இலங்கிலைவேல் மருட்டுமதர் விழிவிமலாய்
வறியவோ டிரதந் தன்னால்
நலங்கிளர்பொன் உருவாயில் என்னுலிம்
மாயையின்பம் நணுகும் என்று
புலங்களறி வரியபர மானந்த
சிவயோகி புகல மாயை
கலங்கியளி பசும்புண்ணிற் செவ்வேல்பட்
டெனவழுங்கிக் கழறு கின்றாள்.

(அ - ரை.) மருட்டும் - மயங்கச் செய்கின்ற. மதர்விழி விமலாய்- களிப்புப் பொருந்திய கண்களையுடைய விமலையே! விளி. வறிய ஓடு - பயனற்ற மண் உடைகலம்; உடைந்துபோன ஏனங்கள். நலம் கிளர் பொன் உருவாகில் - நன்மை விளங்குகின்ற பொன் வடிவத்தை

வடையுமாகுல். அனி பசும் புண்ணில் கனிந்து - ஆருத புண்ணின் மேல்; அனி : முதனிலைத் தொழிற்பெயர். இது, இங்கே 'வரிப்புனை பந்தொடு பாவை தூங்க' என்புழிப்போல வினையெச்சப் பொருள் தந்து நின்றது. அது, கனிதலாவது மிகப் புண்ணாக இருத்தல். அழுங்கி - வருந்தி. கழறுகின்றுள் - சொல்லுகின்றுள். (௭௦)

மாயையும் அல்லமரும் வாதமிட்டு உரைத்தல்

நனவொருபுன் கனவாக மயங்கவினைப்
புணர்தலினுல் நாளும் வென்றி
எனதெனநின் றுளஞ்செருக்கி மடமாயை
கூறுதலும் எங்கள் கோமான்
கனவினுகர் வுறுமுணவு குறையுமோ
பசியதனுற் களைவ துண்டோ
நினைவில்வரு கனவொன்று கண்டிறுமாந்
தனைபேதாய் நீதான் என்றுன்.

(அ - ரை.) நனவு - விழிப்பு நிலையில் நேரடியாக. செருக்கி - களித்து. நாளும் - எக்காலத்தும். வென்றி - வெற்றி : மெலித்தல் விகாரம். நுகர் - உண்ணுகின்ற. களைவது - நீக்குவது. இறுமாந்தனை - செருக்குற்றுய். (௭௧)

மாயை வஞ்சினங் கூறல்

எவ்வண்ணம் உரைவன்மை கொண்டுநீ
தன்னினுநான் இன்று போகேன்
கைவண்ண மலர்ப்பகழி மதனனையாய்
நினைத்தழுவிக் கட்டிக் கொண்டு
செவ்வண்ணன் அமர்கைலைக் கேகியென்றுள்
முடிப்பலெனச் செருக்கிச் சொன்னுன்
மைவண்ண மலர்க்குழலாள் வான்திரட்டி
விழுங்குவலென் மாற்றம் போல.

(அ - ரை.) கை - கையினிடத்து. வண்ணம் - அழகு ; நிறம். பகழி - அம்பு. செவ்வண்ணன் - சிவந்த நிறத்தினையுடைய இறைவன். வான் திரட்டி - விண்ணை உருட்டி என்றுக்கி. மாற்றம் - மொழி (௭௨)

### அல்லமர் மறைத்தல்

முடிக்குமலர்க் குழல்மடவான் தூன்முடிப்பல்
　　எனுமொழிக்கு முறுவல் செய்து
பிடிக்கவலை யாயிலெனைப் பிடிநடையாய்
　　பிடியென்று பிரான்ம றைந்தான்
மடக்கொடிதன் விழியினுற் காண்பதும்போய்
　　மதிமயங்கி வறிது நின்ருள்
சுடர்த்தொடிமென் தோள்மடவார் இன்றிழந்தோம்
　　இவனையெனத் துயரு ழந்தார்.

(அ - ரை.) முறுவல் - புன்சிரிப்பு. பிடிக்க வலை - பிடிப்பதற்கு வல்லமையுடையை. பிடிநடையாய்-பெண்யானைபோன்ற நடையை உடையவளே ! பிரான் - அல்லம தேவர். மடக்கொடி - மாயை. சுடர்த்தொடி - ஒளிதங்கிய வளையல். உழந்தார் - அடைந்தார். (எ அ)

### அல்லமர் அன்பருக்கன்றிப் பிறர்க்கு அரியர் எனல்

வெண்டிங்கள் நிலவுவா யிடைப்புகினும்
　　சகோரமெனும் மென்புள் அன்றி
உண்டிங்கு வாழுமுயிர் உளதோநம்
　　அல்லமனும் ஒருவன் தானும்
பண்டங்கு மொழிமாயை கைப்படினும்
　　அவன்பிடிக்கப் படுவ னேதான்
தொண்டன்பின் வழிநின்று மனமாசு
　　தீர்ந்தபெருந் தூயோர்க் கல்லால்.

(அ - ரை.) திங்கள். நிலவு - நிலவின் ஒளி. சகோரம் எனும் மென்புள் - நிலாமுகி என்னும் மெல்லிய பறவை. அது, நிலவைப் பருகும் இயல்புள்ளது. பண் - இசைப்பாட்டு. மனமாசு - மனத்தின் தீய நினைவு. (எக)

### முனிவர்கள் அல்லமரைப் போற்றித் தவஞ்செய்தல்

மாயைதனை வாதித்துத் தன்னுபுதன்
　　நிலைநின்று மாயா வாதி
ஆயினனல் வீரசைவ சித்தாந்த
　　குலதீபம் ஆயி னேனென்

ஏயுமன திறுவிபிறப் பெதிர்வுநிகழ்
வெனுங்காலம் உணரும் ஆற்றல்
தூயமுனி வரரெல்லாம் அல்லமனைத்
தொழுதுதவந் தொடங்கி வாழ்ந்தார்.

(அ - ரை.) வாதித்து - சொற்போர் செய்து. தன்னுபு - தன்னி. "செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். மாயாவாதி - மாயை யோடு சொற்போர் செய்வோன், அன்றி மாயையின் நிலையை நன்கு ஆராய்ந்து தெளிபவன். ஓயும் மனம் திறுவி - தளர்ந்த உள்ளத்தை நிறுத்தி.

அல்லம தேவருடைய அருளினுல், முனிவர்கள் தளர்ச்சியடைந்த தங்களுடைய உள்ளத்தைப் பழமைபோல் நிலைநிறுத்தி, அல்லம தேவரைப் போற்றித் தவத்தினை மேற்கொண்டார்கள். (அ0)

ஏழாவது மாயை கோலாகலகதி முடிந்தது.

கதி எ - க்குச் செய்யுள் - ௬௩௬.

## அ. வசவண்ணர் வந்த கதி

[இக் கதிக்கண், அல்லம தேவர் மறைந்தவுடன் மாயை வருந்துகிறாள். மாயையின் பெற்றவர்களும் மற்றவர்களும் மாயையைப் பின் தொடர்ந்து வருந்துகிறார்கள். மாயையின் நற்றாய் மோகினி; பல வகையாகப் புலம்புகிறாள். விமலை அரசனையும் அரசியையும் பார்த்து மாயை உங்கள் மகள் அல்லள், என்கிறாள். மாயை தன் வரலாற்றைத் தாய் தந்தையர்கட்குத் தெரியப்படுத்திக் கைலையை அடைகிறாள். அரசன், செயலற்று நிற்கிறான். அரசி மேலும் பலவகையாக வருந்துகிறாள்; அரசனுடைய குருவாகிய ஆங்காரன் அரசன் முதலியோரைத் தேற்றுகிறான்.

கைலையை அடைந்த மாயை இறைவனையும் இறைவியையும் வணங்கி அருகில் நிற்கிறாள். இறைவன் இறைவியைப் பார்த்து 'உன்னுடைய சூள் வெற்றி பெற்றதா?' என்று கேட்டு எள்ளி நகையாடுகிறார். உமாதேவியானவள் இறைவனைப் பார்த்துத் 'தோல்வியால் வருந்திக்கொண்டிருக்கும் என்னைப் பார்த்து நீ மேலும் எள்ளி நகையாடுதல் மூக்கறையன் முகத்திற்கு நேரே கண்ணாடி காட்டுதலைப் போன்று இருக்கின்ற' தென்கிறாள். இறைவியின் வருத்தத்தைக்கண்ட இறைவன், 'ஆடுகளைக் கொல்லுந் தொழிலையுடைய ஒருவன் அரிமாவுக்குமுன் செல்லுதலை பெரிய வீரத்தன்மையாவது போல, மாயை அல்லம தேவருக்கு முன்சென்றதே பெருங் காரியம்' என்கிறார். இறைவி, 'அல்லம தேவரைக் கண்டுபிடித்தற்கு வழி யாது?' என்று கேட்கிறாள். 'சத்துவகுண மடந்தையை அனுப்பினால் அல்லம தேவரைக் கண்டுபிடிக்கலா' மென்று இறைவன் பதிலுரைக்கிறார். இறைவி அவ்வாறே அனுப்புகிறாள். இறைவன் அல்லமதேவரை அறியுமாறு நந்திதேவரை உலகிற்கு அனுப்புகிறார். நந்திதேவர் இறைவன்மீது கொண்டுள்ள அன்புப்பெருக்கை அறிவதற்குச் சிவ கணங்களையும் உலகிற்கு அனுப்புகிறார். சிவகணங்கள் பற்பல நற்பதிகளிலும் பிறக்கிறார்கள். இவர்களால் உலகிற்கு நன்மை விளையும் என்று தேவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள் என்னுஞ் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

நூலாசிரியர் கூறல்

அசைவில் அல்லமற் காயுமை நற்கலை
வசவ தேவன் வலிய கணங்கள்தாம்
நசியும் அன்பிற் கயிலையின் நின்றுதென்
திசையில் வந்த திறமுரை செய்குவாம்.

(அ - ரை.) அசைவு இல் - எதற்கும் நிலைதிரிதல் இல்லாத. நற்கலை - சத்துவகுண வடிவி. வசவதேவன் - நந்திதேவர். கணங்கள்- சிவகணங்கள். கசியும் - ஊற்றெடுக்கும். திறம் - தன்மை. (க)

அல்லமர் மறைந்தவுடன் மாயை வருந்துதல்

தீங்கு காணும் சிறுவிலை நாட்கடன்
வாங்கும் ஓர்பொருள் போக்கும் வறியர்போல்
நீங்க ஞான நெடுந்தகை மாயைதின்
றேங்கும் ஆவி இயக்கமும் இன்றியே.

(அ - ரை.) தீங்கு காணும் - தீமைகள் பல நேரும். சிறுவிலை நாள் - சிறு பொருளும் பெருவிலையாக விற்கும் நாள்: பஞ்சகாலம். ஞான நெடுந்தகை - அல்லமதேவர். ஆவி இயக்கம் - மூச்சுவிடுதல், இழுத்தல். (உ)

பெற்றவர் வருந்திப் பின் தொடருதல்

மத்த ஙங்கொடு வந்தவன் தன்றெடு
பொய்த்த நுண்ணிடை போயினள் என்னவே
சித்த நாணும் துயரமும் தின்றிடப்
பித்தர் போல்பின் தொடர்ந்தனர் பெற்றவர்.

(அ - ரை.) பொய்த்த நுண்ணிடை - இடையிருப்பது பொய்யென்று சொல்லத்தக்க நுட்பமான இடை. சித்தம் - உள்ளத்தில். தின்றிட - தின்பதுபோல் வருத்த: இலக்கணை வழக்கு. பித்தர் - பைத்தியங் கொண்டவர். பெற்றவர் - தாய் தந்தையர். (௩)

அரசன் வருந்திப் பின் தொடருதல்

தக்க தந்தைதாய் சாயப் பழிசெயும்
மக்கள் இன்றி மலடர்தாம் ஆதலும்
மிக்க வன்பிணி மேவலும் நல்லவென்
றுக்க நெஞ்சுடன் ஓடினன் மன்னவன்.

(அ - ரை.) சாய-நாணத்தால் வருந்தித் தலைவணங்க ; அல்லது இறக்க. மலடர் - பிள்ளைப்பேறற்றவர். வன்பிணி - கொடிய நோய். உக்க - அறிந்து வருந்திய ; துன்பம் சிந்துகிற. (௪)

மோகினி தன் மகளை நினைந்து வருந்துதல்

காய்ப சிக்குக் கவன்று தசைதின
வாய்ப தைக்கும் மறவர் வலையிடைப்
போய்வி ழுக்குழக் கன்று புகுந்தவண்
தாய்ப தைப்பது தன்னெதிர் காணுமோ.

(அ - ரை.) காய் - சுடுகின்ற. கவன்று - கவலையுற்று. மறவர் - வேடர். குழக்கன்று - இளங்கன்று. 'மழவுங் குழவும் இளமைப் பொருள' என்பது தொல்காப்பிய மரபியல் நூற்பா. இங்கே மிக இளமை குறித்தது. அவண் - அவ்விடம். (௯)

இதுவும் அது

கண்டு வார்சிலைக் கானவர் பார்ப்பினைக்
கொண்டு போகக் குடம்பைகண் டேங்கியே
துண்ட மாரிரை சோரப் பறவைகள்
மண்டு நோயில் மறுகுதல் காணுமோ.

(அ - ரை.) வார்சிலைக் கானவர் - நீண்ட வில்லையுடைய வேடர். பார்ப்பு - பறவைக் குஞ்சு. குடம்பை - பறவைக் கூடு. துண்டம் ஆர் இரை - மூக்கின் அலகில் கொண்டுவரும் உணவு. மண்டு - மிகுந்த. மறுகுதல் - சுழலுதல்; மிக வருத்தங்கொள்ளல். (௬)

இதுவும் அது

அரில்மி தித்திட் டதர்படப் பூம்பணை
மரமு றித்து மழைமதக் கைம்முக
உரல டிப்பிறை ஒண்மருப் பஞ்செவிக்
நகரி டப்பக் கலங்கி இரியுமோ.

(அ - ரை.) அரில் - தூறு. அதர்பட - வழியுண்டாக. பூம்பணை - பூக்கள் பொருந்திய கிளைகள். மழை மதம் - மழைபோல் சொரிகின்ற மதம். கைம்முகம் - துதிக்கையை உடைய முகம். ஒண் மருப்பு - ஒள்ளிய தந்தம். இரியுமோ - ஓடுவாளோ. (எ)

இதுவும் அது

பரற்கண் மென்பதம் வைத்துப் பதைக்குமோ
சுரத்து மேனி துவண்டு வெதும்பிநீர்
இரக்கு மோமகள் என்செயு மோஎனத்
தரிக்க ருந்துயர் தாயடைந் தேகினுள்.

(அ - ரை.) பரல் - பருக்கைக்கல். சுரத்து - பாலைநிலத்தில். தரிக்க அரும் - தாங்குதற்கு அரிய. (அ)

அரசன் வருத்தங்கண்டு ஊரினர் வருந்துதல்

பொன்னை அன்ன புதல்வி பொருட்டிவண்
மன்னர் மன்னன் மனத்தில் வளர்ந்தெழும்
இன்னல் காணவும் ஊழொன் றிருந்ததென்
றுன்னி மாழ்கியவ் வூரர்பின் போயினர்.

(அ - ரை.) பொன்னை அன்ன - திருமகளை ஒத்த. இவண் - இங்கு. உன்னி - எண்ணி. மாழ்கி - மயங்கி. (௯)

மமகாரன் தன் மகளைக் கண்டு சொல்லுதல்

அயர்ந்து நிற்கும் அரிவையைக் கண்டுநான்
முயன்று மெய்த்தவம் முற்றும் பயின்றுனைப்
பயந்த தற்குப் பயனன் றுநவினை
நயந்தெ மக்கெனத் தந்தை நவின்றனன்.

(அ - ரை.) அயர்ந்து - சோர்வடைந்து. பயின்று - முடித்து. பயந்ததற்கு - பெற்றதற்கு. நயந்து - விரும்பி. (௧0)

'என்னை ஏன் பிரிந்து வந்தாய்?' என்று தாய் அழுதல்

என்னை நீங்கி இழிதொழில் செய்பவன்
தன்னை நாடித் தலைமை இழந்தேனே
கன்னி நீகொடுங் காட்டில்வந் தாயென
அன்னை யோவென் றரற்றி அழுதனள்.

(அ - ரை.) தலைமை இழந்து - அரசன் மகள் என்னும் பெருமை கெட்டு. ஏனோ : என்னோ - என்ன காரணத்தாலே. அரற்றி - புலம்பி. (௧௧)

விமலை பதில் விளம்புதல்

மகனும் அல்லனவ் வல்லமன் மாயைநும்
மகளும் அல்லள் வரைபுரை தோளினுய்
இகலும் வாட்கண் அரசியும் நீயும்இங்
ககலும் என்று விமலை அறைகுவாள்.

(அ - ரை.) வரைபுரை - மலையை ஒத்த. இகலும் - போர் செய்கின்ற. அகலும் - நீங்குங்கள். (௧௨)

வருந்துவது அறியாமையென விமலை கூறுதல்

வினைப்ப யன்கொள வேண்டுநர் ஓரிடம்
தனைப்பொ ருந்துறச் சம்பந்த மாத்திரத்
தெனக்கி னுரியர் என்றபி மானமொன்
றனைப்பொ ருந்தி அழிவர் அறிவிலார்.

(அ - ரை.) வினைப்பயன் கொள - பழவினைப்பயனை நுகர. வேண்டுநர் - விரும்பியவர். ஓர் இடம்தனை - தமக்கு விதிக்கப்பட்ட ஓரிடத்தை. பொருந்துற - அடைய. சம்பந்த மாத்திரத்து - அத்

தொடர்ச்சி ஒன்றளவில். இனோர் - இன்ன முறையினையுடைய உறவினர். அபிமானம் - பற்றுக்கோடு. (கஉ)

உலகத்தினர் அனைவரும் உறவினரே எனல்

தனையர் ஆகியுந் தந்தைதாய் ஆகியும்
உனையு றுத உயிரிலை ஆதலால்.
இனையர் கேளிர் இனையர் அயலெனா
நினைவு றேல்மிளிர் நெட்டிலை வேலினாய்.

(அ - ரை.) தனையர் - பிள்ளைகள். இனையர் கேளிர் - இன்னார் எனக்கு உறவினர். இனையர் அயல் - இன்னார் அயலவர். நினைவுறேல் - நினையாதே. மிளிர் - விளங்குகின்ற. நெட்டு இலை வேலினாய் - நீண்ட இலைவடிவு போன்ற வேலினையுடையவனே. (கங)

மாயை, தாய் தந்தையர்க்கு உரைத்தல்

வேனெ டுங்கண் விமலை இவைசொலப்
பான லங்கண் பனிமதி வாள்முகப்
பூந றுங்குழல் பொற்றொடி மாயைமுன்
தான டைந்தமை தந்தைக் குணர்த்தியே.

(அ - ரை.) பானல் அம் கண் - கருங்குவளை போன்ற அழகிய கண். பனிமதி வாள் முகம் - குளிர்ந்த திங்களையொத்த ஒளியமைந்த முகம். தான் அடைந்தமை - கயிலையில் நின்று நிலவுலகிற்கு வந்த வரலாற்றை. உணர்த்தி - தெரியக்கூறி. (கச)

மாயை, தாய் தந்தையருக்குத் தேறுதல் உரைத்தல்

காவி யங்கண் கனியிதழ் மாதுமை
ஏவ வந்தஎன் எண்ணம் முடித்திலன்
போவன் அங்கிப் புரிகுழ லோடுநான்
நீவிர் நோவன்மின் என்னை நினைந்தெனு.

(அ - ரை.) காவி - கருங்குவளை. கனி இதழ் - கொவ்வைக் கனிபோற் செந்நிறம் பொருந்திய உதடு. ஏவ - அனுப்ப. நோவன்மின் - வருந்தாதிர்கள். எனு - என்று சொல்லி. (கரு)

மாயை கயிலையை அடைதல்

விரைந்தெ ழுந்து விமலை அணங்கொடு
வருந்து நெஞ்சக மாயைஅக் காட்டுனோர்
விரிந்த மூங்குரல் பின்தொடர்ந் தேகவே
பொருந்த ருங்கயி லைத்தடம் போயினள்.

(அ - ரை.) பொருந்த அரும் - நல்வினையில்லாதவர்கள் அடை தற்கு அரிய. கயிலைத்தடம் - கயிலையாகிய இடம். (கஉ)

அரசன் செயலற்று நிற்றல்

அழுது வாய்விட் டரற்றிலன் தன்னுடல்
புழுதி யாடப் புரண்டிலன் மன்னவன்
பழுதி லாததன் பாவைகா ணுமையால்
எழுதும் ஓவியம் என்னநின் றனரோ.

(அ - ரை.) வாய்விட்டு - வாய்திறந்து. அரற்றிலன் - புலம்ப வில்லை. புழுதியாட - புழுதியிற் படிய. பாவை : மாயை. ஓவியம் - எழுதப்பட்ட வடிவம். (கங)

மோகினி வருந்துதல்

விழுவள் மீள எழுவள் மெலிந்துநைந்
தழுவள் மேனி அசைந்து நிலங்கையால்
உழுவள் வாய்க்கொண் டுயிர்ப்பள் இறப்பலென்
றெழுவள் கைநெரித் தேங்குவள் அன்னையே.

(அ - ரை.) விழுவள் - நிலத்தில் விழுவள். மேனி அசைந்து - உடல் தள்ளாடி. கையால் உழுவள் - கையினால் கிளறுவாள். வாய்க் கொண்டு உயிர்ப்பள் - வாயால் மூச்சுவிடுவாள். (கச)

மாயை இருந்த மாளிகை கண்டு மோகினி வருந்துதல்

பாடும் மாதரும் பந்தும் கழங்குநின்
றாடு மாதரும் ஆகும் அரிவைய
ரோடு மேவி ஒருமகள் வாழ்ந்த அம்
மாடம் நானினிக் கண்டுயிர் வாழ்வனோ.

(அ - ரை.) பாடு மாதர் - பாடுகின்ற பெண்கள். கழங்கு - அம்மானை. மேவி - இருந்து. மாடம் - மாளிகை. (கரு)

மாயை மறைந்த வழி விளங்கவில்லை

துளிக்கும் வார்மதுச் சோலையும் வாவியும்
பளிக்கு மாடமும் பாழ்பட என்மகள்
களிக்கு மாளிருங் காட்டினுள் எம்மைவிட்
டொளிக்கு மாறொரு சற்றும் உணர்ந்திலேன்.

(அ - ரை.) துளிக்கும் வார்மது : வார்மது துளிக்கும் - மிகுந்த தேனை வெளிப்படுத்துகின்ற. வாவி - தடாகம். பளிக்கு மாடம் - பளிங்கு மாடம். களிக்கும் மான் இரும் காட்டின் உள் : மான் களிக்கும் இரும்காட்டின் உள் - மான். களித்தற்கிடமாகிய பெரிய காட்டினிடத்தே. ஒளிக்கும் ஆறு - ஒளிந்த வழி. (உக)

மோகினியும் தோழியரும் கதறுதல்

என்னை நீவிட் டிருப்பினும் பொன்தொடி
உன்னை நான்விட் டுயிர்பிழை யேனென
அன்னை வாய்விட் டரற்றினள் ஆயிடை
மின்ன ரும் கதறினர் வேலைபோல்.

(அ - ரை.) பொற்றொடீ - மாயையே! விளி. ஆய் இடை - அவ்விடத்தில். மின் அரும் - மின்னற்கொடி போன்ற பெண்களும். வேலைபோல் - கடல் ஒலியைப்போல். (உஉ)

ஆசிரியன் அனைவரையுந் தேற்றுதல்

வந்து வேந்தன் வழிமர பாரியன்
நுந்தம் மாமகள் நோன்மை நுமக்குநான்
முந்து கூறில னேதுயர் மூழ்கிநீர்
சிந்தை நோதல் தகாதெனச் செப்புவான்.

(அ - ரை.) வேந்தன் வழிமரபு ஆரியன் - மமகார மன்னனுடைய அரச குலகுரு. நோன்மை - பெருமை. முந்து - முன்னரே. (உங)

வருந்துவது அறியாமை எனல்

அருந்த வம்பல ஆற்றும் அறிஞரும்
பொருந்த ருங்கயி லைக்குமின் போனமை
தெரிந்து நெஞ்சம் தெளிய அறிந்துநீர்
வருந்தும் தன்மை மடமை மடமையே.

(அ - ரை.) அறிஞர் - மெய்ம்மைப்பொருளை உணர்ந்த முனிவர்கள். பொருந்த அரும் - பொருந்துவதற்கரிய. தெரிந்தும் - நேரே பார்த்திருந்தும். நெஞ்சம் தெளிய அறிந்தும் - ஐயமற வுணர்ந்தும். மடமை மடமை - மிகுந்த அறியாமை ; அடுக்குமொழி உண்மையை உணர்த்திற்று. (உச)

உமையின் கூறு உமக்கு மகளாகத் தோன்றிற்றெனல்

சிலைநு தற்பசுந் தேமொழி மாதுமை
கலைநு மக்குக் கவின்மக ளாகநீர்
தலைமை பெற்றது சாலும் உமையினி
உலகி னிற்பிறர் ஒப்பவர் இல்லையே.

(அ - ரை.) சிலை நுதல் - வில்போல் வளைந்த நெற்றி. தேமொழி - தேன்போன்ற சொல். கலை - தமோகுணக்கூறு. கவின் மகள் - அழகிய மகள். தலைமை பெற்றது - பெருமை யடைந்தது. சாலும் - போதும். (௨௰)

மமகாரனும் மோகினியும் அரண்மனை அடைதல்

என்று கூறக் குரவன் இறைமகன்
மன்றல் வாழ்க்கை மனையொடு துன்பொரீஇச்
சென்று மாடத் திருநக ரிற்புகாக்
குன்ற மாமதிற் கோயிலின் நண்ணினன்.

(அ - ரை.) இறைமகன் - அரசன். மன்றல் வாழ்க்கை - மங்கலம் பொருந்திய இல்வாழ்க்கை. ஒரீஇ - நீங்கி. மாடம் - மாளிகைகளை யுடைய. திருநகர் - அழகிய நகரம். புகா - புகுந்து. குன்று மாமதில் - மலையைப்போல் பருத்து உயர்ந்த மதில். கோயில் - அரண்மனை. (௨௧)

(வேறு)

மாயை இறைவன், இறைவியை வணங்கி நிற்றல்

கயிலையில் விமலை யோடும் கவிர்இதழ் மாயை சென்று
வியனில மதனில் தன்னை விடுத்தஞான் றென்ன வானோர்
பயிலவை தன்னிற் புக்குப் பரனையும் இமயம் ஈன்ற
மயிலியல் தனையும் வாழ்த்தி வணங்கியங் கருகு நின்றாள்.

(அ - ரை.) கவிர் இதழ் - முருக்கமலர் போன்ற உதடு. வியன் - விசாலமாகிய. விடுத்தஞான்று என்ன - அனுப்பிய காலத்தில் இருந்தது போல. பயில் அவை - அமைந்துள்ள அரங்கு. (௨௨)

நிலவுலகில் நிகழ்ந்தவற்றை மாயை குறிப்பாகக் கூறுதல்

பொலிவழி வதனங் கண்ட போதேயம் மாயை நெஞ்சின்
மெலிவினை அறிந்தும் அன்னை வினவலும் நூன்கொண் டேகி
மலர்தலை உலகில் தான்முன் மயங்கிய வாறனைத்தும்
நலியுநாண் அடவ ருந்தி நவின்றனள் குறிப்பின் தோன்ற.

(அ - ரை.) பொலிவு அழிவதனம் - மலர்ச்சி நீங்கிய முகம். மெலிவு - வாட்டம். நலியும் - வருத்துகின்ற. நாண் அட - நாணமானது வருத்த. நவின்றனள் - கூறினள். (உஅ)

### இறைவன் புன்னகை புரிதல்

நன்னக மகள்கேட் டுள்ளம் நாணுபு முகங்க விழ்ந்தாள்
பன்னக சயனன் ஆதி பண்ணவர் நெருங்க வைக்கண்
முன்னகை செய்து தீய முப்புரம் மாளச் செய்தான்
புன்னகை புரிந்தான் பங்கின் புரிகுழல் செருக்கு மாள.

(அ - ரை.) நகமகள - மலைமகள். நாணுபு - நாணி. பன்னக சயனன் - பாம்புப் படுக்கையையுடைய திருமால். பண்ணவர் - தேவர். முன் - முன்னே. பங்கில் - பாகத்திலுள்ள. புரிகுழல் - இறைவி : அன்மொழித்தொகை. செருக்கு - களிப்பு. (உகூ)

### இதுவும் அது

அளியனென் றுனக்கு நான்சொல் அல்லமன் அரிய னேமற்
றெளியனே உரைத்தி நீயென் றிலங்கயில் எறித லேபோல்
வெளியபுன் முறுவல் செய்ய விமலன்வெண் மதியம் கண்ட
நளினமென் மலர்போல் என்தாய் நகைமுகம் ஒடுங்கி னாளால்.

(அ - ரை.) அளியன் - அன்பாகளுக்கு அருளையுடையவன். இலங்கு அயில் - விளங்குகிற வேல். வெளிய - வெண்மையான. நளின மென்மலர் - மெல்லிய தாமரைப்பூ. என் தாய் - என் அன்னையாகிய உமையம்மை. (கூ0)

### அதுகண்ட இறைவி வருந்திக் கூறல்

போக்கரும் வலிபு கன்று போய்வரு மாயை சொன்ன
வாக்கினில் வருந்து வேனை வள்ளல்நீ நகைசெய் தெள்ளல்
மூக்கிலி முகத்தின் முன்னர் முகுரங்காட் டுதல்போன்ம் என்ன
மீக்கிளர் இமயம் ஈன்ற மெல்லியல் மெலிந்து சொன்னாள்.

(அ - ரை.) போக்க அரும் - நீக்குதற்கரிய. எள்ளல் - இகழாதே: முன்னிலை யொருமை. மூக்கு இலி - மூக்கு இல்லாதவன் மூக்கறையன். முகுரம் - கண்ணாடி. மீக்கிளர் - மேன்மைபெற்று விளங்கும். (கூக)

### இறைவன் மறுமொழி

நடம்பயில் எந்தை மங்கை நாணினால் வருந்தி னேனென்
றடைந்தருள் சொல்வன் ஞாலம் அலைக்குமம் மாயை தானால்
நெடுந்தகை முன்னஞ் சென்ற நிலையேநன் றுடு கொல்வோன்
மடங்கல்முன் வெல்வேன் என்று வருதலே ஆற்றல் அன்றே.

(அ - ரை.) கடம்பயில் எந்தை - கூத்தாடுகின்ற இறைவன். ஞாலம் அலைக்கும் - உலகத்தினரை வருத்துகின்ற. நெடுந்தகை - அல்லமதேவர். மடங்கல் - அரிமா. (கூஉ)

## இதுவும் அது

அல்லமன் பெருமை எல்லாம் அனைவரும் அறிந்து கொள்ள
நல்லெழில் மலைம டந்தாய் நன்குணர்த் தினைநீ யென்று
சொல்லுநர் அன்றி நின்னை நிந்தனை சொல்ல வல்லார்
இல்லையென் றியம்ப யாவும் ஈன்றவன் இயம்பு கின்றாள்.

(அ - ரை.) எழில் - அழகு. சொல்லுநரன்றி - சொல்லுவார்களே யல்லாமல். நிந்தனை - பழிப்புரை. (கூகூ)

## இறைவி, அல்லமதேவரை அறியும்வழி கேட்டல்

பொறியிலி யேன்செய் தீமை பொறுத்தருள் புரிந்து மெய்ம்மை
அறிவருள் குரவன் ஆகும் அல்லமன் தன்னைக் காணும்
நெறியருள் புரிதி யென்ன நிரைவளை வணங்கிக் கூற
மறிமழு அமர்ந்தி ருக்கும் மலர்க்கைவா னவனு ரைப்பான்.

(அ - ரை.) பொறியிலியேன் - அறிவில்லாத யான். மெய்ம்மை அறிவு - மெய்யறிவு. நெறி - வழி. நிரைவளை - இறைவி. மறி - மான். மலர்க்கை வானவன் : இறைவன். (கூ௭)

## இறைவன் உரைத்தல்

மத்தம துறுகுணத்து மாயையை விடுத்த ஆற்றால்
நித்திய குரவன் தன்னை நீயறிந் திலைய ணங்கே
சத்துவ கலைம டந்தை தனையினி விடுத்தி ஆயின்
கைத்தல நெல்லி போலக் காண்குவை அவனை என்றான்.

(அ - ரை.) மத்தம் - மயக்கம். நித்தியகுரவன் - எக்காலமும் குருவாயுள்ள அல்லமர். அணங்கு - தெய்வப் பெண்ணாகிய இறைவி கைத்தல நெல்லிபோல - உள்ளங்கை நெல்லிக்கனிபோல. (கூஅ)

## சத்துவ குணவடிவியை உலகிற்கு அனுப்புதல்

மிடியட இறப்பல் என்று மேவுமோர் இடத்தில் செம்பொன்
குடமொடு கண்ட வன்போல் கொலைசெய்நாண் துறந்து வந்து
துடியிடை உமையொம் மானைத் தொழுது சத்துவ அணங்கைப்
படிமிசை அலமற் காண்பான் செல்கெனப் பணித்தாள் அன்றே.

(அ - ரை.) மிடி அட-வறுமை வருத்த. மேவும்-செல்லும். துடி-உடுக்கை. கொலைசெய் நாண் துறந்து - கொல்லுதலைச் செய்கின்ற நாணத்தை விட்டு. கொலை செய்கின்ற நாணாவது, நாணத்தால் உயிரையும் போக்கும் மேம்பாட்டுத்தன்மை. 'நாணால் உயிரைத் துறப்பர்' என்றார் வள்ளுவ தேவரும். நாணமாவது தன் மேம்பாட்டுக்கு இழிவு நேர்ந்தபோது மனந்தாழாது உயிரையும் கொடுக்கும் உயிர்ப்பண்பு; அது பெண்டிர்க்கு உயிரினும் சிறந்தது; இதனை 'தாயிற் சிறந்தன்று நாண்' என்றருளினர் மணிமொழிப் பெருமான். 'உயிரினும் சிறந்தன்று நாணே' என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார்.

இறைவனிடத்து இறைவிசெய்த சூள் பொய்த்துத் தோல்வி தந்ததாகலின் அதற்கு இறைவனிடத்து நாணையும் துறந்த தன்மையை ஆசிரியர் 'கொலைசெய் நாண் துறந்து வந்து' என்றார். (௧௬)

### அன்பினால் அல்லமதேவரை அறியலாமென்று நந்திதேவர் கூறுதல்

அப்பொழு தருகு நின்ற அருள்நந்தி தேவன் அன்னே
ஒப்பரும் பத்தி யென்னும் அஞ்சனம் ஒன்றுண் டாயின்
செப்பரு ஞானா னந்த அல்லம தேவன் என்னும்
வைப்பினை எளிது காண லாமென மகிழ்ந்து சொன்னான்.

(அ - ரை.) அன்னே - தாயே. அஞ்சனம் - மை. செப்பஅரும் - சொல்லுதற் கருமையாகிய. வைப்பினை - பொன் புதையலை. (௧௭)

### இறைவன் நந்திதேவரைப் புகழ்தல்

அழிவரு நிதிய வைப்பை அஞ்சனம் கொண்டு காணும்
விழியுடை யவன்போல் ஞான மெய்க்குர வனைத்தான் கண்டு
கழிமயல் அன்பர் காணக் காட்டுவோன் இவனென் றெம்மை
வழிவழி அடிமை கொள்ளும் வள்ளல்நந் தியைப்பு கழ்ந்து.

(அ - ரை.) அழிவு அரும் நிதியவைப்பை-அழிதலில்லாதபொன் புதையலை. கழிமயல் அன்பர்-மயக்கம் நீங்கிய சிவசரணர்கள். வள்ளல்-சிவபெருமான். (௧௮)

### நந்திதேவர் பெருமை

சத்தியால் யான்பி ணித்த தளைதனைத் தனது தூய
பத்தியால் அவிழ்க்க வல்லோன் பார்க்கின்இந் நந்தி யேதான்
இத்தினால் விலங்கு பூட்டும் இறைவனோ விடுவிப் பானோ
மெய்த்தனா ரருளி னோன்யார் விளம்புக என்று சொல்வான்.

(அ - ரை.) சத்தியால் - மாயா சத்தியால். பிணித்த - கட்டிய. தளை - கட்டு. இத்திறால் - இக்காரணத்திறல். எதனை நோக்கித் தகரம் விரிந்தது; விகாரம். மெய்த்த - உண்மையையுடைய. ஆர் அருளினோன் - நிறைந்த திருவருளை யுடையவன்.

இறைவன் விலங்கு பூட்டுபவன்; நந்திதேவர் இறைவன் பூட்டிய விலங்கைத் தறிப்பவர். இக்காரணத்தால் நிறைந்த திருவருளையுடையோர் யாவர் என்க. (௩௧)

நந்திதேவரை இறைவன் நிலவுலகிற் கனுப்புதல்

அல்லமன் என்னும் ஞான ஆனையை அகப் படுத்த
வல்லவொண் பார்வை நீயே ஆதலால் மண்ணிற் போகி
எல்லையில் அன்பர் நெஞ்சத் தின்பருள் நந்தி யென்று
சொல்லினன் உயிரில் தோன்ருத் துணையென இருக்கும் பெம்மான்.

(அ - ரை.) வல்ல - வன்மையையுடைய. ஒண் பார்வை - அறிவையுடைய பார்வை விலங்கு. பார்வை விலங்கு - மற்றைய விலங்குகளைப் பிடித்தற்பொருட்டுப் பழக்கப்பட்ட விலங்கு. எல்லை - அளவு. உயிரில் தோன்ருத் துணை என - உயிர்கள்தோறும் வெளிப்படாத துணையாக. (௩0)

சிவகணங்கள் நந்தியால் அல்லமரைக் காண இயலாதெனல்

அந்திவண் ணத்தெங் கோமான் அருளினல் இன்ன கூறச்
சுந்தரி தனக்கும் எட்டாத் தூயவன் தன்னைக் காண
நந்திவல் லவனோ என்று நகைசெய்து கணங்கள் தம்முள்
வந்தொரு சிலரு ரைப்ப மங்கைபங் காளன் சொல்வான்.

(அ - ரை.) அந்திவண்ணம் - மாலையில் தோன்றும் செவ்வானத்தின் நிறம். சுந்தரி - இறைவி. (௩௧)

இறைவன், நீங்கள் எம்மையும் நந்தியையும் அறியீர் எனல்

நந்தியென் தனையு ணர்ந்தான் நானவன் தனையு ணர்ந்தேன்
சிந்தைசெய் தெம்மை நீவிர் தெளிவுற அறிகி லீரென்
றெந்தையெம் பெருமான் கூற இகழ்ந்துரை செய்தோர் எல்லாம்
வெந்துயர் கொண்டு நின்ருர் மீளவும் விமலன் சொல்வான்.

(அ - ரை.) சிந்தைசெய்து - உள்ளம் பொருந்த எண்ணி. தெளிவுற - விளக்கமாக. வெந்துயர் கொண்டு - மிகுந்த துன்ப மடைந்து. விமலன் - இறைவன். (௩௨)

### சிவகணங்களை உலகிற் பிறக்குமாறு இறைவன் அருளல்

மாசறு நந்தி பத்தி வார்த்தையால் அறியீர் நீவிர்
காசினி யதனிற் சென்று கண்களால் அமையக் கண்டு
பேசுதிர் பின்னர் என்று பெருந்தகை நந்தி தன்னே
டீசனெண் கணங்கள் தம்மை ஏவினன் அருவி னனே.

(அ - ரை.) மாசு அறு-குற்றமற்ற. பத்தி - மெய்யன்பு. காசினி - நிலவுலகம். அமைய - பொருந்த. கண்டு - பார்த்து. பேசுதிர் - சொல்லுங்கள். (சகூ

### சிவகணங்கள் பிறத்தல்

கண்ணுதல் அருளால் ஏவுங் கணங்களுள் தலைமை பெற்றோர்
மண்ணுல கதனில் வேண்டும் வளம்பதி தோறும் வந்து
நண்ணினர் உலகர் கண்ணின் நரர்வடி வாகத் தோன்ற
எண்ணுறின் எழுநூற் றின்மேல் எழுபதென் றுரைக்கும் எண்ணர்.

(அ - ரை.) வேண்டும் - தாங்கள் விரும்பும். நண்ணினர் - பிறந்தனர். நரர்வடிவு - மக்கள் வடிவம். எண்ணுறின் - எண்ணத்தொடங்கினுல் எழுநூற்றின்மேல் எழுபது - எழுநூற்று எழுபது. எண்ணர் - எண்ணின் அளவுடையார். (சச)

### நந்திதேவர் முதலியோர் பிறப்பினுல் நலம் விளையுமெனத் தேவர்கள் மகிழ்தல்

நந்தியென் கின்ற ஞான ஞாயிறு நிலத்து திப்பின்
முந்துறும் அமணர் என்னும் மூடுவல் இருள்கெட் டோடும்
சந்திர மௌலி சீர்வெண் தாமரை மலரும் என்று
இந்திரன் முதலாய் உள்ள இமையவர் மனம கிழ்ந்தார்.

(அ - ரை.) ஞான ஞாயிறு - அறிவுக் கதிரோன். முந்துறும் - எதிலும் தாங்களே உயர்ந்தவர்களென்று முன்னுல் வரும். மூடுவல் இருள் - மூடிக்கொண்டிருக்கின்ற வலிய இருள். சந்திரமௌலி - பிறைமுடிப் பெருமானுகிய இறைவன். சீர் வெண் தாமரை-புகழாகிய வெள்ளைத் தாமரை.

நந்திதேவராகிய ஞாயிறு தோன்றுமாயின், இறைவன் புகழாகிய வெண்தாமரை மலரும் என்று தேவர்கள் மகிழ்ந்தனர் என்க. (சஞ)

எட்டாவது வசவண்ணர் வந்த கதி முடிந்தது

கதி அ-க்குச் செய்யுள் - சஅக.

---

## க. அக்கமாதேவி உற்பத்தி கதி

[இக்கதிக்கண், உடுதடை என்னும் பெயருடைய நகரின்கண் நிருமலன் சுமதி என்னும் பெயருடைய இருவருக்கு, இறைவியால் ஏவப் பெற்ற சத்துவ கலைமடந்தை மகளாகத் தோன்றுதல்; மாதேவி என்று பெயரிடப் பெறுதல்; நற்பண்புகளுடன் மாதேவி வளரு தல்; காமன் கலங்குதல்; எங்கும் நன்மை இலங்குதல்; இறைவன் கட்டளைபெற்ற சிவகணங்கள் பலவிடங்களிலும் தோன்றித் தவங் கடவுள் வழிபாடு முதலியன செய்துகொண்டு துளங்குதல்; இங்குளாபுரி என்னும் நகரின் சிறப்பு; மாதரசன் மாதாம்பிகை என்னும் இருவரின் மாண்பு; மாதாம்பிகை வயிற்றில் நந்திதேவர் தோன்றுதல்; அந்நாளில் யாண்டும் நன்மை மிகுந்து விளங்குதல்; குழவியாகத் தோன்றிய நந்தி தேவருக்கு இறைவன் திருநீறுபூசிச் சிவக்குறிகட்டி வசவன் என்று பெயரிடுதல்; வசவதேவர் கல்வி கற்றல்; விச்சலன் என்னும் வேந்தன் கலியாணபுரம் என்னும் நகரில் அரசு புரிந்திருத்தல்; வசவரும் அவருடன் கைலையிலிருந்து நிலவுலகில் தோன்றிய நாகாம்பையும் விச்சலபுரம் அடைதல்; விச்சலமன்னன் வசவரை எதிர்கொண்டழைத்துப் போற்றுதல்; வேந்தனும் வசவரும் அத்தாணியிலிருக்குங் காலையில் விண்ணி லிருந்து ஓர் ஓலைச்சுருள் அவையில் விழுதல்; அதைச் சிலர் எடுத்து அரசனுக்குக் கொடுக்க அவன் வாங்கி வசவருக்குக் காட்டுதல்; அவ்வோலைச்செய்தியை வசவர் அரசனுக்குணர்த்திப் புதையலெடுத்துக் கொடுத்தல்; அரசன் வசவருக்கு அமைச் சுரிமை அளித்தல்; நாகாம்பை ஒரு புதல்வனைப் பெற்று வசவ ரென்று பெயரிடுதல்; உலகின் பல பகுதிகளிலுந் தோன்றி யிருந்த சிவகணங்கள் கலியாணபுரத்தை யடைதல்; வசவர் சிவனடி யார்களைப் போற்றுதல்; சிவனடியார்கள் பலவகைக் காரியங்களில் ஈடுபட்டிருத்தல்; வசவர் அல்லமதேவரின் வருகையை எதிர் பார்த்திருத்தல் ஆகிய செய்திகள் கூறப்பெறுகின்றன.]

### ஆசிரியர் கூறல்

புரஞ்சுடு சிறுநகைப் புனிதன் பாலமர்
கருந்தடங் கண்ணிதன் கலையும் நந்தியும்
அருங்கண நாதரும் அகல்நி லத்திடை
வருந்திறம் அறிந்தவா வகுத்துக் கூறுவாம்.

(அ - ரை.) சுடு - எரித்த. சிறுநகை - புன்னகை. கருந்தடங் கண்ணி - கரிய பெரிய கண்களையுடைய இறைவி. கலை - கூறு. அகல் - விரிந்த. நிலம் - மண்ணுலகம். அறிந்தவா - தெரிந்தபடி. (க)

உடுதடை என்னும் ஒரு நகர் உள்ளது எனல்

பெடையொடு சுரும்பினம் பெரிதி ரைந்திடக்
கடிதடம் அளவுவாய்க் காலின் ஓடியே
மடையுடை மதுமழை மலர்பெய் சோலைசூழ்
உடுதடை எனுநகர் ஒன்றுண் டாயிடை.

(அ - ரை.) பெடை-பெண்வண்டு. சுரும்பு இனம்-ஆண்வண்டுக் கூட்டம். கடிதடம்-மணம் பொருந்திய தடாகம். மடை உடை - மடைகளை உடைக்கத்தக்க. மதுமழை - தேன்மாரி. உடுதடை - உடுதடை என்னும் பெயரையுடைய ஊர். ஆயிடை - அவ்விடம்- ஆ—இடை—ஆயிடை; சுட்டு முதல் நீண்டது. எதுகைநோக்கி. (உ)

அந்நகரில் திருமலன் என்பான் சிறந்தவன் எனல்

நன்மையென் பனஎலாம் உடையன் நான்மறைப்
புன்மையென் பனஎலாம் பொருந்து றானெனும்
தன்மைதன் பெயரினுல் அறியத் தக்கவன்
நின்மலன் எனஒரு நிகரி லானுளன்.

(அ-ரை.) புன்மை என்பன எலாம்-இழிந்தவை என்று கூறுபவை களையெல்லாம். பொருந்துறான் - செய்யாதவன். நின்மலன் - குற்ற மற்றவன்; இங்கே பெயர். நிகர் - இணை. (௩)

திருமலன் மனைவியாகிய சுமதியின் சிறப்பு

அவனெழில் மனையவள் ஆட கத்தினைச்
சுவணமென் குதலெனச் சுமதி யென்பவள்
தவநிலை தன்னினும் தலைமைத் தென்னவே
உவமையில் இல்லறத் தொழுகும் நீர்மையாள்.

(அ - ரை.) ஆடகம் - பொன். சுவணம் - பொன். தலைமைத்து - சிறப்புடையது. உவமை இல்-ஒப்பில்லாத. நீர்மையாள்-தன்மையை யுடையவள் 'ஆடகத்தினைச் சுவணம் என்குதல்' என்பது. மற்ற உலோகங்களை வெண்பொன், கரும்பொன் என, அடைமொழியாக அதன் நிறங்கொண்டு கூறுவது உலக இயல்பு, பொன்னுக்கு மட்டும் அதன்சிறப்பினுல் 'பொன்' என்றே அடைமொழி இல்லாது வழங்குவர் அதுபோல் 'சுமதி' என்பாள் சிறந்தவள், உவமை இல்லாதவள் எனக் கூறியவாறும். (௪)

இறைவியின் சத்துவகலை, அச் சுமதிக்கு மகளாகப் பிறத்தல்

தூநிரு மலனுக்கச் சுமதி தன்னிடைத்
தாஒரு மகளெனச் சார்ந்து தோன்றினள்
ஆனுயர் கொடியினேன் அங்கை தாங்குறு
மானுறழ் சத்துவ கலைம டந்தையே.

(அ - ரை.) தூ - தூய்மையையுடைய. சார்ந்து - சென்று. ஆன் உயர் கொடியினேன் - இடபக் கொடியை உயர்த்தியுள்ள இறைவன். தாங்குறு - தாங்காத. மான் உறழ் - மானையொத்த. (௬)

மகப்பேற்றால், தாய் தந்தையர் மகிழல்

மதிபெறு கடலென மகளை ஈன்றவர்
நதிபெறு சடைமுடி நம்பன் பாலுறு
கதிபெறு மதிநுதல் கரும்பைப் பெற்றுநல்
துதிபெறு மலையென மகிழ்ச்சி துன்னினர்.

(அ - ரை.) மதிபெறு - திங்களைப் பெற்ற. நதிபெறு - கங்கை தங்கிய. நம்பன் - இறைவன். கதிபெறு - நன்மையையுடைய. மதிநுதல் கரும்பை - திங்கள் போன்ற நெற்றியையுடைய கரும்புபோல் இனிய உமையம்மையை. பெற்று - மகளாகப் பெற்று. துதிபெறு - உலகத்தாரால் போற்றுதலைப் பெற்ற. மலை என - பனிமலையரசனைப் போல. துன்னினர் - பொருந்தினர். (௭)

நீறுபூசிச் சிவக்குறி யணிதல்

நெறிமுறை நிருமலன் நீறு சாத்தியே
அறிவரும் அஞ்செழுத் தறைந்து மெய்யுணர்
குறியினைத் தரித்தனன் குழவி ஆகிய
பொறிநிகர் வுறுமொரு புதல்விக் கென்பவே.

(அ-ரை.) நெறிமுறை-மறைவழிப்படி. அறிவு அரும்-அறிதற்கரிய பெருமையினையுடைய. மெய் உணர்-உண்மையை உணரத்தக்க. குறியினை-இட்டலிங்கத்துக் குறியை. பொறிநிகர் வுறும் - திருமகளையொத்து விளங்கும். (௮)

மாதேவி என்று பெயரிடுதல்

இந்துவார் சடையினேன் இட்டத வேயெனும்
சிந்தையான் மகளைமா தேவி யென்றொரு
சந்தநா மங்கொடு தான மைத்தனன்
தந்தையா தற்குநல் தவம்பு ரிந்தவன்

(அ-ரை.) இந்து - திங்கள். ஆர் - பொருந்திய. வார் - நீண்ட என்று கொள்ளினும் அமையும். இடத்தள் - இடப்பாகத்திலுள்ள இறைவி. சிந்தையான்-எண்ணத்தையுடையவன்- சந்த நாமம்-அழகிய பெயர். (அ)

மாதேவி வளருதல்

அறிவருள் ஆதர வடக்கம் வாய்மைமெய்த்
துறவுநல் லொழுக்கமே தூய்மை என்றிவை
உறவொடு குழவியாய் உடன்வ ளர்ந்திட
மறுவறு சுமதிதன் மகள்வ ளர்ந்தனள்.

(அ-ரை.) நற்பண்புகளெல்லாம் தனக்கு உறவாக வளர மாதேவி வளர்ந்தனள். (கூ)

காமன் கலங்குதல்

வாடிய மருங்குலம் மாயை தோன்றுநாள்
கோடிய சிலைகொடு தவங்கு லைப்பவே
ஓடிய மதனன்மா தேவி ஓங்குநாள்
வீடிய சிலையனுய் வீழ்ந்து மாழ்கினுன்.

(அ-ரை.) வாடிய - சுருங்கிய. மருங்குல் - இடை. கோடிய - வளைந்த. சிலை-வில். வீடிய-சோர்ந்த. மாழ்கினுன்-மயங்கினுன் (கo)

தீமைகள் கெட்டு நன்மைகள் எங்குந் திகழ்தல்

விழுந்தன கொடியதீ வினைப்ப ரப்பெலாம்
எழுந்தன நல்லறம் யாவுந் திங்களங்
கொழுந்தென நிருமலன் குமரி ஓங்குநாள்
முழங்கின சிவாகமம் முற்றும் எங்குமே.

(அ-ரை.) விழுந்தன - கெட்டன. பரப்பு-விரிவு. திங்கள் அம் கொழுந்து - பிறைத்திங்கள். (கக)

(வேறு)

சிவகணங்கள் உலகில்தோன்றிப் பற்பல பெயருடன் விளங்கல்

ஈங்குமா தேவி இன்னணம் இருப்ப
எம்பிரான் ஏவிய கணங்கள்
தாங்கள்வேண் டியவொண் பதிதொறும் முன்செய்
தவத்தர்பால் நன்மக வாகித்

தீங்கிலாச் சித்த ராமையன் மருச்சி
தேவனென் றிடுபெயர் முதலா
ஒங்குநா மங்கள் வேறுவே றுறக்கொண்
டுற்றனர் நற்றவம் முயன்று.

(அ - ரை.) ஈங்கு - இங்கு. இன்னணம் - இவ்வாறு. வேண்டிய - விரும்பிய. ஒண்பதி - சிறந்த நகரங்கள். (கஉ)

நந்திதேவர் தோன்றுதல்

பயக்குறும் இனிய சங்கர பூசை
பல்வகை நெறிப்பட இயற்றிச்
செயற்கருஞ் செய்கை செய்தவர் இருந்தார்
தென்றிசை கயிலைபோற் சிறக்க
மயக்குறும் அமண வல்லிருள் மெலிய
வயிணவம் எனும்உடு மழுங்க
வியக்குறு சைவம் மலரநல் நந்தி
வெய்யவன் உதித்தமை விரிப்பாம்.

(அ ரை.) பயக்குறும் - வீடுபேறு கொடுக்கத்தக்க. சங்கரபூசை - சிவபூசை. பல்வகை - பலவகையாக. நெறிப்பட - மறைநெறிக்கு இணங்க. தென்திசை - தென்நாடு. மயக்குறும் - பிதற்றுரைகளால் அறிவை மயக்குகின்ற. உடு - விண்மீன். வியக்குறு - வியக்கத்தக்க. வெய்யவன் - ஞாயிறு. (கங)

இங்குளாபுரி என்னும் எழில் நகர்

வாயின்மண் இட்டுக் கொண்டவன் தன்னை
மதித்துநல் நுதலின்மண் இடாமல்
பாயும்வெண் திரையில் துயில்பவன் தனக்குப்
பரிதியொன் றளித்தருள் முக்கண்
நாயகன் தனையே கருதிவெண் ணீற்றால்
நன்னுதல் வீதியை அணியுந்
தூயநன் மறையோர் தமக்கிடம் ஆகும்
துரிசிலா இங்குளா புரியே.

(அ - ரை.) வாயில் மண் இட்டுக் கொண்டவன் - உலகத்தை உண்டருளிய திருமால். பாயும் வெண்திரையில் - மோதுகின்ற வெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடலில். பரிதி - உருளைப்

படை. நுதல் வீதி - நெற்றியாகிய இடம். அணியும் - அழகுபடுத்தும். இடம் ஆகும் - இருப்பிடமாகும். துரிசு இலா - குற்றமில்லாத. இங்குளாபுரி - இங்குளாபுரி என்னும் நகரம். (௧௮)

## அந்நகரின் அருஞ்சிறப்பு

கதிர்விளை செந்நெற் காடுசூழ் கரும்பு
கரும்புசூழ் கதலியங் கதுசூழ்
புதுநறும் பாளைக் கமுகது சூழ்முப்
புடைப்பசுங் காயதெங் கதுசூழ்
உதிர்கனித் தேமாந் தண்பொழிற் பார்ப்பார்க்
குயர்வுறு துயர்மிடி புகாமல்
அதிர்முர சியம்பும் வீதியந் நகரிற்
கணிகள்வைத் திடுபடை காட்டும்.

(அ - ரை.) சூழ் கரும்பு - சூழ்ந்துள்ள கருப்பஞ்சோலை. கதலி - வாழைத்தோட்டம். முப்புடைப் பசுங்காய் - மூன்று பக்கங்களையுடைய பசிய தேங்காய். உதிர் - கீழே உதிருகின்ற. தேம் - மணம்பொருந்திய. பார்ப்பார்க்கு - பார்க்கின்றவர்களுக்கு. உயர்வுறு துயர் - மிகுந்த துன்பம். மிடி புகாமல் - வறுமையுண்டாகாமல். அதிர் - ஒலிக்கின்ற. முரசு இயம்பும் - பேரிகை முழங்கும். அணிகள் வைத்திடு - அணிகள் வகுக்கின்ற.

செந்நெற்காடும், கரும்பும், கதலியும், கமுகும், தெங்கும், மாம்பொழிலும், தெருக்களும் ஒன்றையொன்று அடுத்து வரிசை வரிசையாக விளங்குதலின், அணிவகுக்கப்பெற்ற படைகள்போற் காட்சியளிக்கின்றன வென்க. (௧௯)

## விருந்தோம்புதல்

விருந்தினுக் கிடுவார் அன்னமந் நகரின்
வேதியர் மடந்தையர் எல்லாம்
பொருந்துமன் னத்திற் கிடுவன விருந்து
புனல்வயற் செங்கமலங்கள்
வருந்துநுண் ணிடைநன் மாதர்கைம் மலர்க்கு
வண்டினைக் கொடுப்பர் பேரின்பம்
தருந்தனி நகர்சூழ் தடங்கள் வண்டிற்குத்
தான்மலர் கொடுத்திடும் அன்றே.

(அ - ரை.) அன்னம் - சோறு; அன்னப்பறவை. புனல் வயல் - நீரையுடைய வயல். வண்டு - வளையல்; வண்டுகள். தடங்கள் - தடாகங்கள். தாள் மலர் - தண்டையுடைய மலர்.

பார்ப்பன மாதர் விருந்திற்கு அன்னம் இடுவர்; அன்னத்திற்குச் செங்கமலங்கள் விருந்திடும்; மாதர்கள் தங்கள் கைம்மலர்க்கு வண்டினை (வளையலை) யிடுவர்; தடாகங்கள் வண்டுகளுக்குத் தண்டையுடைய மலர்களைக் கொடுக்கும். (கசு)

மறையவர் மாண்பு

இந்நகர் வாழும் மறையவர் செய்யும்
யாகதூ மம்படிந் தன்றே
பொன்னகர் வாழ்நர் நிறைந்தஆ யுளராய்ப்
பொருந்துதல் இந்நகர் மறையோர்
உன்னரும் மனுவால் நெருப்பினை வளர்த்திட்
டொழுகுநீர் காட்டுறின் அன்றிப்
பின்னொரு செயலாற் கலியுகந் தன்னிற்
பெருகுநீர் காணுறப் படுமோ.

(அ - ரை.) யாகதூமம் - வேள்விப்புகை. பொன்னகர்வாணர் - பொன்னுலகத்தில் வாழுந் தேவர்கள். உன்னரும் மனுவால் - நினைத்தற்கரிய மனுநெறி முறைமையால். நெருப்பினை வளர்த்திட்டு - வேள்வித்தீயை வளர்த்து. ஒழுகும் நீர் - உலக நடைமுறை. பெருகும் நீர் - மிகுதியாகப் பெருகும் மழை நீர். (கஎ)

மாதரசன் என்னும் மறையவன் சிறப்பு

இனையமா நகரின் அந்தணர்க் கெல்லாம்
இறைமைபூண் டுளனொரு மறையோன்
நினைவெலாம் அரன்ற னினுமுரை எல்லாம்
நிருமலன் துதியினுஞ் செய்யும்
வினையெலாம் அவன்பூ சனையினும் வைத்தோன்
வேதமும் ஒழுக்கமும் வல்லான்
மனையுளான் எனினுந் துறந்தவர்க் கொப்பான்
மற்றவன் நாமமா தரசன்.

(அ - ரை.) இனைய - இத்தகைய. இறைமை - தலைமை. நினைவு - எண்ணம். உரை - மொழி. மனை உளான் - இல்லறத்தில் இருப்பவன். (கஅ)

மாதரசன் மனைவி மாதாம்பிகையின் கற்புச்சிறப்பு

திருந்திய அனையான் தேவிதன் நாமம்
　　செப்பின்மா தாம்பிகை யென்பான்
அருந்ததி முதலாங் கற்புடை யார்தம்
　　அருநிலை ஊறின்றி முற்ற
நிரந்தரம் அவளைக் கைகுவித் திறைஞ்சி
　　நினைந்துபின் பாயவிற் படுப்பார்
கருந்தடங் கயற்கண் பூங்கொடி அனையான்
　　கற்பினை யாவரே புகல்வார்.

(அ - ரை) திருந்திய - எத்தகைய பழுதுமின்றி நன்னிலை பெற்றவன். அருநிலை - அரிய கற்பு நிலைமை. ஊறின்றி முற்ற - பழுதில்லாமல் நிறைவேற. நிரந்தரம் - எப்போதும். இறைஞ்சி-வணங்கி. (கக)

நந்திதேவர் அவட்கு மகனாகத் தோன்றல்

பூங்கொடி அனமா தாம்பிகை பெருமை
　　புனைந்துரை அன்றுபட் டாங்கே
ஓங்கிய அபர சிவனென வேதம்
　　உரைத்திடும் அருணந்தி வந்தான்
தாங்குற அவள்தன் வயிற்றிடை அதனால்
　　தக்கவர் தகவில ரென்ப
தாங்கவர் பயந்த புதல்வனால் தெளிய
　　அறிமினென் றறைகுவர் பெரியோர்.

(அ - ரை.) பூங்கொடி அன - பூங்கொடியைப் போன்ற. புனைந்துரை - வெறும் புகழ்ச்சிமொழி. பட்டாங்கு - உண்மை. சிவம்: பரசிவம் அபரசிவம் என இருவகைப்படும். பரசிவம் என்பது அபரோட்சத்தை; அபரசிவம் என்பது பரோட்சத்தை. 'தக்கார் தகவிலரென்பது அவரவர், எச்சத்தாற் காணப் படும்' என்பது திருக்குறள். (உ0)

மாதரசன், மாதாம்பிகை ஆகிய இவர் பெருமை

ஐந்தொழில் ஒருவன் திருவுளம் மகிழும்
　　அறுதொழி லானன்மா தரசன்
பைந்தொடி கொழுநற் றெழுதெழு தொழிலாள்
　　பரிந்துதீ வளர்ப்பவன் மறையோன்

செந்திரு அனையான் விருந்தினர் வயிற்றின்
 தீய்விப் பவனிவர் பெருமை
நந்தெழின் மலரோன் சொன்மகள் இருக்கு
 நாவினும் புகன்றிடப் படாதே.

(அ - ரை.) ஐந்தொழில் ஒருவன் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் செய்யும் இறைவன். அறுதொழிலாளன் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறுதொழில்களை யுடையவன். பைந்தொடி - பசிய வளையல்களை யணிந்த மாதாம்பிகை. பரிந்து - விரும்பி. தீ வளர்ப்பவன் - வேள்வித்தீயை வளர்ப்பவன். செந்திரு அனையாள் - திருமகளையொத்த மாதாம்பிகை. வயிற்றில் தீ - பசித்தீ. நந்து எழில் மலரோன் - அழகு மிக்க தாமரை மலரில் எழுந்தருளி யிருக்கும் நான்முகன். சொல் மகள் - கலைமகள். புகன்றிடப் படாது - சொல்ல முடியாது.

மறையவன் - தீவளர்ப்பவன் (வேள்வித்தீ). மாதாம்பிகை - தீயவிப்பவள் (பசித்தீ). (௨௧)

## நந்திதேவர் தோன்ற வானவர் மலர்மாரி பெய்தல்

இன்னமா தரசன் தேவிதன் வயிற்றின்
 இவ்வுல கெலாஞ்செய்புண் ணியத்தால்
மன்னுமார் அளிகள் விருந்துணக் காமர்
 வல்லியின் மலர்மலர் வதுபோல்
என்னையா ளுடைய நந்திவா னவன்றான்
 எய்திவந் துதித்தனன் அன்று
சென்னியால் அமரர் தொழுதுபூ மாரி
 சிந்தினர் துந்துமி முழங்க

(அ - ரை.) இன்ன - இந்த. மன்னும் - பொருந்திய. ஆர் அளிகள் - நிறைந்த வண்டுகள். காமர் வல்லி - அழகிய பூங்கொடி. சென்னி - தலை. துந்துமி முழங்க - தேவதுந்துமிகள் ஒலிக்க. (௨௨)

## அமணர், வைணவர் உள்ளன்பு

எங்குரு நந்தி தோன்றுநாட் புதுமை
 யென்சொல்வாங் கண்டுமுட் டென்னும்
வெங்குண அமணர் உளத்தெறி மழுவோன்
 வேடங்கண் டஞ்சலி செய்ய

அங்கொரு நேயம் பிறந்தது திருமால்
அடியவர் உளத்தினில் எங்கள்
சங்கரன் இறைவன் எனவொரு ஞானஞ்
சார்ந்தது தமையறி யாமல்.

(அ - ரை.) எறி மழுவோன் - எறிகின்ற மழுப்படையை யுடைய இறைவன். அஞ்சலி செய்ய - கைகுவித்து வணங்க. நேயம் - அன்பு. சார்ந்தது - பொருந்தியது. (உ௩)

நந்திதேவர் பிறந்ததும் உலகில் தீமைகள் மறைதல்

கொலைகளவழுக்கா றவாவொடு வெகுளி
கொடுஞ் சொல்பொய் பயனில கூறல்
நிலையழீஇ ஒருவன் செய்ந்நன்றி மறத்தல்
நிந்தனை வஞ்சனை பிறர்தம்
சிலைநுதல் மடவார்க் கருதலென் றினைய
தீமைக ளியாவும்போ யினவால்
நலமலி தரும மூர்த்தியா கியநல்
நந்திவா னவன்புவி வருநாள்.

(அ - ரை.) அழுக்காறு - பிறர் ஆக்கங் கண்டு பொறாமை. நிலையழீஇ - தன்னிலை பிறழ்ந்து: சொல்லிசை நிறைக்கவந்த அளபெடை. நலமலி - நன்மை மிகுந்த. (உ௪)

நந்திதேவர்க்கு இறைவன் சிவக்குறி கட்டுதல்

தாடலை தந்திங் கெம்மையாள் நந்தி
தாயகட் டினுநின்று தரைமேல்
ஏடவிழ் மலர்வாள் முகமது தோன்ற
எழுந்தரு ளுதல்முனங் குருவாய்க்
கூடல சங்க மேசன்தாய்க் கொவித்துக்
குறுகிநல் நுதலினீ றணிந்து
வீட்டருள் பரம சிற்கன லிங்க
மெய்யுறத் தரித்தனன் அம்மா.

(அ - ரை.) தாள் - திருவடியை. தலைதந்து - தலையில் வைத்து. அகடு - வயிறு. ஏடு அவிழ் - இதழ்கள் விரிந்த. எழுந்தருளுதல் முனம் - பிறப்பதற்கு முன்னே. கூடலசங்கம் - கூடலசங்கமம் என்னும் திருப்பதியிலுள்ள. குறுகி - அருகே வந்து. பரமசிற்கனலிங்கம் - இட்டலிங்கம். மெய் உற - மார்பில் பொருந்த. (உ௫)

வசவன் என்று பெயரிடுதல்

தரித்தபின் தனது மேனிதோன் றுமல்
தாயெதிர் நின்றிட பப்பேர்
திரித்துநல் வசவன் என்றுபே ரிட்டுச்
சென்றனன் சிவன்தனைக் குருவாய்
ஒருத்தர்தம் மிடத்திற் பாவனை செய்கென்
றுரைப்பவர் உரைகெடத் தானே
அருட்குரு வடிவாய் வந்தருள் புரிந்த
ஆலமார் சூலபா ணியனே.

(அ - ரை) மேனி - வடிவம். திரித்து - மாற்றி. ஆலமார் - நஞ்சு தங்கிய. சூலபாணியன் - சூலப்படையைக் கொண்ட கையை யுடையான். (உ௦)

வசவரின், திருநீறு முதலியன கண்டவர் மகிழல்

பிறந்தமெய்ஞ் ஞானப் பிள்ளைநல் நுதலிற்
பெருகொளி நீறுமொண் களத்தில்
சிறந்துள அமல லிங்கமுங் கண்டு
செறிந்தவர் அனைவரும் வியந்து
மறைந்தரன் குருவாய் வந்திவை புனைந்து
மகவினை வசவனென் றொருபேர்
அறைந்தனன் என்ன அறிந்தனர் அமலன்
அறிவுள்நின் றறிவிக்க அன்றே.

(அ - ரை.) நன்னுதலில் - நல்ல நெற்றியில். ஒண் களம் - அழகிய கண்டம். அரன் - இறைவன். அறிவுள் நின்று அறிவிக்க - அறிவுக்கு அறிவாகி நின்று அறிவிக்க. (உள)

அக்குழந்தை நந்திதேவரே என யாவரும் உணரல்

குறில்வழி லகரந் தனிநிலை ஆயுங்
கூடிய தகரமுன் எழுத்தென்
றறிகுறி வடிவந் திரிதல்போல் நந்தி
அடல்விடை மெய்திரிந் துறினும்
நறுமலர் விழியிற் கண்டவர் எல்லாம்
நந்தியே என்றுளம் மகிழ்ந்தார்
பெறுதவம் முயன்ற அன்னையும் பிதாவும்
பெறுமுவ கையினையார் உரைப்பார்.

(அ - ரை.) குறில் வழி லகரம் - குற்றெழுத்தின் முன்னின்ற லகரம். தனிநிலையாயும் - றகரமாகத் திரிதலன்றி ஆய்தமாயும். கூடிய - வருமொழிக்கு முதலா வந்த. அடல்விடை - வலிபொருந்திய இடபம். மெய்திரிந்தறினும் - வடிவம் மாறி நின்றாலும். நறுமலர் விழியில் - நல்ல தாமரை மலர்போன்ற கண்ணில்.

"குறில்வழி லளத்தவ் வணையின் ஆய்தம்
ஆகவும் பெறூஉம் அல்வழி யானே"

என்பது இலக்கண விதி. கல்தீது - கஃறீது. (உஅ)

வசவதேவர் கலையுணர்வடைதல்

ஈன்றநாள் தொடங்கிச் செய்கடன் முற்றும்
ஆயற்றினன் மாதர சன்தான்
தோன்றுமோர் குழவிப் பதங்கடந் தெங்கோன்
சொல்குரு முன்னுறுங் காலை
ஆன்றமா மறைகள் முதலவாய்த் தான்முன்
அறிந்துள கலையெலாம் அறிந்தான்
சான்றநா மதியம் இரவிவந் திறுப்பத்
தன்கதிர் தானடை குதல்போல்.

(அ - ரை.) குழவிப்பதம் - பிள்ளைக்காலம். சொல்குரு-போதிக்கின்ற ஆசிரியர். முன்னுறுங்காலை - முன்னிருக்கும் போது. ஆன்ற - சிறந்த. மதியம் - திங்கள். இரவி-ஞாயிறு. வந்து இறுப்ப - வந்திருக்க. தன் கதிர் - தனது முழுக்கலையை.

தனக்கெதிரில் ஞாயிறு சிறிது சிறிது குறுகிவந்திருந்தபோது திங்கள் தன் கலைகள் சிறிது சிறிது வளர்ந்து முன்போல் முழுக்கலைகளையும் அடைதல்போல, வசவேசரும் தமது கலையுணர்வினை ஆசிரியர்க்கு முன்னர் முழுதும் உணர்ந்தார் என்க. (உகூ)

விச்சலன் என்னும் அமணவரசன்

பரமனை இகழ்ந்து நெறியலா நெறிபோம்
பரமத யானையை அடக்க
அரமுறு கூர்மை அங்குசம் என்ன
அரனடி யாரெனும் ஆவிற்
கொருமழ இளங்கன் றெனவருள் வசவன்
ஒழுகுநாள் வளங்கொள் கல்யாண
புரமுற அமண குழாத்தொடு மிக்க
புரவலன் விச்சலன் இருந்தான்.

(அ - ரை.) பரமத யானை - புறச்சமயமாகிய யானை. அரம் உறு கூர்மை - அரத்தால் அராவிக் கூர்மை செய்யப்பெற்ற. அங்குசம் - தோட்டி. ஆவிற்கு - ஆன்களுக்கு. மழவிளங்கன்று - மிகவிளங் கன்று. குழாம் - கூட்டம். (௧௦)

வசவதேவர், நாகாம்பை கலியாணபுரம் சேர்தல்

படியில்கல் யாண புரமெனுந் தூசு
பரசிவ பத்தியாய் விளர்ப்பக்
கொடியபுன் சமண மாசுவர் பிடித்தாங்
குவலயத் திருந்திடும் அந்நாள்
அடியவர் செல்வம் எனும்வச வேசன்
அங்குடன் வந்தநா காம்பை
உடன்வர வந்தவ் விச்சலன் நகரின்
உற்றனன் நற்றவர் நெருங்க.

(அ - ரை.) படியில் - நிலவுலகில். தூசு - ஆடை. பரசிவபத்தி- இறைவனிடத்துக் கொள்ளும் அன்பு. விளர்ப்ப - வெளுக்க. உவர் பிடித்தாங்கு-உழமண் பற்றினாற்போல. வலயம்-வட்டம். வலயத்து- உலகில். உடன்வர - தொடர்ந்துவர.

புரம் எனும் தூசு சமணமாசு என்பன உருவகம். (௧௧)

விச்சலமன்னன் வசவேசரை எதிர்கொண்டழைத்தல்

வந்தனன் வசவ தேவனென் றுரைப்ப
மன்னவன் விச்சலன் அறிந்து
மந்திரி என்று மறைந்தஉட் பகையை
மலிபொடி மூடிய தழலை
வெந்தழல் என்ன அறிந்திடா தெடுப்ப
மென்கைநீண் டுதலென எதிர்போய்
உய்ந்திட அரிதாய்த் தன்மதம் அழிய
உடன்கொடு கோயிலுட் புகுந்தான்.

(அ - ரை.) மலிபொடி மூடிய தழல் - நீறு மிகுதியாகப் பூத்த நெருப்பு. வெந்தழல் - கொடிய தீ. உய்ந்திட அரிதாய்-இனி நிலைத் தற்கருமையாய். கோயில் - அரண்மனை. (௧௨)

அனைவரும் அரசிருக்கை மண்டபத்தமர்தல்

பொருந்துமத் தாணி யிடைத்தவி சொன்று
புறமத கோளரிக் குதவி
இருந்திறற் சிங்கம் சுமந்தபூ வணைமேல்
இருந்தனன் அரசனப் போதில்
அருந்திறல் தானை காவலர் வேந்தர்
அமைச்சர்வெண் கவரிகொள் மாதர்
நெருங்கிநிற் கரிய பேரவை இடத்து
நிகழ்ந்ததை ஒன்றெடுத் துரைப்பாம்.

(அ - ரை.) பொருந்தும் - அலங்காரம் அமைந்த. அத்தாணி - அரசிருக்கை மண்டபம். தவிசு - இருக்கை. புறமத கோளரி - புறச் சமயங்களை அழிக்கும் சிங்கம். இரும் திறல் - மிகுந்த வலிமையை யுடைய. தானைகாவலர் - படைத்தலைவர். (கக)

(வேறு)

ஓர் ஓலை விண்ணில் நின்று அங்கே விழுதல்

இந்திரன் எதிர்நின் றுடும் ஏந்திழை காதிற் செம்பொன்
சுந்தர ஓலை ஒன்று சோர்ந்தெனச் சுருள்மு டங்கல்
அந்தர முகட்டி னின்றும் அரசன்பே ரவையிடத்து
வந்தெதிர் விழுந்த தொன்று மானிடர் மருண்டு நோக்க.

(அ - ரை.) ஏந்திழை காதில் - அரம்பையின் காதில் நின்றும். சுந்தரவோலை ஒன்று - அழகிய கம்மல் ஒன்று. சோர்ந்தென - தவறி விழுந்தாற் போல. சுருள் முடங்கல் - ஓலைச்சுருள். அந்தர முகட்டில் நின்றும் - விண்ணின் உச்சியில் நின்றும். மருண்டு நோக்க - மருட்சி யடைந்து பார்க்க. (கஉ)

அவ்வோலையை வசவேசருக்கு அரசன் காட்டல்

நின்றவர் எடுத்து வந்து நெடுங்கையிற் கொடுப்ப வாங்கி
வென்றிகொள் மடங்கல் அன்னன் விரித்ததை எழுத்து நோக்கித்
தன்தலை யெழுத்தே யென்னத் தானுணர்ந் திலன்ம யங்கி
வன்திறல் அமண காலன் மலர்க்கையிற் கொடுத்தான் அன்றே.

(அ - ரை.) வென்றிகொள் - வெற்றியைக்கொண்ட. மடங்கல் - சிங்கம். விரித்து - பிரித்தெடுத்து. தன் தலை எழுத்து - தன் தலையின் ஓட்டில் எழுதப்பட்ட எழுத்து. வன்திறல் - திறமை மிக்க. (கங)

அரசன் அரியணைக்கீழ்ப் புதையல் உண்டெனக் கூறி நிலத்தைத் தோண்டுதல்

வாங்கிய முடங்கல் நோக்கி வசவநா யகனிவ் வோலை
தாங்குநின் தவிசின் கீழோர் தமனிய வைப்புண் டென்ற
தோங்கிய தூண்செய் தோளாய் உனக்குநான் காட்டு வேனென்
ருங்கதை அகழ்வித் தானவ் வரசர்கோன் அதிச யிப்ப.

(அ - ரை) தமனியவைப்பு - பொன் புதையல். உண்டு என்றது - இருக்கிறதென்று கூறுகின்றது. தூண் செய் தோளாய் - தூணாற் செய்யப்பட்டது போன்ற தோளையுடையவனே. அகழ்வித்தான் - தோண்டச் செய்தான். (கசு)

அரசன் அங்குப் பொற்புதையல் கண்டு மகிழ்தல்

அகழ்ந்திட நிதிய வைப்பொன் ருடக மலைபி லத்தில்
புகுந்திவண் வந்து மெல்லப் புறப்படல் போலத் தோன்ற
மகிழ்ந்தனன் அரசர் கோமான் வசவனைக் கண்ட போதே
நிகழ்ந்தவொண் பயனு ணர்ந்து நெஞ்சகம் நனிவி யந்தான்.

(அ - ரை.) அகழ்ந்திட - தோண்ட. ஆடகமலை - பொன்மலை; மேருமலை. பிலம் - பாதாளம். ஒண்பயன் - சிறந்த நன்மை. நனி - மிக. (கஎ)

அரசன் வசவ தேவரைப் போற்றுதல்

பயிலுநல் வினையே மக்குப் பயந்தவிவ் வசவ தேவன்
கயிலைநன் மலைக்கி ரண்டாங் கடவுளே யென்று சொல்லி
இயலுரை மடந்தை பொய்யாள் என்பதைப் புதுக்கி னைச்
செயலினை விழியிற் கண்டோர் தெளிந்துநெஞ் சகம கிழ்ந்தார்.

(அ - ரை.) பயிலும் - பொருந்திய. உரைமடந்தை-கலைமகள். புதுக்கினன் - புதிதாகக் காட்டினன். ஓலையில் பொறித்தபடி உடனே புதையலெடுத்தலாகிய காரியம் நிகழ்ந்ததாகலின் உரை மடந்தை பொய்யாள் என்றார். (கஅ)

அரசன் வசவருக்கு அமைச்சுரிமை அளித்தல்

மந்திரிக் கிழமை நல்கி மரபுளி உரிமை ஆற்றி
மைந்தனைப் புரக்குந் தாய்போல் மற்றெனைப் புரத்தி என்று
சிந்தனை களிப்ப இன்சொற் செப்பியா யிடையி ருப்ப
நந்தியைத் தொடர்பு கொண்டான் நரந்தகத் தடக்கை வேந்தன்.

(அ - ரை.) மந்திரிக்கிழமை - அமைச்சுரிமை. கல்வி-கொடுத்து-மரபு உன்னி - அதற்குரிய மரபை எண்ணி. புரக்கும் - காக்கும். ஆயிடை இருப்ப - அங்கிருக்க. காந்தகத் தடக்கை - வாட்படையை ஏந்திய பெரிய கை. காந்தகம் - வாள், ஆந்தக என்று பிரித்து ஆகத்தக்கவாறு என்று உரைகூறி இடர்ப்பட்டார் பத உரைகாரர். (௯௯)

விச்சலமன்னன் வசவேசருக்குத் திருமணம் செய்வித்தல்

பெருந்தகை வசவ தேவன் பெருமைக்குத் தக்க வாறே
அருங்கடி மணஞ்செய் வித்தான் அலங்கல்வேல் முருகன் அன்னுன்
திருந்திய அம்ம ணத்தின் சிறப்புநாம் விரிப்ப தென்கொல்
புரந்தனை அன்று தொட்டுப் புகன்றுகல் யாணம் என்னுல்.

(அ - ரை.) பெருந்தகை - சிறந்த தன்மையுடைய. கடி மணம் - திருமணம். அலங்கல் - மாலை. திருந்திய - சிறப்புப் பொருந்திய. புரந்தனை - அவ்வூரை. அன்று தொட்டு - அது முதலாக. (௬0)

நாகாம்பை புதல்வனைப் பெறுதல்

இவ்வகை கல்யா ணத்தின் இருப்பநா காம்பை என்னும்
தவ்வைநம் வசவ தேவன் தன்பிர சாதந் தன்னுல்
எவ்வமில் முத்தி மெய்யோ டிருக்கையின் அளிக்கும்வீர
சைவநல் நெறிவ ளர்க்குந் தனயனை யீன்றுள் அம்மா.

(அ - ரை.) இவ்வகை - இவ்வாறு. தவ்வை - தமக்கை; தாய். பிரசாதம் - அருட்பேறு. எவ்வம் இல் - குற்றமற்ற. மெய்யோடிருக்கையில் - உடலோடிருக்கையில். தனயன் - மகன்; ஆண் குழந்தை. (௬௧)

நாகாம்பை மைந்தனுக்குப் பெயரிடுதல்

மைந்தனை ஈன்று வந்து வசவநா மம்பு னைந்தாள்
நிந்தையில் கற்பு நங்கை நிகழ்திரு முகங்கள் ஆறும்
அந்தமில் தலங்கள் ஆறுய் அறிவித்தற் குலகில் வந்த
கந்தனென் றுன்ன அந்நா காம்பைதன் மகன்வ ளர்ந்தான்.

(அ - ரை.) உவந்து - மகிழ்ந்து. நிந்தை இல் - பழிப்பில்லாத. கந்தன் என்று உன்ன - முருகன் என்று எண்ண. பக்தத்தலம், மாகேச்வரத்தலம், பிரசாதித்தலம், பிராணலிங்கத்தலம், சரணத்தலம், ஐக்கியத்தலம் என்னும் ஆறு தலங்களும் எம் ஆறுமுகங்களே என்று அறிவிக்க; ஆறுமுகனே தோன்றினுன் என்னுமாறு வசவன் வளர்ந்தான். (௬௨)

### வசவர் மகவீன்று பெயரிடுதல்

வீரமா கேசர் என்னும் மென்பயிர் வளர்க்க வந்த
மாரிபோல் நிகரில் சென்ன வசவதே சிகனி ருப்ப
நேரிலா வசவ நாம நெடுந்தகை மகவொன் றீன்று
சீருலாஞ் சங்க மேச தேசிகன் பெயர்பு னைந்தான்.

(அ - ரை.) மாரி - முகில். நிகர் இல் - இணையில்லாத. நேர் இலா - ஒப்பில்லாத. நெடுந்தகை - பெருந்தன்மை யுடையவன். உருவக வணி. (௬௧)

### வசவதேவர் அடியார்களைப் புரத்தல்

மொழியினுல் நினைவால் வாக்கால் முக்கணன் அடியர் வேண்டிற்
றொழிவிலா துதவித் தாய்போல் ஓம்பினன் புறம தத்தோர்
வழியெலாம் வழக்கு மாற மலிபுகழ்ச் சைவம் என்னும்
பழியிலா வழிந டப்பப் பண்ணினன் வசவ தேவன்.

(அ - ரை.) வேண்டிற்று - வேண்டியவைகளை. ஓம்பினன் - காத்தான். வழக்கு மாற - வழக்கம் மாறுபாட்டையடைய. (௬௨)

### உலகில் தோன்றிய சிவகணங்கள் வசவேசர் புகழறிந்து வரல்

அரனடி யவர்க்குத் தேனு ஆகிய வசவன் சீர்த்தி
விரிநிலம் முழுதும் போர்ப்ப வெள்ளிவெற் பினைய கன்று
தரைமிசை வந்தி ருந்த தவரெலாம் உணர்ந்து சென்றார்
பொருவில்கல் யாணத் திற்குப் போதல்போற் கல்யா ணத்தில்.

(அ - ரை.) அரனடியவர் - சிவனடியார். தேனு - காமதேனு. சீர்த்தி - மிகுபுகழ். விரிநிலம்-விரிந்த நிலவுலகம். வெள்ளிவெற்பு - கயிலைமலை. தரை - உலகம். தவர் - தவத்தினையுடைய சிவகணங்கள். பொருவு - இல் ஒப்பில்லாத. (௬௩)

### வசவேசர் அடியார்களைப் போற்றுதல்

பலரொடு வரினும் எள்ளும் படிதனி வரினும் மிக்க
நலமொடு வரினும் மேனி நலமற வரினுஞ் சீர்சால்
மலைமகள் கணவன் தொண்டர் வரவுகண் ணுறின் எதிர்ந்து
நிலமிசை வணங்கி அஞ்சி நின்றுநன் குற்று நந்தி.

(அ - ரை.) எள்ளும்படி தனி வரினும் - இகழத்தக்க வடிவோடு தனியே வந்தாலும். நலமொடு வரினும் - சிறப்போடு வந்தாலும். சீர்சால்-சிறப்புமிக்க. (௬௪)

### வேறுபாடு கருதாது சிவனடியார்களைப் போற்றுதல்

சாதியும் குறியும் நீத்துச் சரணரைச் சிவனே என்று
பாதபங் கயம் இறைஞ்சிப் பத்திசெய் குவனந் நந்தி
தீதறு சுவைத்தீங் கண்டாற் செய்தசெங் கரும்பும் வேம்பும்
பேதமொன் றுருமற் சாதி பெயர்விடுத் தறிதல் போல.

(அ - ரை.) சாதி - குலம். குறி - ஆண் பெண் என்னும் வேறுபாடு. சரணர் - அடியார். பாதபங்கயம்-அடித்தாமரை. தீது அறு—குற்றமற்ற. சுவைத் தீங்கண்டு - இனிமையையுடைய நல்ல - கற்கண்டு. (சஎ)

### சிவனடியார்களின் பலவகை நிலை

மாதர்கள் தமைய கன்ற மலிதுற வினரெண் இல்லார்
கோதையர் உடன் இருந்துங் கொடுமயல் இலரெண் இல்லார்
மேதைகொள் அருச்ச னைக்கு வேண்டுவ முழுதுங் கொண்டு
போதுகள் வழாமல் ஈசன் பூசைசெய் பவரெண் இல்லார்.

(அ - ரை.) மலி துறவினர் - மிகுந்த துறவை யுடையவர்கள். கோதையர் - பெண்கள். கொடுமயல் - கொடுமையைச் செய்யும் மயக்கம். மேதைகொள் - அறிவு நிறைந்த. போதுகள் - காலங்கள். (சஅ)

### நோன்பு முதலிய நெறிகள்

விரதங்கள் வேறு வேறு மேவிநிற் பவரெண் இல்லார்
பரதஞ்செய் மதர ரிக்கட் பரத்தையர் மனைகள் தோறும்
சுரதஞ்செய் பவரெண் இல்லார் தூயநன் னந்தி நாம
வரதன்தன் அன்பின் வாழும் வழுவின்மா கேசர் அம்மா.

(அ - ரை) விரதங்கள் - நோன்புகள். பரதம் - கூத்து. மதர் - மதர்த்த அரி - செவ்வரி கருவரி படர்ந்த. சுரதம் - காமவிளையாடல். (சகூ)

### வசவதேவர் செயல்

தீதுசெய் சமணர் முன்னர்ச் செயற்கருஞ் செய்கை காட்டி
வாதுசெய் தவர்செ ருக்கு மாய்வுசெய் திமயம் ஈன்ற
தூதுசெய் முலைமடந்தை துணைவனுர் தொண்டர்க் கெல்லாம்
யாதுசெய் குவனென் றேவல் இயற்றுவன் வசவ தேவன்.

(அ - ரை.) செயற்கருஞ்செய்கை - வியத்தகு செயல்கள். செருக்கு - ஆணவம். மாய்வுசெய்து - அழித்து. இமயம் - இமயமலை. சூதுசெய் - சூதாடுகருவியை ஒத்த. யாது செய்குவல் - என்ன பணி விடைசெய்வேன். (௪0)

வசவதேவர் அல்லமதேவரை எதிர்பார்த்திருத்தல்

உளந்தெளி சரணர் தம்மோ டிம்முறை ஒழுகும் நாளின்
அளந்தறி வரிய சோதி அல்லமன் வரவு நோக்கி
வளங்கெழு திருக்கல் யாண வளநகர் தனில்வான் நோக்கும்
இளம்பயிர் போலி ருந்தான் எம்மையா ளுடைய நந்தி.

(அ - ரை.) உளம் தெளி - உள்ளந்தெளிந்த. சரணர் - சிவ னடியார். வளம்கெழு - வளமை பொருந்திய. வான் - மழை. பார்க் கும் - எதிர் நோக்குகின்ற. இளம் பயிர் - சிறிய பயிர்; பைங்கூழ். (௪௧)

ஒன்பதாவது அக்கமாதேவி உற்பத்தி கதி முடிந்தது

கதி க - க்குச் செய்யுள் - ௫௧௨

---

# ௧௦. அக்கமாதேவி துறவு கதி

[இக்கதிக்கண், மாதேவி மங்கைப்பருவம் அடைகிறாள். மங்கைப்பருவ மடைந்தும் இன்பவிளைவு சிறிதும் அற்று இறைவனை யடைய முயலுகிறாள். கௌசிகமன்னன் திருவுலா வருகிறான். அவன் அழகைக்கண்டு நகரமாதர்கள் மையல்கொண்டு கலங்குகின்றார்கள். கௌசிகமன்னன் மாதேவியைக் காண்கிறான். மாதேவியின் பேரழகு மன்னனை மயக்குகின்றது. மாதேவி இன்னாள் என்பதை ஒருவர் மூலம் உணர்ந்துகொள்கிறான். அவளை எவ்வகையினும் அடையவேண்டுமென்று முடிவுசெய்கிறான். மாதருங் குருவும் வலிந்து பலங் காட்டினால் நன்மை செய்யார்கள்; நயத்தினாலேதான் காரியத்தை முடிக்கவேண்டுமென்று துணிகிறான். மாதர்கள் சிலரை விருமலன்பாற் சென்று மாதேவியை மணம் பேசுமாறு அனுப்புகிறான். விருமலன் தக்கவரல்லார்க்கு மகட்கொடை வழங்கல் தகுதியன்று என்று மறுத்துரைக்கிறான். பின்னர் மாதேவியிடமே சென்று பேசுமாறு அனுப்பிவிடுகிறான். மாதேவி அரசன் ஒரு சூள் உரைக்க வேண்டும் என்கிறாள். மணம் பேசவந்த மாதர்கள் மாதேவியும் மன்னிடம் காதல்கொண்டிருக்கிறாளென்று எண்ணி அரசனிடஞ் சென்று சொல்லுகிறார்கள். அரசன் மாதேவியிடம் வருகிறான். தன்னை வலிந்து தழுவாமலிருப்பதற்குச் சூள் உரைக்குமாறு மாதேவி கேட்கிறாள். அரசனும் அவ்வாறே சூண் மொழி புகலுகிறான். மாதேவி அரசனுடன் அரண்மனையை அடைகிறாள். தனியிடத்தில் மாதேவியைக் கண்ட அரசன் தன் எண்ணத்தை நிறைவேற்றுமாறு வேண்டுகிறான். மாதேவி சிவபூசை செய்த பிறகு தன்னை வந்து சேருமாறு கூறுகிறாள். அரசன் 'நான் உங்கள் இறைவனை வழிபடேன்' என்கிறான். 'அப்படியானால் நான் உன் தோளைத் தொடேன்' என்கிறாள் மாதேவி. பின் தன் ஆடையணிகளை நீக்கிவிட்டுத் துறவுக் கோலம் பூண்டு தெருவிற் செல்லுகிறாள். தாய் தந்தையர் வந்து பார்த்து நம் மகள் தக்கதே எண்ணினாள் என்று எண்ணிச் செல்லுகிறார்கள். நகரமாந்தர்கள் மாதேவி நிலை கண்டு வருந்துகிறார்கள். மாதேவி அல்லமதேவரைத் தேடிக்கொண்டு காடு மலை கடிநகர் முதலிய இடங்களிற் சுற்றுகிறாள் என்னுஞ் செய்திகள் விரிவாகக் கூறப்பெறுகின்றன.]

நூலாசிரியர் கூறல்

தன்னைக் காண வேள்கணை பாயத் தடுமாறும்
மன்னைக் காணுஞ் சோறென விட்டருள் மாதேவி
மின்னைப் போலும் அல்லம தேவன் விளையாடும்
கொன்னைக் கானில் தேடிஅடைந்தமை கூறுற்றாம்.

(அ - ரை.) தன்னைக் காண - தன் உண்மை நிலையை அறிய. காணு என்றும் பாட மாறுபாடுள்ளது. மன்னை - அரசனை. காலும் - கக்கிய; வாந்தி செய்த. விட்டருள் - நீக்கிவிட்ட. அருள் மாதேவி என்று பிரித்துப் பொருள் கூறினும் அமையும். கொள் - பெருமை. கொள் என்னுஞ் சொல்: அச்சம், அச்சமின்மை, காலம், பெருமை என்னும் நான்கு பொருளையும் தரும். கான் - காடு. (க)

## மாதேவி மங்கைப் பருவம் அடைதல்

கொங்கைப் பொறையைக் கொண்டு மருங்குற் கொடி வாட
அங்கைக் குடநெய் பெய்தழல் என்ன அழகெய்தி
நங்கைக் கிணைகண் டிலமுல கெங்கணும் நாமென்ன
மங்கைப் பருவம் நண்ணினள் முற்றுணர் மாதேவி.

(அ - ரை) பொறை - பாரம். மருங்குற் கொடி-இடையாகிய கொடி. அங்கைக் குடநெய்-அகங்கையிலுள்ள குடத்து நெய். பெய் - ஊற்றப்பெற்ற. இணை - ஒப்பு. நண்ணினள் - அடைந்தாள். (உ)

## மாதேவி இறைவனையடைய முயலுதல்

வாதித் தொன்றோ டொன்றெழல் போல்முலை வந்துற்றும்
பேதைப் பெண்போற் காமம் உளத்திற் பிறவாமல்
பாதிப் பெண்மே னியனெனும் இன்பப் பதிதன்னைச்
சாதித் தெய்துஞ் சாதனை மோடு தலைப்பட்டாள்.

(அ - ரை.) வாதித்து - நான் முன் நான் முன் என்று வழக்காடிக் கொண்டு. பேதை - ஐந்து வயதுப் பெண். பாதிப்பெண் மேனியன் - பாதியுடல் பெண்வடிவாக அமையப்பெற்ற இறைவன். இன்பப்பதி - பேரின்பத்தலைவன். சாதித்து - இடைவிடாது முயன்று. தலைப்பட்டாள் - முயற்சித்தாள். (ங)

## மாதேவி இறைவனையடையும் பருவத்தினள் எனல்

தன்னை அறிந்திடை ஈடற முக்கண் தலைவன்பால்
பின்னம் அறும்படி மேவு பெரும்பரு வப்பெண்ணைக்
கன்னல் நெடுஞ்சிலை மன்மதன் வேரிக் கணைபாயும்
மன்னும் இளம்பரு வத்தினள் என்பர் மறைப்புற்றார்.

(அ - ரை ) இடையீடு அற - நீக்கமற. பின்னம் - வேறுபாடு. கன்னல் நெடுஞ்சிலை - கரும்பினாலாகிய நீண்ட வில். வேரிக்

கணை - தேனையுடைய மலர் அம்பு. மன்னும் - பொருந்திய. மறைப்பு உற்றூர் - அறிவு மறையப்பெற்றவர். (ரு)

மாதேவி மாதவம் புரிந்துகொண்டிருத்தல்

வண்டு படாதலர் சண்பக மேயென மாருகிப்
பண்டர னேட்மர் செய்மதன் வண்டு படாமேனி
கண்டிடும் ஒண்சுட ரேயெனு மாறு கவின்பொங்க
ஒண்தவ நின்மலன் மாதமர் நாள்களின் ஓர்நாளில்.

(அ - ரை.) வண்டு படாது - வண்டுகள் மொய்க்காமல். அலர் - மலர்ந்த, மாருகி - வேறுபட்டு. மதன் வண்டு - காமன் கணை. ஒண் சுடர் - அழகிய ஞாயிறு. கவின் பொங்க - அழகு மிகுதியாக. அமர் - இருக்கும். சண்பக மலரினும் வேங்கை மலரினும் வண்டுகள் மொய்க்கா. ஆதலின், 'வண்டு படாதலர் சண்பகம்' என்றூர். என்னை? 'சண்பகமும் வேங்கையும் வண்டுணு மலர் மரம்' என்பது ஆன்றோர் கண்ட உண்மை. (சு)

கௌசிகமன்னன் உலாவருதல்

வீரங் குறைவில் மும்மத வேழம் மிசைகொண்டு
தாருந் தோளும் பொங்க மதிக்குடை தன்மேலா
மாரன் கரிமேல் வந்தனன் என்ன மணிப்பொற்றேர்
ஊருந் தெருவிற் கௌசிக மன்னன் உலாவந்தான்.

(அ - ரை.) குறைவு இல் - குறைதலில்லாத. மும்மதவேழம் - கன்னமதம் கபோலமதம் கோசமதம் என்னும் மூவகை மதங்களை யுடைய யானை. தார் - மாலை. மாரன் கரிமேல் வந்தனன் என - காமன் யானையின்மீது வந்தாற்போல. ஊரும் தெருவில் - நடத்துகிற தெருவில். (ஏ)

உலாவருஞ் சிறப்பு

இயங்கள் தரங்க நெடுங்கடல் என்ன எழுந்தார்ப்ப
உயங்கு மருங்குல் மடந்தையர் பாடி உடன்போத
வயங்கள் இவர்ந்தின மைந்தர் மருங்கின் அடுத்தேகப்
புயங்கள் அலங்கல் இலங்க விசும்பிறை போல்வந்தான்.

(அ - ரை.) இயங்கள் - வாத்தியங்கள். தரங்க நெடுங்கடல் என்ன - அலையையுடைய நெடிய கடல் என்று கூறும்படி. ஆர்ப்ப - முழங்க. உயங்கும்-வருந்தும். போத - வர. வயங்கள் இவர்ந்து - குதிரைகளின் மீது ஏறி. மருங்கில் - பக்கத்தில். அலங்கல் இலங்க - மாலைகள் விளங்க. விசும்பு இறை - தேவர்கோன். (அ)

கௌசிக மன்னனைக் கண்ட மங்கையர் காம மயக்கம்

மாணும் நெடுங்கரி மீது புரந்தனில் வந்தானைக்
காணும் மடந்தையர் ஏதும் உணர்ந்திலர் காமத்தால்
நாணும் இழந்தனர் தூசும் இழந்தனர் நன்ருகும்
பூணும் இழந்தனர் ஆவி இழந்திலர் போனுர்கள்.

(அ - ரை.) மாணும் - பெருமையை உடைய. கரி - யானை. புரம் - நகர். காணும் - பார்க்கின்ற. நாணும் - வெட்கமும். தூசு- உடை. பூண் - அணிகலன்கள். ஆவி - உயிர். (அ)

மாதர்கள், வண்டுகளை நோக்கிக் கூறல்

நல்ல மதந்தான் ஒண்கவு ளின்பால் நன்றுண்ணச்
செல்லு சுரும்பே வெங்கரி யின்தாழ் செவியூடு
மெல்ல நடந்தே போவென மெள்ள விளம்பென்று
சொல்லி மறங்கூர் வேலன கண்ணுர் துயர்கின்ருர்.

(அ - ரை.) கவுள் - கன்னம். சுரும்பு - வண்டு. தாழ் செவியூடு- தாழ்ந்த செவியின்கண் மறம்-வெற்றி. வேல் அன கண்ணுர்-வேலைப் போன்ற - கண்களையுடைய பெண்கள். (க)

கௌசிகமன்னன் மாதேவியைக் காணுதல்

கோதையர் மாலால் இவ்வகை நோவக் கொடிமாட
வீதியின் ஊடு வருந்திறல் மன்னன் வினையில்லா
மாதவன் ஆகும் நின்மல னுக்கோர் மகளாகும்
காதொடு காதுங் கண்மட மாதைக்கண்டானே.

(அ - ரை.) கோதையர் - பெண்கள். மால்-காம மயல். நோவ- துன்புற. கொடி மாடம் - கொடிகள் தங்கிய மாளிகைகள். திறல் - வலிமை. வினை - இருவினை. காதொடு காதும் - செவிகளில் மோதுகின்ற. கண் - கண்கள். அவை செவியளவு நீண்டுள்ளன என்பது குறிப்பு. (௧0)

கௌசிகமன்னன் காமன் கணையால் கலங்குதல்

கண்டன ளேஇலை யோஎனும் முன்னங் கழைவாங்கிக்
கொண்டனன் வாளி சொரிந்தனன் ஒடிக் கொடுமாரன்
உண்டிலை யோவென ஆவி தளர்ந்தே உம்பல்மேல்
மண்டலம் ஆளும் மன்னன் இருந்தான் வசமற்றே.

(அ - ரை.) கழை வாங்கி - கரும்பு வில்லை வளைத்து. கொண்டனன் வாளி - மலர்க்கணைகளைக் கையில் எடுத்துக்கொண்டான். கொடுமாரன் - கொடிய காமன். உம்பல் - யானை. வசம் அற்று - தன் வசமில்லாதவனாய்; அஃதாவது மையலின் வசப்பட்டு இருந்தான் என்க. மண்தலம் - இம் மண்ணுலகம். (கக)

இம் மாது யாரோ?' என்று எண்ணுதல்

கொங்கைப் பாரத் தான்மலர் வாசங் கூடாமல்
இங்கிப் பாரிற் போது மலர்க்கண் எழில்மாவோ
மங்கைக் கோலங் கொண்டு நிலத்தில் வருமின்னோ
அங்கைக் காந்தட் பொற்றொடி யாரோ அறியேனே.

(அ - ரை.) மலர் வாசம் கூடாமல் - தாமரைமலரில் வாழ்ந்திருத்தல் முடியாமல். போதும் - வரும். மலர்க்கண் எழில் மாவோ - தாமரை மலரில் உள்ள திருமகளோ. கோலம் - வடிவம். மின்னோ - மின்னலோ. மின்னற்கொடியே ஒரு பெண்ணுரு எடுத்து வந்ததோ என மயங்கியபடி, காந்தள் - காந்தள் மலர். (கஉ)

கௌசிகமன்னன் அடைந்த காமப்பெருக்கு

வஞ்சி நடந்தே என்னெதிர் வந்தே மயல்செய்தாள்
நெஞ்சு தளர்ந்தேன் மாலின் விழுந்தேன் நிலைகாணேன்
அஞ்சலை என்றே இன்றணை யாளேல் அனல்காணும்
பஞ்சு படும்பா டங்கசன் அம்பாற் படுவேனே.

(அ - ரை.) வஞ்சி - வஞ்சிக்கொடி போல்பவள். மயல் - காம மயக்கம். மால் - பெருமயக்கம். அணையாளேல் - தழுவாளாயின். அங்கசன் அம்பு - காமன் கணை. படுவேன் - இறப்பேன். (கங)

மாதேவி யார்? என அறிந்துவர ஒருவனை விடுத்தல்

என்ன நினைந்தே மன்னவன் வெந்தீ இழுதாகி
முன்னர் மருங்கே நின்ற ஒருத்தன் முகநோக்கிப்
பொன்னென வந்தவ் வாய்தலின் நின்று புறப்பட்ட
கன்னி அணங்கார் நீயறி கென்றான் காமுற்றே.

(அ - ரை.) வெந்தீ இழுதாகி - நெருப்பிற் பட்ட வெண்ணெயைப்போல மனம் உருகி. மருங்கே - பக்கத்தே. பொன் - திருமகள். வாய்தல் - வாசல். கன்னி அணங்கு - தேவகன்னிகை போல்பவள். ()

### மன்னன் மாதேவியை அறிந்து 'இவளை எவ்வாற்றானும் கொள்வேன்' எனல்

ஓடி அறிந்தே அன்னவன் வந்தங் குரைசெய்ய
வாடு மருங்குல் மங்கையை இன்னான் மகளென்று
நீடிய வெந்துயர் மன்னன் அறிந்தெந் நெறியாலும்
கூடுவன் இந்த அணங்கினை என்று குறித்தேகி.

(அ - ரை.) வாடும் மருங்குல் - சுருங்கிய இடை. நீடிய வெந் துயர் - மிகுதியாக அதிகரித்த காமத் துன்பம். எந்நெறியாலும் - எவ்வகையாலாவது. குறித்து - மனதில் எண்ணி. (கசு)

### மாதேவியைத் தூதினால் அடைய எண்ணுதல்

கோயிலின் மேவி இருந்துயர் ஞானக் குறிகூறும்
தூயவ ராகிய ஆரியர் தாமுஞ் சுடர்செம்பொன்
சேயிழை யாரும் வலிந்துறில் இன்பு செயாரென்று
வாயிலி னலணை வேனென மன்னன் மனத்தெண்ணி.

(அ - ரை.) கோயிலின்மேவியிருந்து-அரண்மனையிற் போயிருந்து. ஞானக்குறி - மெய்யுணர்வை யடையும் வழி. ஆரியர் - ஆசிரியர். சுடர் - விளக்கம் பொருந்திய. சேயிழையார் - செம்மையான அணி கலன்களை யணிந்த பெண்கள். வாயிலினால் - தூதால். (கஎ)

(வேறு)

### மன்னன் நிருமலனிடம் மணம் பேச மாதர்களை அனுப்பல்

தூது வல்லநன் முதுக்குறை மாதரைத் துணிந்து
நீதி வல்லவன் நிருமலன் மகள்தனை நீவிர்
தீதில் எம்மனைக் கிழத்தியாம் படியுரை செய்து
போது மின்களென் றேவினன் வியனிலம் புரப்பான்.

(அ - ரை.) முதுக்குறை - பேரறிவுடைய. துணிந்து - தேர்ந் தெடுத்து. மனைக்கிழத்தியாம்படி - மனைவியாகுமாறு. போதுமின் - வாருங்கள். வியன் - பெரிய. நிலம் - மண்ணுலகம். புரப்பான் - பாதுகாப்பான். (கஎ)

### நிருமலன் பெண் கொடுக்க மறுத்தல்

ஐய அன்னதே செய்குவம் எனப்புகன் றகத்தில்
பைய வந்துநல் நிருமலன் திருமுகம் பார்த்து
வைய மன்னவன் கருத்தினை வகுத்தனர் மறுத்துத்
துய்ய மங்கைமீர் எமக்கடா திதுவெனச் சொன்னான்.

(அ - ரை.) அன்னதே - அவ்வாறே. அகத்தில் - நிருமலன் வீட்டில். பைய வந்து - மெதுவாக வந்து. வைய மன்னவன் - உலகங்காக்கும் அரசன். கருத்தினை வகுத்தனர் - உள்ளக்கருத்தைத் தெரியப்படுத்தினார்கள். அடாது - தகாது. (கஅ)

'தானாக வந்த திருமகளை நீர் மறுக்கிறீர்' எனல்

வேந்தன் மாமனை நும்மகள் ஆயினவ் வேந்தன்
சார்ந்த வாழ்வெலாம் நுமவென அறிகிலீர் தானே
போந்த ஓர்திரு மகள்வர விணைப்புறம் போக்கும்
மாந்தர் யாருளர் என்றுமங் கையர்சொல வகுப்பான்.

(அ - ரை.) மாமனை - சிறந்த மனைவி. நுமவென - உமக்குரியன வாமென. மாந்தர் - மனிதர். வகுப்பான் - சொல்லுவான். (கக)

'தகுதியற்றார்க்குப் பெண்கொடுத்தல் தகா'தெனல்

இம்மை சேர்பயன் கருதியே தகாதவர் இடத்தில்
கொம்மை வார்முலை மகட்கொடை நேர்ந்தவக் கொடியார்
அம்மை ஆழ்திரை யத்திடை வீழ்ந்தனர் அழுந்தித்
தம்மை நோக்குநர் ஒருவரும் இன்றியே தளர்வார்.

(அ - ரை.) இம்மை - இப்பிறப்பிற்குரிய பயன். கொம்மை - பருத்த. வார் - கச்சு. அம்மை - மறுபிறப்பில். ஆழ்நிரையத்திடை - ஆழ்ந்த நரகத்தில். நோக்குநர் - நோக்கி இரங்குபவர். தளர்வார் - சோர்வார். (உ0)

தீயன செய்தலினும் உயிர்விடுதல் நன்றெனல்

தமக்க டாதது செய்துயிர் வாழ்வது தன்னில்
சுமைக்க டாதமெய் விடுத்தலே நன்றெனச் சொல்வர்
எமக்க டாதது புகன்றனிர் மங்கைமீர் இச்சொல்
நுமக்க டாததென் றியம்பலும் மங்கையர் நுவல்வார்.

(அ - ரை.) அடாதது - தகாதது. சுமைக்கு அடாத - தாங்குவதற்குத் தகாத. மெய் - உடல். புகன்றனிர் - சொன்னீர்கள். நுவல்வார் - சொல்வார். (உக)

அரசன் ஏற்றல் தகாதெனல்

உறையில் வாளொடு மாவழங் குறுவனத் தோடி
மறவன் ஓர்பொருள் தருகென இரத்தலை மானும்
இறைவன் வாழ்குடி தன்னிலோர் ஒருபொருள் இரத்தல்
அறவ னாகிய நீயிதை அறிந்திலை அந்தோ.

(அ - ரை.) மாவழங்குறும் - விலங்குகள் இயங்கும். மறவன்- வேடன். மானும் - ஒக்கும்.

"வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு"

என்னும் திருக்குறட் கருத்தைத் தழுவியது. இறைவன் - அரசன். அறவன் - அறநூல் உணர்ந்தவன். (உஉ)

நிருமலன் மாதர்களைத் தன் மகளிடம் அனுப்புதல்

என்று மாதரார் கூறலும் நிருமலன் எங்கள்
மன்றல் வார்குழல் பேதையோ வல்லள்நும் மனத்தைச்
சென்று கூறுமின் அவள்மனம் இசைந்துரை செய்யின்
நன்று போமினென் றியம்பினன் அவர்மனம் நயந்து.

(அ - ரை.) மன்றல் வார் குழல் - மணந்தங்கிய நீண்ட கூந்தலையுடைய மாதேவி. வல்லள் - அறிவு வல்லமையுடையவள். நன்று ஈண்டு எனக்கும் உடன்பாடுதான் என்னும் பொருளைத்தந்து நின்றது. நயந்து - மகிழ்ந்து. (உ௩)

மாதர்கள் மாதேவிபாற் கூறுதல்

மங்கை பாலடைந் தறைகுவர் மதன்வலி மாயக்
கொங்கை மாமுகிழ்ப் பூங்கொடி நீயருள் கூர்ந்தே
எங்கள் கோமகன் ஆருயிர் நிறுத்தினை என்னில்
அங்கண் மாநிலத் துயிர்க்கெலாம் அன்னையா குவையால்.

(அ - ரை.) மதன்வலி மாய-மன்மதன் வலிமை கெட. கொங்கை மாமுகிழ்ப்பூங்கொடி - கொங்கையாகிய சிறந்த அரும்பினையுடைய பூங்கொடி போல்பவளே. கோமகன் - அரசன். அங்கண் - அழகிய இடம். அன்னை - தாய். (உ௪)

அரசன் ஒரு சூள் உரைப்பின் நல்லது என்றல்

என்ன ஓதலும் நிருமலன் ஈன்றருள் என்தாய்
மன்ன னுன்மனை துறக்குமோர் சூழ்ச்சியை மதித்துப்
பொன்ன னீர்அர செனக்கொரு சூளினைப் பொருந்திப்
பன்னு மாயினீர் பணித்தது நன்றெனப் பகர்ந்தாள்.

(அ - ரை.) மனை துறக்கும் - வீட்டைவிட்டுப் பற்றற்று நீங்கும். மதித்து - எண்ணி. பன்னுமாயின் - கூறுவான் ஆனல். பணித்தது - உரைத்தது. (உ௫)

### மாதர்கள், அரசனிடஞ் சென்று செய்தி கூறல்

தூது சென்றவர் பொற்கொடி சொல்லிய சொல்லால்
காதல் கொண்டனள் என்றுளந் [1]திரிந்துதாங் கருதி
மாது நின்பெருங் கருணைசெய் வதற்கெங்கள் மன்னன்
யாத றைந்தனை அதுசெயத் தக்கவன் என்று.

(அ - ரை.) பொற் கொடி — மாதேவி. திரிந்து தாம் கருதி — மாறுபாடாக எண்ணி. பெருங்கருணை - மிக்க அன்பு. யாது அறைந்தனை - எது செய்யக் கூறினை. (உக)

### மன்னன் மாதேவியிடத்திற்கு வருதல்

உள்ளம் ஆர்வமோ டேகியம் மடந்தையர் உரைப்ப
வள்ளல் ஆகிய மன்னவன் மனம்நனி மகிழ்ந்து
தெள்ளும் ஆரமு தனையவள் இருந்துழிச் சென்றான்
எள்ளு காமநோய் கொண்டவன் என்செய இசையான்.

(அ - ரை.) உள்ளம் ஆர்வமோடு-மனக்களிப்போடு. வள்ளல்—வரையாது கொடுப்போன். தெள்ளும் - தெளிந்த. ஆர் அமுது - நிறைந்த அமுதம். இருந்துழி - இருந்த விடத்து. எள்ளு - இகழத் தக்க. (உஉ)

### மாதேவியைக் கண்டு மன்னன் கருதுதல்

வல்லி கொங்கையைப் பொன்மலை என்னவே மதியான்
இல்லு றுங்குடம் ஆகவே எண்ணினன் நுதலை
வில்லெ னும்படி நினைத்தனன் வெண்பிறை என்னான்
சொல்லு வன்றனக் ககப்படு மடந்தையாய்த் துணிந்து.

(அ - ரை.) வல்லி - வல்லிக்கொடி போன்றவள். பொன்மலை - மேருமலை. இல்உறும் குடம் - வீட்டிலுள்ள குடம். வெண்பிறை - வெள்ளிய பிறைத்திங்கள். (உ௩)

### அரசனை உறுதிமொழி கூறும்படி மாதேவி கேட்டல்

அருள்செய் தென்னைநீ அளித்திடும் அதற்குநான் செய்வ
துரைசெய் நானது செய்வனென் றரசர்கோன் உரைப்ப
வரைசெய் தோளினுய் என்னைநீ வலிந்துபுல் லாமைக்
கொருசொல் உண்மைசொல் என்றனள் ஒருபுடை ஒதுங்கி.

---

1. (பாடம்) தெரிந்து.

(அ - ரை.) அளித்திடும்-காப்பாற்றும். வரைசெய் தோளினும்- மலைபோன்ற தோளையுடையவனே. புல்லாமைக்கு-சேராதிருப்பதற்கு. ஒரு சொல் உண்மை - உறுதிமொழி; சூள். புடை - பக்கம். (கூக)

அரசன் உறுதிமொழி கூறத் தொடங்குதல்

நின்க ருத்திசை வாலன்றி நின்னையான் வலியேன்
என்ப தற்கொரு சூளுரைக் குவன்முகில் எழுந்த
மின்கொ டிச்சிறு மருங்குலாய் கேளென வெள்வேல்
புன்பு காக்கருங் கடாக்களிற் றரசர்கோன் புகல்வான்.

(அ - ரை.) இசைவால் அன்றி - உடன்பாடு இல்லாமல். முகில் எழுந்த - காரில் தோன்றிய. மின்கொடி - மின்னற் கொடி. ஒள்- ஒளி பொருந்திய. புன்புகர் - சிறு புள்ளிகள். கடாம் - மதநீர் ஒழுக்குகின்ற. களிறு - ஆண் யானை. (கூ0)

(வேறு)

விருந்தோம்பாதான் முதலியோர்

வந்தநல் விருந்தி ருப்ப மனையினுற் றருந்து வானும்
பந்தியின் உணவு வேறு பண்ணுபா தகனுந் தாயும்
தந்தையும் உணவுண் ணுத சழக்கனும் உச்சிப் போதின்
நொந்தவர் தமைநோக் காமல் நுகர்ந்திடு கொடியன் தானும்.

(அ - ரை.) விருந்து - புதிதாக வந்தோர். இருப்ப - காத்திருக்க. பந்தி - உண்போர் வரிசை. வேறுபண்ணும் - வேறு செய்வித்துக் கொள்ளும். சழக்கன் - கொடியோன். நொந்தவர் - பசியால் வருந்தியவர். நுகர்தல் - உண்ணல். (கூக)

விலக்கப்பட்ட உணவுண்போன் முதலியோர்

நிந்தைசெய் உணவி னுனும் நிருமலன் பூசை யின்றி
வந்துண வருந்து வானும் மறுத்தவூன் நுகர்விப் பானும்
தந்தநல் வினையாற் செல்வஞ் சார்ந்தவர் தம்மைக் கண்டு
சிந்தனை பொருத ழுங்கித் தீர்வினுண் மகிழ்வான் தானும்.

(அ - ரை) நிந்தை செய் உணவினுனும் - பெரியோர்களால் விலக்கப்பட்ட உணவை உண்பவனும். மறுத்த ஊன் - விலக்கப் பட்ட புலால். நுகர்விப்பான் - உண்ணச் செய்பவன். அழுங்கி - வருந்தி. தீர்வின் - முடிவில். (கூஉ)

### கன்றுக்குப் பால் விடாமல் கறப்பவன் முதலியோர்

கன்றுண விடாமல் ஆன்பால் கறந்துகொள் பவனுஞ் செய்த
நன்றிகொல் பவனுங் கோடி நடுநிலை தவறு வானும்
கொன்றுயிர் பதைப்ப நோக்குங் கொடியனும் போர்க்க ளத்தில்
தன்தலை வனைவி டுத்துச் சாய்ந்துபோம் மடமை யானும்.

(அ - ரை.) நன்றிகொல்பவன்-செய்ந்நன்றி மறப்பவன். கோடி-நடுவுநிலைமையிற் கோணி. சாய்ந்துபோம் - தெரியாது ஓடிப்போம். மடமையோன் - முழுமூடன். (கக)

### அடைக்கலம் புகுந்தோரைக் காப்பாற்றாதவன் முதலியோர்

அடைக்கலம் எனவந் தானை அளித்திடா தகற்று வானும்
கொடுக்குதும் எனவு ரைத்துக் கொடானுமொண் கொடைவி லக்கி
விடுக்குறு மவனும் பாவ வினையிடத் துதவி யாகி
நடக்குறு மவனுந் தேர்ந்து நட்டபின் வஞ்சிப் பானும்.

(அ - ரை.) அளித்திடாது - பாதுகாவாமல். அகற்றுவான் - விலக்குவோன். நட்டபின் - நட்புக் கொண்ட பின். (கஉ)

### குரவர்மொழி தவறும் கொடியன் முதலியோர்

குரவர்தம் உரைக டக்குங் கொடியனுந் துறந்து ளார்தம்
வரவெதிர் கண்டெ ழாத மறவனும் அறிந்தான் போன்று
கரவினில் அருநூல் கற்குங் கயவனும் புதியர் ஆகி
இரவினில் வந்த நல்லோர்க் கிடங்கொடா தகற்று வானும்.

(அ - ரை.) குரவர்-தாய் தந்தை குரு முதலியோர். துறந்துளார்-துறவிகள். மறவன் - தீவினையை உடையவன். கரவினில் - வஞ்சகத்தால். இரவினில் - இராப்பொழுதில். கயவன் - கீழ்மகன். அருநூல் - மெய்யறிவு நூல்கள். (கங)

### புறங்கூறுவோன் முதலியோர்

முன்புகழ்ந் துரைத்துப் பின்னர் முறுவல்செய் திகழ்வான் தானும்
தன்பெருங் கிளைநல் கூர்ந்து தளர்வுற வாழ்கின் றானும்
அன்புகொண் டொருவன் வைத்த அரும்பொருள் கவர்கின் றானும்
துன்புறுந் தொழில்செய் வித்துச் சொல்பொருள் இலையென் பானும்.

(அ - ரை.) முன்-ஒருவனுக்கு முன். முறுவல்-புன்னகை. கிளை-சுற்றம். நல்கூர்ந்து - வறுமையடைந்து. வைத்த - பாதுகாப்பின் பொருட்டு வைத்த. துன்புறுந் தொழில் - வருந்தும்படியான வேலை. சொல்பொருள் - தான் சொன்ன கூலி. (கச)

கற்பிலா மனையாளுடன் வாழ்வோன் முதலியோர்

கற்பழி மனைவி யோடு கலந்திருப் பவனும் மற்றோர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற் கெண்ணு வானும்
சொற்பொருள் உணர்த்தி னானைத் தொழஉளம் நாணு வானும்
விற்பன அலாத விற்று மெய்வளர்த் தழிகு வானும்.

(அ - ரை.) பொற்பு உடை - அழகினையுடைய. சொற்பொருள் உணர்த்தினானை - சொல்லின் பொருளையுணர்த்திய ஆசிரியனை. தொழ - வணங்க. விற்பன அலாத - விற்கத் தகாதவற்றை. (கூஎ)

வயல் முதலிய இடங்களில் மலசலங் கழிப்போன் முதலியோர்

நலமலி வயலில் ஆற்றில் நந்தனத் தால யத்தில்
சலமலம் ஒழிப்போன் தானும் தனிவழி விலக்கு வானும்
விலைமொழி பொய்த்து விற்கும் வெய்யவா ணிகனும் தாழ்ந்த
குலமிலி தன்குற் றேவல் கூலிகொண் டியற்று வானும்.

(அ - ரை.) நலம்மலி - நன்மை மிகுந்த. நந்தனத்து - பூஞ் சோலையில். தனி வழி விலக்குவானும் - ஒரே வழியை அடைப் பவனும். விலை மொழி - நேரிய விலை. (கூஅ)

நட்புக்காலம் அறிந்த மறைபொருளைப் பகைக்காலம் வெளியிடுவோன் முதலியோர்

உறவுசெய் தறிந்த சொல்லை உவர்த்துழிக் கூறு வானும்
பிறர்பிழை தனையே நாடிப் பிறரொடு பேசு வானும்
முறைவழு வுறுகொ டுஞ்சொல் முனிவிடை மொழிகு வானும்
அறிவழி மனைவி சொல்லின் வழிநிற்கும் அறிவி லானும்.

(அ - ரை.) உவர்த்துழி - வெறுப்பு வந்த காலத்து. பிழை - தவறு. முறை வழுவுறு - ஒழுங்குகெட்ட. முனிவிடை - சினம் நேர்ந்த காலை. அறிவு அழி - அறிவுகெட்ட. (கூக)

நட்பினரைப் பிரிப்போன் முதலியோர்

கலந்தவர் தமைப்பி ரித்துக் கலகங்கண் டிடவல் லானும்
புலந்தரு நூலின் இல்லாப் பொருளினைக் கூறு வானும்
நலந்தனை அழுக்கா றெய்தி நகைத்திகழ் கிற்போன் தானும்
மெலிந்தவர் இடத்து மிக்க வெகுளியைப் பெருக்கு வானும்.

(அ - ரை.) கலந்தவர் - நட்புக் கொண்டவர். புலந்தரும் - அறிவை வளர்க்கும். நலந்தனை - நல்லொழுக்கத்தை. அழுக்காறு - பொறாமை. மெலிந்தவர் - தளர்ந்தவர். வெகுளி - சினம். (சுo)

பிறர் பொருளால் அறஞ்செய்வோன் முதலியோர்

புண்ணியம் பிறர்பொ ருட்குப் புரிபவன் தானும் இந்த
மண்ணிடை இன்பத் திற்கா மறுமைசெய் தொழில்வி டுக்கும்
தண்ணிய அறிவி லானும் தவத்தரை இகழ்கிற் பானும்
பண்ணிய வினையில் என்றும் பாவமே பயில்கின் றானும்.

(அ - ரை.) புண்ணியம் - அறவினை. பிறர்பொருட்குப் புரிபவன் - பிறருடைய பொருளால் தனக்கு நன்மை தேட முயல்பவன். மண்ணிடை இன்பம் - இம்மை இன்பம். மறுமை செய்தொழில் - மறுபிறவியில் நன்மையை உண்டாக்கும் வேலை. தண்ணிய - சிறந்த; நல்ல. பயில்கின்றானும் - பழகுகின்றவனும். (௬௧)

இம்மொழி கேட்ட மாதேவி அரசனுடன் செல்ல உடன்படல்

ஆவனுன் உண்மை நீயா தறைந்தனை அதுசெய் தன்றி
மேவுவேன் ஆயி னென்று வேள்விரும் பழகன் கூறக்
காவிநேர் விழிமா தேவி கருத்திசைந் தற்றே ஆயின்
போவம்வா என்று சொன்னாள் புரவலன் உவகை பூத்தான்.

(அ - ரை.) ஆவன் நான் - மேலுரைத்த கொடியவர்களில் நானும் ஒருவனாவேன். மேவுவேன் - தழுவுவதற்கு நெருங்குவேன். வேள் விரும்பு அழகன் - காமனும் விரும்பத்தக்க அழகினையுடைய கௌசிக மன்னன். காவி - கருங்குவளை. அற்றேயாயின் - அவ்வாறானால். புரவலன் - அரசன். (௬௨)

மாதேவி அரண்மனையை அடைதல்

கோயிலின் முன்னர்ச் சென்றான் கொற்றவன் சிவிகை ஏற்றி
ஆயிழை மடந்தை நல்லார் அருகுசூழ் வுற்றுச் செல்லப்
போயினள் அரசர் கோமான் புக்குழிப் புக்காள் ஒள்வேல்
சேயரி நெடுங்கண் செவ்வாய்த் திலகவா ணுதல்மா தேவி.

(அ - ரை.) கோயில் - அரண்மனை. சிவிகை - பல்லக்கு. மடந்தை நல்லார் - தோழிப் பெண்கள். புக்குழி - புகுந்த விடத்தில். சேயரி - செவ்வரி. திலகம் - பொட்டு. வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றியையுடைய. (௬௩)

மாதேவியைத் தனியே கண்ட மன்னன் வேண்டுதல்

மடந்தையைத் தனிக்கண் டங்கி மருவிய அரக்கே போல
உடைந்துநெக் குருகி ஆற்று உள்ளமோ டிளம்பூங் கொம்பே
கடந்திடற் கரிய காமக் கடல்கடந் தேறக் கொங்கைக்
குடந்தரத் திருவு ளத்திற் கோடியென் றரசி றைஞ்ச.

கற்பிலா மனையாளுடன் வாழ்வோன் முதலியோர்

கற்பழி மனைவி யோடு கலந்திருப் பவனும் மற்றோர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற் கெண்ணு வானும்
சொற்பொருள் உணர்த்தி னனைத் தொழஉளம் நாணு வானும்
விற்பன அலாத விற்று மெய்வளர்த் தழிகு வானும்.

(அ - ரை.) பொற்பு உடை - அழகினையுடைய. சொற்பொருள் உணர்த்தினனை - சொல்லின் பொருளையுணர்த்திய ஆசிரியனை. தொழ - வணங்க. விற்பன அலாத - விற்கத் தகாதவற்றை. (கூஎ)

வயல் முதலிய இடங்களில் மலசலங் கழிப்போன் முதலியோர்

நலமலி வயலில் ஆற்றில் நந்தனத் தால யத்தில்
சலமலம் ஒழிப்போன் தானும் தனிவழி விலக்கு வானும்
விலைமொழி பொய்த்து விற்கும் வெய்யவா ணிகனும் தாழ்ந்த
குலமிலி தன்குற் றேவல் கூலிகொண் டியற்று வானும்.

(அ - ரை.) நலம்மலி - நன்மை மிகுந்த. நந்தனத்து - பூஞ்சோலையில். தனி வழி விலக்குவானும் - ஒரே வழியை அடைப்பவனும். விலை மொழி - நேரிய விலை. (கூஅ)

நட்புக்காலம் அறிந்த மறைபொருளைப் பகைக்காலம் வெளியிடுவோன் முதலியோர்

உறவுசெய் தறிந்த சொல்லை உவர்த்துழிக் கூறு வானும்
பிறர்பிழை தனையே நாடிப் பிறரொடு பேசு வானும்
முறைவழு வுறுகொ டுஞ்சொல் முனிவிடை மொழிகு வானும்
அறிவழி மனைவி சொல்லின் வழிநிற்கும் அறிவி லானும்.

(அ - ரை.) உவர்த்துழி - வெறுப்பு வந்த காலத்து. பிழை - தவறு. முறை வழுவுறு - ஒழுங்குகெட்ட. முனிவிடை - சினம் சேர்ந்த காலை. அறிவு அழி - அறிவுகெட்ட. (கூக)

நட்பினரைப் பிரிப்போன் முதலியோர்

கலந்தவர் தமைப்பி ரித்துக் கலகங்கண் டிடவல் லானும்
புலந்தரு நூலின் இல்லாப் பொருளினைக் கூறு வானும்
நலந்தனை அழுக்கா றெய்தி நகைத்திகழ் கிற்போன் தானும்
மெலிந்தவர் இடத்து மிக்க வெகுளியைப் பெருக்கு வானும்.

(அ - ரை.) கலந்தவர் - நட்புக் கொண்டவர். புலந்தரும் - அறிவை வளர்க்கும். நலந்தனை - நல்லொழுக்கத்தை. அழுக்காறு - பொறாமை. மெலிந்தவர் - தளர்ந்தவர். வெகுளி - சினம். (சo)

பிறர் பொருளால் அறஞ்செய்வோன் முதலியோர்
புண்ணியம் பிறர்பொ ருட்குப் புரிபவன் தானும் இந்த
மண்ணிடை இன்பத் திற்கா மறுமைசெய் தொழில்வி டுக்கும்
தண்ணிய அறிவி லானும் தவத்தரை இகழ்கிற் பானும்
பண்ணிய வினையில் என்றும் பாவமே பயில்கின் றானும்.

(அ - ரை.) புண்ணியம் - அறவினை. பிறர்பொருட்குப் புரிபவன் - பிறருடைய பொருளால் தனக்கு நன்மை தேட முயல்பவன். மண்ணிடை இன்பம் - இம்மை இன்பம். மறுமை செய்தொழில் - மறுபிறவியில் நன்மையை உண்டாக்கும் வேலை. தண்ணிய - சிறந்த; நல்ல. பயில்கின்றானும் - பழகுகின்றவனும். (சக)

இம்மொழி கேட்ட மாதேவி அரசனுடன் செல்ல உடன்படல்

ஆவனுன் உண்மை நீயா தறைந்தனை அதுசெய் தன்றி
மேவுவேன் ஆயி னென்று வேள்விரும் பழகன் கூறக்
காவிநேர் விழிமா தேவி கருத்திசைந் தற்றே ஆயின்
போவம்வா என்று சொன்னுள் புரவலன் உவகை பூத்தான்.

(அ - ரை.) ஆவன் நான் - மேலுரைத்த கொடியவர்களில் நானும் ஒருவனுவேன். மேவுவேன் - தழுவுவதற்கு நெருங்குவேன். வேள் விரும்பு அழகன் - காமனும் விரும்பத்தக்க அழகினையுடைய கௌசிக மன்னன். காவி - கருங்குவளை. அற்றேயாயின் - அவ்வாறுனல். புரவலன் - அரசன். (சஉ)

மாதேவி அரண்மனையை அடைதல்

கோயிலின் முன்னர்ச் சென்றுன் கொற்றவன் சிவிகை ஏற்றி
ஆயிழை மடந்தை நல்லார் அருகுசூழ் வுற்றுச் செல்லப்
போயினள் அரசர் கோமான் புக்குழிப் புக்காள் ஒள்வேல்
சேயரி நெடுங்கண் செவ்வாய்த் திலகவா ணுதல்மா தேவி.

(அ - ரை.) கோயில் - அரண்மனை. சிவிகை - பல்லக்கு. மடந்தை நல்லார் - தோழிப் பெண்கள். புக்குழி - புகுந்த விடத்தில். சேயரி - செவ்வரி. திலகம் - பொட்டு. வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றியையுடைய. (சங)

மாதேவியைத் தனியே கண்ட மன்னன் வேண்டுதல்

மடந்தையைத் தனிக்கண் டங்கி மருவிய அரக்கே போல
உடைந்துநெக் குருகி ஆற்று உள்ளமோ டிளம்பூங் கொம்பே
கடந்திடற் கரிய காமக் கடல்கடந் தேறக் கொங்கைக்
குடந்தரத் திருவு ளத்திற் கோடியென் றரசி றைஞ்ச.

(அ - ரை.) அங்கி - தீ. மருவிய - பொருந்திய. உடைந்து - உள்ளம் உடைந்து நெக்குருகி-நெகிழ்ந்துருகி. ஆற்று உள்ளம் - காம வேட்கையைத் தாங்க முடியாத உள்ளம். கோடி-கொள்ளுதி. (௨௪)

மாதேவி கூறுதல்

காவலன் காம மிக்க கழிபடர் கிளவி கண்டு
பாவைபுன் முறுவல் செய்து பண்பெனுந் தொடரால் யாப்புண்
டோவல்செய் யாது நிற்கும் ஒருகளி றனையாய் யான்சொல்
ஏவல்செய் திட்ட பின்னர் என்னொடு பேசு கென்றாள்.

(அ - ரை.) கழி படர் - மிகுதியாகப் படரும். கிளவி - காம மொழி. பண்பு - நற்பண்பு. யாப்புண்டு - கட்டுப்பட்டு. ஓவல் செய்யாது - தன்னைவிட்டு நீங்காது. ஒருகளிறு - ஒப்பற்ற யானை. ஏவல் செய்திட்ட பின்னர் - பணியைச் செய்த பிறகு. (௨௫)

மாதேவி அரசனைச் சிவபூசை செய்துவருமாறு கூறல்

ஏதுநான் செய்வ தன்ன தியற்றுவன் அறைதி என்ன
ஓதினன் அரசன் ஓத ஒண்டொடி அயன்மால் தேடும்
சோதிமா சிவலிங் கத்தைத் தூயையாய்க் கரபீ டத்தில்
போதினால் அருச்சித் தென்னைப் பொருந்துதி பின்னர் என்றாள்.

(அ - ரை.) அன்னது - அதனை. தூயையாய் - தூய்மையுடையவனாய். கரபீடம்-கையாகிய இருக்கையில். போதினால் அருச்சித்து - மலர்களால் வழிபட்டு. பொருந்துதி - சேர்வாயாக. (௨௬)

மாதேவி கூறிய மொழி, பாலைநிலத்தில் நீருண்ணாது தடுத்ததை ஒக்கும் எனல்

எல்லையில் காமம் பொங்க இளமுலை ஞெமுங்கத் தோளால்
புல்லுவன் என்றெ ழுந்த புரவலன் தனைத்த டுத்துச்
சொல்லிய தன்னம் அன்னாள் சுரத்துள்நீர் முகந்து வாயில்
செல்லுமொண் கரத்தை ஓடிச் சென்றுபற் றுதலை ஒக்கும்.

(அ - ரை.) எல்லை இல் - அளவில்லாத. ஞெமுங்க - அழுந்த. புல்லுவன் - தழுவுவேன். சுரத்துள் - பாலை நிலத்தில். முகந்து - மொண்டு. வாயில் செல்லும் - வாய்க்குக் கொண்டுபோகும். (௨௭)

அமண அரசன் உள்ளத்தில் சிவநேயம் வரல் அரிதெனல்

முகையிடை முருகுண் டாயின் முளையிடை விளைவுண் டாயின்
மகவிடை மதன இன்பம் வருவதுண் டாயின் சைவப்
பகையொடு மருவி நின்ற பார்த்திபன் தனது ளத்தின்
உகைவிடை அமலற் போற்றும் ஒழுக்கமும் வந்து நண்ணும்.

(அ - ரை.) முகை - அரும்பு. முருகு - மணம். மகவு - குழந்தை. பார்த்திபன் - அரசன். உகைவிடை - செலுத்துகின்ற இடபத்தையுடைய. ஒழுக்கம் - செய்கை. (௬௮)

### அரசன் 'யாம் சிவபூசை செய்யோம்' என, மாதேவி 'உம் தோள்களைத் தொடேம்' எனல்

செப்புறுஞ் சூள்நி னைந்து தீண்டிலன் அரசன் இன்று
முப்புரஞ் சீறும் உங்கள் முதல்வன்பூ சனைதான் யாங்கள்
எப்பொழு துஞ்செய் தக்க தன்றென இணையி லாநின்
துப்புறு தோளும் யாங்கள் தொடுவதன் றெனப்பு கன்றாள்.

(அ - ரை.) செப்புறும் - சொல்லும். சூள் நினைந்து - உறுதி மொழியை எண்ணி. செய்தக்கது அன்று - செய்யத் தக்கது அன்று. இணை - ஒப்பு. துப்புறு - வலிமை பொருந்திய. (௬௯)

### அரசன் சும்மா இருக்க, மாதேவி அவனைவிட்டு நீங்க எண்ணல்

மட்டவிழ் குழல்ம டந்தை வாயுரை கையும் வாயும்
கட்டிய தெனவ டங்கிக் காமமிந் தனமில் தீப்போல்
கெட்டிட வறிதி ருந்தான் கிளர்மணித் தூண்செய் தோளான்
நெட்டிலை அயில்வேற் கண்ணாள் நீத்தனள் போக எண்ணி.

(அ - ரை.) மட்டு அவிழ் - மணம் விரியும். வாய் உரை - வாய் மொழி. இந்தனம் இல் தீப்போல் - விறகில்லாத நெருப்பைப் போல. வறிது-சும்மா. கிளர்-விளங்குகின்ற. நீத்தனள்-நீத்து: முற்றெச்சம். ( )

### மாதேவி, ஆடை அணிகளை நீக்கிக் கூந்தலை விரித்திருத்தல்

துறவெனும் அரசு நெஞ்சத் தொன்னகர் கொளவ வாவாம்
இறைவன தாணை எல்லாம் இரிதல்போற் பூண்கள் யாவும்
அறுவையும் அகற்றி ஓதி அவிழ்த்துவார் மைக்கு ழம்பின்
மறைவுறு மணிப்பொற் பாவை போலுடன் மறைய விட்டாள்.

(அ - ரை.) துறவெனும் அரசு - துறவென்னும் அரசன். தொன்னகர் - பழைமையான நகர். அவா ஆம் - விருப்பமாகும். இரிதல் - கெட்டோடல். அறுவை - ஆடை. ஓதி - கூந்தல். மாதேவி தன் கரிய கூந்தலை யவிழ்த்து உடல் மறையுமாறு விட்டுக்கொண்டது, அழகிய பொன்னாற் செய்யப்பெற்ற பாவை, மிகக் கருநிறந் தங்கிய மைக்குழம்பால் மறையப்பெற்றது போலுமென்க. (௭௧)

மாதேவி அரண்மனை விட்டுத் தெருவிற் செல்லல்

மருளடைந் தனள்கொல் என்று மருண்டுமன் னவனி ருப்பத்
தெருளடைந் தங்கை கொண்ட சிவலிங்கத் தொடுநி னைந்த
பொருளடைந் தெனம கிழ்ச்சி பொங்கமன் னவனை நீங்கி
அருளடைந் தொழுகு கண்ணுள் அணிமறு கூடு சென்றாள்.

(அ - ரை.) மருள் - மயக்கம். தெருளடைந்து - தெளிவடைந்து. அடைந்தெென - எய்தியவர்களைப் போல. அணிமறுகு ஊடு - அழகிய தெருவழியே. (ஙஉ)

தாய் தந்தையர் வருந்த மாதேவி அவர்கட்கு உரைத்தல்

அன்னையும் பிதாவும் கேளா அருமகட் கடுத்த தென்னென்
றுன்னிவந் தழுங்க நீவிர் உம்மகள் என்று மாழ்கி
இன்னல்கொண் டிரங்கன் மின்போம் என்னைநான் அறியத் தேடித்
தன்னிருங் கருணை செய்யுஞ் சற்குர வனைச்சார் கிற்பேன்.

(அ - ரை.) அடுத்தது - நேர்ந்தது. உன்னி வந்து - நினைந்து வந்து. அழுங்க - வருத்தப்பட. மாழ்கி - மயங்கி. இன்னல் கொண்டு - துன்பங் கொண்டு. இருங்கருணை - பெரிய தண்ணளி. சார்கிற்பேன் - அடைவேன். (ஙஙா)

மாதேவி தக்கதே எண்ணினாள் என அவள் தாய்
தந்தையர் கருதல்

என்றவள் அவரை நோக்கா தேதிலர் போல கன்று
சென்றனள் நிரும லப்பேர்ச் செல்வனுஞ் சுமதி தானும்
நன்றிவள் நினைந்த தென்று தம்முடை மரபிற் கெல்லாம்
நின்றிடும் புகழென் றெண்ணி நிறுவினர் தங்கள் நாமம்.

(அ - ரை.) ஏதிலர் போல் - பிறரைப் போல. மரபு - வழி முறை. நின்றிடும் - நிலைபெறும். நிறுவினர் - நிலை நிறுத்தினார்கள். ()

நகர மாந்தர்கள் வருந்துதல்

கண்டவர் எல்லாம் நெஞ்சங் கரைந்துகக் கண்ணீர் மல்கத்
திண்திறல் அரசன் பின்னர்ச் சிவிகையூர்ந் தலர்பூங் கோயில்
ஒண்திரு மகள்போற் சென்ற ஒண்தொடி இப்பேய்க் கோலம்
கொண்டிவண் போகா நின்ற கொள்கையே தறியேம் என்பார்.

(அ - ரை.) நெஞ்சம் கரைந்து உக - உள்ளம் கரைந்துருக. மல்க - பெருக. திண் திறல் - மிகுந்த வலிமை. அலர் பூங்கோயில் - மலர்ந்த தாமரை மலர்க்கோயிலில் எழுந்தருளிய. ஒண்தொடி - ஒள்ளியவளையலை அணிந்த மாதேவி. போகாநின்ற கொள்கை - போகின்ற தன்மை. (ஙச)

தாய் தந்தையர் எவ்வாறு வருந்துவரோ எனல்

மங்கையை இவணம் கண்டேம் வயிறெரி தவழ நின்றேம்
இங்கிவள் தன்னை ஈன்றார் என்படு வாரோ என்பார்
மங்கல வடிவங் கண்டு மகிழ்ந்தகண் இதுவுங் கண்டு
பொங்குறு துயரங் கூரப் புரிந்ததெப் பாவம் என்பார்.

(அ - ரை.) இவணம் - இவ்வாறு. என்படுவாரோ - எவ்வாறு துன்பப்படுவார்களோ. பொங்குறு துயரம் - மிகுதியான துன்பம். கூர - அடைய. இதுவும் என்பதிலுள்ள உம்மை முன் கண்ட அழகிய கோலத்தையும் தழுவி நின்றமையின் இறந்தது தழீஇய எச்சவும்மை என்ப. (௧௬)

மாதேவி அல்லமரைத் தேடிச் செல்லுதல்

இன்னணம் நகரம் எல்லாம் இரங்கமா தேவி யம்மை
கன்னலும் அமுதுந் தேனுங் கைப்பப்பே ரின்ப நல்கும்
தன்னிகர் குருகு கேசன் தன்னையே தேடிச் சென்றாள்
மென்னிழல் விரும்பி மிக்க வெயில்சுடச் செல்வார் போல.

(அ - ரை.) இன்னணம் - இவ்வாறு. கன்னல் - கரும்பு. குருகுகேசன் - குருவாகிய அல்லமதேவர். மெல்நிழல் - குளிர்ந்த நிழல். (௧௭)

காடு மலை முதலிய இடங்களிலும் தேடிச் செல்லல்

அடவிகள் தொறும்அ டைந்தும் அடுக்கல்கள் தொறுமி வர்ந்தும்
கடிநகர் தொறும்பு குந்தும் காமனை வென்ற வல்லி
மடிவறு மனத்தில் அன்பு வளர்தரக் கருணை யாலெங்
குடிமுழு தடிமை கொள்ளும் குரவனைத் தேடு கின்றாள்.

(அ - ரை.) அடவிகள் - காடுகள். அடுக்கல்கள் - மலைகள். இவர்ந்தும் - ஏறியும். கடிநகர் - காவல் மிகுந்த நகர். வல்லி - வல்லிக்கொடி போன்ற மாதேவி. மடிவு அறு - முயற்சி குன்றுதலில்லாத. குரவன் - அல்லமதேவன். (௧௮)

பத்தாவது அக்கமாதேவி துறவு கதி முடிந்தது.

கதி ௧௦ - க்குச் செய்யுள் - ௩௧௦

—————

## ௧௧. கொக்கிதேவர் கதி

[இக்கதிக்கண், அல்லமதேவர் பலவிடங்களிலுஞ் சுற்றிக்கொண்டிருக்குங்கால் ஓரிடத்தில் ஒரு மலர்ப்பொழிலைக் கண்ணுறுகின்றார். அம் மலர்ப்பொழில் அருமையும் பெருமையுஞ் செறிந்ததாக அமைந்து விளங்குகின்றது. அம் மலர்ப்பொழிலைக் கொக்கிதேவர் என்பவர் காவல் புரிந்துகொண்டிருக்கிறார். அக் கொக்கிதேவருக்கு அல்லமதேவர் மெய்ப்பொருளை யுணர்த்த எண்ணுகிறார். கொக்கிதேவரும் அல்லமதேவரும் எதிர்ப்பட்டு உரையாடுகிறார்கள். அல்லமதேவர் வறிதே சுற்றிக்கொண்டிருக்கிறார் என்று எண்ணிய கொக்கிதேவர் அல்லமதேவருக்கு அறிவுரை கூறத் தொடங்குகிறார். அல்லமதேவர் கொக்கிதேவருக்கு மெய்ப்பொருளை யுணர்த்துகிறார். அல்லமதேவர் அருளுரைப்படி நிலத்தை யகழ்ந்த கொக்கிதேவர் ஆங்கொரு சிவயோகியைக் கண்ணுறுகிறார். அச் சிவயோகியின் கையிலிருந்த சிவக்குறி அல்லமதேவரின் கையை அடைகிறது. அல்லமதேவரைக் கொக்கிதேவர் மிகவும் புகழ்ந்து போற்றுகிறார். உலகத்தினர் அனைவருக்கும் மெய்யறிவு வழங்குமாறு வேண்டிக்கொள்ளுகிறார். தாம் சிவயோகத்தில் அமருகிறார். அல்லமதேவர் அவ்விடத்தை விட்டு நீங்கி வேறிடஞ் செல்லுகிறார் என்னுஞ் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

அருள்செயும் அல்லமன் அநிமி டப்பெயர்க்
குரவனை மெய்யொடு கலந்து கொண்டுதான்
பரவுறும் அடியர்தம் பவந்து றந்து போய்த்
திரிதரு நிலையினைத் தெரிந்து செப்புவாம்.

(அ - ரை.) அநிமிடப் பெயர்க்குரவன் - அநிமிடன் என்னும் பெயரையுடைய சிவயோகி. மெய்யொடு - தனதுண்மை வடிவுடன். பரவுறும் அடியர் - வழிபடுகின்ற அன்பர்கள். பவம் - பிறப்பு. திரிதரும் - உலாவுகின்ற. (௧)

### அல்லமதேவர் பலவிடங்களுக்குஞ் செல்லல்

சீர்நிலை அல்லம தேவன் சூல்கொளும்
கார்நிறை மயிலெனக் கருதித் தன்னையே
பார்நில மிசையமர் பத்தர் தம்மையாள்
ஓர்நினை வொடுநடந் துலாவு நாள்களுள்.

(அ - ரை.) சீர்நிலை - சிறப்புப் பொருந்திய நிலைமை. சூல் கொளும் - கருப்பம் கொண்ட. கார்நினை - முகிலின் வருகையை நினைத்துக்கொண்டிருக்கின்ற. கருதித் தன்னையே - தன்னையே கருதி. பார் நிலமிசை - பார்க்கப்படுகின்ற நிலவுலகில்; பரந்த நிலவுலகில். ()

அல்லமதேவர் செல்லும் வழியில் ஒரு பொழிலைக் காண்டல்

ஒன்றொரு நாளொரு திசையின் ஒங்கருள்
குன்றனை யானொரு கோலங் கொண்டுதான்
சென்றனன் அவனெதிர் சிறந்து தோன்றிற்று
மன்றல்மென் மலரின வனமொன் றுயிடை.

(அ - ரை.) ஒன்று ஒருநாள்-பொருந்திய ஒருநாள். ஒரு கோலம்-ஒப்பற்ற வடிவம். மன்றல்-மணம். ஆயிடை - அவ்வழியில். (கூ)

அம்மலர்ப்பொழில் சிறந்த தெனல்

சிறுபொழு தைந்தினும் திரிவி லாதபேர்
அறுபொழு தினுமிதழ் அவிழ்ந்து தேன்சொரி
நறுமலர் நிறையுமந் நந்த னத்தினைப்
பெறின்மக பதிவளம் பெறவு வந்திடார்.

(அ - ரை.) சிறுபொழுது ஐந்து-மாலை, யாமம், வைகறை, விடியல் நண்பகல் என்பன. எற்பாடு ஒன்றுகூட்டிச் சிறுபொழுது ஆறு என்பர் சிலர். பேர் அறுபொழுது-ஆறு பெரும்பொழுது; கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன; இவை ஆறு பெரும் பொழுதுக் காலத்தும். இதழ் அவிழ்ந்து-இதழ்கள் விரிந்து. நந்தனம் - மலர்ப்பொழில். மகபதிவளம் - தேவர்கோன் செல்வம். உவந்திடார் - விரும்பார். (எ)

அப்பொழிலில் வரும் தென்றற்காற்றின் சிறப்பு

படிமிசைத் தவம்பல பயின்று நொந்தவர்
வடதிசைக் கயிலையின் மருவ வேண்டலிக்
கடிமலர்ப் பொழில்மணங் கலந்த தென்றல்வந்
துடல்மிசைத் தவழ்தரல் ஒன்று முன்னியே.

(அ - ரை.) படிமிசை-நிலவுலகின்மீது. பயின்று-செய்து. மருவ வேண்டல் - பொருந்த விரும்புதல். உடல்மிசை - தம் உடம்பின்மீது. தவழ்தரல்-வீசுதல். ஒன்று முன்னியே-ஒன்றை எண்ணியே. (அ)

அப்பொழில் வண்டுகளின் சந்தை போன்றது

கண்ணிறை மலர்பல கண்டு கண்டுபோய்
உண்ணுறு நறுமது கொளவு ழன்றிடும்
எண்ணறும் அளியினம் இரையுந் தன்மையால்
தண்ணுறு நந்தனம் வண்டின் சந்தையே.

(அ - ரை.) கள் நிறை-தேன் நிறைந்த. உண்ணுறு - உண்ணு கின்ற. நறுமது-நல்ல தேன். உழன்றிடும்-அங்குமிங்குமாகச் சுற்றும். எண் அறும்-எண்ணற்ற. அளி இனம்-வண்டுக் கூட்டம். இரையும்-ஒலிக்கின்ற. தண் உறு-குளிர்ச்சி பொருந்திய. (சு)

அப்பொழிலைக் காப்பவர் கொக்கிதேவர் எனல்

நறுமலர் நிறையுமந் நந்த னத்தினைக்
குறைவற அளிப்பவன் கொக்கி தேவனென்
றறைதரு பெயரினன் அனையன் ஆயிடைத்
திறமுறு செயலினைச் செய்து நின்றனன்.

(அ - ரை.) குறைவு அற அளிப்பவன்-பழுதில்லாமற் காப்பாற்று பவன். அறைதரு - சொல்லப் பெறுகிற. அனையன்-அந்தக் கொக்கி தேவர். திறமுறு செயலினை - திறமையுள்ள செய்கையை. (எ)

அல்லமர் கொக்கிதேவர்க்கு மெய்ப்பொருளுணர்த்த எண்ணல்

நின்றவன் தனையருள் நினைந்த நெஞ்சொடு
சென்றனன் அல்லம தேவன் கண்டிவன்
புன்தொழில் விடவரும் பொருளு ணர்த்துவன்
என்றரு கடைந்தைய சரணம் என்றனன்.

(அ - ரை.) புன் தொழில் விட-சிறிய தொழில்களை விட்டகல. அரும்பொருள்-அருமையான மெய்ப்பொருள். உணர்த்துவல்-அறிவிப் பேன். ஐய - ஐயனே: விளி. சரணம் - வணக்கம். (அ)

கொக்கிதேவர் அல்லமரின் பெயர் முதலியன வினவல்

தானெதிர் நிமலனைச் சரணெ னத்தொழாத்
தேனலர் வனத்தனின் செயலி யாதுநின்
மேனியின் பெயரெது விளம்பு கென்றலும்
ஞானநல் விளக்கனுன் நவிறன் மேயினன்.

(அ - ரை) நிமலனை - அல்லமதேவரை. சரண் - வணக்கம். தொழா - தொழுது. தேன் அலர்வனத்தன்-தேன் தங்கிய மலர்ச்

சோலையை உடையவன். செயல் - செய்கை. ஞான நல் விளக்கு அனன் - நல்ல அறிவுச்சுடரைப் போன்றவன். நவிறல் மேயினன் - சொல்ல முற்பட்டான். (௯)

இருவரும் தத்தம் பெயர்களைக் கூறுதல்

பத்தர்தம் மனைதொறும் பத்திப் பிச்சைகொண்
டெத்திற வினையுமின் றிருப்பன் அல்லமன்
உத்தம என்பெயர் பெயரு னக்கெனென்
றத்தனும் வினவத்தன் பெயர் அறைந்தனன்.

(அ - ரை.) பத்தர் - அன்பர். மனை-வீடு. பத்திப் பிச்சை - அன்பாகிய பிச்சை. எத்திற வினையும்-எத்தகைய தொழிலும். அத்தன் - தலைவன்; ஈண்டு அல்லமதேவர். அறைந்தனன் - கூறினன். (௧௦)

கொக்கிதேவர் தொழிலற்றிருப்பவன் வீணன் எனல்

அருங்குரு லிங்கசங் கமத்திற் காகமெய்
வருந்துறு தொழிலற வறிதி ருப்பவன்
அருந்துறு பிணமென அறையும் மாற்றநீ
தெரிந்திலை யோவெனச் செப்பல் மேயினன்.

(அ - ரை.) குரு-ஆசிரியன். லிங்கம்-இறைவடிவம். சங்கமம் - இறைவனைப்போற்றும் அடியார். மெய் வருந்துறு - உடல் வருந்தும். வறிது-வீணே. அருந்துறு பிணம்-சோறு தின்னும் பிணம். அறையும் மாற்றம்-கூறும் மொழி. செப்பல் மேயினன்-சொல்லலானன். (௧௧)

(வேறு)

மறுமைப் பயன் தேடாத உடம்பால் பயனின்றெனல்

எய்தற் கரிய யாக்கைதனக்
கெய்திற் றென்றுல் அதுகொண்டு
செய்தற் கரிய அறங்கள்பல
செய்து துயர்கூர் பிறவியினின்
றுய்தற் கொருமை பெறவெண்ண
துழல்வோன் உடம்பு பொற்கலத்தில்
பெய்தற்குரிய பால்கமரிற்
பெய்த தொக்கும் என்பரால்.

(அ - ரை.) எய்தற்கு - அடைதற்கு: எய்து என்பது எய் எனக் கடைக் குறைந்து நின்றது. யாக்கை-உடல். உய்தற்கு - பிழைத்தற்கு. ஒருமைபெற எண்ணது - ஒன்றுபடப் பொருந்தும் நிலையை

யடைய முடியாமல். உழல்வோன் உடம்பு-அல்லற்படுவோனுடைய உடல். கமர் - நிலத்தின் வெடிப்பு. பெய்தது - ஊற்றியது. (கஉ)

வறிதேயிருப்போர் மருளர் எனல்

மின்போல் அழியும் உடல்கொடுநல்
வினைசெய் தழியா உடம்பெய்தி
இன்போ டமர்த லாயிருப்ப
யாக்கை வருந்தும் என்றெண்ணி
அன்போ டறஞ்செய் திளையாமல்
அருந்தி வாளா இருக்குமவன்
தன்போல் மருளர் இலையென்றான்
தண்பூம் பொழில்வைத் தளிக்கின்றான்.

(அ - ரை.) மின்போல் - மின்னலைப் போல். அழியா உடம்பு எய்தி-கெடாத உடலையடைந்து. அமர்தலாயிருப்ப - அமர்ந்திருத்தற்கு. இளையாமல் - உடல் வாடாமல். மருளர்-கலங்கிய அறிவினையுடையவர். அளிக்கின்றான் - காப்பாற்றுகின்ற கொக்கிதேவன்.(கந)

அல்லமதேவர் மறுமொழி கூறுதல்

உரைத்த மொழியை அல்லமப்பே
ருடையான் கேட்டுக் கைகுலைத்துச்
சிரித்து வினைநல் லனசெய்து
சிதையா இன்பம் பெறுவானேல்
வருத்தல் உறுமும் மலங்களினோர்
மலமா கியஆ ணவத்தாலும்
பொருத்த முறுபே ரின்பநாம்
புணர லாமென் றியம்பியே.

(அ - ரை.) கைகுலைத்து-கையைக் கொட்டி. சிரித்து - நகைத்து. வினை நல்லன செய்து-அறச்செயல்களைப் புரிந்து. சிதையா இன்பம்-அழியாத இன்பம். புணரலாம்-அடையலாம். அறச்செயல்களால் வீடுபேற்றையடைய முடியாது என்பது கருத்து. (கச)

கொக்கிதேவரின் கொள்கையை மறுத்துரைத்தல்

தான்செய் வினையால் ஒருடம்பிற்
சாரும் இன்பம் என்றனையவ்
வூன்செய் உடலம் ஒழியவுடன்
ஒழியும் அம்மெய் அழியாமல்

வான்செய் பதத்தில் இருக்குமெனின்
மாயை தந்த தன்ருகும
கான்செய் மலர்நந் தனஞ்செய்து
கருவைத் துடைப்ப எண்ணுவோய்.

(அ - ரை.) தான செய் விணையால் - தான் செய்யும் நற்காரியங்களால். சாரும்-அடையும். ஓர் உடம்பில்-ஒரே பிறவியில். ஊன் செய் உடலம் - ஊனுல் செய்யப்பட்ட உடம்பு. உடன் ஒழியும் - அவ்வின்பமும் அவ்வுடலுடன் கெடும். வான் செய்பதம் - வீடுபேறு. கான் செய் - மணத்தையுண்டாக்குகின்ற. கருவைத் துடைப்ப - பிறவியைக் கெடுக்க. (கஙி)

## இன்பதுன்பங்கள் மாறி மாறி வரும் எனல்

இன்ப நனிசெய் நல்விணையின் இறப்பின் இறப்ப உடம்பினிடைத்
துன்ப மதுசெய் தீயவிணை தோன்றும் அத்தீ விணைமாய்வின்
முன்பு செயுநல் விணைவருமிம் முறையால் இரண்டும் மாறிவரும்
என்ப உலகில் ஒண்பகலும் இரவும் மாறி வருதல்போல்.

(அ - ரை.) நனிசெய் - மிகுதியாகச் செய்கின்ற. இறப்பின் - இறுதியில், இறப்ப - மிகுதியாக. (கசு)

## விண்ணின்பம் வீட்டின்பத்தின் தன்மைகள்

புறத்துக் கருமம் பலசெய்து
பொருப்பை அகழ்ந்திட் டெலிபிடித்தாங்
கிறப்பச் சிறிய விண்ணின்பம்
எய்தும் அவனே நோவாமல்
மறுத்துச் செயல்கள் அணைத்திணையும்
வாளா இருந்து பேரின்பம்
பெறத்தக் கவனே ம்ருளன்யார்
பேசு கென்ருன் எம்பெருமான்.

(அ - ரை.) புறத்து - வெளியுலகில். கருமம் பல செய்து - நல்விணைகள் பலவற்றைச் செய்து. பொருப்பை அகழ்ந்திட்டு-மலையைத் தோண்டி. இறப்பச் சிறிய-மிகச் சிறிய. செயல்கள் அணைத்திணையும் மறுத்து - எல்லாக் காரியங்களையும் விட்டுவிட்டு. வாளாவிருந்து - சும்மாவிருந்து. பேசுக-கூறுக. எம்பெருமான்: அல்லமதேவர். (கள)

உண்முக நாட்டத்தால் வீடுபேறு கிட்டும் எனல்

பொறியிற் புறத்து மனஞ்செல்லிற் புலனே தோன்றி இடுமகத்திற்
செறியக் கரணம் பரானந்த சிவமே தோன்றும் சிவந்தோன்ற
அறிவிற் பரந்த விடயமயம் ஆகும் உலகந் தோன்ருமல்
பிறவித் துயரக் கடல்கடந்து பேரின்ப பஞ்சார் குவரென்று.

(அ - ரை.) பொறியில்-மெய், வாய், கண், மூக்கு, காது என்னும் ஐம்பொறியில். புறத்து - வெளியில். புலன் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. அகத்திற்செறிய - உள்ளத்திற் பொருந்த. கரணம்-மனம், புத்தி, சித்தம், அகங்காரம். மனமானது ஐம்பொறி வாயிலாக வெளிப்படின், ஐம்பொறி இன்பமே தோன்றும்; உள்ளத்துள்ளே அடங்கிஞலோ படிப்படியாக வுயர்ந்து வீடுபேற்றையடையு மென்க. (கஅ)

அல்லமர் கூறியபடி கொக்கிதேவர் மண்ணைத் தோண்டுதல்

கண்ணுற் காணக் காட்டியிவன் கருத்தைத் திருத்து வேமென்ன
எண்ணுக் கருணைக் கடலனையான் இவணீ அகழ்தி என்றுரைப்ப
நண்ணுப் பெரும நன்றென்று நவின்ற நிலத்தை அகழ்கின்ருன்
பண்ணுற் சிறந்த பொறிவண்டு பாடு மலர்ப்பூம் பொழிலுடையான்.

(அ - ரை.) கருத்தை - கருத்திலுள்ள கொள்கையை. எண்ணு - எண்ணி. அகழ்தி - தோண்டுதி. நண்ணுப்பெரும - அடைதற்கரிய பெருமையுடையோனே. நவின்ற - அல்லமதேவர் கூறிய. பண்ணுற் சிறந்த - இசைபாடுவதிற் சிறந்த. பொறி - புள்ளி. (கக)

கொக்கிதேவர் சிவயோகியைக் காண்டல்

தொடலுஞ் செம்பொற் சிகரமொன்று
தோன்றச் செய்யுட் பொருள்போலக்
கடிதின் அகழ்ந்து புகுந்தனுட்
கண்டார் நிலத்தை அகழ்ந்திட்டு
மிடியன் கண்ட பொருள்போல
விடயம் புறத்துக் காணுமல்
வடிவஞ் சிறிதும் அசையாமல்
வசமற் றிருக்கும் யோகியையே.

(அ - ரை.) தொடலும் - தோண்டுதலும். கடிதின் அகழ்ந்து - விரைவில் தோண்டி. மிடியன் - வறிஞன். பொருள் - புதையல். விடயம் புறத்துக் காணுமல்-புலன்கள் வெளிநாட்டமில்லாமல். வசம் அற்று - தன் வசமில்லாமல். (உ0)

'செயலற்ற சிவயோகியைக் கண்டாயோ?' எனல்

கையிற் சிவலிங் கத்தின்மேற் கண்கள் வைத்திட் டேலும்பலால்
மெய்யில் தசையொன் றின்றியே மேவும் புனிதன் தனைநோக்கிச்
செய்ய செயலி லாதசெயற் சிவயோ கியைக்கண் டனையோவென்
றையத் தடைந்த அவனறிய அறிவித் துயரல் லமதேவன்.

(அ - ரை.) கையில் - கையில் உள்ள. மெய்யில் - உடலில். புனிதன்: சிவயோகி. செய்ய செயல் - நற்காரியம். (உக)

கொக்கிதேவர் சிவயோகியைப் போற்றுதல்

கடலின் விழுந்து துயர்பவர்க்குக் கலமொன் றருகு வந்ததெனக்
கெடலில் பரம குருவெனக்குக் கிடைத்த தாவா அற்புதமென்
றுடலம் விதிர்ப்பக் கண்கணீர் ஒழுக உருகித் தொழுதனனுல்
விடலின் மரபிற் குருசீட விதியை விளக்க உளங்கொண்டு.

(அ - ரை.) துயர்பவர்க்கு - துன்பத்தை யனுபவிப்பவர்களுக்கு. கலம்-மரக்கலம். பரமகுரு - சிறந்த ஞான ஆசிரியன். விதிர்ப்ப - நடுங்க. விடல் இல்-இடையில் நீங்காத. (உஉ)

அச் சிவயோகி கையின் சிவக்குறி அல்லமரை அடைதல்

காந்தங் கண்ட இரும்புபோற் கண்ட பொழுதே அநிமிடன்றன்
ஏந்துஞ் செங்கைச் சிவலிங்கம் எங்கள் பெருமான் அங்கைமலர்
போந்தங் கிருந்த ததுபொழுதிற் புனிதன் சீவ கலைதானும்
சார்ந்தங் கிருந்த சிவலிங்கந் தன்னே டவன்பாற் சார்ந்ததால்.

(அ - ரை.) போந்து-வந்து. புனிதன்-சிவயோகி. சிவயோகியின் கையிலிருந்த சிவக்குறி அல்லமதேவர் கையை அடைந்த அளவில். சீவகலை - சிவயோகியின் உயிர்க்கூறு. அவன்பால் - அல்லமதேவரிடம். (உங)

கொக்கிதேவர் கூறுதல்

வந்து பரம சிவலிங்க மருவப் பெறுமல் லமன்றனையும்
அந்த விமல லிங்கமுடன் அடைந்த ஞானக் குரவனையும்
கந்த மலர்நல் வனமுடையான் கண்டு மகிழ்வுற் றிவர்பெருமை
சந்த மறைதேர் நான்முகனும் சாற்றற் கரிதென் றறைகுவான்.

(அ - ரை.) மருவப் பெறும்-சேரப் பெற்ற. விமலலிங்கம்-தூய சிவக்குறி. கந்தம் - மணம். வனமுடையான்-கொக்கிதேவன். சந்த மறைதேர் - அழகிய மறையை உணர்ந்த. நான்முகன் - பிரமன். சாற்றல் - சொல்லுதல். (உச)

### கொக்கிதேவர் அல்லமதேவரைப் போற்றுதல்

நின்னுற் கண்டேன் சிவலிங்க நிட்டை ஞான யோகிதனை
முன்னுட் கருமம் அனைத்துமினி முடித்தேன் ஞான நிலைநின்றேன்
உன்னுற் செய்யப் படுமுதவிக் குதவி வேறு நெடுந்தகாய்
என்னுற் செய்வ தொன்றுளதோ எழிலிக் குதவி யார்செய்வார்.

(அ - ரை.) முன்னுட் கருமம்-பழையநாள் வினை. நெடுந்தகாய்-பெருந்தன்மையுடையவனே. எழிலிக்கு - மேகத்துக்கு. (உ௬)

### கொக்கிதேவர், 'இன்று மெய்ப்பொருள் உணர்ந்தேன்' எனல்

ஐய நினையும் நின்கரத்தின்
அடைந்த சிவலிங் கத்தினையும்
பொய்யில் குரவன் தனையுமொரு
பொருளென் றறிந்தேன் இன்றென்று
செய்ய கமலத் திருவடியிற்
சென்று தொழுதல் லமனும
மெய்யன் எதிர்நின் றன்பினுல்
விளம்பும் வனங்கா வலனன்றே.

(அ - ரை.) பொய்யில் குரவன் - குற்றமற்ற ஞானசிரியன். ஒரு பொருள் - வேறுபாடில்லாத ஒரே பொருளாக. வனங்காவலன் - கொக்கி தேவன். (உ௬)

### எல்லோருக்கும் மெய்யறிவு அருள வேண்டுதல்

என்னை அறிவித் ததுபோலிவ்
விட்ட லிங்கம் அகம்புறமும்
மன்னி யிருக்கு நெறியினைநின்
மலர்த்தாள் பரவும் அடியார்க்குப்
பன்னி உணர்த்திச் சரமாகிப்
பாரிற் சரிப்பா யெனத் தொழுதான்
தன்னில் நிலத்தின் நரரெல்லாம்
தகும்பே ரின்பம் பெறநினைந்தான்.

(அ - ரை.) மன்னியிருக்கும் நெறியினை-நிலைபெற்றிருக்குந் தன்மையினை. பன்னி உணர்த்தி-நன்றாகத் தெரிவித்து. சரம் - இயங்கியற் பொருள். சரிப்பாய்-சுற்றுவாய். தன்னில்-தன்னைப்போல. (உஎ)

கொக்கிதேவர்க்கு, அல்லமதேவர் அருள்புரிதல்

கொக்கி தேவன் இரந்தமொழி கொண்டு கிளரல் லமதேவன்
தக்க பெரியோர் தமக்கியல்பு தாம்பெற் றுள்ள பேறெல்லாம்
மிக்க உலகம் பெறுகவென வேண்டிக் கோடல் எனப்புகழ்ந்து
செக்கர் மலர்ப்பூங் கைகளால் தீண்டித் தழுவி அருள் செய்தான்.

(அ - ரை.) *இரந்த மொழி-தாழ்ந்து வேண்டிய சொல். கிளர்-விளங்குகின்ற. வேண்டிக்கோடல்-வேண்டிக்கொள்ளுதல். செக்கர்-சிவந்த. தீண்டி - பிடித்து.* (உஅ)

கொக்கிதேவர் சிவயோகத்திருத்தல்

அங்கைச் சிவலிங் கத்தினிடை
அமைத்த நோக்கும் நெஞ்சகமும்
தங்கச் சிவயோ கத்தினையே
சார்ந்தங் கிருந்தான் ஓவியம்போல்
மங்கைக் கிடந்தந் தருளினேன்
மலர்த்தாட் கிடுபூ வனமாக்கிப்
பொங்கப் புரந்த தவத்தால் மெய்ப்
பொருளா சிரியற் கண்ணுற்றுன்.

(அ - ரை.) *அமைத்த நோக்கு-பொருந்தவைத்த பார்வை. தங்க-நிலைபெற. மங்கைக்கு இடம் தந்தருளினேன்; சிவபெருமான். வனம் ஆக்கி - வனம் வைத்து. பொங்கப்புரந்த - நன்றாகக் காத்த. கண் உற்றுன் - கண்டான்.* (உகூ)

அல்லமதேவர் அவ்விடம் விட்டுச் செல்லல்

அடியர் வேண்டிற் றேபுரியும் அல்ல மப்பேர் எம்பெருமான்
நெடிய விழிகள் அருள்சுரப்ப நிமல லிங்கங் கரத்தேந்திப்
படியில் அரிய தவஞ்செய்யும் பத்தர் உள்ளங் களிகூர
வடிய இளமாத் தழைப்பவரு மந்தா நிலம்போற் சரிக்கின்றுன்.

(அ - ரை.) *வேண்டிற்றே புரியும் - வேண்டியதையே செய்யும். படியில் - நிலவுலகில். அடிய-பருத்த அடியினையுடைய. இளமா-இளமாமரம். மந்த அநிலம் - இளந்தென்றற் காற்று, சரிக்கின்றுன் - சுற்றுகின்றுன்.* (௩0)

பதினோராவது கொக்கிதேவர் கதி முடிந்தது

கதி-கக-க்குச் செய்யுள்-௩உ௦.

---

## ௬௨. முத்தாயி அம்மை கதி

[இக்கதிக்கண், அல்லமதேவர் பற்பல இடங்களினுஞ் சுற்றித்திரிந்து அடியார்கட்கு அருள்புரிந்து கொண்டிருக்கிறார். அசகண்ணன் என்பவரது மறைவுகருதி அவருடைய உடன் பிறந்தாளாகிய முத்தாயி அம்மை பெரிதும் வருந்துகிறாள். அப்போது அல்லமதேவர் அங்கு அடைகிறார். முத்தாயி அம்மை அல்லமதேவரிடத்தில் வருந்திப் புலம்புகிறாள். 'நீ அசகண்ணனுடைய உண்மையை உள்ளவாறு உணரவில்லை; அழிவில்லாத அவன் அழிந்துபோனான் என்று மாறுபடக் கருதி நீ வீணாக வருந்துகின்றாய்; உண்மை வடிவத்தை நன்குணர்ந்தவர்கள் உடலை ஒரு பொருட்படுத்தமாட்டார்கள் அவர்களது உடல் நீக்கம் குடம் உடைந்தவுடன், குடவிண்ணும் பெருவிண்ணும் ஒன்றுவது போலப் பரம் பொருள் வடிவத்தோடு இரண்டறப் பொருந்துவதாகும்' என்று கூறி, அல்லமதேவர் முத்தாயி அம்மையைத் தேற்றுகிறார். மேலும் முத்தாயி அம்மைக்கு உண்மைப்பொருளை யுரைத்து வீடுபேற்றையடையும் நெறியையும் உணர்த்துகிறார். முத்தாயி அம்மை தன்னை வலிந்தாட்கொண்ட அல்லம தேவரைப் போற்றி இன்புற்றிருக்கின்றாள் என்னுஞ் செய்திகள் விளக்கமாகக் கூறப்பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

கண்டி லேன்அச கண்ணனை யென்றஞர்
கொண்டு வாடுங் கொடியிடை யாள்துயர்
விண்டு போக விரைந்துவந் தல்லமன்
பண்டு கூறும் பரிசு விளம்புவாம்.

(அ - ரை.) கண்டிலேன் - காணவில்லை. அசகண்ணன் - ஒருவருடைய பெயர். அஞர் - துன்பம். கொடியிடையாள்: முத்தாயி அம்மை. விண்டுபோக - ஒழிந்துபோக. பண்டு - முன்பு. பரிசு - தன்மை. (௧)

### அல்லமதேவர் வழக்கம்போல் எங்குஞ் செல்லல்

பொடிய ணிந்தெழில் பொங்குறும் அல்லமன்
அடியர் தங்கள் அகத்தில் துயரினை
உடையி ழந்த ஒருவன் கரமெனக்
கடித டைந்து களைந்தருள் செய்யுநாள்.

(அ - ரை.) பொடி - திருநீறு, எழில் - அழகு. பொங்கு - உறும்: மிகுந்திருக்கின்ற. அகத்தில் துயர் - உள்ளத் துன்பம். கடிது - விரைவில். களைந்து - நீக்கி.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே,
இடுக்கண் களைவதாம் நட்பு"
என்னும் திருக்குறட் கருத்து அமைந்திருத்தல் காண்க. (௨)

அசகணன் வீடுபேறடைதல்

மறைத்தி ருந்த மலிசிவ பத்தியைப்
புறத்த றிந்த பொழுதே உடம்பினை
வெறுத்த கன்று வெளியுரு வாயினன்
அறுத்த பந்த அசகணன் என்பவே.

(அ - ரை.) மலி-நிறைந்த. வெளி உருவாயினன் - அறிவுவடி வாயினன். அறுத்த பந்தம் - நீக்கப்பெற்ற தொடர்பு, அஃதாவது பற்றற்றிருத்தல். (௩)

அசகணன் பிரிவுக்கு முத்தாயி அம்மை வருந்தல்

அறைந்த தூயவன் அங்க உபாதிபோய்
நிறைந்த நீர்மை நினைந்திலள் போயுயிர்
இறந்து போயினன் என்னத் தளர்ந்துடன்
பிறந்த மாது பெரிதுள மாழ்கியே.

(அ - ரை.) தூயவன்: அசகணன். அங்க உபாதி-உடல் தொல்லை. நிறைந்த நீர்மை - வீடுபேறடைந்து யாண்டும் நிறைந்த தன்மை. பிறந்த மாது-உடன் பிறந்தாள், சகோதரி. மாழ்கி-வருந்தி. (௪)

முத்தாயி அம்மை அல்லமரைக் காண்டல்

புலம்பி நைந்திருக் கின்றவப் போதினில்
இலிங்க முங்கர முந்திகழ் வெய்துற
நலங்கொள் அல்லமன் நண்ணினன் நண்ணலும்
கலங்கி நின்றவக் காரிகை கண்டனள்.

(அ - ரை.) நைந்து-மனம் உருகி. இலிங்கமும் கரமும் திகழ்வு எய்துற - கையிலே சிவலிங்கம் நன்கு விளங்க. நண்ணினன் - சேர்ந்தான். காரிகை-பெண்; ஈண்டு முத்தாயி அம்மை. (௫)

முத்தாயி அம்மை அல்லமரின் முன் அழுதல்

கண்ட போதச கண்ணனைக் காண்கிலாள்
கொண்ட பிழை குறைய அழுதடிப்
புண்ட ரீகப் புதுமலர் வீழ்ந்துகண்
மண்டு நீருக வாய்விட் டரற்றினள்.

(அ - ரை.) பீழை - துன்பம். அடிப் புண்டரிகம்-கால்களாகிய தாமரை மலர். மண்டு நீர் உக - மிகுதியான கண்ணீர் பொழிய. அரற்றினள் - புலம்பினள். (௬)

அல்லமரை, 'என் துன்பம் போக்க எழுந்தருளினை' எனல்

பாவி யேன்முகம் பார்க்கஒண் ணுதென
ஆவி ஆமச கண்ணன் அகன்றுசெய்
நோவெ லாமிவண் நூக்க அருளினல்
மேவி னுயென மீண்டும் வணங்கினள்.

(அ - ரை.) நோவு-துன்பம். ஆவியாம் அசகண்ணன்-உயிரைப் போன்ற அசகணன். நூக்க-தூளாக்க. மேவினுய்-எழுந்தருளினுய். (௭)

அல்லமர் முத்தாயி அம்மையைப் பார்த்துக் கூறல்

வணங்கு மாதின் மலர்முக நோக்கியே
அணங்க னுய்நல் அசகணன் தன்மையை
உணர்ந்தி டாமல் உளைதல் உணர்வுளார்க்
கிணங்கு ருதென் றெந்தை இயம்புவான்.

(அ - ரை.) அணங்கு அனுய்-தெய்வப்பெண்ணைப் போன்றவளே. உளைதல்-வருந்துதல். இணங்குருது-பொருந்தாது. இயம்புவான் - சொல்வான். (௮)

அல்லமர், 'அசகணன் அழிவற்றவன்' எனல்

அழிவி லானை அழிந்தனன் என்றுநீ
விழியி னுன்மிகு வெள்ளம் பெருக்கினை
கழிவி லாதவா காயங் கழிந்ததென்
றொழிவி லாமல் உளமெலி வார்கள்போல்.

(அ - ரை.) அழிவிலானை - என்றும் அழிதல் அற்றவனுகிய அசகண்ணனை. மிகு வெள்ளம்-மிக்க கண்ணீர்ப் பெருக்கு. கழிவு இலாத-கெடுதல் அற்ற ஆகாயம்-வானம். கழிந்தது-போனது. (௯)

தன்னையறிந்தோன் உடலை மதியான் எனல்

சச்சி தானந்த சங்கரன் ஆகவே
அச்ச நீங்குபு தன்னை அறிந்தவன்
துச்ச மாந்துயர் தோல்மலி யாக்கையை
இச்சி யானதை யானென எண்ணியே.

(அ - ரை.) சச்சிதானந்த சங்கரன்-எக்காலத்திலும் அழிவற்றதாய் நிலைத்திருக்கும் பேரின்பப் பொருள். அச்சம் நீங்குபு - அச்சம் நீங்கி. துச்சம்-இழிவு. தோல் மலி யாக்கை-தோலால் மூடப்பெற்ற உடல். இச்சியான்-விரும்பான். (௧0)

## இதுவும் அது

ஒண்தரைக்கண் ஒழிவில் அருளுருக்
கொண்ட டுத்த குருவரு ளால்தனைக்
கண்ட மெய்த்தவன் காயந் தனையனம்
உண்ட நெட்டிலை ஒப்ப விடுப்பனால்.

(அ - ரை.) ஒண்-ஒளி பொருந்திய. தரை-உலகம் காயம் - உடல். அனம் உண்ட - சோறு தின்ற நெட்டிலை - நெட்டு+இலை-நெடு இலை-நீண்ட இலை. விடுப்பன்-நீக்குவான்; விடுவான். (௧௧)

## மெய்யறிஞரின் உடல்நீக்கம் இத்தன்மை எனல்

படியில் வந்த பரம குரவனால்
தடைய றும்படி தன்னை அறிந்தவன்
உடல்வி டும்பொழு தொன்றொரு மண்மயக்
கடமு டைந்த ஆகாயம் நிகர்ப்பனால்.

(அ - ரை.) படியில் வந்த-நிலவுலகில் அருளுருக்கொண்டு எழுந்தருளிய. தடை யறும்படி-ஐயம் முதலிய தடைகள் கெடும்படி. ஒன்றொரு-ஒவ்வொரு. மண்மயக் கடம்-மண் குடம். உடல் தொலை நீங்கப் பெற்ற மெய்யறிவாளி பரம்பொருளோடு ஒன்றுவன். (௧௨)

## அவர் தம் உடலுக்கு வேறாயிருப்பர் எனல்

பந்த பாசம் முழுதும் பரிந்திட
நந்தும் ஓர்சிவ ஞானி நரர்வினை
சிந்து மாறு செறிந்த உடம்புதான்
வெந்த தூசின் விழியெதிர் தோன்றுமே.

(அ - ரை.) பந்தபாசம்-வினைத் தொடர்பாலாகிய கட்டு. பரிந்திட-நீங்க. நந்தும் - மென்மேலும் அறிவுவளர்ச்சியைப் பெறும். நரர் வினை-மக்களுடைய நிறை வினையானது. சிந்தும் ஆறு - கெட்டொழியும்படி. வெந்த தூசு - தீப்பட்டெரிந்த ஆடை. விழி எதிர் - கண் முன். (௧௩)

அவர்க்கு உறவும் பகையும் இல்லை எனல்

யாவும் ஆகி இருக்கும் சிவத்தொடு
மேவு ஞான விழியுடை யான்தனக்
கோவும் ஆறில் உறவு பகையெனும்
பாவ மோஇலை யென்றறி பாவையே.

(அ - ரை.) யாவும்-எல்லாப் பொருள்களும் சிவத்தொடு மேவும்-சிவபெருமானுடன் ஒன்றிய. ஞான விழி - உண்மையறிவாகிய கண். ஓவும் ஆறு இல்-ஒழிதலில்லாத பாவம்-எண்ணம். பாவை-உவமையாகு பெயர்; ஈண்டுப் பெண். மகடூஉ முன்னிலை. (கஎ)

அறிவிலார் கூற்று இத்தன்மை எனல்

யாக்கை தாமென் றிருந்தழி கின்றவர்
ஊக்கி லாவறி வாகி உடம்பொடு
தாக்கி லாதவர் தம்மையுந் தாமென
நோக்கு வாரவர் உண்மையை நோக்குறார்.

(அ - ரை.) யாக்கை-உடல். ஊக்கிலா அறிவாகி-கெடாத அறிவு வடிவமாகி. தாக்கு இலாதவர் தம்மையும் - நல்வினை தீவினைகள் வந்து வருத்துவதில்லை இல்லாதவர்களையும். தாம் என நோக்குவார் - அறிவற்ற தங்களைப்போறு காண்பார்கள். அவர் உண்மை- அவர் தம் மெய்ம்மையான தன்மையை. (கஅ)

மெய்யறிஞரின் உலகப் பற்றற்ற நிலையைத் தவத்தினர் அறிவர் எனல்

கூத்தன் நாடகக் கோல நடிப்பினை
பார்த்து வாய்மையென் றெண்ணிலர் பாருளார்
ஏத்து ஞானிதன் யாக்கை நடிப்பினை
ஓர்த்து மாதவர் உண்மையென் றுன்னுறார்.

(அ - ரை.) கூத்தன் - நடன். ஏத்து-எல்லாராலும் போற்றப் பெறுகிற. ஓர்த்து-உணர்ந்து. உன்னுறார் எண்ணார் (கக)

அசகண்ணன் தன்மையை அறியாது வருந்தினை எனல்

அறிந்தி டாமல் அசகணன் தன்மையை
இறந்து ளானென் றிரங்கினை அன்னைநீ
மறந்தி டாயிம் மதியென் றணல்சொல
நிறைந்த ஞானமுத் தாயி நிகழ்த்துவாள்.

(அ - ரை.) இரங்கினை - வருந்தினாய். மதி-அறிவு. அணல் - அண்ணலாகிய அல்லமதேவர்; இடைக்குறை. (கஎ)

முத்தாயி அம்மை, தன் அறியாமையைப் பொறுக்குமாறு வேண்டல்

அரவின் காலரை வன்றி அறிபவர்
தரையின் இல்லை அசகணன் தன்னைநீ
தெரியின் அன்றிச் சிறியள் அறிவளோ
பெரும யான்செய் பிழைபொறுப் பாயென்று.

(அ - ரை) அரவின் கால் - பாம்பின் கால். தெரியின் அன்றி - தெரிந்தால் அல்லாமல். சிறியள் - அறிவு திருந்தாச் சிறியவள். 'பாம்பறியும் பாம்பின கால்' என்பது பழமொழி நானூறு. 'பாம்பறியும் பாம்பின் கால் என மொழியும் பழமொழியும் பார்த்திலீரோ' எனக் கம்பநாடரும் கூறுதல் காண்க. (கஅ)

(வேறு)

அல்லமதேவர் ஆண்டுப் போந்தது முன்னோர் தவமெனல்

பங்கன் இருந்த பதிக்கருள் செய்து
கங்கை அடைந்த கணக்கென என்பால்
இங்குற வந்தனை எங்குடி உள்ளார்
தங்கள் தவந்தரு தன்மையின் என்று.

(அ - ரை.) பங்கன் - நொண்டி. இருந்த-வாழ்ந்துகொண்டிருந்த. பதிக்கு-ஊர்க்கு. பங்கன் என்பதற்கு இறைவன் என்றும், பதிக்கு என்பதற்குக் கயிலைக்கு என்றும் போலியுரை கூறி இடர்ப்பட்டனர் பிற உரைகாரர்கள். கணக்கு என - தன்மையைப் போல. (கக)

அல்லமரை, முத்தாயி அம்மை வேண்டல்

வந்தனை செய்து வழுத்திமு னின்று
பந்தம் அகன்ற பதம்பெறும் வண்ணம்
எந்தை இயம்பி எனக்கருள் செய்யென்
றந்த மடந்தை அறைந்தனள் அன்றே.

(அ - ரை.) வந்தனை - வழிபாடு, வழுத்தி - போற்றி. பந்தம் - பிறவிக் கட்டு. பதம்-நிலை. எந்தை-என் தந்தையாகிய அல்லமதேவரே. அந்த மடந்தை-முத்தாயி அம்மை. அறைந்தனள்-கூறினாள். (உ0)

அல்லமதேவர் கூறுதல்

தேசிகன் அல்லம தேவன் மகிழ்ந்து
பாசம் அகன்று பரம்பொருள் காணும்
நேசம் அடைந்தனை நின்னை நிகர்ப்பார்
காசினி யின்மிசை கண்டிலம் என்று.

(அ - ரை.) தேசிகன்-ஆசிரியன். பாசம்-பிறவிக் கட்டு. பரம்பொருள் - மேலான வீட்டின்பம். இதனைச் 'செம்பொருள்' என்பர். காசினியின் மிசை - உலகத்தில். (உக)

புறத்தொழில்களால் வீடுபேறு கிட்டாதெனல்

பிறப்பொரு கோடி பிறந்து பிறந்து
புறக்கரு மங்கள் புரிந்திடி னும்பொய்
மறப்புறும் ஆணவ வல்லிருள் இன்றிச்
சிறப்புறு முத்தி செறிந்திடு வாரோ.

(அ - ரை.) புறக் கருமங்கள் - அறம், சிவபூசை முதலிய நற்செயல்கள். பொய் மறைப்பு உறு-பொய்யான மறைப்பை உண்டு பண்ணுகின்ற. ஆணவ வல் இருள் இன்றி-ஆணவமாகிய வலிய இருள் இல்லாமல். சிறப்புப் பொருந்திய அறம் சிவபூசை முதலியன, ஆணவ மூனைப்பை உண்டாக்குமாகலின் அவற்றால் வீடுபேற்றை எய்தவியலாது என்றார். (உஉ)

வெளிப்பற்றுக் கூடாதெனல்

மரிப்பொ டுதிப்பு மறிக்குதும் என்று
கருத்தை வெளிக்கரு மத்தின் விடுத்து
விரிக்குநல் நெய்யை விடுத்தெரி கின்ற
நெருப்பை அவிப்ப நினைப்பதை ஒக்கும்.

(அ - ரை.) மரிப்பு - இறப்பு. உதிப்பு - பிறப்பு. மறிக்குதும்-தடுப்போம். விரிக்குதல்-மனம் விரியுமாறு செய்தல் (உங)

ஓடும் உள்ளத்தை ஓடாது நிறுத்தவேண்டும் எனல்

மட்டற வோடு மனத்தை நிறுத்திக்
கட்டுதல் வீடு விடுத்திடல் கட்டன்
றொட்டிய பண்பின் உரைத்தல மப்பேர்ச்
சிட்டன் அவற்கருள் செய்தனன் அன்றே.

(அ - ரை.) மட்டற-எல்லையில்லாமல். விடுத்திடல்-உள்ளம் புறத்தொழில்களிற் செல்லுமாறு விடுதல். ஒட்டிய பண்பில் - பொருந்திய முறையில். சிட்டன்-சிறந்தவன்; சிரேட்டன் என்பதன் திரிபு. (உச)

முத்தாயி அம்மைக்கு வீடுபே றளித்தல்

தத்துவ முற்று மயக்குவ தள்ளி
மெய்த்த தனைப்பெற வேறு கொடுத்தான்
பொய்த்துறு குப்பை கிளைத்தொளி பொங்கும்
முத்தை அளித்தென முத்தை தனக்கு.

(அ - ரை.) தத்துவம் - உண்மையை ஆய்ந்து தெளிதல். தள்ளி-ஆராய்ச்சியால் வேறு பிரித்துத் தள்ளி. மெய்த்த - உண்மையாயுள்ள. தனைப் பெற - தன் உண்மைநிலையைப் பெற. கோழி குப்பையைச் சீய்த்து அப்பால் தள்ள அடியிலிருந்த முத்து வெளிப்பட்டாற் போல, ஆன்ம தத்துவம், வித்யாதத்துவம், சிவதத்துவம் முதலிய முப்பத்தாறு தத்துவங்களையும் ஒவ்வொன்றாக இது நீயல்லை இது நீயல்லை என்று விலக்கிக் காட்டி, இறுதியில் உண்மை வடிவத்தை முத்தாயி அம்மை உணருமாறு செய்தார் அல்லமதேவர். பொய்த்துறு குப்பை-வீணை குப்பை; தத்துவக் கூட்டங்கள் இக் குப்பைக்கு ஒப்பு. முத்தை - முத்தினை. இஃது உண்மைப் பொருளுக்கு ஒப்பு. முத்தை - முத்தாயி அம்மை. (உ௯)

முத்தாயி அம்மை அல்லமரைப் புகழ்தல்

வீடு விரும்பி வெறுத்திலன் மெய்யைத்
தாடரும் ஒண்குர வன்றனை எங்கும்
நாடி உழன்றிலன் நானுய என்னைத்
தேடி அடைந்தருள் செய்தனை யென்று.

(அ - ரை) வீடு விருப்பி - வீடுபேற்றை விரும்பி. மெய்யை - உடம்பை. தாள்தரும் - திருவடியைக் கொடுக்கும். ஒண் குரவன் - அறிவு ஆசிரியன். நாடி உழன்றிலேன்-தேடித் திரிந்தேனில்லை. (உ௪)

முத்தாயி அம்மை பேரின்பப் பேறடைதல்

அல்லமன் என்னும் அருட்குர வன்தாள்
புல்லி வணங்குபு பொற்கொடி அன்னாள்
செல்லல் அகன்று சிதம்பரம் எய்தி
எல்லையில் இன்பொ டிருந்தனள் அம்மா.

(அ - ரை.) புல்லி வணங்குபு-தழுவி வணங்கி. செல்லல் அகன்று-பிறவித்துன்பம் நீங்கப் பெற்று சிதம்பரம் எய்தி-மேலான பரவெளியாகி. எல்லையில் - அளவு கடந்த. இன்பு-பேரின்ப வீடுபேறு. (உ௫)

பன்னிரண்டாவது முத்தாயி அம்மை கதி முடிந்தது.

கதி கூ - க்குச் செய்யுள் - ௬௯௨

—

## கரு. சித்தராமையர் கதி

[இக்கதிக்கண், அல்லமதேவர் சொன்னலாபுரம் என்னும் நன்னகரினைத் துன்னுகிறார். ஆண்டுச் சித்தராமர் என்னும் யோகியின் பணியாட்கள் தடாகமொன்றைத் தோண்டிக் கொண்டிருக்கிறார்கள். அல்லமதேவர் குளம் வெட்டிக்கொண்டிருந்த ஒட்டர்களைக் கிட்டி, 'உங்களை இந்தப் பயனற்ற வேலையைச் செய்யுமாறு ஏவிய ஒட்டராமனுடைய கொள்கை யாது?' என்று கேட்கிறார். அல்லமதேவரின் மொழி ஒட்டர்களுக்குச் சினத்தை யுண்டாக்குகிறது. அவ்வளவில் ஒட்டர்களுக்கும் அல்லமதேவருக்குஞ் சொற்போர் மூள்கிறது. அல்லமதேவர், 'நான் கூறியவற்றை உங்களுடைய கற்றறி மூடன்பாற் சென்று சொல்லுங்கள்' என்கிறார். 'சித்தராமரைக் கற்றறி மூடன்' என்று அல்லமதேவர் செப்பியது ஒட்டர்களுக்கு மட்டில்லாச் சினத்தை உண்டாக்குகிறது. கற்களைப் பொறுக்கி அல்லமதேவர்மீது வீசுகிறார்கள். அக் கற்கள் அல்லமதேவர் மீது படாமல் மலையாகக் குவிகிறது. அல்லமதேவர் அக் கல்மலைமீது நிற்கிறார்.

அல்லமதேவர் மீது கல் படாமையைக் கண்ணுறும் ஒட்டர்கள் வியப்படைகிறார்கள் இத்தகைய நிலையில் ஈங்கு நிற்கும் இவன் யாவன் என்று எண்ணுகிறார்கள். இவன் யாதோ சூழ்ச்சியால் கல்வீழ்ச்சியில் நின்றும் பிழைத்துக்கொண்டான் என்று எண்ணுகிறார்கள். அல்லமதேவரைப் பற்றிப் பிடித்து அடித்துக் கொல்ல நெருங்குகிறார்கள். அல்லமதேவரோ அந் நிலையிற் பல கோலங் கொண்டு நிற்கிறார். எந்தக் கோலத்தைப் பிடித்து அடித்துக் கொல்வது என்று அவர்களுக்கு விளங்கவில்லை; விரைந்தோடிச் சித்திராமரிடஞ் செய்தியை விளம்புகிறார்கள். சித்தராமருக்குச் சீற்றம் மிகுந்து பொங்கிவருகிறது. 'என்னை இகழ்ந்தவன் யாவன்? அவனுடைய நாவை அரிந்து விடுகிறேன்' என்று கூறிக்கொண்டு அல்லமதேவர் இருக்த இடத்தை அடைகிறார்.

அல்லமதேவர், சித்தராமர் சினத்துடன் வருதலையுணர்ந்துகொண்டு, குறிப்பாகவும் வெளிப்படையாகவும் இகழ்ந்து கூறுகிறார். சித்தராமர் அல்லமதேவரை எரித்துவிட நினைத்து நுதற்கண்ணைத் திறக்கிறார். அந் நுதல் தீ அல்லமதேவரின் தாளைப் பணிந்து வணங்கிச் சொன்னலாபுர நகரினையே சுட்டெரிக்கத் தொடங்குகிறது. பல பொருள்களும் எரிந்து தொலைகின்றன; நகர மக்கள் வருந்துகின்றனர்; அல்லமதேவர் அந் நகர மாந்தரின் அல்லலைப் போக்க எண்ணுகிறார்; தீ மறைகிறது; சொன்னலாபுரம் முன்னையினும் பன்மடங்கு நன்னலஞ் சிறந்து திகழ்கின்றது; சித்தராமரின் செருக்கும் அழிகின்றது; அவருக்கு மெய்யறிவு

தோன்றுகிறது; தம் பிழையைப் பொறுத்துத் தம்மை யாட்கொள்ள வேண்டுமென்று அல்லமதேவரைப் பணிந்து வேண்டுகிறார்.

அடைக்கலம் புகுந்த சித்தராமரை அல்லமதேவர் ஆட்கொள்ளுகிறார். சினம் தீதென்பதை விளக்கிக் கூறுகிறார். பொறிகளை யடக்கலால் நேரும் பயனையும் மெய்ப்பொருளையும் விரித்துரைக்கிறார். மெய்யறிவு பெற்ற சித்தராமர் என்போல் கற்பேறு பெற்றோர் ஒருவருமிலர் என்று அல்லமதேவரைப் போற்றிப் புகழ்ந்து வணங்குகிறார். சித்தராமர் தமக்குப் பணி செய்ய அல்லம தேவர் சின்னாள் சொன்னலாபுரத்தில் எழுந்தருளியிருக்கிறார் என்னுஞ் செய்திகள் விரிவாகக் கூறப்பெறுகின்றன.]

நூலாசிரியர் கூறல்

காமரு சித்த
ராமன் இடத்தில்
போமனல் சொற்ற
சீர்மை உரைப்பாம்.

(அ - ரை.) காமரு - அழகிய. சொற்ற - சொன்ன. சீர்மை - சிறப்பு. (க)

அல்லமதேவர் தன்மை

செல்லல் களைந்து
நல்லறி வின்பம்
சொல்லுவன் என்னும்
அல்லமன் என்பான்.

(அ - ரை.) செல்லல் - துன்பம்; ஈண்டுப் பிறவித் துன்பம். நல் அறிவு - மெய்யறிவு. இன்பம் - பேரின்பம். சொல்லுவன் - உணர்த்தத் தக்கவன்; உணர்த்துவேன் எனினும் ஆம். (உ)

அல்லமர் சொன்னலாபுரம் அடைதல்

கரும யோகமும்
கிரியை யாவையும்
மருவி ராமன்வாழ்
புரியை மேவினன்.

(அ - ரை.) கரும யோகமும் கிரியை யாவையும் - அறநெறிக்குரிய காரியங்கள் எல்லாவற்றையும். மருவி - செய்து. (ங)

சித்தராமனின் ஆட்கள் திருப்பணியைக் காணல்

வாவி ஆலயம்
காவி ராமனூர்
ஏவ லாளர்செய்
தோவி லாமையை.

(அ - ரை.) வாவி-குளம். ஆலயம்-கோவில். கா-பூம்பொழில் ஓவு இலாமையை - ஒழிவில்லாமையை. (௪)

சித்தராமர் செயல் பயனற்றதென எண்ணல்

பார்த்தருள் அண்ணல்
மூத்த இராமன்
வார்த்தை அறிந்த
கூத்தினன் என்றே.

(அ - ரை.) மூத்த இராமன்-முதிர்ந்த சித்தராமையர். வார்த்தை அறிந்த-மாறுபாட்டுணர்ச்சியை அடைந்த. கூத்தினன்-கொள்கையை உடையவன். (௫)

சித்தராமையருக்கு நல்லறிவு இல்லை எனல்

பேரறி வின்னுன்
சார இருந்த
ஊரினும் இல்லென்
றூர இகழ்ந்தே.

(அ - ரை.) பேர் அறிவு - மெய்யறிவு. சார இருந்த-பொருந்து மாறு இருந்த. ஊர இகழ்ந்து - மிக மிகுதியாக இகழ்ந்து. (௬)

சித்தராமையரின் செயல் இத்தன்மை எனல்

இல்லம் அகன்றிவ்
வல்லல் அடைந்தான்
நல்ல பசும்பொன்
வல்லி உவந்தான்.

(அ - ரை.) இல்லம் அகன்று - இல்லறத்தை நீங்கி. அல்லல் அடைந்தான் - திருப்பணித் தொல்லைகளிலே அகப்பட்டுக்கொண்டான். பசும் பொன்வல்லி-பொன்னுலாகிய விலங்கை. உவந்தான்-மகிழ்ந்து கொண்டான்.

சித்தராமையர் இல்லறத்தை நீத்துத் துறவறத்தை மேற்கொண்டும் திருப்பணிகளிலே ஈடுபட்ட செய்கை, இரும்பு விலங்கை வெறுத்துப் பொன்விலங்கை மாட்டிக்கொண்டவன் செய்கைபோலும், என்பது கருத்து. (எ)

அல்லமர், தடாகந் தோண்டுவோரிடம் உரையாடுதல்

என்று நினைந்து
நன்றுற வாவி
ஒன்றகழ் வார்பால்
சென்றிது சொல்வான்.

(அ - ரை.) நன்று உற - நன்றாகப் பொருந்த. அகழ்வார் பால்- தோண்டுகிறவர்கள் இடத்தில், (அ)

சித்தராமையரின் நோக்கம் யாதென்று கேட்டல்

(வேறு)

ஒட்ட ராமன் உளத்தினில்
இட்டம் யாதுகொல் இத்தொழில்
முட்டி லாமல் முயன்றனன்
கொட்டி விழுமி குத்தல்போல்.

(அ - ரை.) ஓட்டராமன் - சித்தராமையர்; இகழ்ச்சிக்குறிப்புத் தோன்ற இவ்வாறு ஓட்டன் என்னும் அடையைக் கொடுத்தார். இட்டம்-நோக்கம். முட்டு இலாமல்-தடங்கல் இல்லாமல். கொட்டி- நெல்லைக் குத்தி. விழும் - அதில் வந்த. திருப்பணிகளைப் புரிதல் உமியைக் குத்துதல்போற் பயனற்ற செய்கை என்பது கருத்து. (க)

பயனற்ற செயலில் உம்மை விட்டது யாதெனல்

விழற்கி றைப்ப விடுத்தல்போல்
தொழிற்குள் எய்த்துறு தொழில்நுமை
இழைக்க விட்டதென் என்றிடர்
ஒழிக்கல் உற்றவன் ஓதினன்.

(அ - ரை.) விழல் - நாணற்புல்; பயனற்ற ஒருவகைப் புல். 'விழலுக்கு முத்துலை இட்டிறைத்தே னென் விதிவசமே' என்றார் பட்டினத்தடிகள். எய்த்துறு தொழில் - இளைப்பை உண்டாக்கக் கூடிய வேலை. இழைக்க - செய்ய. இடர் ஒழிக்கல் உற்றவன் - பிறவித் துன்பத்தைப் போக்க வந்த அல்லமதேவர். (கο)

### தொழிலாளர்கள் பொறுமையிழத்தல்

சாந்தன் ஓதிய தாழ்மொழி
காய்ந்த வேலிரு காதினும்
போந்த போன்று புகுந்தன
மாந்தர் ஆகுலம் மன்னினர்.

(அ - ரை.) சாந்தன் - பொறுமை மிக்க அல்லமதேவர். தாழ் மொழி-இழிவான சொற்கள். காய்ந்த வேல்-நெருப்பில் காயவைத்த வேல். போந்த போன்று - புகுந்தாற் போன்று. மாந்தர்-திருப்பணி செய்திருந்த தொழிலாளர்கள். ஆகுலம் மன்னினர்-வருத்தம் அடைந் தார்கள். (கக)

### ஒட்டர்கள் அல்லமதேவரை இகழ்ந்து சினத்தல்

அறம் அழித்தனை அன்றியும்
நெறிய றக்குரு நித்தனை
பெறவு ரைத்தனை பித்தவென்
றுறவு றுத்தனர் ஒட்டலர்.

(அ - ரை.) நெறி அற - முறைமை கெட. பெற - தோன்ற. உற உறுத்தனர் - மிகச் சினந்தனர். ஒட்டலர் - முன்பின் தொடர் பில்லாத ஏவலாளர். (கஉ)

### சித்தராமையரை இகழ்ந்தது தகாதெனல்

ஒட்டன் என்றனை உம்பரும்
சிட்டன் என்றுகொள் சித்தனைத்
துட்ட என்று சுளித்தனர்
வெட்டி ருந்தடம் மேவினோர்.

(அ - ரை.) உம்பரும் - தேவர்களும். சிட்டன் - சிறந்தவன். துட்டன் - கொடியன். சுளித்தனர் - முகங் கோணினர். வெட்டு - வெட்டப்பெறுகிற. இரும் - பெரிய. தடம் - தடாகம். மேவினோர் - இருந்தவர்கள். (கங)

### அல்லமதேவர் அதற்குக் காரணங் கூறுதல்

(வேறு)

மெய்த்தடம் அகழ்பவர் வினையை அன்றியே
சித்தர்தஞ் செயலொரு சிறிதும் இன்மையான்
மத்தர்நுங் குரவனை மண்ணில் நும்மினும்
உத்தம ஒட்டனென் றுரைத்தும் என்றனன்.

(அ - ரை.) மெய் - உண்மையாக. தடம் அகழ்பவர் - தடாகம் தோண்டுபவர். மத்தர் - அறிவில்லாதவர். உத்தம ஒட்டன் - நல்ல ஒட்டன். உரைத்தும் - நாம் கூறுவோம் : தன்மைப் பன்மையில் வந்த ஒருமைவினை. (கரு)

ஒட்டர்கள் உரைத்தல்

திகழ்ந்துல கிடைநிலை நிற்கு நல்லறம்
உகந்துசெய் பவன்றனை உம்ப னேயெனப்
புகழ்ந்தவர் புண்ணியர் பொருமை யானிழித்
திகழ்ந்தவர் நரகரென் றிசைப்பர் நல்லவர்.

(அ - ரை.) திகழ்ந்து - செய்யப்பட்டு. உகந்து - மகிழ்ந்து. உம்பன் - மேலானவன். இழித்து இகழ்ந்தவர் - இழிவுபடுத்தி வைத வர்கள். நரகர் - கீழோர். இசைப்பர் - சொல்வார்கள். (கசு)

நீ நல்லோர் உறவு பெற்றோன் இல்லை எனல்

மறவினை உடையரை மாற்றித் தூயநல்
அறவினை உடையரை அறிந்திட் டன்னரோ
டுறவினை அடைந்திலை ஒப்பக் கண்டறத்
துறவினை உளையென ஒட்டர் சொல்லினர்.

(அ - ரை.) மறவினை - கொடுந்தொழில். மாற்றி - நீக்கி. அறிந்திட்டு - உணர்ந்து. அன்னரோடு - அவர்களுடன். ஒப்பக் கண்டு - அறத்தினையும் மறத்தினையும் ஒரே தன்மையாகப் பார்த்து. அறத்துறவினை - அறநெறியைத் துறக்குந் தன்மை உடையையாய். உளை - உள்ளாய்; இருக்கின்றாய். (கஎ)

அல்லமர், 'நீர் என்னை உணரவில்லை' எனல்

ஓங்கிரு வினைகளும் ஒப்பக் கண்டவர்
தாங்களென் றனையொரு தமரிற் பேணுவர்
ஆங்கவை இரண்டையும் அடைந்து போயுழல்
நீங்களென் றனையுணர் நெறியிலீர் என்றான்.

(அ - ரை.) ஓங்கு - மிக்க. ஒப்ப - ஒரே தன்மையாக. தமரில் பேணுவர் - உறவினர்களைப் போலப் போற்றுவார்கள். இரண்டையும் அடைந்து - நல்வினை தீவினை என்னும் இருவினைப் பற்றுக்களையும் பொருந்தி. உழல் - துன்புறுகின்ற. என்தனை - என்னை. நெறி இலீர் - வழியில்லாதவர்கள். (கஎ)

ஒட்டர்கள் மீண்டும் அல்லமரைச் சினத்தல்

எனக்கற வினையுமில் என்று கூறினய்
உனக்கொரு கதியிலென் றுண்மை கூறியே
சினத்தனர் நிலனகழ் சிறியர் யாவரும்
தனக்கிணை தானெனும் தம்பி ரானையே.

(அ - ரை.) அறவினையும் - அறச்செயலும். கதி - நற்பேறு. நிலன் அகழ் சிறியர் - ஒட்டர்கள். தம்பிரான் - சிறந்தவன்; ஈண்டு அல்லமர். (கஅ)

சித்தராமையர்பால் அல்லமர் செப்புமாறு கூறுதல்

முற்றிய கல்வியின் மூடர் நீவிர்நும்
கற்றறி மூடனுக் கறைமின் அன்னவன்
உற்றனன் எனிலவன் உணர்வுஞ் சொல்லினுல்
இற்றென உணர்வமென் றெந்தை கூறினன்.

(அ - ரை.) முற்றிய - முதிர்ந்து சிறந்த. கல்வி இல் - கல்வியறிவில்லாத. கற்று அறிமூடன் - கற்றறிந்தும் உணர்வில்லாதவன். அறைமின் - சொல்லுங்கள். உற்றனன் எனின் - இங்கு வருவானுகில். உணர்வும் - அறிவும். இற்று என - இத் தன்மைத்து என. உணர்வம் - அறிந்து கொள்வோம். (கக)

ஒட்டர்கள் பெருஞ்சினங் கொள்ளுதல்

சேடனும் புகழ்வுறும் சித்த ராமனை
மூடனென் றுரைத்தவம் மொழிக யந்தொடாத்
தோடருங் கொட்டினேர் சீற்றத் துப்பெனும்
நீடுவெந் தழல்சொரி நெய்நி கர்த்ததால்.

(அ - ரை.) சேடனும் - ஆதிசேடனும்: உம்மை உயர்வு சிறப்பு. கயம் - தடாகம். தொடா - தோண்டி. தோள் தரும் கொட்டினேர் - தோளில் வைக்கும் மண்வெட்டியை உடையவர்கள் சீற்றத் துப்பு - சினவலி. சித்தராமரைக் கற்றறி மூடன் என்றுரைத்த சொல் ஒட்டர்களுடைய சினத் தீ மிகுந்தெரிய நெய்யாயிற்று என்க. (உ0)

ஒட்டர்கள் அல்லமரை அடிக்கக் கற்களைப் பொறுக்குதல்

இறுக்கினர் அழுக்குடை எயிறு மென்றனர்
உறுக்கினர் அதிர்த்தனர் உயிர்த்து மீசையை
முறுக்கினர் நகைத்தனர் முருட்டுக் கைகளால்
பெறுக்கினர்* சிலைகளைப் பெருஞ்†சி னத்தராய்.

(பாடம்.) *பொறுக்கினர். † - பாரும்.

(அ - ரை.) எயிறு மென்றனர் - பற்களைக் கடித்தனர். உறுக்கினர் - சினந்து பார்த்தனர். அதிர்த்தனர்-கூச்சலிட்டனர். உயிர்த்து-பெருமூச்சு விட்டு. முருட்டுக்கை - முரட்டுத் தனத்தையுடைய தம் கை. பெறுக்கினர் - பொறுக்கினர். சிலைகள்-கற்கள். பெறுக்கல்-பொறுக்குதல் என்னும் பொருளது. (உக)

அல்லமதேவரைக் கல்லாற் கொல்லச் சூழுதல்

நங்குர வனையிகழ் நயமி லான்றனை
இங்கொரு சிலையினுல் எறிந்து கொல்லுதல்
பொங்குறும் அறமொடு புகழும் ஆதுமென்
றெங்குர வனையவர் எதிர்ந்து சூழ்ந்தனர்.

(அ - ரை.) நயம் இலான் - நன்மை இல்லாதவன். ஒரு சிலை - ஒப்பற்ற கல். எறிந்து-விட்டு வீசி. பொங்குறும் அறம்-மிகுதியான அறம். எதிர்ந்து - எதிர்த்து; மாறு கொண்டு. சூழ்ந்தனர்-வளைந்து கொண்டார்கள். (உஉ)

அல்லமரைக் கிட்டி நெருங்குதல்

கட்டுமின் அடிமினுங் கரத்திற் கொட்டினுல்
வெட்டுமின் நிந்தைசொல் வாயின் வெண்பலைத்
தட்டுமின் எறிமின்வன் தலைகு மைந்திடக்
குட்டுமின் எனஉளங் கொதித்துக் கூடினுர்.

(அ - ரை.) கரத்தில் கொட்டினுல் - கையிலுள்ள மண் வெட்டியினுல். நிந்தை சொல் - பழிமொழி கூறுகின்ற. தட்டுமின்-அடித்து நொறுக்குங்கள். தலை குமைந்திட - தலையில் குழியுண்டாம்படி; அல்லது உடைந்து போம்படி. (உக)

அல்லமதேவர்மீது கற்களை மழைபோற் சொரிதல்

என்மன இருளற எழுந்த அல்லமன்
மின்மலி வுறுதிரு மேனி மீதிடிச்
சொன்மலி ஒட்டலர் சூழ்ந்து கொண்டுவன்
கன்மழை சொரிந்தனர் கைச லிப்பவே.

(அ - ரை) மன இருள் - அறிவின்மை. மின்மலி - பேரொளி மிக்க. இடிச்சொல் மலி - இடிபோன்ற சொற்களை மிகுதியாகப் பேசுகின்ற. கல்மழை - கல்மாரி; கல்லை அளவின்றி வீசியெறிந்ததால் அதனைக் 'கல்மழை' என்றுர். (உச)

கல் தாக்காமையைப்பற்றி நூலாசிரியர் கூற்று

சாக்கிய னுரெறி தனிக்கல் அன்றிமெய்
நோக்கிலர் தாமொரு நூறு கோடிகல்
மீக்கிளர் சோதிதன் மீது வீசினும்
தாக்குறு மோவவை தாக்கு றுவரோ.

(அ - ரை.) தனிக்கல் - (அன்போடு எறிந்த) ஒப்பற்ற கல். சாக்கிய நாயனார் அன்போடெறிந்த தனிக் கல் இறைவன் மெய்யின் மீது தாக்குறினும் அவர் மெய்யைக் குழைவு செய்யாமல் மனத்தைக் குழைவு செய்தது. இதனை இவ்வாசிரியர், 'மனம்படும் அடிமையுடன் சிலையெறிக்கு மனங்குழைந்து' என்று சோணசைலமாலையிற் கூறி யிருப்பதுங் காண்க. மெய்நோக்கு இலர் - உண்மையான அறிவுப் பார்வை இல்லாதவர்கள். மீக்கிளர் - மிகுதியாக விளங்குகின்ற. சோதி - ஒளி வடிவானவன். தாக்கு உறுமோ - மேலே சென்று விழுமோ? விழா என்றபடி. (௨௯)

ஒட்டர்கள் எறிந்த கற்குவியல்மீது அல்லமதேவர் நிற்றல்

கொடியவர் எறிந்தகல் குவியக் குன்றென
முடிமிசை நின்றனன் முத்தன் அல்லமன்
புடவியில் உடல்நிழல் புதைப்ப அந்நிழல்
கடிதினின் மீமிசை காணும் தன்மைபோல்.

(அ - ரை.) கொடியவர்-ஒட்டர்கள். குன்று என-மலை என்னும் படி. முடிமிசை - அக்கற்குவியலின் மேல் இடத்தில். புடவியில் - உலகத்தின்கண். உடல் நிழல் - உடலின் நிழல். கடிதினின் - விரைவில். மீமிசை - மேலே மேலே. ஒருவன் றன் உடல் நிழலைப் புதைப்பானாயின் அந் நிழல் புதைபடாமல் மேலெழும்புதல் போல அல்லமதேவர் மீது கல் படாமல் அவர் அக் கல் குவியலின் மீது நின்றார் என்க. (௩௰)

பொறுமையாற் சிறப்புறும் புங்கவர்

ஒறுப்பவன் இழிந்தவன் ஒருவன் செய்தநோய்
பொறுப்பவன் நடுவுளன் பொறுக்கு நெஞ்சமும்
மறப்பவன் உயர்ந்தவன் என்று வாய்மையால்
சிறப்பவர் இம்முறை செப்பு வாரரோ.

(அ - ரை.) ஒறுப்பவன் இழிந்தவன் - பகைவராயினாரை ஒறுப் பவன் தாழ்வுடையவன். பொறுப்பவன்-அதனைப் பொறுத்துக் கொள் பவன். நடுவு உளன் - நடுத் தகுதியை உடையவன். அப் பகைமையை அடியோடு மறந்துவிடுபவன் உயர்ந்தவன். வாய்மையால் சிறப்பவர்- உண்மை நெறியில் சிறந்த பெரியவர்கள். இம்முறை-இவ்வாறாக. ()

அல்லமரின் பொறுமையைக் கண்ட ஒட்டர்கள் வியத்தல்

தீங்கினை எதிர்நின்று செய்த போதினே
தாங்கிலன் முனிவினை மறந்து தாமரைத்
தேங்கமழ் மலரென முகஞ்சி றப்புறீஇ
ஈங்குநின் றிடுமிவன் யாண்டு ளான்கொலோ.

(அ - ரை.) தாங்கிலன் முனிவினை என்பதை முனிவினைத் தாங்கிலன் என்றும், தீங்கினை எதிர் நின்று செய்தபோதினே மறந்து என்றும் ஒட்டுக. தேம் கமழ் - மணம் வீசுகின்ற. யாண்டுளான் - எவ்விடத் திருப்பவன். முகம் சிறப்புறீஇ - முகம் மலர்ந்து. கொல் : ஐயப்பொருளது. 'கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே' என்னும் நன்னூல் நூற்பாவால் அறிக. (உஅ)

பிழை செய்வாரிடத்தும் நன்மை செய்யும் பெருமை

மலர்மிசை வேதனே மலர்க்கண் மாயனே
பலர்புகழ் மழவிடைப் பாக னேவெனில்
அலனிவன் பிழைசெயும் அவரி டத்தினும்
நலனுளன் என்றுகண் டவர்ந வின்றனர்.

(அ - ரை.) வேதன் - நான்முகன். மாயன் - திருமால். மழவிடைப்பாகன் - சிவன். நலன் உளன் - நன்மையைச் செய்பவனாக இருக்கின்றான். கண்டவர் - தெரிந்தோர். (உகூ)

ஒட்டர்கள் அல்லமரைப் பிடித்துக் கொல்ல எண்ணுதல்

கல்லெறி படாமையைக் கண்ட ஒட்டலர்
சொல்லுறின் இவனொரு சூழ்ச்சி மந்திரம்
வல்லவன் இவன்தனை வலிந்து பற்றியே
கொல்லுவம் எனஎதிர் குறுகி னாரரோ.

(அ - ரை.) ஒட்டலர் - பகைவர். சொல்லுறின் - சொல்லுமிடத்து. சூழ்ச்சி மந்திரம் - ஒரு தந்திர மந்திரம் வலிந்துபற்றி - வலுக்கட்டாயமாகப் பிடித்து. குறுகினார் - அடைந்தார். (கூ0)

அல்லமதேவர் பல வடிவங்கொண்டு நிற்றல்

குறுகலும் அவன்பல கோலங் கொண்டனன்
நிறைபுனற் கடந்தொறு நிலவு தோன்றல்போல்
மறுகினர் நிலைகழ் மனிதர் பற்றுதற்
கறிகிலர் இனையனென் றனையன் தன்னையே.

(அ - ரை.) பல கோலம் - பல வேறு வடிவங்கள். நிறைபுனல் கடம் - நீர் நிறைந்த குடம். மறுகினர் - மனக் கவர்ச்சி கொண்டனர். நீர் நிறைந்த பல குடங்களினும் பல திங்கள் தோன்றுதல் போல் அல்லமதேவர் பல வடிவங்கொண்டு நின்றனர் என்க. (கக)

ஒட்டர்கள் சித்தராமையரிடம் செய்தி கூறுதல்

மருண்டனர் சித்தரா மப்பெ ருந்தகை
இருந்தரு ளிடத்துமெய் இளைப்ப ஓடியே
திருந்திய அடிமிசைச் சென்று வீழ்ந்தெழுந்
தரந்தையோ டனையவர் அறைதல் மேயினர்.

(அ - ரை) மருண்டனர் - மருட்சியடைந்தார்கள். அரந்தையோடு - துன்பத்தோடு. அனையவர் - ஒட்டர்கள். அறைதல் மேயினர் - கூறலானார்கள். (கஉ)

அல்லமர் இகழ்ந்ததைச் சித்தராமையரிடம் கூறல்

யாந்தொழில் செயுமிடத் தேது இன்றியே
போந்தனன் ஒருமகன் புதியன் நின்புகழ்
ஓர்ந்திலன் உரைக்கொணு இழிபு ரைத்தனன்
மாய்ந்திலம் உடல்நசை மருவி யாங்களே.

(அ - ரை.) ஏது இன்றியே - யாதுந் தொடர்பு இல்லாமலே. ஓர்ந்திலன் - அறிந்திலன். உரைக்கொணு - சொல்ல முடியாத இழிபு - இழி மொழிகளை. உடல் நசை மருவி - உடலினிடத்திலே பற்றுப் பொருந்தி. (கங)

சித்தராமையர் சீற்றங் கொள்ளல்

என்றவர் அறைதலும் இராமன் சிந்தையில்
புன்தொழில் அகன்றுமெய்ப் போதம் பெற்றிட
அன்றருள் அல்லமன் அடிகள் காட்டுறும்
ஒன்றொரு சீற்றம்வந் துதித்தெ ழுந்ததே.

(அ - ரை ) அறைதலும் - கூறலும். புன் தொழில் - திருப்பணி முதலிய அறநெறி வழிகளாகிய சிறு தொழில்கள். மெய்ப்போதம் - உண்மையுணர்வு. அன்று - அப்போது. ஒன்று ஒரு சீற்றம் - பொருந்திய ஒரு சினம். உதித்து - தோன்றி. எழுந்தது - மேலோங்கியது. (கச)

சித்தராமையர் வெகுண்டெழுதல்

யாவனென் தன்னையின் றிகழ்ந்து ளானவன்
நாவரிந் திடுவனுன் எனவெ ழுந்தனன்
மேவுறும் தவமத வெகுளி தானினி
ஓவுறும் தரத்ததன் றுருவ ரானுமே.

(அ - ரை.) மேவுறும் - உண்டாகிற. தவமத வெகுளி - தவச் செருக்கால் உண்டாகிற சினம் ஓவுறும் தரத்தது அன்று-ஒழிக்கும் படியான தன்மையோடு கூடியது அன்று. ஓதல் - ஒழிதல். (கரு)

அல்லமர் சித்தராமையர் சினம் அறிந்துகொண்டு கூறுதல்

(வேறு)

என்னை வைதவன் யாரவன் என்முனிந் தெரிபோல்
முன்னர் எய்தினன் சித்தரா மப்பெயர் முதல்வன்
அன்னை அன்னநம் அல்லமன் அவன்சினம் அறிந்து
சென்னி ஒண்கரம் அசைத்துவெண் நகைசெய்து செப்பும்.

(அ - ரை.) முனிந்து - சினந்து. எரி - தீ. அன்னை அன்ன - தாயை ஒத்த. சென்னி தலை. கரம் - கை. வெண்நகை செய்து - வெள்ளிய பற்கள் தோன்ற நகைத்து. (கசு)

அல்லமர் சித்தராமையரைப் புகழ்வது போல இகழ்தல்

அகழ்கின் றூர்தமைத் தாங்குறும் அகல்நிலம் என்ன
இகழ்கின் றூர்தமைப் பொறுக்குமித் தன்மையெய் தலினுல்
நிகழ்கின் றுருள்மா தவமுடை யோகிநீ யென்று
புகழ்கின் றுனென இகழ்ந்தனன் பின்னரும் புகல்வான்.

(அ - ரை.) அகழ்கின்றூர் - தோண்டுபவர்களை; வெட்டுவோரை. அகல் நிலம் - அகன்ற நிலம். நிகழ்கின்றுருள் - தவத்தால் சிறந்து விளங்குபவர்களுள். மாதவம் - பெருந்தவம். (கஎ)

இதுவும் அது

சிறப்புப் பெற்றநல் யோகிநன் மனத்தெழு சினந்தன்
அறத்தைக் கொன்றிடு முன்புபஞ் சியிற்புகும் அழல்போல்
ஒறுக்கப் பட்டவன் பவம்பினை ஒழித்திடும் அதனுல்
பொறுத்தற் கொப்பிலை என்றுநன் றறிந்தனை போலும்.

(அ-ரை.) சிறப்புப் பெற்ற - மேம்பாடமைந்த. தன் அறத்தைக் கொன்றிடும் முன்பு - தன் தவத்தை அழித்து ஒழிப்பதற்கு முன்பு. பஞ்சி - பஞ்சு. அழல் - நெருப்பு. ஒறுக்கப்பட்டவன் - சினக்கப் பெற்றவன். பவம் - தீவினை.

தவமுடையானது சினம், சினக்கப்பெற்றவனது தீவினையை முன்னர் அழித்துப், பின்னர்ச் சினந்தவனது தவவன்மையையும் அழிக்கும். ஆகவே பொறுமை சிறந்ததென்று உணர்ந்திருக்கின்றாய் போலும் என்றார். (கூஅ)

## இதுவும் அது

காலன் நின்முனம் பொறையுளன் ஆகுவன் கடல்சேர்
ஆலம் நல்லமு தாகுமென் றவன்தவம் புகழ்வான்
போல வைதனன் கொடியவன் எனும்பொருள் தோன்றச்
சீல நல்குமோர் தொழில்செயும் அல்லம தேவன்.

(அ-ரை.) காலன் - கூற்றுவன். பொறை உளன்-பொறுமையுள்ளவன். ஆலம் - நஞ்சு. சீலம் நல்கும் ஓர் தொழில் - பிறப்பைக் கெடுத்து உயிர்களைத் தூய்மை செய்யும் ஒப்பற்ற தொழில். (கூகூ)

## சித்தராமையர் மறுமொழி பகரத் தொடங்கல்

பொறையு றும்படி அல்லமன் சூழ்ச்சியிற் புகலக்
குறையு றுஞ்சின மிகுந்தனன் நெருப்பெனக் கொதித்தே
அறையு றுந்திரள் பந்தெனச் சித்தரா மையன்
நிறையு றுந்திரு வருளுடைப் பிரானொடு நிகழ்த்தும்.

(அ-ரை.) பொறையுறும்படி-பொறுமையுண்டாகும் வண்ணம். சூழ்ச்சியில் - தந்திர மொழிகளினால். அறை உறும் - அடிக்கப்படுகின்ற. பந்து என - பந்து விரைந்தெழல் போல. இகழப்பெற்ற சித்தராமையர் வெகுண்டெழுந்து பேசத் தொடங்கினாரென்க. (௪0)

## சித்தராமையர் அல்லமரை அழிப்பேன் எனல்

குறிப்பில் வைதனை வெளிப்படை இகழ்வினுங் கொடிதாய்
வெறுப்பு முன்செயா என்னைநீ ஈண்டிகழ்ந் தமையால்
பொறுப்பன் அல்லன்யான் நுதல்விழித் தீயிடைப் பொடிப்ப
வறுப்பன் என்றனன் இகழ்வினுக் காருளம் மறுகார்.

(அ-ரை.) குறிப்பில் - குறிப்பாக, வெளிப்படை - வெளியாகத் தெரியும்படி. வெறுப்பு - வெறுக்கத்தக்கன. நுதல் விழித் தீயிடை-நெற்றிக்கண் நெருப்பிடத்தில். பொடிப்ப-சாம்பலாகும்படி. வறுப்பன்-வருத்திவிடுவேன் உளம் மறுகார்-மனம் வருந்தார். (௪க)

### அல்லமர் மீண்டும் சித்தராமையரை இகழ்தல்

தன்னைக் கொல்லினும் தான்பிறி தொன்றினைக் கோறல்
பன்னிற் பாவமென் றறைகுவர் கற்றுணர் பழையோர்
நின்னைச் சொல்லிய அறத்தினை நிந்தையென் றெண்ணி
என்னைக் கொல்லுவன் என்றநீ அறவனே என்று.

(அ - ரை.) கோறல்-கொலைசெய்தல். பன்னில் - கூறுமிடத்து. கற்றுணர் பழையோர் - கற்றுணர்ந்த பெரியோர்கள். நின்னைச் சொல்லிய அறத்தினை - உனக்குக் கூறிய அறநெறிகளை. அறவனே- அறவழியில் நிற்பவனே. (சஉ)

### இதுவும் அது

சாத னங்களுள் நீறுமுந் தியதென்பர் சாற்றும்
மாத வங்களுள் உயிர்செகா மையுமற்று மதிப்பில்
பாத கங்களிற் கொலைசிறந் தன்றெனப் பார்த்து
நீதெ ரிந்திலை அரக்கனே என்றனன் நிமலன்.

(அ - ரை.) சாதனங்களுள் - வீடுபேற்றிற்குரிய வழிகளுள். சாற்றும் - சொல்லும். உயிர் செகாமையும் - உயிர்களைக் கொலை புரியாதிருத்தலும். அற்று-அம் முதன்மை போலச் சிறந்தது. பாதகங் களில் - தீமைகளில். சிறந்தன்று என - சிறந்தது என்று. பார்த்தும்- அறநெறி நூல்களைப் படித்தும். அரக்கனே - இரக்கமில்லாதவனே! "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு" என்பதுங் காண்க 'நுதல்விழித் தீயிடைப் பொடிப்ப வறுப்பன்' என்று சித்தராமையர் கூறினமையின் அல்லமதேவர் இவ்வாறு கூறினார். (சங)

### சித்தராமையர் நெற்றிக்கண்ணைத் திறத்தல்

செருக்கொ ழிந்திலை என்னதிர் செவிசுடு தீச்சொல்
உரைத்து நின்றனை உனைவிடு கிலனென உறுத்து
நெருப்பெ னுந்திரு நுதல்விழி திறந்தனன் நினைத்து
மரிப்பி னுந்தரு வேனுயிர் என்றிரா மன்றான்.

(அ - ரை.) உரைத்து நின்றனை-சொல்லிக்கொண்டிருக்கின்றாய். விடுகிலன் - சும்மா விடமாட்டேன். உறுத்து - சினந்து. நுதல் விழி - நெற்றிக்கண். மரிப்பினும் - இறந்தாலும். (சச)

### சித்தராமையரின் நெற்றித் தீ அல்லமர் அடி பணிதல்

நெற்றித் தீவழி காமனை நீற்றுவ தன்றிப்
பற்றிக் காமமில் யோகியைப் படுத்திட வற்றோ
செற்றத் தான்நுதல் விழியழல் அல்லம தேவன்
வெற்றித் தாள்மலர்க் கீழ்ச்சென்று பணிந்தது விரைந்து.

(அ - ரை.) நீற்றுவதன்றி - எரிப்பதல்லாமல். படுத்திடவற்றோ - அழிக்கக்கூடியதோ. செற்றத்தான் - சினத்தையுடைய சித்தராமன். தாள்மலர் - அடியாகிய தாமரை மலர். பணிந்தது - வணங்கிற்று. ()

### சித்தராமனின் நெற்றித் தீ சொன்னலாபுரத்தைப் பற்றல்

பணிந்து மீளுமவ் வழலொரு வீரன்மேற் பாயத்
துணிந்து போயவன் ஆற்றல்கண் டுளவலி தொலைந்து
தணிந்து பேடிமேற் செல்லுமா றலைவன சரன்போல்
அணைந்தி ராமன்வாழ் நகரினிற் பற்றிய தன்றே.

(அ - ரை.) அவ்வழல் - நெற்றித் தீ. பேடிமேல் - ஆண்மையில்லாதவன் மேல். அலை - அலைந்து திரிகிற. வனசரன் - வேடன். அணைந்து - சேர்ந்து. நகரினில் - சொன்னலாபுரத்தில். (௬௬)

### நகரத்தின்மேல் பற்றி அழித்தல்

கங்கை வார்சடைக் கறைமிடற் றிறைநகைக் கனல்போய்த்
துங்க மாமதில் சூழ்தரு புரத்தினைச் சுடல்போல்
எங்கள் நாயகன் மேல்விடும இராமன்நல் நுதற்கண்
அங்கி போகியந் நகரினைச் சுட்டதை அன்றே.

(அ - ரை.) கறை மிடற்று இறை - நஞ்சு தங்கிய கண்டத்தையுடைய சிவன். துங்கம் - உயர்வு. புரத்தினை - மூப்புரங்களை. அங்கி - தீ. சுட்டதை - சுட்டது: ஐ - சாரியை. (௬௭)

### நகரில் யாவும் எரிய, கண்டவர்கள் வயிறும் எரிதல்

அணியெ ரிந்தன மென்துகில் எரிந்தன ஆரத்
துணியெ ரிந்தன கலவைகள் எரிந்தன சுதையின்
பணியெ ரிந்தன மனைவளம் எரிந்தன பகரும்
மணியெ ரிந்தன எரிந்தன கண்டவர் வயிறு.

(அ - ரை.) அணி - அணிகலன்கள். மென் துகில் - மெல்லிய ஆடை. ஆரத்துணி - சந்தனக்கட்டைகள். கலவைகள் - நறுமணம்

பொருள்கள். சுதையின் பணி - சுண்ணும்பாற் செய்த சுவரின் ஓவிய வேலைப்பாடுகள். மனைவளம் - மனைக்குள் உள்ள பண்டம். மணி எரிந்தன - உயர்ந்த மதிப்புள்ள மணிகள் எரிந்தன. (சஅ)

தீயிடை அகப்பட்டுக்கொண்டவர்களின் செயல்கள்

சேயெ டுப்பவர் விருத்தரை ஈர்ப்பவர் சேமம்
போயெ டுப்பவர் புகவரி தாகிமண் புரண்டு
வாய டிப்பவர் மனையெரி அவிப்பவர் மறுகிப்
பாய லைக்கடல் எனவழு திரங்கினர் பதைத்து.

(அ - ரை.) சேய் - குழந்தை. விருத்தர் - மூதியவர். எடுப்பவர் - தூக்கிச் செல்வோர். ஈர்ப்பவர் - இழுத்துச் செல்வோர் சேமம் - சேர்த்து வைத்த பொருள். புக அரிதாகி - நுழைய முடியாமற் போய். வாய் அடிப்பவர் - வாயில் அடித்துக்கொள்வோர். பாய் அலைக்கடல் - பாய் கின்ற அலையையுடைய கடல். இரங்கினர் - வருந்தினர். (சக)

அத்தீயால் விண்ணுலகத்துக் கங்கையுங் கொதித்தல்

உதித்த ஞாயிறு போன்றுசெம் மணியினம் ஒளிரப்
பதித்த மாளிகை மீதுபற் றியவழற் கொழுந்தால்
கதிர்த்த ஆடகச் செங்கம லத்துவான் கங்கை
கொதித்த தாயிடைக் கொதிபொரு தன்னங்கள் குழைய.

(அ - ரை.) ஒளிர - விளங்க. கதிர்த்த - ஒளி வீசுதலைச் செய் கின்ற. ஆடகச் செங்கமலத்து - பொன்போல் விளங்கும் செந்தா மரையையுடைய. வானுலகக் கங்கையில் வாழும் அன்னங்கள் கொதி பொருது வருந்தக் கங்கை கொதித்தது என்க. (ஙo)

அல்லமதேவர் தீயினை அகற்றுதல்

அன்ன காலையில் அருட்கடல் அல்லம தேவன்
சொன்ன லாபுரத் தவர்துயர் அனைத்தையுந் தொலைப்ப
உன்னி ஓர்விழி அழலினை இமைப்பினில் ஒழித்தான்
முன்னம் ஆலமுண் டமரரைக் காத்தருள் முறைபோல்.

(அ - ரை.) அன்ன காலையில் - அந்த வேளையில். உன்னி - எண்ணி. ஓர் விழி - ஒரு கண்; நெற்றிக் கண்ணுதலின், 'ஓர் விழி' என்றார். இமைப்பினில் - கண்ணிமைப் பொழுதளவில்; மிக விரைவில். முன்னம் - முற்காலத்தில். ஆலம் - ஆலகால நஞ்சு. அமரரை - தேவரை. இறைவன் திருப்பாற்கடல் கடைந்தபோது உண்டாகிய பெரு நஞ்சை உண்டு தேவர்களைக் காத்த முறைபோல் அல்லமரும் சொன்னலாபுர மக்களை அந்நெருப்பையொழித்துக் காத்தனரென்க. ()

### தீப்பற்றிய சொன்னலாபுரம் முன்னையினும் சிறந்திருத்தல்

எந்தை அல்லமன் அருளினுல் நுதல்விழி எரியால்
வெந்த அந்நகர் பண்டையின் மும்மடி விளக்கம்
வந்த பல்வள மொடுசிறந் ததுநரர் மகிழ
உந்து வெவ்வழல் இடைவெந்த ஆடகம் ஒத்து.

(அ - ரை.) பண்டையின் - பழைய நிலைமையைப் பார்க்கினும். மும்மடி - மூன்று பங்கு. விளக்கம் வந்த - ஒளி வந்த. நரர் - அந்நகரத்து மக்கள். உந்து - மிகுந்த. ஆடகம் - பொன்; பொன்னை நெருப்பிலிட்டுப் புடம் போடப்போட ஒளி மிகுதல் போல, அந்நகரமும் முன்னையினும் சிறந்து மேம்பட்டதென்று கொள்க. (௧௨)

### அந்நகர மக்களின் பன்னரு மகிழ்ச்சி

ஒருத்தன் வந்தவா றுக்கிய பொற்பணி ஒன்றைத்
திருத்த வல்லவன் அழித்ததைச் சிறந்திடச் செயல்போல்
புரத்தை நன்றுற அல்லமன் புரிதலும் புரத்தோர்
கருத்தில் வந்தெழுந் தோங்கிய தார்வமா கடலே.

(அ - ரை.) வந்தவாறு - உள்ளம் போனபடி. பொற்பணி - பொன் நகை. திருத்தவல்லவன் - செம்மை பெற ஆக்கும் திறமையோன் புரத்தோர் - நகர மக்கள். கருத்தில் - மனத்தில். ஆர்வ மா கடல் - இன்பப் பெருக்கு. (௧௩)

### சித்தராமையர் செருக்கழிந்து எண்ணுதல்

ஒருகண் ஆற்றல்போய் ஒழிந்திட வலியுறும் இராமன்
இருக ணுளுங்கண் டுளச்செருக் கென்பதொன் றின்றிப்
பெருகு நாணெனும் புனல்கொளப் பேரழல் விழுந்து
கருகு நாள்மலர் எனமுகங் கரிந்திது கருதும்.

(அ - ரை.) இருகண்-தன் இருவிழிகள் உளச் செருக்கு-ஆணவம். பெருகுநாண் - மிகுந்த நாணம் புனல் - நீர். கருகு-தீய்ந்து போகின்ற. நாள் மலர் - அன்றலர்ந்த செந்தாமரைப்பூ. (௧௪)

### இறைவனே ஆட்கொள வந்தானெனச் சித்தராமையர் கருதல்

(வேறு)

என்றெரு நுதல்வி ழித்தீ இவன்தனை இறைஞ்ச லாலே
தன்னருள் அதனுல் என்னைத் தடுத்துவந் தான வேண்டிப்
பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலை மடந்தை பாகன்
இந்நில வரைப்பிற் கோலம் இதுகொடு வந்தான் என்று.

(அ - ரை.) இறைஞ்சல் - பணிதல். பொன் அவிர் சுணங்கு பூத்த - பொன்போல் விளங்குகின்ற தேமல் படர்ந்த. வரைப்பு - எல்லை. கோலம் - வடிவம். (௧௫)

அல்லமரைச் சித்தராமையர் பணிந்து வேண்டுதல்

தீயனேன் அறிவி லாபற் செய்பிழை பொறுத்தாட் கோடி
பேயனுன் ஒருவன் செய்த பிழையினை அவனை ஈன்ற
தாயலாற் பொறுப்பார் யாவர் தாணுவே என்றி ராமன்
போயெனுர் அமுதின் செந்தாட் போதினைப் பற்றி வீழ்ந்தான்.

(அ - ரை.) ஆட்கோடி - ஆட்கொள்ளுவாயாக. தாணுவே - கடவுளே. ஆர் அமுதின் - நிறைந்த அமுதத்தை ஒத்தவனது. தாள் போது - திருவடி மலர். பற்றி வீழ்ந்தான் - பிடித்துக்கொண்டு வணங்கினுன். (௧௬)

அல்லமர் சித்தராமையரின் பிழைபொறுக்க எண்ணல்

தன்னினம் ஆமி ராமன் சரண்புகில் அவன்செய் தீமை
உன்னுவன் அலனெங் கோமான் உடன்றுவந் திலங்கை காக்கும்
மன்னவன் கவின்கூர் வெள்ளி மலையெடுத் தலைத்து வந்து
பின்னவன் வணங்கி நிற்பப் பிழையுளங் கொண்ட துண்டோ.

(அ - ரை.) தன் இனம் - தன்னுடைய அன்பன் ; தனக்கு ஒத்த பண்புடையனுதல் கருதி 'இனம்' எனருர். சரண் - அடைக்கலம். உன்னுவன் அலன் - நினையான் கவின்கூர் - அழகு பொருந்திய. பின்னவன் - இராவணன் பண்டறி சுட்டாய் ஈண்டுப் பின்னவனென்றது, இராவணனை உணர்த்திற்று. (௧௭)

அல்லமர், சித்தராமரைப் பார்த்து வெகுளியை நீக்கக் கூறல்

செய்யதாள் மலரின் வீழ்ந்த சித்தனை அருளால் நோக்கி
ஐயநீ எழுக நெஞ்சில் அஞ்சலை என்று கூறிக்
கையினுல் எடுத்த ணைத்துக் கல்வியும் தவமும் மாய்க்கும்
வெய்யதாம் வெகுளி தன்னை விட்டிடென் றறந்தை சொல்வான்.

(அ - ரை.) செய்ய - சிவந்த. அஞ்சலை - அச்சப்படாதே. மாய்க்கும் - அழிக்கும். வெய்யது - கொடுமையானது. வெகுளி - சினம். (௧௮)

மெலியோர் மேலெழும் வெகுளியே காத்தற்குரியது எனல்

வலியவன் இடத்தும் ஒத்தான் மாட்டினும் வெகுளி காத்தல்
பொலிவுசெய் அறம தென்னப் பொருந்துரு தனையர் தம்பால்
நலிவுறு வெகுளி செல்லா தாதலால் நலியல் ஆற்ரு
மெலியவன் இடத்திற் காக்கும் வெகுளியே அறம தென்பர்.

(அ - ரை.) ஒத்தான் மாட்டினும் - தனக்கு ஒப்பானவனிடத்திலும். பொலிவு செய் - மேன்மையைச் செய்கிற. பொருந்துறாது - அமையாது. நலியல் ஆற்றா-தன்னால் பகைவனை வருத்துதல் இயலாத. "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக், காக்கினென் காவாக்காலென்' என்பது திருக்குறள். எனவே மெலியாரிடம் சினங்கொள்ளலாகாதென அறிவித்தவாறும். (௩௯)

வீடுபேற்றினைக்கண்ட மெய்யறிவாளன் இத்தன்மையன் எனல்

வைதவன் தன்னை நன்று வாழ்த்தினன் எனவும் தீய
செய்தவன் தன்னை நல்ல செய்தவன் எனவும் கொள்வோன்
கைதவம் அகன்ற முத்தி கண்டவன் அவ்வா றுன்னுன்
பொய்தவன் என்ப தென்று புகன்றனர் புலவர் அன்றே.

(அ-ரை.) கைதவம் அகன்ற-தீமை நீங்கிய. முத்தி கண்டவன்- வீடு பேற்றையடைதற்குத் தக்கவன். உன்னுன் - எண்ணுதவன். தவன் - தவத்தையுடையவன். என்பது - என்று கூறுவது. பொய் - பொய்யாம். என்று புலவர் புகன்றனர் எனக் கூட்டுக. (௪0)

எவரிடத்தும் வெகுளி கூடாதெனல்

பெரியவர் தம்மைக் காய்ந்தான் பிறங்கல்கல் லியகோல் ஒப்பான்
புரிவன புரியப் பட்டுப் புலம்புவன் ஒத்தார்க் காய்ந்தான்
எரிநர கதனில் வீழ்வன் இழிந்தவர்க் காய்ந்தான் என்றால்
ஒருவர்தம் இடத்தும் சீற்றம் உறுமையே நன்று மாதோ.

(அ - ரை.) பிறங்கல் கல்லிய - மலையைத் தோண்டிய. புரிவன புரியப்பட்டு - செய்யப்பெறவேண்டிய தீமைகளெல்லாம் செய்யப்பெற்று. இழிந்தவர்க் காய்ந்தான் - எளியவர்களைச் சினந்தவன். சீற்றம் - சினம். (௪௧)

தவத்தினர் வெகுளியை விடுதல் நன்றெனல்

யாவர்க்கும் ஒப்ப நன்றும் என்னினும் சினமி லாமை
மூவர்க்கும் அரிய செய்யும் முனிவர்க்குஞ் சிறந்த தென்று
தேவர்க்கும் அரிய இன்பம் சித்தரா மப்பேர் அண்ணல்
மேவற்கு வடிவங் கொண்டு மேவிய விமலன் சொன்னுன்.

(அ - ரை.) மூவர்க்கும்-அரன், அரி, அயன் என்னும் முப்பெருங் கடவுளர்கட்கும். முனிவர் - முற்றத் துறந்தவர். அண்ணல்-பெருமை பொருந்தியவன். விமலன் - தூயவனுகிய அல்லமன். (௪௨)

சிறியேனை ஆட்கொண்டது சிறந்ததெனச் சித்தராமையர் கூறல்

அல்லமன் அறைந்த மாற்றம் அறிந்துநஞ் சித்தராமன்
சொல்லுவன் முத்தி எய்தும் துணையசா தனங்கள் எல்லாம்
இல்லையன் னிடத்தி லேனும் என்னைநீ வலிந்தாட் கொள்ள
நல்லவன் ஆகச் செய்த நன்மையே நன்மை என்று.

(அ - ரை.) அறைந்த மாற்றம் - கூறிய மொழி. துணைய சாதனங்கள் - துணைக்கருவிகள். வலிந்து ஆட்கொள்ள - வலிய வந்து அடிமை கொள்ள. (கக)

இதுவும் அது

கருத்தழி கடமி றங்கு கவுட்கரி வலிந்து பற்றித்
திருத்துபு தன்கால் ஏவும் செயல்செயக் கொள்வ தன்றி
ஒருத்தல்வந் தறிந்து தானே உறவுகொண் டிடுவ துண்டோ
தெரித்திடில் அடிய னேனின் திருவடிக் கத்தி றத்தேன்.

(அ - ரை) கருத்து அழி - கருத்தினை அழியச் செய்கிற. கடம் இறங்கு - மதநீரைப் பொழிகின்ற. கவுள் கரி - கன்னத்தையுடைய யானை. திருத்துபு-திருத்தி. ஒருத்தல்-யானை. தெரித்திடில்-தெரிவிக்கும் போது. அத்திறத்தேன் - அத் தன்மையை உடையவன். (கஉ)

இதுவும் அது

அடல்மலி வீரன் வீரம் அவனெதிர் மலைந்து நின்றோன்
படைமிசை கொண்டு காணப் படுமது போல உன்றன்
கடல்மலி அருளின் ஆற்றல் கண்டிடப் படுமிங் கென்றன்
கொடுமையின் மிகையால் என்று குடந்தம்பட் டழுங்கிக் கூறி.

(அ - ரை.) அடல்மலி - வலிமை மிகுந்த. மலைந்து நின்றோன் - எதிர்த்து நின்றோன். படைமிசை-சேனையின் மேல். கடல்மலி-கடல் போல் மிகுந்த. கொடுமையின் மிகையால்-தீய செய்கைகளின் மிகுதியால். குடந்தம்பட்டு - வழிபட்டு. அழுங்கி - வருந்தி. ஒரு போர் மறவனுடைய வலிமை அவனை யெதிர்த்து நிற்கும் படைப்பெருக்கின் வன்மையாற் காணப்பெறுதல் போல, என் தீமையின் மிகுதியால் உன் அருளின் பெருமை காணப்படும் என்றார் என்க. (கங)

சித்தராமையர் வீடுபேற்றிற்கு வழிகாட்ட வேண்டுமெனல்

என்குறை நிலை யாதெந்தாய் இனித்திரு வுளமி ரங்கி
நன்குறு முத்தி சேரும் நன்னெறி காட்டு கென்று
தன்குறை இரந்து நைந்து தனைநிகர் சித்த ராமன்
முன்கரை இறந்த அன்பான் முதல்வனை வணங்கி னுனல்.

(அ - ரை.) நன்கு உறும் - நன்மை மிக்க. முத்தி - வீடுபேறு. உளைந்து - மனம் நெகிழ்ந்து வருந்தி. கரை இறந்த அன்பால்-எல்லை கடந்த அன்பால். (கசு)

அல்லமதேவர் சித்தராமையருக்கு அருளுரை கூறத்தொடங்கல்

வணங்கிய அவனை ஞானவாரிதி அருளால் நோக்கி
இணங்கிய பருவங் காணும் இவன்தனக் கின்ப முத்தி
அணைந்திடு நெறியி தென்ன அறைவமென் றுளத்துட் கொண்டு
பிணங்குறு பிறவி என்னும் பிணிமருந் தனையான் சொல்வான்.

(அ - ரை.) ஞானவாரிதி - அறிவுக் கடல். இணங்கிய பருவம் காணும்-வீடுபேற்றிற் தத் தகுதியான தன்மை பொருந்தப்பெற்றுள்ள. அணைந்திடும்-பொருந்துகின்ற. பிணங்குறு - தொல்லையைச் செய்கிற. பிணி நோய். (கஎ)

பொருளுக்காக மெய்ப்பொருளை உரைப்போன் பதர் எனல்

பருவமுற் றிலர்க்கு முக்கட் பகவனு கமத்தின் உண்மைப்
பெருமையைப் பொருளை எண்ணிப் பெருமிதத் துரைப்பில் அன்னான்
குரவரிற் பதடி என்ப குறித்துநற் பருவ நோக்கி
அருள்செயிற் குரவர் சிங்கம் அவனெனு அறைவன் ஐயன்.

(அ - ரை.) பருவம் உற்றிலர்க்கு - வீடுபேறடையத் தக்க தகுதி அற்றவர்களுக்கு. பெருமிதத்து - பெருமையாக. குரவர் - ஞானாசிரியர். பதடி - பயனற்றவன். அறைவான் - கூறுவான். (கஅ)

வீடுபேற்றிற்கு மெய்யறிவொன்றே காரணம் எனல்

உரைசெயிற் பரம ஞானம் ஒன்றுமே முத்திக் கேது
சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது என்று மறைபுகன் றுரைக்கும இந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவர் அன்றே.

(அ - ரை.) பரம ஞானம் - உயர்ந்த உண்மையறிவு. இந்தக் கருவியை - மெய்யறிவுக்குத் துணையாகவுள்ள சரியை முதலிய துணைக் கருவிகளை. பொருள் என்று-சிறந்த பொருள்களென்று. களிப்பவர்-மகிழ்வோர். கயவர் - கீழ் மக்கள். (கக)

கருமமும் யோகமும் கரணத்தைப் புனிதமாக்கும் எனல்

கருமமும் யோகந் தானும் கரணத்தைப் புனிதம் ஆக்கிப்
பொருமிடர் வாயில் தோறும் புக்குழல் கறங்கு போலத்
தெருமரா துன்னி றுத்துத் தெளிந்தவக் கரணம் தன்னால்
நிருமலன் ஆகும் ஈசன் நித்தனென் றுணர்வு திக்கும்.

(அ - ரை.) கரணத்தைப் புனிதமாக்கி-உள்ளத்தைத் தூய்மைப் படுத்தி. பொரும் இடர்வாயில் தோறும்-வருத்துகின்ற துன்பத்தன்மை யுள்ள வழிகளிலெல்லாம். உழல் கறங்கு போல - அலையுங் காற்றாடி போல. தெருமராது - சுழலாது. கருமயோகங்கள் உள்ளத் தூய்மைப் படுத்தலால் உள்ளம் அலையாது ஒரு வழியில் நிற்கும்; அதனால் இறைவன் என்று முள்ளவன் என்னும் நல்லுணர்வு தோன்றும் என்க.

இறைவனை நினைதலால் குருவருள் பெற்று உண்மையுணர்வன்

நித்தியன் நிமலன் என்னும் நினைவுறின் அனித்தம் ஆகிப்
பொய்த்தழி உடம்பு டமைப் பொருந்திய பொருள்வெ றுத்து
மெய்த்தருள் குரவன் தன்னை விரும்பினன் சென்று சார்ந்து
தத்துவம் உதறி நின்ற தனியறி வினையே காணும்.

(அ - ரை.) நினைவு உறின் - நினைவு தோன்றினால். மெய்த்தருள் - உண்மையை விளக்கும். தத்துவம் உதறி நின்று-தத்துவ மனைத்தையும் தள்ளி நின்று. தனி அறிவு - ஒப்பற்ற மெய்யுணர்வு. காணும் - கண்டு கொண்டிருப்பான். (எக)

புலன்களை ஒழித்தால் மற்றவை தாமே விலகும் எனல்

புலன்களை ஒழிந்த போதே பொறிகளும் பூதம் ஐந்தும்
கலங்குறு கரண நான்கும் கலாதியும் சுத்தம் ஐந்தும்
விலங்குறும் அடியில் வைத்த வெறுங்குடம் தன்னின் மேல்மேல்
மலங்குற ஒருங்க டுக்கு மட்கலம் விழுத லேபோல்.

(அ - ரை.) புலன் ஐவகை அறிவு. பொறி-ஐவகைப்பொறிகள்: ஐம்புலன்களையும் ஒழித்தால், அடுக்குப் பானைகளில் அடியிலுள்ள பானையை யிழுக்க மற்றைப் பானைகள் தாமே வீழ்தல் போலப், பொறி, பூதம், கரணம், கலை, சுத்தம் முதலிய தத்துவங்கள் தாமே ஒழியும் என்க. (எஉ)

மனம் இறந்தால் மற்றவைகளெல்லாம் மாளும்

இந்தியம் ஒரோன் றுய்விட் டிடின்மற்றை ஒன்று சாரும்
முந்திய மனம் அழிப்ப முற்றும்போம் மணிய பாம்பின்
ஐந்தலை களினுள் ஒன்றை அரிந்திடின் மற்றொன் றாலம்
சிந்திடும் மிடற ரிந்தால் தீர்ந்திடும் ஒருங்கு மாதோ.

(அ - ரை.) இந்தியம் - ஐம்பொறிகளையும். மற்றை ஒன்று - வேறொரு பொறி. மணிய-மாணிக்க மணியையுடைய. ஆலம் - நஞ்சு. மிடறு அரிந்தால்-கழுத்தையரிந்தால். மெய், வாய், கண், மூக்கு, செவி

என்னும் ஐம்பொறிகளின் வழியாகச் செல்லும் ஐவகை ஆசைகளையும் ஒருவன் ஒவ்வொன்றாக விடவொழிக்க முற்பட்டால் மற்றொன்று பற்றி நிற்கும். மனத்தை மட்டும் புலன் வழி செல்லாது கெடுத்தால் எந்தப் பற்றும் வாராது எனக் கூறியவாறும். (எக)

சித்தராமையருக்கு அருள் புரிதல்

ஆதலான் மனம டங்கில் அங்கலிங் கங்கள் தம்முள்
பேதமோ அபேத மோவென் றழிவுறு பித்து நீங்கும்
தீதிலாய் என்றி யம்பிச் சித்தரா மற்கு நாவால்
ஓதொணா உணர்வின் உண்மை உணர்த்தினன் குருகு கேசன்.

(அ - ரை.) அங்கலிங்கம் - உடலும் உயிரும். அழிவுறு பித்து நீங்கும் - கெட்டுப்போகின்ற மயக்கம் நீங்கும். தீது இலாய் - குற்ற மற்றவனே! நாவால் - நாவினால். ஓத ஒண்ணா - சொல்லற்கேலாத. உணர்வின் உண்மை - மெய்யறிவு. (எச)

பெரும் பேறுபெற்றேன் என்று சித்தராமையர் மகிழல்

பனிதருள் உரகர் சித்தர் வானவர் கணங்கள் தம்முள்
முனிவருள் என்போல் நின்றன் முழுதருள் பெற்றார் இல்லை
இனியெனை நிகர்வார் யாவர் என்றருட் குரவனார்தம்
பனிமலர் அடியில் வீழ்ந்து பணிந்தனன் சித்த ராமன்.

(அ - ரை.) உரகர் - நாகர் உலகத்தார் வானவர்கணம் - தேவர் கூட்டம். பனிமலர் அடி - குளிர்ச்சி பொருந்திய தாமரை மலர் போன்ற அடி. (எஙி)

அல்லமதேவர் சொன்னலாபுரத்தில் எழுந்தருளியிருத்தல்

இப்பரி சருளி னாலே இராமனுக் குபதே சித்துச்
செப்பரும் அவன்குற் றேவல் செய்யிய உளம கிழ்ந்து
கைப்படும் அமிர்தம் அன்ன கருணைவா ரிதியி ருந்தான்
துப்புர வமைந்து சீர்சால் சொன்னலா புரத்து மாதோ.

(அ - ரை.) இப்பரிசு - இவ்வாறு. குற்றேவல்-சிறு பணிவிடை. செய்யிய - செய்தற்பொருட்டு; வினையெச்சம். கைப்படும் - கையில் கிடைத்த. துப்புரவு அமைந்து-தூய்மை பொருந்தி. சீர்சால்-சிறப்புப் பொருந்திய. (எ௬)

பதின்மூன்றாவது சித்தராமையர் கதி முடிந்தது

கதி கங - க்குச் செய்யுள் - எஉங.

———

## கசு. வசவண்ணர் கதி

[இக்கதிக்கண், அல்லமதேவர் சித்தராமையருடன் சொன்னலாபுரத்தில் எழுந்தருளியிருக்குங்கால் வசவண்ணருடைய புகழ் யாண்டும் பரவுகின்றது. வசவண்ணரைச் சித்தராமையருக்குக் காட்ட அல்லமதேவர் எண்ணுகிறார். சித்தராமையரையும் உடனழைத்துக் கொண்டு கலியாணபுரத்தை நோக்கி வருகிறார். கலியாணபுரத்தை நோக்கி அடியவர் திருக்கூட்டஞ் செல்லுதலைக் கண்டு இருவரும் மகிழ்ச்சியடைகின்றனர். சித்தராமையருக்கு அல்லமதேவர் கலியாணபுர வளத்தினைத் தனித்தனியே யெடுத்துக் கூறுகிறார். பொழில் வயல் முதலிய பலவிடங்களையும் அவற்றின் சிறப்பையுந் தனித்தனியே எடுத்துக் கூறிச் செல்லுகிறார். இறுதியில் இருவரும் வசவருடைய வீட்டு முன்றிலையடைந்து நிற்கின்றனர். இவர்களுடைய வரவைக் கண்ட அப்பணதேவர் வசவண்ணர்க் குணர்த்துகின்றார். வசவண்ணர் இவர்களை உள்ளே அழைக்குமாறு அப்பணதேவருக்கு ஆணையிடுகிறார். அச்செய்தியை அப்பணதேவர் அல்லமதேவருக்குஞ் சித்தராமையருக்கும் அறிவிக்கிறார். வசவண்ணர் எதிர்வராமையைக் கண்ட அல்லமதேவர், 'அரசியல் நடத்துகிறவர்கள்பால், ஐயமேற்றுண்பவர் வருவது முறைறமையன்று, நீ செல்' என்று பணிக்கின்றார். இச்செய்தியை அப்பணதேவர் வசவண்ணரிடஞ் சென்று கூறுகிறார். அடியார்கள் திருக்கூட்டத்துடன் வசவண்ணர் விரைந்தோடி வந்து தம் பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகிறார் மாச்சிதேவன், கின்னரப் பிரமன், அடியார்கள் முதலியோரும் வசவண்ணர் பிழையைப் பொறுக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்கின்றனர். அல்லமதேவர் பொய்ம் முனிவு கொண்டு, 'நீங்கள் பேசுவதற்குக் கற்றிருக்கின்றீர்களே தவிரச் சொல்லுக்குத் தக்க நடத்தையைக் கற்கவில்லை. உங்களைப் பார்க்கினுங் கூத்தாடுந் தொழிலினர் சிறந்தவர்களாவர்' என்று கூறி, அன்பின் பெருமையை அவர்களுக்கு விரித்துரைக்கிறார் அடியார்களும் சித்தராமையரும் வசவண்ணர் பிழையைப் பொறுத்து அருள் புரியுமாறு வேண்டிக்கொள்கின்றனர். வசவண்ணர் தம் பிழையைப் பொறுத்தருள் புரியுமாறு மீண்டும் அல்லமதேவரைப் போற்றுகிறார் அல்லமதேவர் எல்லாருக்குந் திருவருள் செய்து அடியார்களோடு திருமடத்திற்கு எழுந்தருளினார் என்னுஞ் செய்திகள் விரித்துரைக்கப் பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

சித்த ராமனே டாரியன் அல்லம தேவன்
பத்த ராகிய பயிர்செய்கல் யாணமாம் பழனத்
துய்த்த நீரெனும் வசவனை உழவரிற் கண்டு
மெய்த்தும் ஆர்வமங் கடைந்தமை யாமினி விரிப்பாம்.

*(அ - ரை.) ஆரியன் - ஆசிரியன். செய் - விளைக்கின்ற பழனம்- வயல். உழவரில் - பயிரிடும் மக்களைப்போல. மெய்த்தும்-உண்மை யாகிய. ஆர்வம் - அன்பு. இஃது உருவக அணி.* (க)

### அல்லமதேவர் சொன்னலாபுரத்தில் இருத்தல்

அன்னம் மீனுடன் நிகழ்வறக் கொண்டமை யாமல்
செந்நெல் ஆர்வயல் தீப்பசி ஆற்றுபு சிறந்த
சொன்ன லாபுரம் தவஞ்செய்த தென்றுவான் துதிப்ப
என்னை யாளுடை அல்லமன் இருந்தருள் நாளில்.

*(அ - ரை.) நிகழ்வு அறக்கொண்டு - பொருந்துதலை மிகப் பெற்று. அமையாமல் - அமைந்து விடாமல். தீப்பசியாற்றுபு - அவற்றின் கொடிய பசியையும் நீக்கி. அன்னம், மீன் இவற்றின் நிகழ்வை மிகுதியாகக் கொண்டதன்றி அவற்றின் பசியையும் தணித்துச் சிறந்த செந்நெலார் வயலாற் சூழப்பெற்ற சொன்னலா புரம் என்க.* (உ)

### உலகத்தினர், வசவண்ணர் புகழையறிந்து மகிழ்தல்

சந்த மேவுகல் யாணமா நந்தனந் தன்னில்
நந்தி நாள்மலர்ப் புகழ்மண நயந்தசொல் வளியால்
வந்து காதெனும் நாசியிற் புகமிக மகிழ்ந்த
துந்து வார்திரைக் கருங்கடல் உடுத்தபே ருலகம்.

*(அ - ரை.) சந்தம் - அழகு. நந்தி. வசவண்ணர். சொல்வளி- மொழிக் காற்று. உந்து - மோதுகின்ற. உலகம் - உலகத்தினர்: இடவாகு பெயர்: உருவக அணி.* (௩)

### வசவண்ணர் புகழின் தன்மை

முக்கண் நாயகன் புகழெனும் மூரலுண் பதற்குத்
தக்க தீஞ்சுவைக் கறியெனச் சமைந்தது வசவன்
மிக்க வான்புகழ் அவற்றினை மாதவர் விரவித்
துய்க்கு நாவினில் துய்த்தனர் பவப்பசி தொலைய.

(அ - ரை.) மூரல் - சோறு. தீஞ்சுவை - இனிய சுவை விரவி - கலந்து. துய்க்கும் நாவினில் - உண்ணத்தக்க நாவினால். பவப் பசி தொலைய - பிறவியென்னும் பசி கெட. உருவக அணி. (௪)

சித்தராமையருக்கு வசவண்ணரைக் காட்ட முற்படல்

விலக்கும் உற்பவச் சித்தரா மற்றுமுன் விளம்பும்
இலக்க ணத்தினுக் கருணந்தி யெனுமிலக் கியத்தைக்
கலக்க மற்றறிந் திடுவதற் குதாரணங் காட்ட
மலக்க மற்றநம் அல்லமன் திருவுளம் வலித்தான்.

(அ - ரை.) உற்பவம் - பிறப்பு. இலக்கணத்தினுக்கு - மெய்யறிவு இலக்கணத்தினுக்கு. மலக்கம் அற்ற - மாறுபாட்டுணர்ச்சி இல்லாத. வலித்தான் - உறுதியாக எண்ணினான். (௫)

அல்லம தேவரும் சித்தராமையரும் புறப்படல்

அடிய வர்க்கெளி யானெனும் அவனெம தகத்தில்
குடியி ருக்குமவ் விராமனை உடன்கொடு குறிலோர்
நெடில் அடுத்தநல் நிரையென அந்நகர் நீங்கிக்
கொடி மதிற்கலி யாணமா நகர்வழிக் கொண்டான்.

(அ - ரை.) அவன் - அந்த அல்லமதேவன்: சுட்டுப்பெயர். அகம் - உள்ளம். உடன்கொடு - தன்னுடன் கூட அழைத்துக் கொண்டு. கொண்டு, கொடு என இடைக்குறைந்து நின்றது. குறில் - குற்றெழுத்து. நெடில் - நெட்டெழுத்து. நிரை என - நிரையசை என்று சொல்லுமாறு. குறிலும் நெடிலும் இணைந்து வரும் நிரையசையைப் போன்று இருவருஞ் சென்றனர். இரா என்பது குறில் நெடில் இணைந்து வந்த நிரையசை. முன்னாற் செல்லும் அல்லம தேவர் குறிலும் பின்னாற்செல்லும் சித்தராமையர் நெடிலும் போல் ஆவர் எனக் கொள்க. (௬)

சிவனடியார் கூட்டத்தைக் கண்டு இருவரும் மகிழ்தல்

நறும்ப முஞ்செறி தனியிடம் மொய்த்திட நண்ணும்
எறும்பொ ழுங்கென அரனடி யவர்திரள் எழுந்து
மறந்தும் வெஞ்சமண் குண்டரை, இணங்குறு வசவன்
உறும்பு ரம்புகல் இருவரும் கண்டுளம் உவந்தார்.

(அ - ரை.) நறும் - நல்ல. செறி - நிறைந்த. தனி இடம் - தனித்த விடம். நண்ணும் - சேர்கின்ற. எறும்பு ஒழுங்கு - எறும்பின் வரிசைப் போக்கு. இணங்குறு - பொருந்தாத. உறும் - உள்ள. (௭)

## அடியவர் வேண்டியன பெற்றுச் செல்லலைக் காணல்

தம்பி ரானருள் வசவனுக் கியவறச் சாலைக்
கும்ப வாசநீர் முதலிய வேண்டுவ கொண்டு
வம்பு லாமலர் வனத்தயர் வுயிர்த்துநல் வழிசேர்ந்
தெம்பி ரானடி யவர்திரள் ஏகுதல் கண்டார்.

*(அ - ரை.) ஆக்கிய-கட்டிய. அறச்சாலை-அறவிடுதி. கும்பவாச நீர் - குடத்திலுள்ள நறுமண நீர். வம்பு உலாம் மலர்-மணந்தங்கிய மலர். அயர்வுயிர்த்து - இளைப்பாறி. திரள் - கூட்டம். (அ)*

## இருவரும் கலியாணபுரம் சேர்தல்

பாண்டில் மாவளம் சிவிகையூர்ந் தேகுநர் பரிந்து
வேண்டு மாறுகொள் வேடத்தர் துறந்தவர் விரதர்
ஈண்டு மாறுகண் டுவந்துசென் றெழிலலங் கார
காண்டம் ஆமெனும் மங்கல புரத்தினைக் கண்டார்.

*(அ - ரை.) பாண்டில் - வண்டி. மாவளம் - சிறந்த செல்வம். சிவிகை - பல்லக்கு. ஊர்ந்து - ஏறிச் சென்று. பரிந்து - விரும்பி. வேடத்தர் - தவக்கோலம் கொண்டோர். விரதர் - நோன்பிருப்பவர். ஈண்டுமாறு கண்டு - நெருக்கத்துடன் செல்வத்தைப் பார்த்து. எழில்-அழகு. அலங்கார காண்டம் - அழகின் எல்லை. (க)*

## அல்லமர் கலியாணபுரச் சிறப்பைக் கூறல்

கண்டு செல்லுமப் போதிலந் நகர்வளம் கருத்தில்
கொண்ட அல்லமன் திருவுளம் மிகக்களி கூர்ந்து
பண்டை நல்லிசைப் புலவர்சொல் இராமனைப் பார்த்து
மண்டு பல்வளம் காட்டுவன் தனித்தனி வகுத்து.

*(அ - ரை.) பண்டை-பழங்காலம். நல் இசை-இறவாத புகழ். மண்டு - நெருங்கிய. பல்வளம் - பலவளம். தனித் தனி வகுத்து - தனித்தனியாகப் பிரித்து. (க0)*

## குளிர்ச்சி மிகுந்த பொழிலைக் காட்டுதல்

தனைவி ரும்பிவந் தடைந்தவர் தம்மைமுன் வெறுத்த
தினக ரன்கதிர் விரும்புறச் செய்தளித் திரள்கள்
நனிவி ருந்துணும் கடிமலர் சுமந்துபொன் னைகரார்
மனிவி ரும்புதண் பொழில்நிகழ் வதையெதிர் காணாய்.

(அ-ரை.) தினகரன் - ஞாயிறு; சூரியன். கதிர் - ஒளித்திரள். அளித் திரள்கள் - வண்டுக் கூட்டங்கள். கடிமலர் - மணம் பொருந்திய மலர். பொழில் - சோலை. வெய்யலால் வருந்திவந்தவர்கள் குளிரால் வருந்தி முன் வெறுத்து வந்த ஞாயிற்றையே விரும்பிச் செல்லுமாறு செய்யத்தக்க குளிர்ச்சி பொருந்தியது அப்பொழில் என்க. (கக)

வண்டுகள் திரிதலைக் காட்டுதல்

பூவி னோடுசெந் தேன்மழை ஒழிவறப் பொழியும்
காவி னோடுவள் இதழவிழ்ந் தொழுகுதேங் கமல
வாவி யோடுநல் இசைபயில் அஞ்சிறை வண்டு
பாவி னோடுவண் குழலெனத் திரிதலைப் பாராய்.

(அ-ரை.) கா-சோலை. வள் இதழ் - வளப்பந் தங்கிய இதழ். தேம்-தேன். கமலவாவி - தாமரைத் தடாகம். அம் சிறை - அழகிய சிறகு. ஓடு - ஓடுகின்ற: வினைத்தொகை. பாவின் ஓடு - துணி நெய்யப்பெறும் பாவினிடத்தில் ஓடுகிற. குழல் - மூங்கிற்குழல். வண்டானது காவுக்குங் குளத்திற்கும் ஓடுவது நெய்யும் பாவினிடத்திலே குழலானது அங்கும் இங்கும் ஓடுதலைப் போன்றது என்க. (கஉ)

கொக்குகள் மீன் கவர்தலைக் காட்டுதல்

கடிம லர்ப்பசுந் தேன்துளி பிலிற்றுபைங் காவைக்
குடியி ருக்குமவ் வளவெனாக் கொண்டுவெண் குருகு
மடிய டுத்தவர் எனவிருந் திளங்கயல் வரலும்
நொடியி னிற்கவர் தண்பணை மருதமும் நோக்காய்.

(அ-ரை.) கடிமலர் - மணமுள்ள பூ. பிலிற்று - சொரிகின்ற. குடி இருக்கும் அவ்வளவு - குடியிருத்தற்கு அமைந்த அழகிய வீடு. வெண்குருகு - வெள்ளைக் கொக்கு. மடி அடுத்தவர் - சோம்பல் கொண்டவர். இளங்கயல் - இளமையுள்ள கெண்டை மீன். நொடி - கைந்நொடிப்பொழுது. தண்பணை மருதம் - குளிர்ந்த வயல்களையுடைய மருத நிலம். கொக்கு நல்ல மீன் வருமளவும், வாளா இருந்து வந்த வுடன், துடுபெனப் பாய்ந்து கொத்துந் தன்மையதாகலான், 'நொடியினிற் கவர்' என்றார். (கங)

நெற்கதிர்கள் வளைந்துநிற்பதைக் காட்டுதல்

குதிரை யங்கதிர் மணிக்குட நீர்குடிப் பதுபோல்
அதிரி ளங்கமஞ் சூல்வளை தவழ்வயல் அணிநெல்
கதிர்வ ளைந்துசெந் தாமரை வாயுறக் கவிழ்ந்து
நுதிபொ ருந்திய அழகையும் ஐயநீ நோக்காய்.

(அ - ரை.) அம் கதிர்-அழகிய ஒளி. அதிர்-ஒலிக்கின்ற. இளம் கமம் சூல் வளை - இளமையும் நிறைந்த கருவுங் கொண்ட சங்குகள். நுதி-நுனி. கதிரின் வளைவு குதிரைத்தலை வளைவுக்கும், செந்தாமரை மலர் மணிக்குடத்திற்கும் ஒப்பாயின. (கா)

பொன் எயில் வட்டத்தைக் காட்டல்

இங்குத் தன்னுள்வாழ் பயிற்சியால் இறந்துயிர் போயும்
அங்குப் பொன்னெயில் வட்டத்துள் இருள்மனத் தமணர்
தங்கற் குன்னுமிப் பொன்னெயில் வட்டமும் சடைமேல்
கங்கைப் பெண்ணமர் பரனடிக் கன்பநீ காணுய்.

(அ - ரை.) பயிற்சி - பழக்கம். பொன் எயில் வட்டத்துள் - பொன் மதில் சூழ்ந்த வட்ட நிலத்தில். தங்கற்கு உன்னும் - தங்குதற்கு எண்ணுகிற. கங்கைப் பெண்-கங்காதேவி. பரன்-மேலானவனுகிய சிவபெருமான். (கஉ)

கோபுர வாயிற்படியைக் காட்டுதல்

திறந்து மூடுநின் நுதலிமை விழியெனச் சேர்ந்து
பிறந்து மாமணிக் கதவிரு புடையினும் பெற்றுச்
சிறந்த கோபுர வாய்தலும் மலர்மிசைத் தெய்வம்
பறந்து நாடிய முடியிறைக் கன்பநீ பாராய்.

(அ - ரை.) நுதல் இமை விழியென-நெற்றியிலுள்ள இமைக்கும் விழியைப் போல. பிறங்கு - விளங்குகிற. இருபுடையினும்-இரண்டு பக்கங்களிலும். வாய்தல்-வாசற்படி. மலர்மிசைத் தெய்வம்-செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகன். பறந்து நாடிய-(அன்ன வடிவு கொண்டு) வானிடமெல்லாம் பறந்து பறந்து சென்று தேடிய. இங்கே சிவபெருமானின் அடிமுடி தேடிய வரலாறு கூறப்பெறுகின்றது. சிவபெருமான் திருவடியைக் காண்பதற்கும் முடியைக் காண்பதற்கும் திருமாலும் நான்முகனும் சூளுறவு செய்துகொண்டு திருமால் பன்றியுருவெடுத்துப் பாதாள உலகம் வரை அகழ்ந்தும் திருவடியைக்காண வியலாது அலமந்தானெனவும், நான்முகன் அன்னப் பறவை உருவெடுத்து வானுலகங்களை யெல்லாம் கடந்து கடந்து தேடித் திருமுடியைக் காணுது அலமந்தானெனவும் கூறும் புராண வரலாறு கொண்டு, 'மலர்மிசைத் தெய்வம் பறந்து நாடிய முடியிறை' என்றார்.

'திருமாலும் பன்றியாய்ச் சென்றிடந்தும் காண்பரிய, உருநாம் அறிய' என மணிமொழிப் பெருமானுர் அடி தேடிய வரலாறும், 'மஞ்சூட்டகட்டு நெடுவான் முகடு துருவுமொரு மறையோதிமஞ் சலிக்க' எனக் குமரகுருபர அடிகளார் முடி தேடிய வரலாறும் அருளுமாற்றுல் தெளியலாம். (கஙு)

### திருத்தெருவின் சிறப்பைக் காட்டுதல்

இலங்கு நீறெனும் கவசமிட் டக்கமென் றியம்பும்
அலங்கல் வாகைவேய்ந் தஞ்செழுத் தத்திரம் அடுத்த
நலங்கொள் வீரராம் பத்தர்தம் மறுகண் நஸ்ளார்
கலங்கு பாசறை போன்றெதிர் நிகழ்வது காணாய்

(அ - ரை) இலங்கு - விளங்குகின்ற. கவசம் - மூடி. நீறு - திருநீறு; விபூதி. அக்கம் - கண்மணி (உருத்திராட்சம்) அலங்கல் வாகை - வெற்றி மாலை. அஞ்சு எழுத்து - திருவைந்தெழுத்து; பஞ்சாட்சரம். அத்திரம் - கணை. அடுத்த - பொருந்தியுள்ள. வீரர் ஆம் பத்தர் தம்மறுகு - வீர சைவ அடியார்கள் தெரு. நள்ளார் - பகைவர். கலங்கு - அஞ்சத்தக்க பாசறை - படை வீடு போருக்குச் சென்ற வீரர் பச்சிலைகளால் குடில் அமைத்துத் தங்கியிருப்பது பண்டு தொட்ட வழக்கம். பசுமை+அறை - பாசறை எனப்பட்டது. பசுமையான தழைகளால் அமைக்கப்பட்ட அறை என்பது பொருள்.

### மாளிகைக் கொடிகளைக் காட்டுதல்

கட்டு வார்சடைக் கண்ணுதல் பூசனைக் கருமம்
அட்டு மாதவர் தீம்பசி ஆற்றுறும் அறமுள்
இட்டு மேற்புறம் கண்டவர் கொடியன என்னப்
பட்டு மாளிகை பற்பல நிகழ்வன பாராய்.

(அ - ரை.) பூசனைக் கருமம் - பூசைத்தொழில். அடு - அடுத்த; செய்கின்ற. அட்டு என எதுகை நோக்கி டகரம் விரிந்தது. உள் ளிட்டு - நினைத்து. அறம் உள்ளிட்டு - அறத்தை நினைத்துக் கட்டப் பட்ட. மேல்புறம் - மேல் மாடி; உப்பரிகை. கண்டவர் - பார்த் தோர்க்கு. அக்கொடிகள் வெளிப் பார்வைக்குக் கொடிகள் என்று சொல்லுமாறு விளங்குகின்றன என்பது கருத்து. (கஅ)

### கிளிகளின் மயக்க உணர்வைக் கூறுதல்

பொறித்த வாழையின் கனியினைக் கடைத்தலை பொருந்தக்
குறித்தி டாதுண வெனக்கறித் தலகுநோய் கொண்டு
நிறுத்து வாழையின் கனியுமச் செய்கையாய் நினைந்து
கறித்தி டாதமர் செம்முகப் பசுங்கிளி காணாய்.

(அ - ரை.) பொறித்த வாழையின் - ஓவியமாகச் சுவரில் எழுதப் பட்ட வாழையின். கடைத்தலை பொருந்தக் குறித்திடாது - முற்றும் நன்றாகப் பாராமல். கறித்து - கடித்து. நிறுத்து வாழையின் - வாயில் களிலே நிறுத்தியுள்ள உண்மையான வாழை மரத்தின். அச் செய்கை

யாய் - அந்த ஓவியத்திற் கண்ட கனியின் தன்மை என. செம்முகம் - சிவந்த வாய். பசுங்கிளி - பச்சை நிறக் கிளி. செம்முகப் பசுங்கிளி; முரண் தொடை. (௧௯)

கிள்ளைகள், வசவண்ணர் புகழ் கூறலைக் காட்டல்

வள்ளல் நல்வச வன்புகழ் வாயினுல் வழுத்தா
தெள்ளும் வல்லைண் குண்டர்தம் பிறப்பினும் இழிப்பில்
புள்ளும் நல்லன எனஇளம் பூவையோ டிருந்து
கிள்ளை அவ்வச வன்புகழ் சொல்வது கேளாய்.

(அ - ரை.) வள்ளல்-அருளை வரையாதளிப்போன். வழுத்தாது-கூறாது. எள்ளும் - பழிக்கும். பிறப்பினும் - பிறவியைப் பார்க்கினும். இழிப்பில் - பழிப்பில்லாத. புள்ளும் - பறவைகளும். பூவை - நாகண வாய்ப்பறவை. கிள்ளை - கிளி. வசவன் - வசவண்ணர். (௨௦)

வசவண்ணர் மனைவாசலையடைதல்

என்று கூறியவ் விராமனை மகிழ்வுசெய் தின்ப
மன்றல் வீதியில் வசவநா யகன்திரு மனைமுன்
குன்று போலுயர் கோபுர வாய்தலைக் குறுகச்
சென்று மேவினன் எம்மையாள் அல்லம தேவன்.

(அ - ரை.) மன்றல் வீதியில் - மங்கலம் பொருந்திய தெருவில். குன்று - மலை. கோபுரம் - முன் முகப்பு. சென்று மேவினன்-போய்ச் சேர்ந்தான். எம்மை ஆள் - எங்களை ஆட்கொண்டருளிய. (௨௧)

வசவண்ணர் மனைமுன் மாதவர் குழாத்தைக் காணல்

தொடர்த்து லைக்கைவெண் மருப்புரற் காற்கருந் தோல்தோல்
உடுத்த மெய்ப்பரன் கொலைகுறித் தெடாமழு ஒப்ப
அடைத்த லைக்குறித் திடாதசெம் மணிக்கத வடுத்த
கடைத்த லைக்கண்மா தவர்குழாம் நெருங்குதல் கண்டார்.

(அ - ரை.) தொடர்த்தலைக்கை - நீண்ட புழையினையுடைய துதிக்கை. வெண்மருப்பு - வெள்ளை நிறத் தந்தம். தோல் தோல் - யானையின் மேலுரி, கொலை குறித்து எடா - கொலை செய்வதை முதன்மையாகக் கொண்டு தாங்காத. மழு - மழுப்படை. அடைத்தலை - சாத்திமூடுதலை. கடைத்தலை - வாசலிடம் முற்றும். மாதவர் குழாம் - அடியார் திருக்கூட்டம். இறைவன் மழுப்படை யேந்தியது கொலை புரிதலுக்கலாமை போன்று, வசவண்ணர் இல்ல வாயில் கதவு அமைந்தது அழகினுக்காக வேயன்றி மூடுதற்கு அல்லவென்க.

### அடியார்களின் பலவகைச் செயல்கள்

### (வேறு)

அறுசுவை அடிசில் உண்பான் அடைகுவார் அடிசில் உண்டு
மறுகிடை வருவார் சான்றோர் வைகிய இடங்கள் நாடிக்
கறியொடு மருவு சோற்றுக் காவடி சுமந்து செல்வார்
நறுமலர் சுமந்து தண்ட நாதன்பூ சனைக்குப் போவார்.

(அ - ரை.) உண்பான் - உண்பதற்கு: செயவென் எச்சம். அடிசில் உண்டு - உணவு உண்டு. வைகிய - தங்கிய. மருவு - பொருந்திய. காவடி - சோற்றுக் காவடியை. நறுமலர் - மணமுள்ள பூக்கள். தண்ட நாதன் : வசவர். பூசனை - வழிபாடு. (உக)

### பற்றற்றோரும் பற்றுற்றோரும்

செஞ்சரண் இறைஞ்சி நல்கும் செழுந்துகில் கிழித்துக் கீள்கொண்
டெஞ்சிய மிகையென் றெண்ணி இட்டவண் அகன்று போவார்
அஞ்சுடர் மணிப்ப சும்பொன் அணிதுகில் அலங்கல் சாந்தம்
வஞ்சியர் தமக்க ளிப்பத் தருகென வாங்கிச் செல்வார்.

(அ - ரை.) செம்சரண் - சிவந்த அடிகள். இறைஞ்சி - வணங்கி. கீள் - கோவணம். எஞ்சிய - மீந்தவை; மிச்சமாக இருப்பவை. மிகை - மிகுதி. அவண் - அவ்விடம். அணி - அணிகலம். துகில் - மெல்லிய ஆடை. அலங்கல் - பூமாலை. சாந்தம் - சந்தனம். வஞ்சியர் - வஞ்சிக் கொடி போன்ற பெண்கள். (உௗ)

### வசவண்ணரை அடியார்கள் காணும் காரணங்கள்

நிந்தைசெய் தெமையே தீர்ந்த நெறியில்புன் சமணர் தங்கள்
மைந்தினை அறியச் சொல்வம் வசவனுக் கென்று செல்வார்
நந்தியை வணங்க வேறு நகர்தொறு நின்று போந்து
சிந்துரம் வயமா அம்பொற் சிவிகைவிட் டிழிந்து செல்வார்.

(அ - ரை.) மைந்து - வலிமை. சொல்வம் - கூறுவோம்: அம் ஈறு பெற்ற தன்மைப்பன்மை வினைமுற்று. நந்தி - வசவண்ணர். சிந்துரம் - யானை. வயமா - வெற்றியுடைய குதிரை. (உ௩)

### அல்லமர், சித்தராமையர் அக்காட்சிகளைக் கண்டு நிற்றல்

சீர்கெழு வசவற் பாடத் திவவியாழ் கொண்டு செல்வார்
ஆகிவில் மதனை வென்றோன் அடியவர் குழாநெ ருங்கும்
ஏர்கெழு மணிப்ப சும்பொன் இருங்கடை நோக்கி நின்றார்
ஒகையோ டல்லமன் நாமத் தொருவனும் இராமன் தானும்.

(அ - ரை.) இவவுயாழ் - வலிக் கட்டமைந்த யாழ். விடமதன் - கரும்பு வில்லையுடைய மன்மதன். ஏர்கெழு - அழகு பொருந்திய. இருங் கடை - பெரிய கடை வாயில். ஓகை - உவகை. ஒருவன் - ஒப்பற்றவன், ()

அப்பணதேவர் என்பார், வசவண்ணரிடஞ் சென்று கூறல்

ஆயிடை நின்றோர் தம்மை அப்பணப் பெயரின் மிக்க
தூயவன் எதிர்கண் டோகை சொல்லுவல் ஐயாற் கென்று
கோயிலுள் அமல பூசை குழாத்தொடு செய்யும் போதில்
போயினன் வசவ னோடு புகழ்ந்திது புகல லுற்றான்.

(அ - ரை.) ஆ இடை - அவ்விடத்தில்; சுட்டு நீண்டது. நின்றோர் தம்மை - நின்றவராகிய அல்லமதேவரையும் சித்தராமை யரையும். ஓகை - உவகை; மகிழ்ச்சி. அமல பூசை - குற்றமற்ற இறை வழிபாடு. குழாம் - (அடியார்) கூட்டம். (உ௭)

அடியார்கள் இருவர் வந்துள்ளார் எனல்

மாதவர் இருவர் ஐய மழைமதர் நெடுங்கண் மங்கை
பாதியன் உருவி ரண்டு படைத்துவந் தனரோ என்னச்
சோதிய தரளக் கோவைத் தோரண வாய்தல் முன்னம்
வீதியில் நின்றார் என்று விளம்பினன் தவத்தின் மிக்கான்.

(அ - ரை.) மழைமதர் - குளிர்ச்சியும் களிப்பும் பொருந்திய. மங்கை: உமையம்மை. பாதியன் - ஒரு பக்கமாகக் கொண்ட இறைவன். சோதிய - ஒளியினையுடைய. தரளக் கோவை - முத்து மாலை. தோரணம் - மகர வாசிகை. (உ௮)

வசவண்ணர் அவர்களை அழைத்துவரச் சொல்லல்

என்றவன் இயம்ப நந்தி எனும்பெயர்க் கருணைக் குன்றம்
கன்றினை நினைந்து நெஞ்சம் கரைந்துவந் தனையும் தாய்க்கிங்
கொன்றொரு தடையும் உண்டோ ஒல்லைநீ தருதி என்னச்
சென்றவன் அமல னோடு சித்தரா மனைவ ணங்கி.

(அ - ரை.) கருணைக் குன்றம் - அருள் மலை. ஒன்றொரு - யாதொரு. தடை - இடையூறு. ஒல்லை - விரைவு. தருதி - அழைத்து வருக: முன்னிலை ஒருமை. அமலன்: அல்லமதேவன். (உ௯)

### அழைத்த அப்பணரை நோக்கி அல்லமர் கூறல்

வரசிவ லிங்க பூசை பண்ணிய பயனே உங்கள்
வரவென உனம கிழ்ந்தான் வசவனீர் வருக என்ன
வெருவொடும் உளமு ளைந்து மெய்த்தவன் விளம்ப எங்கள்
குருபரன் முனிவான் போலக் குறுநகை கொண்டு கூறும்.

(அ - ரை.) உங்கள் வரவு - உமது வருகை. வெருவரும்-அச்சத்தோடும். உளம் உளைந்து - மனம் நடுங்கி. குருபரன்: அல்லமர். முனிவான் - சினப்பவன். குறுநகை - சிறுநகை. (௧௦)

### அல்லமர் வருதற் குடன்படாமையை அப்பணர் வசவர்க்குக் கூறல்

அரசியல் அடைந்தார் தம்பால் ஐயமேற் றருந்த கின்றோர்
வருசெயல் வரிசை அன்று மறித்துநீ போதி என்று
உரைசெய அமலன் அப்பன் உளம்வெரீஇக் கடிது மீண்டு
வரைசெயும் வயிரத் திண்தோள் வசவநா யகற்குச் சொன்னான்.

(அ - ரை.) அரசியல் - அரசாட்சித் தன்மை. ஐயம் - பிச்சை எடுக்கும் உணவு. வரிசையன்று - முறைமையன்று. உளம் வெரீஇ - மனம் நடுங்கி. கடிது - விரைந்து. வரை செயும் - மலைபோன்ற. வயிரம் - வலிமை. நாயகன் - தலைவன்; மேன்மையானவன். (௧௧)

### அல்லமர் முன்சென்று போற்றாதது தவறென வசவர் வருந்தல்

அல்லமன் புகன்ற மாற்றம் அப்பணன் சென்று நின்று
சொல்லலுந் துனுக்கென் றுள்ளஞ் சோர்தளர்ந் துடல்வி யர்த்துப்
புல்லவந் தணையும் தாய்முன் பொருதுதும் பறுத்திட் டோடும்
நல்லிளங் கன்று போல்முன் நான்செலா திருந்தேன் என்று.

(அ - ரை.) புகன்ற - சொன்ன. உள்ளம் - மனம். துனுக்கு என்று - திடுக்குற்று. புல்ல - பொருந்த. தும்பு - கயிறு. இளங் கன்று - இளமையுள்ள ஆவின் கன்று. (௧௨)

### மாச்சிதேவர் என்பவர், அல்லமதேவரை எதிர் சென்று போற்றாதிருந்தது தவறு என்று கூறுதல்

கரைந்துகு மனமு ளைந்து கவலைகொண் டழுங்க நந்தி
பெருந்தகை மாச்சி தேவன் பெருங்கடற் பிறந்த சாவா
மருந்துதன் எதிர்கி டைத்து மற்றதை வாரிக் கையால்
அருந்துற அலகை வான்போல் ஆயினை நீயும் என்றான்.

(அ - ரை.) கரைந்துஉகும் - கரைந்துருகுகின்ற. அழுங்க - வருந்த. சாவா மருந்து - அமுதம். எதிர் கிடைத்தும் - தானாகக் கிடைத்தும். அலசுவான் போல் - கழுவுகின்றவனைப் போன்று. எடுத்துக்காட்டுவமையணி. (கக)

வசவண்ணர், அல்லமர் இருந்த இடம் சேர்தல்

பெருந்தகை மாச்சி தேவன் பேசுசொல் விளக்குத் தூண்டும்
துரும்பென உதவச் செம்பொன் தூணேனும் தோளான் மாழ்கி
இருந்தவப் பிழையென் மேற்றே என்றடி இறைஞ்சி ஒய்யென்
றருந்தவ ரொடுபு றப்பட் டல்லமன் அருகு வந்தான்.

(அ - ரை.) பெருந்தகை - பெருந்தன்மை பொருந்திய. மாழ்கி இருந்த - மயங்கி இருந்த. என் மேற்று - என்மேலுள்ளதே. அடி இறைஞ்சி - தாள் பணிந்து. ஒய் என்று - விரைவாக. ஒய் : விரைவுக் குறிப்பொலி. (கஉ)

வசவண்ணர் தம் பிழையைப் பொறுக்குமாறு வேண்டுதல்

என்குண மறமே ஆகி யானதில் திரிதல் இல்லேன்
நின்குணம் அருளே என்றால் நீயதில் நிற்றி எந்தாய்
புன்குண மகவின் தீமை பொறுத்தருள் செய்கை என்னும்
தன்குணம் விடுத்தொ ழிக்கும் தாய்வியன் உலகில் உண்டோ.

(அ - ரை.) மறம் - தீவினை. திரிதலில்லேன் - மாறுபடா திருக்கின்றேன். மகவு - குழந்தை. அருள் செய்கை - அருள் செய்தல். வியன் உலகு - விரிந்த உலகம். (கங)

வசவண்ணர் அல்லமருடைய திருவடி பணிதல்

சூத்திரப் பாவை யானச் சூத்திரி நீய ருட்கண்
பார்த்தெனைக் குறைய கற்றிப் பணிசெயக் கோடி என்று
வாய்த்தநற் குரவன் செந்தா மரையடி மிசைவி ழுந்தான்
ஏத்திமெய்ப் பத்தி நீத்தம் எனப்படும் வசவ தேவன்.

(அ - ரை.) சூத்திரப் பாவை - கயிற்றினாலாடும் பாவை. சூத்திரி - கயிற்றையுடையவன். பணி செய - பணிவிடை செய்தற்கு. பத்தி நீத்தம் - அன்புப் பெருக்கு. (கச)

நீ சினங்கொள்ளின் விலக்கலரிதெனல்

நிலமகள் பொருது தள்ளின் நிறுத்துநர் யாவர் ஒதை
மலிகடல் புரளும் ஆயின் மறிப்பவர் உளரோ எங்கள்
தலைவநீ முனிவை ஆயின் தடுப்பவர் உலகில் யாண்டும்
இலையிலை அருள்செய் எந்தாய் எனச்சென்ன வசவன் தாழ்ந்தான்.

(அ - ரை.) நிலமகள்-பூமியாகிய பெண்; பூவுலகம். நிறுத்துநர் - தாங்கிப் பிடிப்பவர்கள் ஒதைமலி கடல் - ஒலி மிகுந்த கடல். மறிப்பவர்-தடுப்பவர். முனிவை-சினப்பாய். யாண்டும்-எவ்விடத்தும். ()

மாச்சிதேவன், அல்லமதேவரை வேண்டுதல்

சொற்றிடும் குதலைச் சொல்லில் சொற்றிறம் தெரிதல் போலிச்
சிற்றிளங் குமரன் அன்பு செயவடி யிடுமுன் நோக்கேல்
சற்றுநின் கடைக்கண் வைத்துத் தண்ணளி புரிக என்று
நற்றவ மாச்சி தேவன் நங்குர வனைப்ப ணிந்தான்.

(அ - ரை.) குதலைச் சொல் - கிரம்பா மென்சொல். தண் அளி - தண்ணருள். குரவன் - பெரியோன்; ஈண்டு அல்லமதேவர். (கூ௯)

கின்னரப்பிரமன், அல்லமதேவரை வேண்டுதல்

உரைமன மெய்யொ ருங்கி உன்பணி செய்ய வல்லோன்
தரைமிசை இவன லாது தானொரு வரையும் காணேன்
அருள்செய வேண்டும் என்ன அல்லமன் அடிப ணிந்தான்
கிரிமகள் கொழுநற் கன்பன் கின்னரப் பிரமன் அம்மா.

(அ - ரை) உரை - சொல். மெய் - உடல். ஒருங்கி - ஒரு தன்மையாய் அமைந்து. கிரிமகள் - மலை மகள்; உமாதேவியார். அம்மா: வியப்புச் சொல். (௧௧)

அடியார்கள் அனைவரும் வேண்டுதல்

ஏமையெலாம் அடிமை வேண்டின் இவன்பிழை பொறுத்தி என்று
அமையுலாம் பணைமென் தோட்செய் அரிமதர் மழைக்கண் செவ்வாய்
உமைமண வனையு வந்த ஒண்தவர் எலாம்ப ணிந்தார்
சமையுளார் உணரும் எங்கள் தம்பிரான் சாற்ற லுற்றான்.

(அ - ரை.) அமைஉலாம் - மூங்கில்போலும் திரட்சியமைந்த. பணை - பருத்த. செயரி - செவ்வரி. உவந்த - விரும்பிய. ஒண்தவர் - ஒள்ளிய தவத்தினையுடையவர். சமையுளார்-பொறுமையுள்ளவர்கள். பிரான் - பெருமையுடையோன்; தலைவன். (௪0)

வணங்கியோர்க்கு அல்லமர் கூறல்

சொல்லிய சொற்கள் கற்றீர் சொற்றவந் நெறியில் நிற்குஞ்
நல்லியல் இல்லை தும்பால் நவில்தரு மாற்றம் ஒன்று
புல்லிய செயலொன் றுகப் பொருந்துநர் நம்மில் ஆர்க்கும்
பல்லிய மொடுந டிக்கும் பரதரே பெரியர் ஆவார்.

(அ - ரை.) சொல்லிய சொற்கள் - இப்பொழுது பேசிய மொழிகள். நல் இயல் - நல்லொழுக்கம். நவில்தரு - சொல்லுகிற. புல்லிய - செய்கிற. பல்லியம் - பலவகை ஒலிக்கருவிகள். பரதர் - கூத்தாடிகள். (சுக)

அன்பின்றிச் செய்யும் அறம் பயனளிக்காதெனல்

ஆதர விலையேல் வேண்டும் அறத்தினிற் பொருளோர் செம்பொன்
பூதர வளவ ளித்தும் பொருளழி வளவே யாகும்
ஆதர வுளதேல் நல்கும் பொருளணு வளவென் றாலும்
பூதரம் எனவ ளர்ந்து புண்ணியப் பொருள ளிக்கும்.

(அ - ரை.) ஆதரவு - அன்பு. செம்பொன் பூதர அளவு-பொன் மலையளவு; மாமேரு மலை. பொருள் அழிவு அளவே யாகும் - சிறிதும் பயனற்றதாக முடியும். நல்கும் - கொடுக்கின்ற. அணுவளவு-சிறுதுகளின் அளவாக. புண்ணியப் பொருள்-அறத்தின் பயன். பொருள், பயனென்னும் பொருளில் வந்தது. 'பொருளல்லவரை' என்னும் திருக்குறளிலும் இப்பொருள் தருதலை ஓர்க. (சுஉ)

அன்பில்லையேல் ஒன்றுமே இல்லை எனல்

துறவறம் மனைய றஞ்சீர் தூய்மைநற் கல்வி நல்லோர்
உறவொடு மகங்கள் தானம் ஒண்தவம் விரதம் பூசை
அறிவிவை அனைத்தும் இல்லை ஆதர வில்லை ஆயின்
பெறுவன மெய்வ ருத்தம் பெரும்பொருள் அழிவு மாதோ.

(அ - ரை.) மனை அறம் - இல்லறம். சீர் - புகழ். மகங்கள் - வேள்விகள். தானம் - ஈகை. ஒண்தவம் - ஒருவனது புகழினை விளக்கஞ் செய்யும் தவம். அறிவு - உண்மை ஞானம். பொருள் அழிவு - செல்வம் தொலைதல். (சுங)

அன்பின் அரும்பெருஞ் சிறப்பு

ஆதர வுடையான் செய்யும் அல்லவும் நல்ல ஆகும்
ஆதர விலாதான் செய்யும் நல்லவும் அல்ல ஆகும்
ஆதர வதனால் ஆவிக் கருந்துணை இன்ப முத்தி
ஆதர வன்றி வேறென் றவித்திடக் கண்ட துண்டே.

(அ - ரை.) அல்லவும் - தீயவும். நல்லவும் - நன்மையானவையும். ஆவிக்கு - உயிருக்கு. அன்பினால் ஒருவருக்குண்டாகும் பெருஞ் சிறப்பு பேரின்ப வீடுபேறேயாம் என்பது கருத்து. (௪௪)

### அடியார்கள் அல்லமரைப் புகழ்ந்து தொழுதல்

ஆதலால் அன்பி னுஞ்சொல் அகமகிழ் வினைச்செ யாவென்
றோதினுன் அடியார் தீமை ஒழித்தருள் தொழிலில் நின்றோன்
காதலால் வணங்கி னோர்நின் கருணையால் அன்றி யாங்கள்
ஏதினுல் நல்லர் ஆவேம் என்றடி தொழுது நின்றார்.

(அ - ரை.) சொல் - வீண் சொற்கள். அகமகிழ்வினை - உள்ளக் களிப்பை. காதலால் - அன்பினால். நல்லர் ஆவேம் - நல்லவர்களாவேம். நாங்கள் அன்பினாலல்லாமல் வீண் பேச்சுக்களால் நல்லர்களாகமாட்டோமென அடியார்கள் கூறினரென்க. (௪௫)

### சித்தராமையர் அல்லமதேவரை வேண்டல்

காஞ்சிரங் கனிதின் றாங்குக் கடையனேன் பிழைபொ றுத்தாய்
தீஞ்சுவை அமிர்தம் அன்ன திவ்விய கறியிற் குற்றம்
ஆஞ்சுவை அறைதல் போலிவ் வன்பனைச் சீறேல் என்று
பூஞ்சரண் மிசைவ ணங்கிப் போற்றினன் சித்த ராமன்.

(அ - ரை.) காஞ்சிரங்கனி - எட்டிப்பழம். தின்றாங்கு - தின்றதை ஒப்ப; ஆங்கு - இங்கு உவமவுருபாக வந்தது. 'பொருளில்லார்க் கிவ்வுலகம் இல்லாகி ஆங்கு' என்புழி, ஆங்கு உவமவுருபாக வருதல் காண்க. கடையனேன் - கடைப்பட்டவனாகிய நான். திவ்வியம் - மேன்மை. சீறேல் - சினவாதே: எதிர்மறை. பூஞ்சரண் - அழகிய திருவடிகள். மிசை - மேல். (௪௬)

### அல்லமரை வசவண்ணர் மீண்டும் தொழுதல்

அடைக்கலம் என்னை ஆளாய் அண்ணலே என்று நந்தி
கடிக்கம லங்கள் வென்ற கால்மிசை மீண்டும் தாழ்ந்தான்
விடுத்திடேல் என்று சென்ன வசவனும் வீழ்ந்தி றைஞ்சித்
தொடிக்கரந் தொழுதான் அன்பர் துதித்தனர் சூழ்ந்து கொண்டு.

(அ - ரை.) அடைக்கலம் - தஞ்சம். அண்ணல் - பெருமை பொருந்தியவன். கடிக் கமலங்கள் வென்ற - மணம் பொருந்திய தாமரை மலர்களை வெற்றி கொண்ட. வெற்றி கொள்ளுதல் தாமரை மலரினும் அழகும் மென்மையும் தண்மையும் உள்ளதா இருத்தல். தொடிக்கரம் - காப்பையணிந்த கை. (௪௭

## அல்லமர், வசவண்ணருக் கருள் செய்து திருமடத்தில் இருத்தல்

**அல்லமன் எனுமெங் கோமான் அருட்கடைக் கண்வைத் தைய**
**சொல்லுவன் எழுதி என்று துணைக்கையால் எடுத்தணைத்து**
**நல்லருள் புரிந்து தண்ட நாயகன் திருமடத்துள்**
**எல்லையில் அடியர் சூழ இனிதெழுந் தருளி னால்.**

(அ - ரை.) கோமான் - தலைவன். அருள் கடைக்கண் - அருள் நிறைந்த கண்ணின் சிறுபார்வை. எழுதி - எழுந்திருப்பாயாக; முன்னிலை ஒருமை ஏவல்வினை. துணைக்கை - இரண்டு கை. தண்ட நாயகன் - வசவண்ணர். எல்லை இல் - அளவற்ற. அடியர் சூழ - சிவனடியார்கள் தம்மைச் சூழும்படி. இனிது - இன்பத்தோடு. எழுந் தருளினான் - சென்றிருந்தான். (சஅ)

பதினொன்றாவது வசவண்ணர் கதி முடிந்தது

கதி கஉ-க்குச் செய்யுள்-எஎக.

# ௧௫. மருளசங்கர தேவர் கதி

[இக் கதிக்கண், அல்லமதேவரை வசவண்ணர் அடியார் புடை சூழத் தம் இல்லத்துள் அழைத்துச் செல்லுகிறார். அல்லமதேவர் பல வாயில்களையுங் கடந்து இறுதியில் சேடகுண்டத்தை (எச்சில் இலை போடும் குழி) அடைகிறார். ஆங்கு மருளசங்கர தேவர் என்பவர் எழுந்தருளியிருத்தலைக் காண்கிறார். அல்லமதேவரைக் கண்ட மருளசங்கர தேவர் அவருடைய அடிகளைப் பணிகிறார். தம்மை வணங்கிய மருளசங்கர தேவரை அல்லமதேவர் தூக்கியெடுத்து அருள் செய்கின்றார். மருள சங்கர தேவரின் பெருமையைச் சித்தராமையருக்குக் கூறுகிறார். மெய்யறிவு பெற்றுள்ளாரின் பேன்மையை எளிதில் உணர முடியாது என்கின்றார். அவர்கள் எத்தகைய நிலையினும் உலகில் இலங்கியிருப்பர் என்கிறார். மருள சங்கர தேவர் சேடத்தை யுண்டிருத்தற்குரிய காரணத்தையும் சேடத்தின் பெருமையையும் சித்தராமையருக்கு விளக்கிக் கூறுகிறார் வசவண்ணர். 'நான் மருங்கிலிருந்தும் மருள சங்கர தேவர் பெருமையை உணராதிருந்தேன். நீ அதனை உணர்த்தினாய்' என்று அல்லமதேவரைப் பணிகிறார். வசவண்ணர் பெருமையை அல்லமதேவர் வசவண்ணரிடமே விளக்கிக் கூறுகிறார். அல்லமதேவர் மொழியைக் கேட்டு அடியார்கள் மனம் மகிழ்கிறார்கள். அல்லமதேவர் மருள சங்கர தேவருக்குத் திருவருள் செய்கிறார் என்னுஞ் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

தாணுவின் உயர்பிர சாத குண்டத்தில்
காணரு மருளசங் கரனைக் கண்டருள்
பூணணி அல்லமன் போத நல்கிய
மாணுறு நெறியினை வகுத்துக் கூறுவாம்.

(அ - ரை) தாணுவின் - மலையைப்போல. பிரசாதகுண்டம் - அடியவர் உண்ட எச்சில் இலையைப் போடுங் குழி. அருள்பூண் அணி - நல்ல அருளை அணிகலனாக அணிந்த. போதம் - மெய்யறிவு. நல்கிய - அருள் செய்த. மாண் உறு - பெருமை பொருந்திய. (௧)

### அல்லமரை வசவண்ணர் தம் மனைக்குள் அழைத்துச் செல்லல்

மாதவர் எண்ணிலர் மருங்கு சூழ்தர
ஆதுலர் எதிர்பொரு ளாக அல்லம
நாதனை அறிவறி நந்தி கொண்டுநன்
ஏதமில் மனையிடை எய்தல் மேயினன்.

(அ - ரை.) மருங்கு - பக்கம். சூழ்தர - சூழ்ந்தவர். ஆதவர் - அறிஞர். எதிர்பொருள் - எதிரே கிடைத்த அரிய பொருள். அறிவு அறி - மெய்யறிவினையுடைய. 'அறிவறிந்த மக்கட்பேறு' என்று திருவள்ளுவரும் அஃதாவது அறியவேண்டுவனவற்றை அறிதல் - அது மெய்யுணர்வு. ஏதம் - குற்றம். (உ)

அல்லமர் சேடகுண்டத்தை அடைதல்

அவத்தைகள் பற்பல அகன்று மெய்ப்பர
சிவத்தினை அடைபவர் செய்கை போற்கடை
தவப்பல நடந்துபோய்ச் சாதகுண் டத்தை
உவப்புடன் அடைந்தனன் ஒப்பில் அல்லமன்.

(அ - ரை.) அவத்தைகள் - பற்பலவான தொல்லை தருந் தொடர்புகள். கடை - வாயில். தவப்பல - மிகப்பலவானவற்றை. சாதகுண்டம் - எச்சில் இலைக்குழி. சாதம் - பிரசாதம் என்பதன் தலைக்குறை. உவப்பு - மகிழ்வு. ஒப்புஇல் - தம் நிகரற்ற. (ங)

ஆங்கு மருளசங்கர தேவர் எழுந்தருளியிருத்தலைக் காணல்

உயர்பிர சாதகுண் டத்தின் ஒண்கரை
மயல்மலி பித்தரின் மருள சங்கரன்
பயிலுதல் கண்ணுறீஇப் பரம யோகிதன்
இயலினை உணர்ந்தனன் எம்பி ரானரோ.

(அ - ரை.) உயர் - உயர்வினையுடைய. ஒண்கரை - சிறந்த கரையை. மயல்மலி - மருட்சி மிகுந்த. பயிலுதல் - உலாவுதலை. கண்ணுறீஇ - பார்த்து. பரமயோகி - மேலான தவத்தையுடைய மருள சங்கரர். இயல் - தன்மையை. (ச)

மருளசங்கர தேவர் அல்லமதேவரைப் பணிதல்

கண்டருள் அமலனைக் கண்டு தானெதிர்
வெண்திரை அமுதினை மிடியன் மேவிபோல்
உண்டனன் எனமகிழ்ந் தோடி வீழ்ந்தனன்
வண்திரு வடிமிசை மருள சங்கரன்.

(அ - ரை ) அமலன் - மலமற்ற அல்லமதேவன். வெண்திரை - பாற்கடல். மிடியன் - வறிஞன். வண் திருவடி - செழுமை பொருந்திய அழகிய திருவடி. (ரு)

### தம்மை வணங்கிய மருளசங்கரரின் தன்மையைச் சித்தராமருக்குக் கூறல்

வணங்கிய அறவனை வந்தெ டுத்துமெய்
அணைந்தெழும் உவகையோ டருள்செய் நல்லமன்
இணங்குற அருணிலை இராமற் பார்த்தவன்
குணங்களை வியந்திது கூறல் மேயினன்.

(அ - ரை.) அறவன் - அறத்தின் வடிவமானவன். மெய் அணைந்து - உடலுறத் தழுவி. இணங்குஉற - ஒன்று சேர்ந்திருக்க. அருள் நிலை - அருள் பெற்ற நிலையினையுடைய. வியந்து - பாராட்டி. கூறல் மேயினன் - சொல்லத் தொடங்கினன் : ஒருசொல். (௬)

### மருளசங்கரர் தன்மையை வசவண்ணர் போன்றோரும் உணரவில்லை எனல்

குண்டமே வுறுபிர சாதம் கொள்ளை கொண்
டுண்டுவாழ் மாதவன் உண்மைத் தன்மையைத்
தண்டநா யகன்முதற் சரணர் யாவரும்
கண்டிலர் யாரினிக் காண வல்லவர்.

(அ - ரை.) பிரசாதம் - அடியார் உண்ட மிச்சில் சோறு. சரணர் - வீரசைவ அடியார்கள். கண்டிலர் - அறிந்திலர். காண வல்லவர் - அறியும் திறமையுடையார். (௭)

### மெய்யுணர்வுடையாரை யாரும் அறியமுடியாது எனல்

சரிதையொண் கிரியைகால் தடுக்கும் யோகிவை
புரிபவர் தம்மையப் புரியும் செய்கையால்
தெரிதரல் ஆகுமோர் செயலும் இன்றிவாழ்
அரியநன் ஞானியை அறிய லாகுமோ.

(அ - ரை.) சரிதை - சரியை (சீலம்). கிரியை - நற்றொழில் (நோன்பு). கால் தடுக்கும் - மூச்சுக் காற்றினைத் தடைசெய்து நிறுத்தும். யோகு - யோகம் : கடைக்குறைந்து நின்றது. (செறிவு). தெரிதரல் ஆகும் - அறியக்கூடிய. ஓர் செயலும் - எந்தச் செய்கையும். இன்றி - இல்லாமல். ஞானி - மெய்யுணர்வுபெற்றோர். 'சீலமின்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றித் - தோலின் பாவைக் கூத்தாட்டா' என மணிமொழிப்பெருமான் திருமறையினும் இவற்றை முறைப்படுத்தோதியருளினமை அறிக. (௮)

## மெய்யறிவு பெற்றோனே எவ்வறத்தினும் நிலைநிற்போன் எனல்

நலமுறும் ஓர்சிவ ஞானி இல்லில்வாழ்
நிலையறம் ஆகினும் நீத்து நிற்குமோர்
தலையறம் ஆகினும் தரித்து ஞாலமேல்
இலைமறை காயென இருக்கும் என்பவே.

(அ - ரை.) நலம் உறும் - நன்மை அமைந்த. ஓர் - ஒப்பற்ற. இல்லில் வாழ்நிலை அறம் - இல்லில் வாழ்கின்ற நிலைபெற்ற அறம். தலையறம் - தலைமைபெற்ற அறமாகிய துறவறம். தரித்து - மேற்கொண்டு. இலைமறை காய் - இலையால் மறைவுற்ற காயைப்போல. இருக்கும் - இருப்பன் ; செய்யுமென் முற்று. ஈண்டு ஆண்பாலொருமைக்கு வந்தது. (௯)

## ஞானியானவன், எல்லா நிலையினும் இருப்பன் எனல்

வல்லனென் றிருப்பினும் இருக்கும் வன்மையோன்
றில்லனென் றிருப்பினும் இருக்கும் எள்ளுறப்
புல்லனென் றிருப்பினும் இருக்கும் புண்ணிய
நல்லனென் றிருப்பினும் இருக்கும் ஞானியே.

(அ - ரை.) வல்லன் - வலிமை மிகுந்தவன். எள்ளுற - இகழ. புல்லன் - அற்பன். புண்ணியநல்லன் - அறப்பெருஞ் செல்வன். இது நுடைநிலைத் தீவகம்; ஞானி என்பதை வல்லன் அல்லன் புல்லன் என்பவற்றிரும் ஓட்டுக. (௧0)

## ஞானியால் அல்லது பிறப்பு நீங்காது எனல்

அறிவறி ஞானியால் அன்றி வன்பவம்
மறிவுறு கருமியான் மாய்வு றுதுகாண்
எறிகதிர் இரவிவந் தெழுந்தி டாவிடில்
செறியிருள் அகலுமோ சித்த ராமனே.

(அ - ரை.) அறிவு அறி - தெரியத்தக்கனவற்றை யெல்லாம் அறிகின்ற. வன்பவம் - கொடிய பிறவி. கருமியால் - தீய தொழில் செய்கின்றவனால். மறிவுறு - அறிவு மடங்கிய. எறிகதிர் - ஒளி வீட்டெழுகின்ற. இரவி - ஞாயிறு ; சூரியன். செறி இருள் - நெருங்கிய இருள். (௧௧)

சித்தராமர், மருளசங்கரர் இருக்கும் நிலையைப்பற்றி வினவல்

சங்கர முனிநிலை தனைக்கண் டாய்கொலென்
றெங்குரு பரன்சொல இராமன் கைதொழு
திங்கிவன் மருளரில் இருந்த தன்மையென்
அங்கண அறைகென அறைதல் மேயினன்.

(அ-ரை.) சங்கரமுனி-மருளசங்கர தேவர். மருளரில்-பித்தரைப் போல். அம்கண - அழகிய அருட்கண்களையுடையவனே! விளி வேற்றுமையால் இறுதி னகரம் கெட்டது. அறைக - கூறுக. (கஉ)

சேட உணவினை உண்டிருத்தற்குக் காரணம் கூறுதல்

(வேறு)

தொழிலான் முயன்று நுகர்வமெனின்
துயரொன் றுயிர்க்கு விளையுமென
ஒழியா அமல சரமூர்த்தி
உண்ட மிச்சில் நுகர்வமெனில்
பழியா துமிலை அகன்றுபோம்
பவமும் என்னப் பிரசாதக்
குழியா னதனை அகலாமற்
கொண்டிங் கிருந்தான் குணமிக்கான்.

(அ-ரை.) தொழிலால்-யாதாயினுமொரு வேலையினால். நுகர்வம்- உண்போம். துயர் - துன்பமே. விளையும் - உண்டாகும். ஒழியா - நல்வினை புரிதலில்லின்றும் நீங்காத. சரமூர்த்தி - உலகில் வாழ் கின்ற அடியார்கள். பழி-பழிச்சொல். பவம் - பிறப்பு. (கங)

சிவனடியார் திருவடி கழுவிய நீரின் பெருமை

பந்தம் அகன்ற சிவபத்தர் பாதம் விளக்கும் புனற்குழியில்
வந்து பிறந்து மூழ்கியதில் வைகும் புழுவின் பெரும்பேறு
முந்து கங்கை முதலவா முற்றும் படிந்து தீவினைகள்
சிந்தும் அந்த ணருமே சேரார் என்று மறைசாற்றும்.

(அ-ரை.) பந்தம் - பிறவிக்கட்டு. பாதம் - திருவடிகள். புனற் குழி - நீர்க்குட்டை; நீர் நிற்கும் சிறு குழி. வைகும் - வாழ்கின்ற. படிந்து - மூழ்கி. சிந்தும் - ஒழிக்கின்ற. அந்தணர் - பற்றற்ற ஞானிகள். மறை - வேதம். (கச)

## சேடப்பொருளின் சிறப்பு

தாய்க்கு வழுவில் மகளிர்க்குத் தந்தை தனக்குப் பகவிற்குச்
சேய்க்கு மறையோர் தமக்கிடர்செய் தீர்வில் கொடிய பாதகமும்
போக்கும் இமைப்பிற் கரணத்தைப் புனிதம் ஆக்கிச் சிவமாக
ஆக்கும் அரன்தன் பிரசாதம் ஆயின் அதற்கு நிகருண்டோ.

(அ - ரை.) தாய்க்கு - உற்றுப்பெற்ற அன்னைக்கு. வழுவு இல் - குற்றமில்லாத. மகளிர் - பெண்கள். தீர்வில் - எத்தகைய கழுவாயாலும் போக்க முடியாத. கரணத்தை - மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய அந்தக்கரணத்தை. புனிதம் - தூய்மை. சிவம் ஆக - சிவவடிவாக; குற்றமற்ற உண்மையறிவுருவாக. 'சிவம் ஆக்கி எனையாண்ட' என்ற பெரியார் வாய்மையும் காண்க. (கஞ)

## மருளசங்கர தேவரின் மாண்பு

பசிக்கு மருந்து மாய்வீடு பயக்கும் வண்மை சேர்ந்துபவம்
ஒசிக்கும் அரன்தன் பிரசாத ஊதி யந்தான் உணர்ந்திங்கு
வசிக்கும் தகைமை சங்கரற்கே வருவ தன்றிப் பசிக்குணவு
புசிக்கு மனிதர் தமக்கென்றும் பொருந்தா தென்றான் எம்பிரான்.

(அ - ரை.) மருந்துமாய் - அமுதமுமாய். வண்மை - சிறப்பு. பவம் ஒசிக்கும் - பிறப்பைக் கெடுக்கும். பிரசாதம் - தெளிவு. ஊதியம் - பொருட்பேறு. வசிக்கும் - இருக்கின்ற. பொருந்தாது - சாராது. (கசு)

நீங்களிருவரும் ஒருவரை ஒருவர் உணர்வீர்கள் எனவ்
இன்னை அறிவன் சங்கரனே நீயே அவனை அறிகுவாய்
பின்னை உலகில் யாரறிவார் பேசிற் பாம்பே பாம்பின்கால்
தன்னை அறியும் என அல்லமன் தாள்தா மரையின் கீழ்ப்பணிந்தான்
என்னை அடிமை யாவுடைய இராமன் என்னும் இணையில்லான்.

(அ - ரை.) சங்கரன் - மருளசங்கர தேவன். தாள் தாமரை - திருவடி மலர். பணிந்தான் - வணங்கினான். இணையில்லான் - ஒப்பில்லாதவன். (கஎ)

## மருளசங்கரர் பெருமை உணராமைக்கு வசவண்ணர் வருந்தல்

அம்பொன் வைப்பின் மீதிருந்தும் அறியா தல்லற் படுவான்போல்
தம்பன் மருள சங்கரனை நானே அறியா திருந்தழிந்தேன்
இம்பர் மருளி நிரஞ்சனநீ எனக்குக் காட்டித் தந்தனையென்
றும்பர் பரவும் அல்லமனை உவந்து பணிந்தான் அருணந்தி.

(அ - ரை ) அம்பொன் வைப்பு - அழகிய பொன் புதையல். ஏம்பல் - கப்புதற்குரியான்; ஈண்டுத் தலைவன். இம்பர் மருவி - இவ்விடத்திற்கு வந்து. விர் அஞ்சன - களங்கமற்றவனே! மைகொண்டறியும் புதையலை நீ மையில்லாமலே காட்டித் தந்தாயென்பது தோன்ற நிரஞ்சனம் என்றார். உம்பர்-மேலானவர். பரவும்-வணங்குகின்ற. (கஅ)

உன்னைச் சினந்தது உனக்கு இன்பம் உண்டாதற்கே எனல்

இணங்கும் மிக்க காமிதனக்
கின்பம் ஊடல் சரலிங்கம்
பிணங்கல் முத்தி காமிக்குப்
பேரின் பென்ப துணர்த்தற்குக்
குணங்கள் மிக்காய் நினைச்சினந்நாம்
குறையொன் றுளதோ நினக்கரவின்
பணங்கொள் நிலத்தில் பரமசிவ
பத்திக் குவால்நீ என்றக்கால்.

(அ - ரை.) இணங்கும் - பொருந்திய. சரலிங்கம் பிணங்கல் - மெய்யறிவருளும் ஆசிரியன் சினந்து கடிதல். முத்திகாமிக்கு - வீடுபேற்றை விரும்பியவனுக்கு. அரவின் பணம் - பாம்பினது படம். குவால் - குவியல். உலக இன்பத்தை விரும்பியவனுக்கு மனைவியின் ஊடல் இன்பத்தை யளிக்கும். வீடுபேற்றை விரும்பியவனுக்கு அறிவாசிரியனின் பொய்ச்சினம் இன்பத்தை யளிக்கும். (கசு)

நினது இல்லம் சிறந்தது எனல்

இங்கு மருள சங்கரன்போல் எண்ணி லார்நின் மனைவாய்தல்
கங்குல் பகலும் அகலாமற் காப்பர் என்னின் நின்முன்றில்
பங்க வினையின் வலிகடந்த பலரும் தாஞ்செய் தவப்பயனால்
தங்கு கயிலை மலையன்றோ தண்ட நாத என்றமலன்.

(அ - ரை.) வாய்தல் - வாசலின். கங்குல் - இரவுப்பொழுது. முன்றில் - முற்றம்; வீட்டின் முன் இடம். பங்கம் - குற்றம். தங்கு கயிலை - நிலைபெற்ற திருக்கைலாயம். (உ0)

கடவுள் அன்பெல்லாம் நினதே எனல்

வெம்மை எதன்கண் நிகழ்ந்திடினும்
வெந்தீக் குணமென் பதுபோல
மும்மை உலகின் யாண்டேனும்
முளைக்கிற் பத்தி யதைநினதென்

நிம்மை உலகம் இயம்புமெனில்
எங்கள் வசவ நின்பெருமை
கொம்மை இளமென் முலைமடந்தை
கூறன் அன்றி யாரறிவார்.

(அ - ரை.) வெம்மை - சூடு. வெம் தீ குணம் - கொடிய நெருப்பின் இயல்பு. மும்மை உலகு - மூன்று உலகு. முனைக்கின் - உண்டாகுமானால். இம்மை உலகம் - இந்த உலகம். கொம்மை - வட்டம்: திரட்சி. கூறன் - பாகத்தையுடைய சிவபெருமான். (உக)

உன்னைப்போல்வார் உலகில் யாரும் இல்லை எனல்

பத்திக் கடலே குணக்குன்றே
பாசப் பகையே எம்முறவே
முத்திக் கரசே சிவானந்த
முதலே ஞான மணிவிளக்கே
சித்திப் பொருளே அருணந்தித்
தேவே நின்னைத் தொழும் அடியார்
புத்திக் கமுதே யாவர்நினைப்
போல்வார் அவரை அறியேமால்.

(அ-ரை) பத்திக்கடல்-அன்புக்கடல். குணக்குன்று-நற்பண்பின் மலை. பாசப்பகை-கட்டுகட்குப் பகை. சிவ ஆனந்த முதல்-கெடாத இன்பத்தின் அடிப்படை. மணிவிளக்கு - தூண்டாத விளக்கும் போன்றவன். புத்திக்கு அமுது - அறிவுக்கு உணவாக இருப்பவன். ()

அல்லமரைப் போற்றியதால் உண்டாயதே
தம்பெருமை எனல்

என்று கூற எமையுடையான் எனக்குப் புகன்ற நலமெல்லாம்
சென்ற நாளில் இலைநினது செந்தா மரைத்தாள் தொழப்பெற்ற
இன்று தொடங்கி உளவாமென் றெந்தை நந்தி வணங்கியெழ
நின்ற அமல சிவசரணர் நெஞ்சம் உவகை பூத்தனரால்.

(அ - ரை.) புகன்ற நலன் - கூறிய நன்மை. சென்றநாளில் - அல்லமர்த்தவரைக் காண்பதற்குமுன். சிவசரணர்-சிவனடியார். உவகை பூத்தனர் - மகிழ்ச்சி உண்டாக்கப்பெற்றனர். (உரு)

### மருளசங்கரருக்கு அல்லமர் அருள்புரிதல்

அருளான் மருள சங்கரனுக்
　　கமரர் தாமும் அறிவரிய
பொருளா கியபே ரின்பவனு
　　பூதி விளக்கம் அருள்செய்தான்
உரையால் நினைவால் அருனோக்கால்
　　உலகர் உணர்வைப் பிணித்தமல
இருளான் அதனை அறமாற்ற,
　　எழுந்த ஞான சூரியனே.

(அ - ரை.) அமரர்-தேவர். பொருளாகிய-மெய்ப்பொருளாகிய. பேர் இன்பம் - பெரிய இன்பம். அனுபூதி - அடைவு. உரை - அருள் மொழி. நினைவு - பாவனை தீக்கை. அருள் நோக்கு - அருட்கடைக் கண் பார்வை. பிணித்த கட்டிய. மல இருள்-அறியாமை மயக்கம்; இருட்டு. எழுந்த - தோன்றிய. (உச)

பதினைந்தாவது மருளசங்கர தேவர் கதி முடிந்தது.

கதி கரு - க்குச் செய்யுள் - ஏகஉ.

---

## கக. இட்டலிங்க கதி

[இக்கதிக்கண், வசவண்ணர் மனைக்குள் இருக்கையொன்றில் அல்லமதேவர் எழுந்தருளுகின்றார். அங்கு அல்லமதேவர் போந்து அவ்வாறெழுந்தருளியது பொருந்தவத்தின் பேறென்று வசவண்ணர் போற்றுகின்றார். நான் இறைவனிடத்துக் கொள்ளும் அன்பு நெறியை உணர்ந்தது ஊமை கண்ட கனவைப் போலிருக்கின்றது; ஆதலின் எனக்கு அன்புநெறியை உரைத்தருளவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகின்றார். மக்கட் பேற்றின் மாண்பையும், அறவழிப்படுதலின் அருமையையும் சிவநெறிப்படுதலின் செம்மையையும். இட்டலிங்க வழிபாட்டின் ஏற்றத்தையும், பிற நல்லுரைகளையும் அல்லமதேவர் வசவண்ணர்க்கு உரைக்கின்றார் என்னும் செய்திகள் கூறப்படுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

சிட்டன் அல்லம தேவன் அருளுறீஇ
நட்ட நண்பொடு நந்தி உணர்வுற
இட்ட லிங்கத் தியல்பு புகன்றமை
கட்டு வல்வினைக் கட்டற ஓதுவாம்.

(அ - ரை.) அருள் உறீஇ - அருள்சுரந்து. நட்ட - கொண்ட. கட்டு - பல பிறவிகளிற் கட்டப்பெற்ற. வல்வினைக்கட்டு - தீவினையின் தொடர்பு. ஓதுவாம் - கூறுவாம்: தன்மைப்பன்மை வினைமுற்று. (க)

### அல்லமதேவர் வசவண்ணர் இல்லத்துக்கு எழுந்தருளுதல்

சங்க ரற்குத் தனைநிகர் இன்பவீ
டங்க ளித்தருள் அல்லமன் நந்திதன்
மங்க லத்திரு மாளிகை கட்செவிக்
கங்க ணற்கினி யாரொடு கண்டனன்.

(அ - ரை.) சங்கரற்கு - மருளசங்கர தேவர்க்கு. இன்ப வீடு - பேரின்ப வீடுபேறு. நந்தி - வசவண்ணர்; இவர் நந்திப் பெருமான் சாயலாகத் தோன்றியவராகலின் 'நந்தி' எனப்பட்டனர். கட்செவிக் கங்கணற்கு - பாம்புக் காப்புடைய சிவபெருமானுக்கு. இனியார் - இனியவர்களாகிய அடியார்கள். (உ)

### அல்லமதேவர் இருக்கையொன்றில் எழுந்தருளியிருத்தல்

மண்டு பேரொளி மாடத்து நாப்பணம்
தண்ட நாதன் தவிசொன் றமைத்திட
அண்ட நாயகன் அல்லமன் ஆயிடைக்
கண்ட நோக்கம் களிப்ப இருந்தனன்.

(அ - ரை.) மண்டு - நிறைந்த. மாடம் - உப்பரிகை. நாப்பண் - நடுவில். தவிசு-இருக்கை: ஆசனம் என்பர் வடமொழியில். அண்ட நாயகன் - உலகங்கட்கெல்லாம் தலைவராகிய அல்லமர். கண்ட நோக்கம் - பார்த்தவர்களுடைய கண்கள். (௩)

### அல்லமதேவரை மலர்கள் தூவி வணங்குதல்

ஆத னத்தில் அமர்ந்தருள் அல்லமன்
பாதம் அன்பொடு பன்மலர் தூயிது
மாத வத்தின் வலியெனத் தாழ்ந்தெழு
காதல் மிக்குக் கசிந்துள நந்தினான்.

(அ - ரை.) ஆதனம் - இருக்கை. பன்மலர் - பலவகைப்பட்ட மலர். தூய் - தூவி; தூற்றி. எழுகாதல் - மேல்மேல் வளர்கின்ற அன்பு. உளம் உள்ளம்; மனம். கசிந்து - உருகி. (௪)

### வசவண்ணர் தமக்குக் கடவுளன்பு உண்டாகுமாறு உரைக்க வேண்டல்

அடிய னேன்சிவ பத்தி அறிந்தமை
படியில் ஐயன் கனவெனப் பட்டது
முடியு மாறு மொழிந்தருள் என்றுபொன்
தொடியு லாங்கை தொழுது விளம்பினன்.

(அ - ரை.) சிவபத்தி அறிந்தமை - இறையன்பின் நிலைமையை உணர்ந்தது. படியில் - உலகில். ஐமன் - ஐயன். பொன்தொடி - பொன்னாலான காப்பு. உலாம் கை - போய்வருகின்ற கைகள். காப்பணிந்து அவை போதலும் வருதலுமாகிய கைகள். கைகளின் சிறப்புக்கு அடைமொழி. (௫)

### அல்லமர் உனக்கு யாரும் உணர்த்தவேண்டாம் எனல்

கேட்ட வாரியன் கேடில் சிவநெறிக்
கூட்ட மேவுறு கொள்கையி னுய்தினைக்
காட்டு வாருள ரோசெங் கதிர்க்கிருள்
ஓட்டு சோதியும் உண்டுகொ லோஎன்றான்.

(அ - ரை.) ஆரியன் - சிறைந்தவன்; அறிவுக்குறைவற்றவன்; ஈண்டு ஆசிரியனாகிய அல்லமதேவன். அல்லது வாரியன் எனக்கொண்டு அருட்கடலானவன் எனலுமாம். கேடில்-கெடுதல் இல்லாத. செஞ்சிவநெறிக் கூட்டம் - சிவத்தொண்டு புரியும் அடியவர் குழாம். செங்கதிர்-சிவந்த ஒளியையுடைய ஞாயிறு. ஓட்டு-விலக்குகின்ற. சோதி-பேரொளி - சூரியன் பேரொளியுடையது. அதற்கு ஒளிகொடுக்கும் மற்றோர் ஒளி இல்லையென்றபடி. (௬)

வசவண்ணர், அல்லமர் தம்மைப் புகழ்வது கூடாதெனல்

வள்ளல் இன்றெனை வந்து புகழ்ந்தனன்
தெள்ளு தண்புனல் தேக்கு முளைத்தலைக்
கிள்ளி நின்றெறி கின்றவர் போலென்று
உள்ளு டைந்திட் டுரைக்கும் வசவனே.

(அ - ரை.) வள்ளல்-அல்லமதேவர். தெள்ளு-தெளிவாகிய. தண்புனல் - குளிர்நீர். தேக்கு - தேக்கமரம். முளைத்தலை - முளையின் நுனியை. உள்ளுடைந்திட்டு-மனம் நெகிழ்ந்து. அல்லமதேவர் தம்மைப் புகழ்ந்தமையை இகழ்ச்சிப் புகழ்ச்சியென்று கொண்டு அதனால் தமது ஆணவம் ஒழிந்ததென்பார் இவ்வாறு கூறினார். பிறிது மொழிதல் அணி. (௭)

இதுவும் அது

(வேறு)

இகழ்ந்தெனை துளச்செருக் கினைய கற்றிலாய்
புகழ்ந்தனை விழைபுளிங் கறியிட் டாறுநோய்
மிகுந்தெழ வளர்த்தல்போல் எனவி ளம்புபு
தகுங்கழல் இறைஞ்சினன் தண்ட நாயகன்.

(அ - ரை.) இகழ்ந்து - பழித்து. விழை - விரும்புகிற. ஆறுநோய் - நீங்கிய நோய். விளம்புபு - சொல்லி. கழல் - திருவடிகள். போன நோயை வளர்க்கும் ஆற்றல் புளிக்கு உண்டு. "போன நோயைப் புளியிட்டழைத்தல்போல்" என்ற பழமொழியும் வழங்குகிறது; ஆதலின் இவ்வாறு கூறினார். (௮)

வசவண்ணர் அல்லமரை வேண்டுதல்

அருளினால் நினதடி அருச்சிக் கும்படி
தெருளிலா எனக்குரை செய்தி என்றலும்
மருளனும் எனுமொரு மதிஞற் கீந்தருள்
பொருளினன் இனையன புகறல் மேயினன்.

(அ - ரை.) அருச்சிக்கும்படி - வழிபடுமாறு. தெருள் இலா - தெளிவு இல்லாத. மருளன் - மருள சங்கர தேவன். மதிஞற்கு - அறிஞனுக்கு. பொருளினன்-சிறந்த பொருளாயிருப்பவன். இனையன - இத்தகையனவாகிய விலைகளை. (க)

நல்வினை செய்யும் உயிர்க்கே மக்கட்பிறவி கிட்டும் எனல்

புன்மரம் நெளிபுழுப் புள்வி லங்கெனும்
பன்மைய துயர்செயும் பவங்கள் தப்பியே
வன்மைகொள் நிலமிசை மக்கள் ஆகுதல்
நன்மைகொள் உயிர்க்கலால் அரிது நந்தியே.

(அ - ரை.) நெளிபுழு - நெளிகின்ற பூச்சி. பன்மைய - பல வகைப்பட்ட. துயர் செயும் - துன்பந் தருகின்ற. பவங்கள் - பிறப்புக்கள் வன்மைகொள் - வலிமையைக் கொண்ட. நன்மை கொள் - நல்வினையைக் கொண்ட. (க0)

அறம் செய்யும் வழியில் நிற்றல் யார்க்கும் அரியதெனல்

நரர்வடி வாயினும் நன்மை ஆற்றுரு
மரபினில் உலகினில் வருதல் தப்புதல்
அரிதுநல் அறம்புரி வழிய டுப்பினும்
மருவுதல் அரிதறம் வளர்க்கும் அங்கமே.

(அ - ரை.) நரர்வடிவாயினும்-மக்கட் பிறப்பை யெடுத்தாலும். நன்மை ஆற்றுரு - அறம் புரியாத. மரபினில் - வழியில். வருதல் தப்புதல் - வராமல் நீக்கிக்கொள்ளுதல். அங்கம் - உடல். மக்களாகப் பிறந்தாலும் அறத்தைத் தவறாது செய்யும் தன்மை அருமையென்ற படியாம். 'வீழ்நாள் படாஅமை நன்றாற்றின்' என்றார், வள்ளுவரும். ()

அறவழி நிற்பினும் ஆகமவழி நிற்றல் அரிதெனல்

அறத்துறுப் பெய்தினும் அன்பி னுறும்
சிறப்புறச் செய்தலின் கரிது செய்யினும்
புறச்சம யங்களைப் போக்கி ஆகம
நெறிச்சம யங்களை அரிது நேர்தலே.

(அ - ரை.) அறத்து உறுப்பு - அறஞ்செய்தற்கேற்ற அங்கம். புறச்சமயங்களைப் போக்கி - உலகாயதம் பௌத்தம் முதலிய புறச் சமயங்களை நீக்கி. ஆகமநெறிச் சமயங்களை - சிவாகம நெறிக்குப் பொருந்திய கொள்கைகளை. நேர்தல் - கைக்கொள்ளுதல். (கஉ)

### ஆகம வழிநிற்பினும் சைவசமய நெறிநிற்றல் அரிதெனல்

ஆகமம் புகல்நெறி அடைவன் ஆயினும்
சோகமில் சைவநல் துறையை நன்றெனச்
சேர்குதல் அரிதது சேர்வன் ஆயினும்
ஏகலிங் கயிக்யனு குதலன் றெண்மையே.

(அ - ரை.) புகல் - கூறுகின்ற. அடைவன் - சேர்வான். சைவ நற்றுறையை - நல்ல சைவநெறியை. ஏகலிங்க ஐயிக்யனுகுதல் - தானே ஆன்மாவாக விளங்குதல். எண்மை அன்று - எளிது அன்று. எண்மையன்றென்பது, அன்று எண்மையென மாறி நின்றது. (கங)

### இட்டலிங்க வழிபாடு செய்பவன் ஏற்றமுளான் எனல்

புண்ணிய முதிர்வினுற் பொருந்தி அங்கையில்
கண்ணுற நிகழ்வுறு சிவலிங் கத்தினை
எண்ணிய மனமுடன் என்றும் வந்தனை
பண்ணிய முயல்பவன் பத்தன் என்பவே.

(அ - ரை) புண்ணியம் - அறம். முதிர்வு - (செய்து செய்து) உயர்தல். அங்கையில் - உள்ளங்கையில். கண்ணுற - நேராக. எண்ணிய மனமுடன் - மறவாதவுள்ளத்துடன். வந்தனை பண்ணிய - வழிபாடு செய்ய. பத்தன் - அன்பன். (கச)

### இட்டலிங்க வழிபாடு ஆணவத்தை அகற்றுமென்றல்

ஆவுறு பிணிகெட ஆவின் பால்கறந்
தாவினை ஊட்டல்போல் ஆண வங்கெட
ஆவியுள் அமலனை அங்கை தந்துபின்
ஆவியுள் அமைவுற ஆக்கும் ஆரியன்.

(அ - ரை.) ஆ உறு பிணிகெட - ஆன் (பசு) கொண்டுள்ள நோயானது நீங்க. ஆவியுள் அமலன் - உயிரிற் பிரிவற நின்ற சிவபெருமான். அங்கை தந்து - உள்ளங்கையில் வரவழைத்து. (கரு)

### இட்டலிங்கம் அகமும் புறமும் இலங்குதல்

கருங்கொடி இருவிழிக் கண்ணும் ஓர்மணி
திரிந்திடு செயலெனத் திரிதல் இன்றியே
பொருந்துறும் அகமொடு புறமும் தீர்வற
இருந்திலை குறுமருள் இட்ட லிங்கமே.

(அ - ரை.) கருங்கொடி - கரிய காக்கை. ஓர்மணி - ஓரே மணி. திரிதல் இன்றி - மாறுபாடில்லாமல். அகமொடு புறம் - உள்ளொடு வெளியும். தீர்வுஅற - நீக்கமில்லாமல். இருந்து - பொருந்தி. இலகுறும் - விளங்கும். காக்கையின் இருவிழிக்கும் ஓரே மணி கலந்து தொழிற்படுவதுபோல, இட்டலிங்கம் உள்ளும் புறமும் விளங்குமெனக் கொள்க. 'காகத்திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர், ஆகத்துள் ஓருயிர் கண்டனம்' என்னும் திருக்கோவையார் கருத்தும் ஒப்பு நோக்குக. (கசு)

## இட்டலிங்க இயல்பு.

குறிபல பலமுறை கொண்டு பல்வகைப்
பொறிதொறு மருவியொண் புலன்நு கர்ந்துமாய்த்
தறிவரு நிலையவா தார மேவியும்
நிறைவுறும் அங்கையின் நிகழும் இட்டமே.

(அ - ரை.) குறிபல - குறிக்கப்பெறும் பலவகைப்பெயர்களை. பல்வகைப் பொறி - ஐவகைப் பொறி. புலன் - ஐவகைப் புலன். அவை : மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவும், அவற்றின் அறிவும். அறிவருநிலைய - அறிதற்கரிய நிலைகளையுடைய. ஆதாரம் மேவியும் - பற்றுக்கோட்டை யடைந்தும். இட்டம் - இட்டலிங்கம்: ஆகுபெயர்.

நாசியில் ஆசாரலிங்கப் பெயருடன் மணத்தையும் நாவில் குருலிங்கப் பெயருடன் சுவையையும் காதில் பிரசாதலிங்கப் பெயருடன் ஒலியையும் உள்ளத்தில் மகாலிங்கப் பெயருடன் செய்திகளையும், விழியில் சிவலிங்கப் பெயருடன் உருவங்களையும் உடலில் சங்கமலிங்கப் பெயருடன் ஊற்றையும் நுகர்தலாகிய பொருளைக் குறிப்பாலுணர்த்தியவாறு. இதன் விரிவை வீரசைவ தத்துவ நூல்களில் விரிவாகக் கண்டுணர்க. (கஎ)

## இட்டலிங்கம் வினைவலி தொலைத்தல்

அடைந்துள உருச்சுவை அமைதி என்பன
உடம்பொரு மூன்றினும் உற்ற டைந்திடும்
தொடர்ந்துள வினைவலி தொலைத்தி யானெனும்
இடும்பையில் இன்பருள் இட்ட லிங்கமே.

(அ - ரை.) உரு - வடிவம். சுவை - உணர்வு. அமைதி - அமைவு; இருப்புநிலை. மூன்று உடம்பு - பருமை, நுண்மை, முதல் உடல்கள்; இவை: தூல, சூக்கும, காரணம் என்னும் மூன்றுடம்பு. இடும்பை இல் - துன்பம் இல்லாத. (கஅ)

## மாயையை வென்றவன்

என்றறி வறவறிந் திட்ட லிங்கமாம்
ஒன்றொரு பொருளிலே உறவி ழித்தவன்
பொன்றுறு சகமெனப் புணர்ந்த மாயையை
வென்றவன் அவனென விளம்பும் வேதமே.

(அ - ரை.) அற அறிந்து - முழுதும் நன்குணர்ந்து. ஒன்று ஒரு பொருள் - ஒப்பற்றவொரு பொருள். பொன்றுறு - அழியத்தக்க. சகம் - உலகம். புணர்ந்த - ஒன்றுபட்டு நின்ற. வென்றவன் - வெற்றி பெற்றவன். (கூ)

## பரமனையிருத்தும் பத்தன்

பொருவில்சற் பத்தியாம் தாரம் பூண்டொரு
வரவயி ராகமாம் வத்தி ரம்புனைந்
தொருவலில் உணர்வெனும் செச்சை ஒன்றுறப்
பரமனை இருத்துவோன் பத்தன் ஆகுவான்.

(அ - ரை.) பொருவுஇல் - ஒப்பில்லாத. சற்பத்தி-நல்ல அன்பு. தாரம் - முத்துமாலை. பூண்டு - அணிந்து. வரவயிராகம் - மேலான வைராக்கியம் : உறுதி. வத்திரம் - ஆடை. ஒருவல்இல் - நீங்காத. உணர்வு-உண்மையறிவு. செச்சை-இடுப்பில் கட்டுங் கச்சு. ஒன்றுற - பொருந்த. பரமனை இருத்துவோன்-இறைவனைத் தன் நெஞ்சகத்தே தவறாது நிலைபெறச் செய்வோன். (உ0)

## இட்டலிங்கப் பற்றால் சிவமயமாவன் எனல்

ஒன்றினொன் றுள்ளுற உடம்பு மூன்றையும்
மன்றநல் வத்திர மடிய தாக்கியே
என்றுமங் கமைவுற இட்டம் வைப்பனேல்
அன்றவன் சிவமயம் ஆகும் என்பவே.

(அ - ரை.) ஒன்றின் ஒன்று - ஒவ்வொன்றிலும் ஒன்றாக. உள்ளுற - உள்ளாகப் பொருந்த. உடம்பு மூன்றையும் - உடல் மூன்றினையும். மன்ற - உறுதியாக. வத்திர மடியதாக்கி - வேட்டி மடிப்பைப்போல் மடித்து. இட்டம் - இட்டலிங்கம். சிவமயம் - சிவ வடிவம். 'மன்ற வென்கிளவி தேற்றம் செய்யும்' என்பது தொல்காப்பியம். ஆதலால், மன்ற-உறுதியாக, தெளிவாக எனக்கொள்க. ()

### சிவத்தொண்டன் இத்தன்மையன் எனல்

அருளெனும் புனலினை ஆட்டிச் சாந்தமாம்
வரைநறும் சந்தொடு மருவ இந்திய
விரைமலர் புனைந்தறி வினைய ருத்துறில்
பரமனை அவன்சிவ பத்தன் ஆகுவான்.

(அ - ரை.) புனல் - நீர். சாந்தமாம்-அமைதியென்னும். சந்து - சந்தனம். மருவ - பொருந்த. இந்திய விரைமலர் - ஐம்பொறிகளாகிய மணந்தங்கிய மலர். அறிவினை - தனதறிவை. பரமனை அருத்துறில்- இறைவனை உண்ணுமாறு செய்தால், அவனே சிவத்தொண்டன் எனப்படுவான். புனல், சந்து முதலியன உருவக அணி. (உஉ)

### இறைவன் ஒருவன் அன்பையே விரும்புவன் எனல்

ஆசறு மனத்தெழும் அன்பை அன்றியே
பூசனை உவக்கிலன் புராரி சென்னிமேல்
வீசுறு திரையினும் மிக்க தோசெலாய்
ஊசல்செய் மனமுடை ஒருவன் ஆட்டுநீர்.

(அ - ரை.) ஆசு அறு - குற்றமற்ற. பூசனை - பூசை; வழிபாடு. உவக்கிலன் - விரும்பான். புராரி-இறைவன். ஊசல்செய்-ஊஞ்சலைப் போல் அலைதலைச் செய்கின்ற. ஆட்டுநீர்-முழுக்காட்டுகின்ற நன்னீர். இறை வழிபாட்டிற்கு அன்பும் மனவொருமையும் வேண்டுமென்பது கருத்து. (உங)

### இறைவனை வழிபடுவோர் இறைவனே எனல்

பூப்புனை கையுமெம் புனிதன் தன்புகழ்ப்
பாப்புனை நாவுமே படைத்து ளான்தனைச்
சேப்புனை கொடியுடைத் தேவ னேயென
நாப்புனை புகழொடு நாகர் ஏத்துவார்.

(அ - ரை.) பூப்புனை - பூவினை அணிகின்ற. புனிதன்-இறைவன். பாப்புனை-பாவினைப் பாடி வணங்குகிற. சேப்புனை-விடை உரு எழுதப் பட்ட. நாப்புனை புகழொடு - நாவினுற் புனைந் துரைக்கப்பட்ட புகழோடு. நாகர் - தேவர். ஏத்துவார் - வணங்குவார். (உச)

### இறை வழிபாடு செய்யாதவரினும் குரங்கு சிறந்ததெனல்

பூசனை செயாதகை புராந்த கன்புகழ்
பேசுதல் இலாதவாய் பெற்று முற்றும்
நீசரா னவர்தமில் நெடுவ னத்திடைக்
கூசுதல் இலாதபுன் குரங்கு நன்றரோ.

(அ - ரை.) உழன்றிடும் - பலவகைச் செயல்களினும் அலையும். நீசர் - இழிந்தவர். கூசுதல் இலாத - நாணமில்லாத. புன்குரங்கு - இழிந்த குரங்கு. நன்று - நற்பண்புடையதாம். கைவாய் என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. (உ௪)

## தான் உண்பவற்றை இறைவனுக்கே படைப்போனை வினை அணுகா

குடிப்பன விழுங்குவ கூரெயிற்றினால்
கடிப்பன நக்குவ அனைத்தும் கைம்மலர்
அடுத்துள சிவன்தனக் கர்ப்பித் துண்பவன்
விடுத்தவன் மேல்வரும் வினைகள் யாவுமே.

(அ - ரை.) குடிப்பன - நீர்போன்ற குடிப்பவை. கூர்எயிறு - கூரிய பற்கள். கடிப்பன - பல்லாற் கடித்துண்பன. அர்ப்பித்து - படைத்து. மேல்வரும் - இனிமேல் உண்டாகின்ற. அர்ப்பித்து உண்பவன் மேல்வரும் வினைகள் யாவும் விடுத்தவன் என்க. (உ௫)

## யான், எனது எனும் பற்றற்றோன் இறைவனே எனல்

தானுறும் உடல்மனம் தனமென் றுள்ளவை
ஈனமில் குருசிவ சரங்கட் கீந்துதான்
யானெனை தென்குதல் இன்றி வைகுவோன்
மேனிகழ் சிவமொடு வேற லானரோ.

(அ - ரை.) தான் உறும் - ஒருவன் அடைந்த. தனம் - பொருள். ஈனம் - குற்றம். குருசிவ சரங்கட்கு - குருலிங்க அடியார்கட்கு. யான் எனது - யான் என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும். வைகுவோன் - இருப்பவன். (உ௬)

## ஆசிரியர் முதலியோர்க்கு ஈந்த பொருளை மீண்டும் பெற எண்ணுவோன் கொடியன் எனல்

குருசிவ சரங்கோளக் கொடுத்த மெய்ம்மனம்
பொருளிவை நாமெனப் புந்தி செய்துகொள்
ஒருவனில் வழிமறித் தொறுத்துக் கொள்வன
சவரனி நல்லன்மெய் தவறி லாமையால்.

(அ - ரை.) குரு - ஆசிரியன். சிவசரம் - சிவனடியார்கள். மெ நல்லன - நற்புடையன என்று. சவரன் - வேடன். மெய்தவறிலாமையால் - உண்மை தவறாதபடியால். இச் செய்யுள், 'வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும், கோலொடு நின்றான் இரவு' என்னும் திருக்குறட் கருத்தைத் தழுவியது. (உ௭)

சிவனடியார்க்கு வேண்டுவன வேண்டாதன இவை எனல்

விடுவன காமம்வெவ் வெகுளி மாலிவை
தொடுவன குருசிவ சரங்கள் தொல்பவம்
கடுவென வெருவிய கருத்து ளார்க்கிவண்
அடுவன ஐம்புலன் அட்ட ஆற்றலாய்.

(அ - ரை.) விடுவன - விட்டுவிடக் கூடியவை. காமம் - விருப்பம். வெகுளி - சினம். மால் - மயக்கம். தொடுவன - கொள்ளத் தக்கன. தொல்பவம் - பழைய பிறப்புக்கள்; தொன்றுதொட்டு வரும் பிறப்பு. கடு - நஞ்சு. வெருவிய - அஞ்சிய. இவண் - இவ்வுலகு. அடுவன - அழிக்கத்தக்கன. புலன் அட்ட - ஐம்புலன்களையும் வென்ற. (௨௯)

இட்டலிங்கத்தைப் போற்றுதவர் சிறப்பற்றவர் எனல்

அங்கையின் அமர்தரும் அரனை விட்டொரு
வெங்கட வுளர்தமை விழைந்து போற்றுவார்
கங்கையை அகன்றுவர்க் கழியின் மூழ்குநர்
தங்களின் வேறலர் தரும மூர்த்தியே.

(அ - ரை.) அங்கை - உள்ளங்கை. அமர்தரும் - எழுந்தருளியிருக்கின்ற. வெங்கடவுளர் தமை - அருளில்லாத வேறு தேவர்களை. விழைந்து - விரும்பி. உவர்க்கழி - உப்பங்கழி. தரும மூர்த்தியே - அறத்தின் வடிவான வசவண்ணனே. (௩௦)

தூய்மையுடையவனே இறைவனுக்கு அன்பன் எனல்

மோகமில் குருசர முனியின் முன்னுள
தாகிய செயிர்முழு தகன்று வண்துறை
போகிய மடியெனப் புனிதன் ஆகுமேல்
பாகியல் மொழியுமை பாகற் கன்பனும்.

(அ - ரை.) மோகம் இல் - மயக்கம் இல்லாத. குருசர முனியின் முன் - குருலிங்க அடியார் முன்பாக. உளதாகிய - தொன்று தொட்டுள்ள. செயிர் - குற்றம். வண்துறை போகிய மடியென - வளப்பம் பொருந்திய நீர்த்துறையில் தவைக்கப்பெற்ற அழுக்கற்ற ஆடையைப் போல. வேறு பொருள் கூறுவாரும் உளர். பாகு இயல் - பாகைப் போல் பொருந்திய. (௩௧)

அடியார்களை இகழாதவனே இறைவன் அன்பன் எனல்

கின்னரு நற்சிவ வேடத் தோர்பொருள்
கொள்ளைகொள் கிற்பினும் குறைகள் கூறினும்
பிள்ளையை அறுப்பினும் பிழைகள் செய்யினும்
எள்ளுதல் இலனெனில் ஈசற் கன்பனும்.

(அ - ரை.) விள்ளரு - சொல்லுதற்கரிய. பொருள் - பிறர் செல்வப் பொருள்களை. பிள்ளை - இளங்குழந்தை. பிழைகள்-பற்பல குற்றங்கள். எள்ளுதல் - இகழுதல். (கஉ)

சிவனடியார்களிடத்தில் குலம் முதலிய வேறுபாட்டைக் கருதியவன் அளற்றில் அழுந்துவான்

சங்கமம் தனக்கொரு சாதி உன்னினன்
அங்கையின் அமர்தரும் அரற்கு முன்னினன்
சங்கர னெடுசரந் தம்மில் வேறெனும்
அங்கவன் அறிவரும் அளற்ற முங்குவான்.

(அ - ரை.) சங்கமம் தனக்கு-அடியார்கட்கு. சாதி உன்னினன் - சாதி வேற்றுமையைக் கருதினோன். சரம் - இயங்குகின்ற சிவமாகிய அடியார்கள். அறிவரும்-அறிதற்கரிய அளறு-சேறு; சேறு போன்ற நரகம். அழுங்குவான்-அமிழ்ந்துவான்; சேர்வான்-வருந்துவான். ()

அடியவர்கட்கு ஆக்கும் உணவே அமிழ்தம் எனல்

தலைமைகொள் குருசிவ சரங்கட் காகவே
உலையிடும் அரிசியன் றோங்கல் மத்தெறி
அலையமு தாந்தபக் காக ஆக்குறில்
கொலைசெயும் நஞ்சினும் கொடிய தாகுமால்.

(அ - ரை.) தலைமைகொள் - சிறப்பையுடைய. அன்று - அந்நாளில். ஓங்கல் மத்தெறி-மலையாகிய மத்தை யெறிந்து கடைந்த. கன்னாட்டில் பலவிடங்களில் குருலிங்க சங்கமங்கருதி மூன்றுபிடி அரிசி உலையில் இட்டுப் பின்னர்ப் பெய்யும் வழக்கம் இன்றும் காணலாம். "தமக்கென் றுலையேற்றார் தம்பொருட்டுண் கொள்ளார்" என்னும் ஆசாரக்கோவைக் கருத்தும் இதனோடு ஒப்பு நோக்கத்தக்கது. (கச)

நற்செயல் உள்ளான் பிறர் பிறவியை நீக்குவோன் எனல்

தனுவுள அளவுமோர் தகுநற் செய்கையும்
மனமுள அளவும்பா வனையும் ஞானமுண்
டெனவுள அளவுஞே யமுமி யைந்தவன்
பினையுள அளவுநோய் பிறர்க்க கற்றுமே.

(அ - ரை.) தனு - உடல். பாவனை-மனவழிபாடு. உள அளவும் - இருக்கும்வரை. ஞேயம் - அன்பு. பினை - பின்னை; பின்பு. நோய் - பிறவியாகிய நோய். பிறர்க்கு - தன் தொடர்பற்றவர்க்கு. அகற்றும் - ஒழிப்பான். (கரு)

உள்ளத்தில் இறைவனையே அமர்த்தவேண்டும் எனல்

ஈசனை இருத்துறும் இதயத் தோர்பொருள்
ஆசையை அருத்துதல் அந்த ணாளர்தாம்
வாசமுற் றிடுமொரு மனையிற் புன்செயல்
நீசரை இருத்துதல் நிகர்க்கும் என்பரால்.

(அ - ரை.) இதயத்து - உள்ளத்தில். பொருள் ஆசை - பொருள்களின்மேல் வைக்கும் பேரவா. அந்தண் ஆளர் - அழகிய தண்ணருளை ஆள்வோர்; பேரருளாளராகிய பெரியார். வாசம் உற்றிடும் - தங்கியிருக்கும். புன்செயல் - இழிந்த செயல். நீசர் - அறிவற்ற கீழோர். நிகர்க்கும் - ஒப்பாகும். (கசு)

அழுக்குள்ள மனத்தில் இறைவன் தங்கான் எனல்

சினமுத லியமயல் தீர மாற்றுபு
வினைதபு வாய்மையாம் மெழுக்கை அன்பெனும்
புனலொடு விரவியே பூசின் அல்லது
மனமெனும் மனையிடை வராதி லிங்கமே.

(அ - ரை.) மயல் - அழுக்குகளை. தீர மாற்றுபு - ஒருங்கே தொலைத்து. வினைதபு - வினைகடந்த. வாய்மையாம் மெழுக்கை - உண்மையறிவு என்னுஞ் சாணத்தை. அன்பு எனும் புனலொடு - அன்பாகிய நீருடன். விரவி - கலந்து. பூசின் அல்லது - மெழுகினாலன்றி. இலிங்கம் - இறைவனின் இட்டலிங்க உருவம். (கள)

அடியார்கள் மங்கையர் அழகையும் பொருளையும் விரும்பலாகாதெனல்

காலமும் கருமமும் கடந்த காரணன்
பாலுறும் பரிசறப் பார்ம டந்தையர்
கோலமும் பொருளையும் குறித்து நச்சுநர்
சீலமும் விரதமும் தீய என்பரால்.

(அ - ரை.) காலமும் கருமமும் - காலத்தையும் எத்தொழில்களையும். பரிசு அற - அன்புநீங்க. பார்மடந்தையர் - நிலவுலகிலுள்ள பெண்கள். கோலம் - அழகு. குறித்து - பற்றி நச்சுநர் - விரும்புவோர். சீலமும் - நல்லொழுக்கமும். விரதமும் - நோன்புகளும். (கஅ)

**தீச்செயலினர் கையில் இறைவன் இருப்பினும் கிட்டான் எனல்**

வெங்கொலை களவுபொய் வெகுளி ஆசையெனுந்
தீங்கிவை யொருமரீஇ இருந்தி னோர்தமக்
கங்கையின் நெல்லிபோல் அவிர்ச டைப்பிரான்
செங்கையில் இருப்பினுஞ் சேயன் சேயனே.

(அ-ரை) மரீஇ இருக்கின்றார் தமக்கு - பொருந்தியிருப்பவர்களுக்கு. அங்கையின் நெல்லி - உள்ளங்கையில் நெல்லிக் கனி. அவிர் சடைப்பிரான் - விளங்குகின்ற சடையையுடைய கடவுள். சேயன் - தூரத்திலிருப்பவன். (கக)

**அடியார்கள் அன்பர்கள் எதையும் விரும்பார் எனல்**

பத்தரைப் புவியுறப் பணிய உண்டவர்
வைத்தன கொளவுடன் மருவப் பெற்றவர்
சித்தியுங் கடவுளர் சிறப்பும் வேறொரு
முத்தியும் பொருளென முன்னு றார்களால்.

(அ-ரை) பணியவுண்டவர் - பணியப்பெற்றவர். வைத்தன - வைத்துள்ள பொருள்களை. மருவப்பெற்றவர் - பொருந்தியிருக்கப் பெற்றவர். சித்தியும் - எண்வகைப் பொருட்பேறுகளையும். முத்தியும் - வீடுபேற்றையும். முன்னுறார்கள் - எண்ணமாட்டார்கள். (உ)

**அல்லமர், அங்குள்ள அடியார் அறியவே வசவண்ணர்பால் கூறினர் எனல்**

இன்னண நன்னெறி யாவும் ஆயிடைத்
துன்னிய சிவகணந் துணிந்து கொள்ளவே
மன்னவன் எனுமருள் வசவ நாயகன்
தன்னொடு புகன்றனன் தலைவன் அல்லமன்.

(அ-ரை) இன்னணம் - இவ்வாறு. துன்னிய - பொருந்திய. சிவகணம் - சிவனடியார் கூட்டம். துணிந்துகொள்ள - நன்கு தெரிந்துகொள்ள. வசவநாயகன் - வசவண்ணதேவர். தலைவன் - உயர்ந்தோன். ()

**வசவண்ணர், அல்லமரைப் போற்றிப் பணிந்து மகிழ்ச்சி மிகுதல்**

பாடினன் பரவினன் பணிந்த சொல்லுரை
ஆடினன் பன்முறை அல்ல மன்திருத்
தாடலை புனைந்தனன் தண்ட நாயகன்
நீடிய உவகையின் மூழ்கி னனரோ.

(அ - ரை.) பாடினன் - புகழ்ந்து பாடினன். பரவினன்-வணங்கினன். தாள்தலை புனைந்தனன் - திருவடிகளைத் தன் தலைமேற் சூடிக்கொண்டான். மூடிய உவகையில்-மிகப்பெருகிய மகிழ்ச்சியில். (சஉ)

அல்லமர், கலியாணபுரத்தில் எழுந்தருளியிருத்தல்

திருந்தவிவ் வகையுப தேசித் தெண்ணிலா
அருந்தவர் குழாத்தொடும் அருணந் திப்பெயர்ப்
பெருந்தகை மகிழ்வுறப் பிரிவில் ஆரியன்
இருந்தனன் மலிகலி யாணத் தென்பவே.

(அ - ரை.) திருந்த - திருத்தமாக. அருந்தவர் குழாம்-அடியவர் கூட்டம். பெருந்தகை - வசவண்ணர்; பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஆரியன் - ஆசிரியனாகிய அல்லமதேவன். மலி - வளப்பம் மிக்க. (சங)

பதினொருவது இட்டலிங்க கதி முடிந்தது

கதி கக - க்குச் செய்யுள் - அகஅ.

## கஎ. கதலிவன கதி

[இக் கதிக்கண், அல்லமதேவர் கலியாணபுரத்தில் எழுந்தருளியிருத்தலை அக்கமாதேவி அறிந்துகொண்டு அங்கடைந்து அல்லமதேவரைப் போற்றுகிறாள். அக்கமாதேவியைக் கண்ட பலரும் பலவகையாக எண்ணுகிறார்கள்; அல்லமதேவர் அக்கமாதேவிக்கு மெய்ம்மைப் பொருளை யுரைத்தருளி வாழைக்காடு என்னுமிடத்திற் சென்று அருளுரையின் மெய்ம்மைப்பொருளை நடைமுறையில் காண்பாயாக வென்று உரைத்தருளுகின்றார்; அக்கமாதேவியும் அவ்வாறே திருச்சைலத்திலுள்ள வாழைத்தோட்டத்தை (கதலிவனத்தை) யடைகிறாள் என்னுஞ் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

வரையிற் புண்ணிய வனத்தினில் வளங்கெழு நதியின்
கரையிற் பன்னெடு நாளருட் குரவனைக் காண்பான்
திரிதற் குற்றுலாய் வந்துமா தேவிகல் யாண
புரியிற் கண்டுவந் தேகிய முறையினிப் புகல்வாம்.

(அ-ரை.) வரை-மலை. புண்ணியவனம்-அறமமைந்த காடுகள். வளம்கெழு-செழிப்பு மிகுந்த. நதி-ஆறுகள். அருட் குரவன்-அருள் மிக்க ஞானகுரு. காண்பான்-காணும்பொருட்டாக: 'பான்' என்னும் விகுதி பெற்ற எதிர்கால வினையெச்சம். திரிதற்குற்று-திரியத்துணிந்து. உலாய்வந்து-உலாவிக்கொண்டு வந்து. கண்டு உவந்து ஏகிய-பார்த்து அருளுரை பெற்று மகிழ்ந்து சென்ற. (க)

### அக்கமாதேவி கலியாணபுரம் சேர்தல்

காட்டி னும்பெருங் குன்றினும் தேடினள் காணாள்
வாட்டு றும்பிறப் பெனும்பிணி மாய்வுற வீட்டில்
கூட்டு நன்மருந் திருப்பதை அறிஞராற் கூறக்
கேட்டு வந்துமா தேவியந் நகரினைக் கிடைத்தாள்.

(அ-ரை.) குன்று-மலைகள். தேடினள் காணாள்-தேடிக் காணாள்: முற்றெச்சம். வீட்டிற் கூட்டும்-வீடுபேற்றில் சேர்க்கின்ற. நல்மருந்து-நல்ல மருந்து போல்வாராகிய அல்லமதேவர். மருந்துபோல்வாரை மருந்தென்றது ஆகுபெயர். நகரினை-கலியாணபுரத்தை. கிடைத்தாள்-சேர்ந்தாள். (உ)

### அக்கமாதேவி கலியாணபுரத் தெருவில் புகுதல்

தலையில் வெண்கலை ஒன்றுற வெற்றரை சமைத்துப்
பலிகொ ளும்படி மனைதோறும் உலகெலாம் பழிச்ச
அலம ரும்பரற் கினியவள் வெற்றரை யாய்க்கட்
புலன்வி ருந்துறுங் கடிநகர் வீதியுட் புகுந்தாள்.

(அ - ரை.) வெண்கலை - வெள்ளிய ஆடை. ஒன்றுற-பொருந்த. வெற்று அரை - ஆடையணியாத இடை. பலிகொளும்படி - ஐயம் ஏற்பதற்காக. பழிச்ச - ஏத்திவணங்க. அலமரும் - சுற்றுகிற. பரற்கு - சிவபெருமானுக்கு. கட்புலன் விருந்துறும் - கண்ணறிவு விருந்தாக உண்டலைச் செய்கின்ற. கடிநகர் - காவலுள்ள நகர்.

அக்கமாதேவி அரையில் ஆடையின்றிக் கலியாணபுர வீதியுட் புகுந்தாள் என்க. (௩)

### கண்ட நகரமக்கள் பித்துடையாள் எனக்கருதுமாறு சென்றாள் எனல்

நாற்கு ணங்களுள் முதற்குணம் ஆகிய நாணைத்
தீர்க்கும் இம்மடம் உடையவள் யார்கொலோ தெரியேம்
பார்க்கில் இன்னவள் பித்துடை யாளெனப் பலரும்
நோக்கும் வண்ணம்வந் துற்றனள் உலகியல் நோக்காள்.

(அ - ரை.) நாற்குணம் - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நால்வகைப்பண்புகள். மடம் - பேதைமை. கொல் : ஐயப் பொருளது. பித்து உடையாள் - அறிவு மயங்கியவள். உலகியல் - உலகப் பழக்கவழக்கங்கள்.

நாணம் பெண்மக்கட்கு இன்றியமையாதது. இதனை, 'உயிரினுஞ் சிறந்தன்று நாண்' என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார். இதை மணிமொழிப்பெருமான், தாம் அருளிய திருக்கோவையார்த் திரு நூலில் தலைவி கூற்றாக அமைத்து, 'என்றும் வளர்ந்த பொற்பார் திரு நாண்' எனப் போற்றி யுரைப்பர். ஆகலின், 'முதற்குணமாகிய நாண்' என்றார். (௪)

### வசவண்ணர் திருமடத்தை அடைதல்

உலகு ளார்தமைப் பேதையென் றுணர்ந்தன ளோதான்
உலகு ளார்தனைப் பேதையென் றுணர்குவர் என்றோ
உலகு ளார்தமை நாணிலள் நீங்கிய உடையாள்
உலகு ளார்தொழும் தண்டநா யகன்மடத் துற்றாள்.

(அ - ரை.) உலகுளார் தமை-உலகத்தில் இருப்பவர்களை. பேதை என்று - அறிவில்லாதவர் என. நாண் இலள் - நாணம் இல்லாதவளாய்: முற்றெச்சம். நீங்கிய உடையாள்: ஆடையில்லாதவளாகிய அக்கமாதேவி. ஆடையின்றி இருத்தல் உலகியலோடொவ்வாதென்பதைக் குறிக்க, 'நீங்கிய உடையாள்' என்றார். (௬)

அல்லமதேவரைக் கண்டு வணங்குதல்

தண்ட நாயக னொடுபலர் நெருங்குறத் தவிசின்
அண்ட நாயகன் அல்லமன் வீற்றிருந் தருளக்
கண்டு போயரு கிறைஞ்சினள் ஆண்டமர் கணங்கள்
பண்டு தாமறி யாவியப் படைந்தனர் பார்த்து.

(அ - ரை.) தண்டநாயகனொடு - வசவண்ணருடன். பலர்-அடியார்கள. தவிசு - உயர்இருக்கை; ஆசனம். அண்டநாயகன் - அண்டங்களுக்குத் தலைவன். ஆண்டு - அவ்விடத்தில். அமர்கணங்கள் - எழுந்தருளியிருந்த சிவனடியார் திருக்கூட்டம். பண்டு - இதற்குமுன். (௭)

பிறவிப்பிணிக்கு அஞ்சினேன் அருள்க எனல்

நெஞ்சம் ஆரழல் அரக்கென நெக்குநெக் குருகச்
செஞ்சொல் வாய்தடு மாறவாள் விழிபுனல் சிந்தக்
கஞ்ச நாள்மலர்க் கைதொழு தனங்கன்நோய் காணுள்
அஞ்சி னேன்பவப் பிணியினி அருள்செயென் றழுதாள்.

(அ - ரை.) ஆர்அழல் - மிகுந்த தீ. நெக்கு நெக்கு உருக - நைந்து நைந்து கசிய. செஞ்சொல் - இனிய சொற்கள். வாய் தடுமாற - வாயினின்றும் நன்கு வராது தத்தளிக்க. கஞ்ச நாள் மலர் - அப்பொழுது மலர்ந்த தாமரை மலரைப்போன்ற. அனங்கன் நோய் - மன்மதனால் வருகின்ற காமமயக்கம். காணாள் - அறியாதவளாகிய மாதேவி. பவப்பிணி - பிறவிநோய். (௭)

அக்கமாதேவி அருள்பெறத் தக்காள் என அல்லமர் கருதல்

வீடு வப்பவர் ஆணெனப் பெண்ணென வேறே
ஏட லர்க்குழல் உமைகலை யேயிவள் இவள்போல்
நாடு றிற்பரு வம்பெறும் அவரிலை ஞானம்
கூடு தற்குரி யாளென அல்லமன் குறித்தான்.

(அ - ரை) வீடு உவப்பவர் - வீடுபேற்றை விரும்புபவர். ஏடு அலர் - இதழ்கள் அலர்ந்த குழல்-கூந்தலையுடையாள் ஆகிய மாதேவி. உமைகலை-அம்மை சாயலின் ஒரு பகுதியே. நாடு உறில்-தேடிவருவோமானால். பருவம் - தக்கநிலை (பக்குவம்). குறித்தான்-கருதினான். (அ)

## அக்கமாதேவியின் மெய்யறிவை யாவரும் வியத்தல்

தான லாதொரு பொருளிலைச் சகமென என்னும்
ஞான வேலாற் காமனின் பந்தனை நண்ணுள்
தான லாதர வால்தனைத் தழுவியின் புறுநர்
ஏனை மாந்தருள் உளர்கொலோ என்றனர் இருந்தார்.

(அ - ரை.) தான் அலாது - தன்னைத்தவிர. சகம்என - உலகம் என்று. நண்ணுள் - அடைந்திலள். நல் ஆதரவால் - நல்ல அன்பினால். தனை தழுவி இன்புறுநர் - தம்மைத்தாமே உணர்ந்து ஒருதன்மைப்பட்டு இன்பமடைவோர். ஏனை மாந்தர்உள் - இவளல்லாத மக்களினத்தில். உளர் கொல் - உண்டோ. இருந்தார் - அங்கிருந்த அடியார். (௯)

## அக்கமாதேவி காமனை வென்றவள் எனல்

இன்று காமனை வென்றவள் இனையளா ரயிழையோ
டொன்று மேனியன் ஆகிய கண்ணுதல் ஒருவன்
வென்று ளானென உலகினில் எடுத்தசொல் மெய்ம்மை
அன்று போலுமென் றியம்பினர் சிலரவண் அமர்ந்தோர்.

(அ - ரை) இன்று - இக்காலத்தில். இனையாள் - இத்தகையவளாகிய இவளொருத்தி. ஆயிழையோடு - ஆராய்ந்து செய்யப்பட்ட அணிகலன்களையணிந்த இறைவியோடு. ஒன்று மேனியன் - கூடிய திருவுருவினனாகிய இறைவன். கண்நுதல் - நெற்றிக்கண்ணினை யுடைய. ஒருவன் - உவமை இல்லாதவன். (௧0)

## இவள்போன்று பற்றற்றவர்க்கே தீவினை கெடுமெனல்

உடல மானமற் றியவளென அனைத்தையும் ஒருங்கு
விடவ லார்க்கலால் இளமையும் செல்வமும் விரும்பி
நடலை வாழ்வினில் வெறுப்புறுப் புல்லிய நரர்க்குத்
தொடரு மாவினை தொலையுமோ எனச் சிலர் சொன்னார்.

(அ - ரை.) உடலமானம் - உடற்பற்று. அனைத்தையும் - எல்லாவற்றையும். நடலை வாழ்வு - துன்ப வாழ்க்கை. புல்லிய நரர்க்கு - இழிந்த மக்கட்கு. தொடரும் - தொன்றுதொட்டு விடாது பின்பற்றுகின்ற. மாவினை - பெரிதாகிய நல்வினை தீவினைகள். (௧௧)

## அல்லமர் அக்கமாதேவிக்கு அருளுரை வழங்க நினைதல்

சென்று தேடிநாம் தத்துவம் அருள்செயும் சீடர்
அன்றி ஞானதே சிகனுறா னேஎன ஆய்ந்திட்
டின்று மேவுமா தேவிபோல் இலையென எம்மான்
நின்ற ஞானமு ளந்தனை உணர்த்துவான் நினைந்தான்.

(அ - ரை.) தத்துவம் அருள்செயும் - மெய்யறிவை உணர்த்தும். சீடர் - மாணவர்; ஞானநிலை பயில்வோர். ஞானதேசிகன் - ஞானாசிரியன். மேவும் - இங்கு வந்த. ஞானமூலந்தனை - மெய்யறிவுக்கு மூலப் பொருளாயிருப்பதை. உணர்த்துவான் - புகட்டுதற்கு: வினையெச்சம். (கஉ)

பூதம் பொறி முதலியன நீ அல்லவெனக் கூறல்

பூதம் நீயலை பொறிகளும் அலையலை புந்தி
ஏதும் நீயலை இவற்றினை மயங்கியான் என்னும்
போதம் நீயலை என்றிவை அனைத்தையும் போக்கிச்
சோதி ஆகிய பிரமமே நீயெனச் சொல்லி.

(அ - ரை.) பூதம்: மண், தீ, நீர், காற்று, விண் என்னும் ஐம்பெரும் பொருள்கள். பொறி: மெய், வாய், கண், மூக்கு, காது என்னும் ஐவகைப் பொறிகள். போதம் - அறிவு. சோதி - ஒளி. பிரமம் - மெய்யறிவால் உணரும் உண்மைப்பொருள். (கஙூ)

உண்மைப் பொருளினை யுரைத்தல்

ஞேய ஞானஞா துருவெனும் இவைபல நிற்கும்
ஆயின் வேறறு முத்தியன் றதுசகம் ஆமென்
றேயும் ஆறிது அதுவெனும் சுட்டிலா இயல்பை
மாயை மாறிய தேவிபால் அருளினன் வள்ளல்.

(அ - ரை.) ஞேயம்-அறிபொருள், ஞானம் - அறிவு. ஞாதுரு - அறிபவன். வேறு அறு முத்தியன்று - ஒன்றுபட்ட வீடுபேறு அன்று. ஏயுமாறு - பொருந்தும் வண்ணம். இது அது என்னும் - இப்பொருள் அப்பொருள் என்று குறித்துக்காட்டி. மாயை மாறிய - மாயைத் தொடர்பு நீங்கிய. தேவிபால் - அக்கமாதேவி இடத்து. (கச)

அக்கமாதேவி அல்லமதேவரைப் போற்றுதல்

தேறு நீரென எனதுளந் தெளித்ததே சிகநைம்
மாறு காண்கிலேன் உடல்பொருள் ஆவிகள் மதிப்பில்
வேறு போய்நின ஆயின என்றவள் விழிகள்
ஊன்று நீரொடும் அல்லமன் தாள்தொழு துளைந்தாள்.

(அ - ரை.) தேறுநீர் என - தேற்றாங்கொட்டையால் மாசு போக்கித் தெளிவித்த நீரைப்போல. உளம்தெளித்த - உள்ளத்தைத் தெளிவுபடுத்திய. கைம்மாறு - எதிர் உதவி. வேறுபோய் - வேறு என்னுந் தன்மை நீங்கி. நின ஆயின - உன்னுடையனவைகளாயின. விழிகள் ஊறும் நீர் - கண்களினின்று ஊற்றெடுத்து வருகின்ற அன்பு இன்பக் கண்ணீர். உளைந்தாள் - வருந்தினாள். (கஇ)

தான் உரைத்த அருளுரையை நடைமுறையிற் காண்பாய் எனல்

அன்னை நீயினிக் கதலிமா வனத்தினை அடைந்திட்
டென்னை மேவினை கேட்டவிப் பொருளினை எல்லாம்
நின்னின் நீதெளிந் துறுதிகொள் நிதித்தியா சனத்தின்
மன்னு வாயென ஏவினன் தற்கொடை வள்ளல்.

(அ - ரை.) என்னை மேவினை - என்னையடைந்து. நின்னில் - உனக்குள். நிதித்தியாசனத்தில் - முழுதும் தெளியும் நிலையில். மன்னுவாய் - நிலைபெறுவாய். தற்கொடை வள்ளல் - அடைந்தார்க்குத் தன்னையே வழங்கும் வள்ளன்மையுடையவன். 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார், என்பும் உரியர் பிறர்க்கு' என்பது வள்ளுவர் வாய்மொழி; தமக்கெனவன்றிப் பிறர்க்கென வாழும் அல்லமரை இப்பண்பு நோக்கித் 'தற்கொடை வள்ளல்' என்றார். (கக)

அக்கமாதேவி திருமலையைச் சேர்தல்

வள்ளல் நான்மலர்த் திருவடி வணங்கியம் மருங்கில்
தொன்மை மாதவர் தாள்தொழு தருள்விடை கொண்டு
வெள்ளம் ஆகிய அன்புநின் றுய்த்திட மேவித்
தெள்ளும் ஆரமு தனையவள் பருப்பதம் சேர்ந்தாள்.

(அ - ரை.) மருங்கில் - பக்கத்தில். தொன்மை - மிகுதியான. வெள்ளமாகிய அன்பு - மிகுதியான பேரன்பு. உய்த்திட - செலுத்த. தெள்ளும் - தெளிவாகிய. ஆர்அமுது - குறைவற்ற அமிழ்தம். அனையவள் - ஒத்தவளாகிய அக்கமாதேவி. பருப்பதம் - திருச்சைலம். ()

கதலிவனம் திருச்சைலத்தில் உள்ளது எனல்

வசவன் பாலருள் அல்லமன் உற்றென வானோர்
பசுவின் பானிறை சுனையிடை நழுவிவீழ் பழத்தை
மிசையும் பூங்கிளி மிழற்றுரை கடலென விரவு
இசையும் பாசிலைக் கதலியங் காட்டில் இலங்கும்.

(அ - ரை.) வானோர் பசுவின் பால் - காமதேனுவின் பால். சுனை - சிறு குளத்தில். நழுவி - கழன்று. வீழ் - விழுகின்ற: மிசையும் - உண்ணுகிற. மிழற்றுரை - சொல்லின் ஒலி. பாசிலை - பசிய இலை. (கஅ)

வாழைக்காட்டின் வளம்

விரிந்த வாழையின் நெட்டிலை மிசைநிறை மதியம்
பொருந்து மாறுவின் முழுதையும் அவித்தருள் புத்தேள்
அருந்த வாய்மடைத் தொழில்திறம் நிரம்பிய அடிசில்
சொரிந்த தாமென மனங்களி கூர்தரத் தோன்றும்.

(அ - ரை.) நெட்டிலைமிசை - நீண்ட இலைகளின் மேல். நிறை மதியம் - முழுத்திங்கள். புத்தேள் - இந்திரன். வாய்படைத் தொழில் நிதம் - பொருந்திய அட்டில் தொழிலை யேய்பாடு. அடிசில் - சோறு. சொரிந்தது - கொட்டிவைத்தது. வாழைகளின் இலைகளின்மேல் முழுத்திங்களின் கலைகள் நிறைந்து காணப்பெறுதல், இந்திரன் உண்ணும்படி வாழையிலைகளின்மேல் படைக்கப்பெற்ற உணவைப் போன்று இருக்கின்றமை என்க. வாழையிலையின் மீது சோறுபடைத் துண்பது உலக வழக்காதலினாலும், திங்களின் வெண்ணிலவு இலைகளின்மேல் விரப்பி வெண்ணிறமாக இருத்தலினாலும், சோற்றின் வெள்ளிய நிறமாகக்கொண்டு 'அடிசில் சொரிந்தது ஆம் எனத் தோன்றும்' என்றார். (கசு)

அக்கமாதேவி வாழைக்காட்டில் எழுந்தருளியிருத்தல்

இனைய வாழையங் காடுகண் டெங்கள்மா தேவி
முனிவர் வானவ ரியாவரும் முறைமுறை போற்றத்
தனிய ளாயொரு புறம்பசந் துளசுவை தருசெங்
கனிய வாவிய உவமையொடு மிருந்தனள் களித்து.

(அ - ரை.) இனைய - இத்தன்மை பொருந்திய. முனிவர் - முற்றத் துறந்தவர். வானவர் - தேவர். தனியள் - யாரும் துணையற்றுத் தன்னந் தனிமையளாக. ஒருபுறம் பசந்துஉள - ஒருபுறம் பசுமையான உமா தேவி அமையப்பெற்ற. சுவைதரு செங்கனி - அடியார்கட்கு இன்பத்தைத் தருகிற கனிபோலும் இறைவன். அவாவிய - விரும்பிய; உருவக வணி. உமையம்மை இறைவன் இடப்பக்கத்தில் வீற்றிருப்பவர் ஆதலானும், பச்சை நிறமுள்ளவராதலானும், இறைவன் 'சிவனெனும் பெயர் தமக்கேயுடைய செம்மேனிய'ராதலானும், 'ஒருபுறம் பசந்துள செங்கனி' என்றார்.

'திருவளர் பவழப் பெருவரை மணந்த, மரகதவல்லி போலொரு கூற்றின் இமயச் செல்வி பாயாது விளங்க' எனவரும் பட்டினத்தடிகள் பொருநையும் அம்மையப்பர்தம் செந்நிறக் கருநிறத் தன்மைகளை உணர்த்துதலும், 'நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்' என ஐங்குறுநூற்றுக் காப்பில் அம்மையின் திருவுருவை நீலநிறமாகக் கூறுதலும் கண்டு இன்புறற்பாலன. (உ௦)

பதினோராவது கதலிவனகதி முடிந்தது

கதிகளுக்குச் செய்யுள் - அ௫அ

—·—

## கஅ. சாதகாங்க கதி

[இக் கதிக்கண், வசவண்ணர் வீடுபேற்றிற்குரிய நல்ல வழியினை உரைத்தருளுமாறு அல்லமதேவரை வேண்டிக்கொள்ளுகிறார். அல்லமதேவர் வசவண்ணரைப் பார்த்து, 'இறைவனை அகத்திற் காண்பவனே சிறந்தவன். புறத்திற் காண்பவன் இழிந்தவனாவான். எல்லாச் செயல்களுக்கும் மனவொடுக்கமே சிறந்த வழியாகும். நல்லவற்றைச் செய்து மக்களை உயர்த்தவும் நல்லவை அல்லாதவற்றைச் செய்து மக்களைத் தாழ்த்தவும் இந்த மனமானது வல்லது. மனத்தை அடக்கி வசப்படுத்தினால் மற்றவை தாமே வசமாகும். மனம் எளிதில் ஒருவனுக்கும் அடங்காது. யோக வழிகளால் உயிர்ப்புக்காற்று ஓடாது தடுத்து நிறுத்தினால் மனமும் நிற்கும். மனம் நிற்கவே வீடுபேறு தானாகவே கூடும்' என்று அறிவுரைகள் அருளுகிறார். அடியார்கள் அல்லமதேவரைப் பணிகிறார்கள் என்னுஞ் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

நூலாசிரியர் கூறல்

வினைய டுத்த விழுமம் துடைத் தெமக்
கனைய டுத்த அருளுடை அல்லமன்
மனை டக்கம் வசவற் குணர்த்துதல்
தனையெ டுத்தினிச் சாற்றுதும் நாமரோ.

(அ - ரை.) வினையடுத்த - வினைகாரணமாக வந்த. விழுமம் - துன்பம். துடைத்து - கெடுத்து. அனை அடுத்த - தாய்போல் தோன்றிய. அனை: அன்னை என்பதன் இடைக்குறை. சாற்றுதும் - சொல்லுவாம். (க)

அக்கமாதேவி சென்றபின் வசவண்ணர் கூறல்

காவின் நீடும் கதலி வனத்துமா
தேவி போதத் திருவருள் செய்தவண்
மேவி ஞான விளக்குற எம்முடை
ஆவி போலும் வசவன் அறைகுவான்.

(அ - ரை.) கா - சோலை. கதலிவனம் - வாழைக்காடு. போதம் - உண்மையுணர்வு. ஞானவிளக்கு - மெய்யறிவுக்கு விளக்குப் போன்ற அல்லமர். ஆவி - உயிர். (உ)

வசவண்ணர் வீடுபேற்றுவழி கூறுமாறு வேண்டல்

மத்தர் வாத மயக்கம் இலாதுயர்
முத்தி சாதனம் என்று மொழிந்தநன்
அத்த நீயென் றடிகள் தொழுதெழப்
பத்தி வேண்டும் பரமன் பகருமால்.

(அ - ரை.) மத்தர் - ஒன்றையும் உணராதவர். வாத மயக்கம் இலாது - சொற்போர் மயக்கம் இல்லாமல். முத்திசாதனம் - வீடு பேற்று வழி அத்த-தலைவனே! அடிகள் தொழுது எழ - திருவடிகளை வணங்கி எழுந்து நிற்க. அடிகள் வசவண்ணர் எனவும், திருத்தாள்கள் எனவும் இருபொருள் நயம் காண்க. (௫)

மனம் சொல் செயல்கள் தூய்மைபெறலே வீட்டுநெறிக் காரணம் எனல்

பரம முத்தி பதம்பெறும் ஏதுவுள்
கரண சுத்தி அரனது காரணம்
அரண் எரித்த அமலற் குறித்தநல்
கிரியை இத்திறம் வேதம் கிளக்குமால்.

(அ - ரை) பரமமுத்தி பதம் - உயர்ந்த வீடுபேற்று நிலை. ஏது - காரணம். உள் கரண சுத்தி - மனம் சொல் செயல்களின் தூய்மை. அரண் எரித்த - முப்புரத்தை எரித்த. குறித்த - குறிப்பிட்ட; ஏற்படுத்திய. நல்கிரியை - நற்செய்கை. இத்திறம்-இவ்வாறு. வேதம் கிளக்கும் - மறைகூறும். (௬)

மனம், இலிங்கவடிவாக மாறாவிடின், இலிங்கம் அணிந்தும் பயன் இல்லை எனல்

மனமி லிங்க மருவிலை யேனுடல்
தனிலி லிங்கம் தரித்தும் இலையிலை
எனவி யம்பும் இணையிலி ஆகமம்
நினைவ ரன்கழல் நிற்க நிறுத்தினுய்.

(அ - ரை.) இலிங்கம் மருவிலையேல் - இலிங்கவடிவமாகப் பொருந்தா திருந்தால். இலைஇலை - சிறிதும் பயனில்லை. இணையிலி ஆகமம்-ஒப்பற்ற இறைவன் கூறிய ஆகமம். அரன் கழல் - இறைவன் திருவடி. (௭)

மனத்தொடு பொருந்தாத வழிபாட்டினுல் பயனில்லை எனல்

தாவி லாத மனமொடு சார்தரா
தோவும் ஆயின் உலகிற் புனலுமொண்
பூவும் நாடோறும் போக்குறு பூசனை
ஆவி போகிய ஆகம் நிகர்க்குமால்.

(அ - ரை ) தா-குற்றம். சார்தரா-சேராத. ஓவுமாயின்-ஒழியுமாயின். புனல்-நீர். ஒண்பூ - ஒளியுள்ள பூ: புதுமலர். போக்குறு பூசனை -செய்கின்ற வழிபாடு. ஆவிபோகிய ஆகம்-உயிர் நீங்கிய உடல். மனம் ஒருவழிப்படாது செய்யும் வழிபாட்டினுல் பயனில்லை என்றபடி.

### இறைவனை அறிஞன் உள்ளத்துட் காண்பன் எனல்

புறம்பு காண்குவன் புல்லியன் ஈசனை
அறிந்த ஞானி அகமுறக் காண்பனால்
எறும்பி காணுறில் இன்கரும் பேகொளும்
செறிந்த ஆடிலை தின்பன என்பவே.

(அ - ரை.) புறம்பு - வெளியிடம். புல்லியன் - இழிந்தவன். அகம் - உள்ளிடம், மனம். எறும்பி - யானை. செறிந்த - பொருந்திய. இலை - தழைகள். கரும்பை யானை உண்ணும்; அதன் இலையை ஆடுண்ணும். அதுபோல இறைவன் உண்மைத்தன்மையை அறிஞனும், பெரும்பொருள் தன்மையை அறிவில்லானும் காண்பர் எனக் கொள்க.

### அமைதிபெறாத உள்ளமே பகை எனல்

கரங்கள் நல்ல கருமம் செயாநிற்பத்
திரிந்து செல்லும் செலாத இடத்துநெஞ்
சொருங்குறாத ஒருமனம் தன்னினும்
பரந்த அல்லற் படுக்கும் பகையிலை.

(அ - ரை.) நல்ல கருமம் - சிவவழிபாடு, அறம் முதலிய நல்ல செயல்கள். திரிந்து - செய்கைகளுக்கு மாறாக. பரந்த - மிகுந்த. அல்லல் படுக்கும் - துன்பத்தைச் செய்கின்ற. (அ)

### மனம் திரிந்தலைந்தால் சிறிதும் இன்பம் உண்டாகாதெனல்

துயிலை இன்பெனச் சொல்லுதல் இந்தியத்
தியலு நெஞ்சம் இலாமையி னுலன்றே
பயிலு நெஞ்சம் பரந்து திரிதரும்
செயலில் இல்லை சிறிதும் சுகமரோ.

(அ - ரை.) துயில் - தூக்கம். இந்தியத்திலும் - பொறியின் வழிப்பட்டு நடக்கும். பயிலும் நெஞ்சம் - பல செயல்களிலும் உட்பட்ட மனம். திரிதரும் - அலைகின்ற; பெயரெச்சம். (க)

### மனம் வசப்பட்டால் பிறவியை அடையான் எனல்

மனமொருத்தன் வசப்படு மேலவன்
பினைவருத்தும் பிறப்பை அடைந்திடான்
மனமொருத்தன் வசப்படாதோடுமேல்
தனிபிறப்பிண்ட தானும் சுழலுமே.

(அ - ரை.) வசப்படுமேல் - அடங்கினால். பினை - பின்னும். ஒருமேல் - கட்டுப்படாவிடின். நனிபிறப்பிடை - அளவிறந்த பல பிறப்புக்களில். நாளும் சுழலும் - எப்போதும் திரிந்தலைவாய். (௧௦)

எச்செயலுக்கும் மனமே துணை எனல்

அறவினைக்கும் அரும்பொருள் இன்பொடு
பெறுவதற்கும் பெருங்கல்வி கற்றுயர்
விறலினுக்குநல் வீரம் தனக்குமொண்
துறவினுக்கும் துணைமனம் என்பவே.

(அ - ரை.) அறவினை - அறச் செயல். அரும்பொருள் - கிடைத்தற்கரிய செல்வம். விறல் - வல்லமை. ஒண்துறவினுக்கும் - விளங்குகின்ற துறவறநிலைக்கும். துணை - உதவி. என்ப - என்று கூறுவர்; பகரவீறறுப் பலர்பாற் படர்க்கை. (௧௧)

எல்லாவற்றிற்கும் மனமே காரணம் எனல்

நல்ல செய்து நரரை உயர்த்தவும்
அல்ல செய்நங் களற்றிடை ஆழ்ப்பவும்
வல்ல திந்த மனமலை தையனே
இல்லை என்ன இயம்பும் மறையெலாம்.

(அ - ரை.) நல்ல செய்து - நல்ல செயல்களைச் செய்து. அல்ல செய்து - நன்மையல்லாதவற்றைச் செய்து. அளறு - நரகம். ஆழ்ப்ப - அமிழ்த்துதற்கு; எதிர்காலம் காட்டிய செயவெனெச்சம் காரணப் பொருட்டாக வந்தது. இயம்பும் - சொல்லும். (௧௨)

இறைவனை மனம் பற்றினால் தீவினையெல்லாம் கெடும் எனல்

நெஞ்சம் மாதுமை நேசனை நண்ணுமேல்
விஞ்சு பாதகம் கோடி விளைப்பினும்
அஞ்சுறுவன் அவ்வினை யாவையும்
பஞ்சு தீயிடைப் பட்டென மாயுமே.

(அ - ரை.) நண்ணுமேல் - அடையுமாயின். விஞ்சு - மிகுந்த. பாதகம் - தீவினை. கோடி விளைப்பினும் - கோடிக்கணக்காகச் செய்தாலும். மாயும் - கெடும். (௧௩)

### மனத்தால் சிறப்புறுவிடின் மக்களும் மாக்களே எனல்

மக்கள் மானிடர் என்று மனத்தினுல்
மிக்க மேன்மை விளங்கினர் இல்லெனில்
பொக்க மேவும் பொறிகளோர் ஐந்தினுல்
ஒக்கு மாவினை ஒத்துயர் வுற்றிடார்.

(அ-ரை.) மக்கள் - மக்கட் பிறப்பு, மானிடர் - மக்கள் தன்மையுடையார். விளங்கினர் இல்எனின் - விளங்காது இருப்பார்களாயின். பொக்கம்மேவும் - பொய்ம்மை பொருந்திய. பொறிகள் ஓரைந்து - ஐவகை உடற்பொறிகள். மாவினை - விலங்குகளை. உயர்வு உற்றிடார் - மேன்மைபெறுர். (கரு)

### மனத்தை அடக்குபவனே பிறவியைக் கடக்கலாம் எனல்

கெடுக்க வல்லதும் கெட்டவர் தங்களை
எடுக்க வல்லதும் இம்மனம் என்றதை
அடக்க வல்லவன் ஐய பவக்கடல்
கடக்க வல்லவன் ஆவன் கடிதரோ.

(அ-ரை.) கெடுக்க - கேடு செய்தற்கு. எடுக்க வல்லதும் - நன்மையினுற் செலுத்த வல்லதும். கடிது வல்லவன் ஆவன் - விரைவில் வல்லவனுவன். பவக்கடல்-பிறவியாகிய கடல். கடிது-விரைவு. (கசு)

### மூச்சுக்காற்று ஒடுங்கினுல் மனம் ஒடுங்கும் எனல்

ஆயின் மிக்கோர் அரிய செயலெலாம்
நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்
வாயு நிற்க மனமும் உடனிற்கும்
தோய நிற்குறின் நிற்கும் துரும்புமே.

(அ-ரை.) மிக்கோர்-மேலானவர். நேயம்-பற்று; பாசம். வாயு நிற்க - மூச்சுக்காற்றை உள்ளடக்க. தோயம்-நீர். நிற்கஉறின்-நின்றுவிட்டால். துரும்பு - செற்றை; தூசு முதலிய பொருள்கள். (கஎ)

### மனத்தை அடக்க விரும்புவோர் மூச்சை உள்ளடக்குவார் எனல்

ஓடு மாலவை நிறுத்துறின் உள்ளுறக்
கோடும் வாய்க்கலி னத்தினைக் கொள்ளுவார்
நீடு மாமன நிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை உள்ளுற ஈர்ப்பரால்.

(அ - ரை). மா - குதிரை. விறுத்துறின் - விருத்தக் கருவிறுல். உள்ளுறக் கோடும் - உள்ளே கொண்டிருக்கும். கலினம் - கடிவாளம். ஓடும் வாயுவை - வெளிச்செல்லும் மூச்சுக்காற்றை. உள் உற சார்பவர் - தம் உடலினுள் விற்கும்படி உள்ளே இழுப்பர். (கஎ)

## வாயுவை வசப்படுத்திறல் மனமும் வசப்படும்

அடுத்த நாடிகள் ஆங்கொரு மூன்றினும்
விடுத்து வாங்கியும் மேவ நிறுத்தியும்
தடுத்தும் வாயுவைத் தன்வசம் ஆக்கில்வாய்
மடுத்தி டாது மனமும் வசப்படும்.

(அ - ரை.) அடுத்த - பொருந்திய. நாடிகள் மூன்று - இடைகலை, பிங்கலை, சுழுமுனை. விடுத்து வாங்கியும் - விட்டு வாங்கியும். மேவ நிறுத்தியும் - பொருந்த நிறுத்தியும். தடுத்தும் - தடை செய்தும். வாய் மடுத்திடாது - உட்கொள்ளாமல். (கஅ)

## நல்ல மனத்தின் இயல்புகள்

ஓடும் பொன்னும் உறவும் பகையுமோர்
கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வீடும் கானமும் வேறற நோக்குதல்
கூடுந் தன்மை கொளுமனம் நன்மனம்.

(அ - ரை) ஓடு - மண் ஓட்டுச்சில்லி. கேடு - கெடுதி. வீடும் கானமும் - வீடுங்காடும். வேறு அற - வேற்றுமையின்றி. கூடும் தன்மை - இசையும் இயல்பை. (க௯)

## தீய மனத்தின் இயல்புகள் இவை எனல்

மன்னு காம வெகுளி மயக்கமென்
றின்ன கூடி எறிவளி முற்சுடர்
என்ன ஆடும் இயல்மனம் தீமனம்
தன்னை யாரும் தடுக்கத் தகாதரோ.

(அ - ரை.) மன்னு - நிலைபெற்ற. எறிவளி - வீசுகின்ற காற்று. முன்சுடர் - முன்னிலையில் எரிகின்ற விளக்கு. பலவகைச் செயல்களிலும் சென்று, காற்றின் முன் உள்ள விளக்குப் போல் அலைந்து கொண்டிருக்கிற மனம் தீயமனம் என்க. (௨0)

இலிங்க வடிவமாவோன் இத்தகையோன் எனல்

மறிந்தி டாது மனபவ னங்கள் தாம்
செறிந்த வாயிற் சிவமயம் ஆதமால்
அறிந்து வாயுவை அங்கமாம் எய்தினேன்
இறந்தி டாத இலிங்கப் பிராணியாம்.

(அ - ரை.) மறிந்திடாது-மடங்காமல். மனபவனங்கள்-மனமும் உயிர்க்காற்றுக்களும். செறிந்து ஆயின் - அடங்கிவிடுமானால். இலிங்கப் பிராணி - இலிங்க வடிவம். (௧௯)

அல்லமர், வசவண்ணரிடம் இவ்வாறு கூறினார் எனல்

இன்ன வாறு பலவும் இயம்பினன்
அன்னை போலுநம் அல்லம தேசிகன்
தன்னை நேர்தரு சைவம் வளர்க்குமோர்
மன்னன் ஆகும் வசவனை நோக்கியே.

(அ-ரை.) இன்னவாறு - இவ்வாறு. இயம்பினன் - சொன்னான். தன்னை நேர்தரு - தனக்குத்தானே ஒப்பான. சைவம் வளர்க்கும் - வீர சைவ நெறியை மேலோங்கச் செய்கின்ற. (௨௦)

வசவர், அல்லமரைப் புகழ்தல்

நின்னை நோக்கவும் நின்னை இறைஞ்சவும்
நின்னை வாழ்த்தவும் நின்மொழி கேட்கவும்
என்ன மாதவம் எய்தின மோஎனப்
பன்னி நாதற் பணிந்தனன் நந்தியே.

(அ - ரை.) நோக்க - பார்க்க. இறைஞ்சவும் - வணங்கவும். எனப்பன்னி-என்று சொல்லி. நாதன்: அல்லமதேவன். பணிந்தனன் - வணங்கினான். 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க, நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே' என்னும் மூதுரைக் கருத்தை உட் கொண்டது இச்செய்யுள். (௨௧)

சித்தராமர் முதலியோர் அல்லமரைப் போற்றல்

சித்த ராமனுஞ் சென்ன வசவனும்
முத்தன் ஆமருள் மாச்சன் முதலிய
பத்த ராகும் பலருமென் புன்தலை
வைத்த நாதன் மலரடி வாழ்த்தினர்.

(அ-ரை.) முத்தன் - பிறவிக்கட்டில் நின்றும் விடுபட்டவன். புன்தலை - இழிந்த தலை. வைத்தநாதன் : அல்லமதேவன். மலரடி - தாமரை மலர்போன்ற தாள்கள். (உஎ)

அல்லமர், பலருக்கும் அருள்புரிய எண்ணுதல்

ஆன காலையில் அல்லமன் ஆகிய
ஞான வாரி நடந்துல கெங்கணும்
ஏனை மாதவர்க் கின்பம் அளிக்குவல்
யானெ னுவுளத் தெண்ணினன் என்பவே.

(அ-ரை.) ஞானவாரி - அறிவுக்கடல். ஏனை மாதவர்க்கு - மற்றைய அடியார்கட்கு. அளிக்குவல் - அளிப்பேன் : தன்மை யொருமை. (உஅ)

பதினெட்டாவது சாதகாங்க கதி முடிந்தது.

ஆககதிகளுக்குச் செய்யுள் - அஅசு.

# ௧௧. கோரக்கர் கதி

[இக் கதிக்கண், அல்லமதேவர் கலியாணபுரத்தைவிட்டு மறைகிறார். வசவண்ணர் முதலியோர் அல்லமரைக் காணாது வருந்துகிறார்கள். அல்லமதேவர் பல வளங்கள் பொருந்திய பெருஞ் சிறப்புமிக்க திருப்பருப்பதம் என்னும் ஓங்கலையடைகிறார். ஆண்டு உடலழியாப் பேறுபெற்று அகனையே பெரிதாக மதித்து நிற்கிற கோரக்கர் என்னுஞ் சித்தரைக் காண்கிறார். அக் கோரக்கர் அல்லமதேவரையும் தம்மைப்போன்ற ஒரு சித்தராக எண்ணிப் போற்றுகிறார். உடலழியாப் பேறுபெற்றுள்ள தம் பெருமைகளை அல்லமதேவர்க்கு உரைக்கிறார். அல்லமதேவர் கோரக்கரின் கொள்கையை மறுத்துக் கண்டித்து உரைக்கிறார். கோரக்கர் வலிய வாள் ஒன்றினை அல்லமதேவர் கையிற் கொடுத்துத் தம் உடலை வெட்டி ஊறுபடுத்திப் பார்க்குமாறு கூறுகிறார் அல்லமதேவர் கோரக்கர் மீது வாட்படையை வீசுகிறார். பேரொலி ஒன்று உண்டாகிறது அவ்வொலியைக் கேட்டுப் பலரும் அஞ்சுகின்றனர் பின்னர்க் கோரக்கர் அல்லமதேவர் அருள் உரைப்படி அல்லமதேவரைத் தாக்கிப் பார்க்கிறார். படைக்கலம் அல்லமதேவர் மீது படாமற் போகிறது கோரக்கர் அல்லமதேவரின் பெருமையை உணருகிறார். தம்முடைய பிழைகளைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகிறார். அல்லமதேவர் 'நீ உண்மையை உணரவேண்டும்' என்று உரைத்துக் குகேசன் என்னும் மொழிப்பொருளையும் விளக்கியருளுகிறார். பரம்பொருளாகிய அல்லமதேவர் தம்முடைய கையில இலிங்கம் தாங்கியுள்ளமைக்குக் காரணம் யாதென்று வினவுகிறார். தாம் கையில் இலிங்கங் கொண்டதற்குக் காரணம் கூறிக் கோரக்கருக்கு அருள் புரிகிறார். கோரக்கர் உண்மையை உள்ளவாறுணர்ந்து சிறப்படைகிறார் என்னுஞ் செய்திகள் விரிவாகக் கூறப்பெறுகின்றன.]

## நூலாசிரியர் கூறல்

வசவனை முதலாய் உள்ள மாதவர் நமைய கன்று
பசுமதி தவழ்கு வட்டுப் பருப்பத மலையை நண்ணிக்
குசைசுடு மறையோர் போற்றும் கோரக்கன் எனும்பேர்ச் சித்தன்
இசைவுற உண்மை எந்தை இயம்பிய வாறு சொல்வாம்.

(அ-ரை.) பசுமதி-இளம்பிறை. பசுமை இளமையைக் குறிக்கும் பண்புச்சொல்; பச்சிளங் குழவி பசுந்தழை முதலிய வழக்குக்களால் அறிக. தவழ் - மேலே செல்கின்ற. குவடு - மலை முடி. குசைசுடு - தருப்பைப்புல்லைச் சுட்டு எரிக்கிற. இசைவுற - பொருந்த. (௧)

### அல்லமர் கலியாணபுரத்தைவிட்டு நீங்குதல்

பொறிவழி செலாது நெஞ்சம் புனிதமாம் வகைபு கன்ற
நெறிமுறை வழாதி யற்றி நீவிர்நின் மின்கள் மிக்க
அறவுரை உலகிற கண்டிங் கடைதுமென் றுண்டை யோர்கட்
கிறையவன் இனிதி யம்பி எழுந்துமின் னென மறைந்தான்.

(அ-ரை.) புனிதமாம்வகை-தூய்மையாகும் வண்ணம். வழாது-தவறாது. மிக்க அறவுரை-சிறப்புக்களான் மிகுந்த துறவிகளை அறவர்-அறத்தின் வழிநிற்போர்: குறிப்புவினைப் பெயர். ஆண்டையோர்கள்-அவ்விடத்திலிருந்தவர்கள். மின் - மின்னல். (௨)

### வசவண்ணர் முதலியோர் அல்லமரைக் காணாது வருந்துதல்

கன்றின்வாய் முலைநெ கிழ்த்துக் கறவைவிட் டகன்ற தென்னச்
சென்றனன் ஐயன் என்று திசைதொறும் நோக்கி மாழ்கி
வன்றழல் இழுது போல மனமுகக் கண்ணீர் மல்கி
நின்றனர் வசவன் ஆதி நிகரில்சற் பத்தர் எல்லாம்.

(அ-ரை.) நெகிழ்த்து - தளர்த்தி. கறவை - ஆன். நோக்கி - பார்த்து. மாழ்கி - வருந்தி. தழல் - நெருப்பு இழுது - நெய்; வெண்ணெய். மனம் உக - மனம் நெக்குருக. கண்ணீர் மல்கி - கண்ணீர் பெருகி. சற்பத்தர் - மெய்யன்பர்கள். (௩)

### இதுவும் அது

காணுதல் ஒழிக நல்லோர்க் காணினுங் கவர்பால் நட்புப்
பேணுதல் ஒழிக பேணிற் பிரிவுறல் ஒழிக உற்றால்
மாணுயிர் உடம்பில் வாழும் வாழ்க்கை போய் ஒழிக என்று
ஊணிடும் ஒருதாய் நீத்த பார்ப்பென உளங்கு லைந்தார்.

(அ-ரை.) நட்புப்பேணுதல்-நட்புச்செய்தல். மாண் உயிர்-சிறப்பமைந்த உயிர். ஊண் - இரை. பார்ப்பு - பறவைக்குஞ்சு. உளம் குலைந்தார்-மனம் வருத்தங்கொண்டார். பார்ப்பு-பார்த்தலை யுடையது. மற்ற விலங்கு முதலியன போலாகாது தம் தாயைப் பார்த்துப் பார்த்து இரை கொள்ளும் தன்மை பறவைக் குஞ்சுகளுக்கே உரிய ஒரு பண்பாகும். பறவைகளும் தம் குஞ்சுகளைப் பாதுகாப்பதும் அத்தன்மைத்தே. எனவே, 'பார்ப்பென உளம் குலைந்தார்' என்றார். 'பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்' என்னும் கம்பர் திருமொழியும் இதனை வலியுறுத்தும். (௪)

சித்தராமையர் சொன்னலாபுரத்தை அடைந்திருத்தல்

தண்டநா யகன்க ரத்தில் தம்பிரான் தன்னைக் கண்டு
பண்டுபோல் உவகை பூத்துப் பத்திசெய் தாங்கி ருந்தான்
தொண்டனு கியயி ராமன் சொன்னலா புரத்தில் நெஞ்சில்
கொண்டவா ரியனே டேகிக் கொடுவழி தப்பி நின்றான்.

(அ - ரை.) தண்ட நாயகன் - வசவண்ணர். தம்பிரான் - இட்ட லிங்கம். நெஞ்சில் கொண்ட ஆரியன் - உள்ளத்திற்கொண்ட அல்லம தேவர். கொடுவழி - கொடிய வழிகள் ; முன்னிருந்த சினம் முதலிய தீய இயல்புகள் பொருந்திய நெறி. தப்பி - அகன்று. (௯)

மற்றையோரும் தத்தம் இடங்கட்குச் செல்லல்

அல்லமன் அறைந்த மாற்றம் அகங்கொடு பிறரும் தாம்செய்
நல்லன புரிந்து தத்தம் இடந்தொறும் நனுகி வாழ்ந்தார்
தொல்லைநல் வினையால் தன்னைத் தொழப்பெறும் அடியர் தம்பால்
செல்லுவன் என்று சென்றோன் செயலினித் தெரிக்க லுற்றும்.

(அ - ரை.) மாற்றம் - சொல். அகங்கொடு - மனத்திற்கொண்டு. நல்லன - நற்செயல்கள். நணுகி - சென்று. தொல்லை - முன்பு. சென்றோன் - சென்றவனாகிய அல்லமன் : இறந்தகால வினையாலணையும் பெயர். (௧0)

அல்லமதேவர் திருப்பருப்பதத்தை அடைதல்

எரிபுரை தளிர்த ளிர்ப்ப இளமரக் காவில் தென்றல்
மருவுதல் போல அன்பர் மனமொடு கண்க ளிப்பத்
திருவுரு ஒன்ற டைந்து சென்றவக் கருணை வள்ளல்
கருமுகில் தவழ்ப ராரைப் பருப்பதம் கண்டு சென்றான்.

(அ - ரை.) எரிபுரை - தீயைப்போன்ற. தளிர் - இளஇலைகள். இள மரக்கா - இளமரச் சோலை. திருவுரு அழகிய - பேருரு வடிவம். கரு முகில் - சூல்கொண்ட மேகம். பரு + அரை = பராரை - பருத்த அடிப் பக்கத்தையுடைய. (௧௧)

திருப்பருப்பதத்தின் பெருமை செப்புதற்கு அரியது எனல்

அல்லமன் கண்டு செல்லும் அப்பருப் பதத்தின் மேன்மை
சொல்லுதல் அரியார் ஆகிச் சுரர்முனி வரர்கள் தம்முள்
வல்லவர் எனவி ருக்கும் அறிஞரும் மயங்கி நிற்பப்
புல்லறி வாண்மை கொண்டு புகலுவன் சிறிதஞ் சாமல்.

(அ-ரை) புல்லறிவாண்மை - அற்ப அறிவின் வலிமை; சொல்லத்தொடங்கியது சிறிதும் அறிவில்லாது பெரும் மடமை பெற்றதனால் என்க. (௮)

## திருச்சைலமலை இறைவனைத் தாங்கி நிற்பதெனல்

நாடோறும் உதித்தோ டுங்கும் ஞாயிறு தனைச்சு மக்கும்
கோடுறு வரைகு ணக்கும் குடக்குமாய்த் திலகத்து நிற்பக்
கூடுதல் பிரிதல் இன்றிக் குறைமதி தலைச்சேர்ந் தின்பம்
தாடரு கதிரைச் சென்னி தரிப்பதக் குன்றம் மாதோ.

(அ-ரை) கோடுறுவரை - முடிபொருந்திய மலை. குணக்கு - கிழக்கு. குடக்கு - மேற்கு. குறைமதி - பிறைத்திங்கள். இன்பம் தாள்தரு கதிரை - இன்பத்தினைத் திருவடியால் தருகிற அறிவு ஞாயிறாகிய இறைவனை. (௯)

## வெள்ளிமலையின் வெண்மைக்கு ஒரு காரணங் கற்பித்தல்

பொன்னிற்குன் றெழுவா யாகப் பொருப்பள விறந்த நிற்பச்
சென்னிக்கண் தவழ்வெண் திங்கட் சிலாதரன் குழவி வெற்புத்
தன்னைக்கண் டவரை என்னோர் தலைமிசை ஏற்றும என்னென்
றின்னற்கட் படிந்தன் றேவவ் விறைமலை வெளுத்த தம்மா.

(அ-ரை.) பொன்னின்குன்று - மேருமலை. எழுவாயாக - முதலாக; சிலாதரன் - சிலாதர முனிவர். குழவி - பிள்ளை. வெற்பு - திருச்சைலம். (திருமலை). கண்டவரை - கண்டு வணங்கியவர்களை. இன்னல் - துன்பம். இறைமலை - கைலைமலை.

சிலாதர முனிவர் மகனை நந்திதேவரே மலைவடிவாக நின்று இறைவனைத் தாங்குகின்றார் என்பது புராணக் கூற்றாகலின், சிலாதரன் குழவி வெற்பு என்றார். மேருமலை முதலாகப் பல மலைகள் உள்ளனவாகவும் அவற்றின்மீது ஏற்றாமல் திருப்பருப்பத மலையைக் கண்டவர்களை இறைவன் என்மீது மட்டும் ஏற்றுகின்றானே இஃதென்ன முறைகேடு என்னும் ஏக்கத்தால் கைலைமலை வெளுத்தது என்றார். தற்குறிப்பேற்றவணி. சென்னிக்கண் தவழ வெண்திங்களை வெற்புக்கு அடையாக்குக. (௧0)

## மேருமலையை இறைவன் வளைத்ததற்குக் காரணங் கூறல்

பரசிவ லிங்கம் ஒன்று பருப்பதம் போல்த ரிப்பத்
துரிசற அடைந்தேன் இல்லை என்னுமச் சோகத் தீயால்
உருகுறும் அனையத் தோடி ஒருமலை குழைந்தான் அன்றிக்
குருகமர் தவிசி யற்குக் குழைந்தவன் குழைக்கு மோதான்.

(அ - ரை.) தரிப்ப - தாங்க. துரிசு - குற்றம். சோகம் - தளர்ச்சி. இருமலை - பெருமலை. குருகு - வளையல். தளிர் இயல் - மாந்தளிர் போலும் உடலையுடைய உமையவள்: உவமத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. குழைக்குமோ - வளைப்பனோ. (௬௧)

மைந்நாகமலை கடலிற் சென்று வீழ்ந்தது நாணத்தால் எனல்

பொருப்பிறை மகனும் எற்கும் பொருந்துரு தீசன் நாமம்
நெருப்பனை யான்சார்ந் தாங்கு நிகழ்தொடர் மொழியின் அன்றிப்
பருப்பதம் எனவே கூறப் படுமிது என்னும் நாணால்
திரைப்பொலி கடலிற் சென்று வீழ்ந்தது சிலம்பொன் றம்மா.

(அ - ரை.) பொருப்பு இறை - இமயமலை. நெருப்பனையான் - இறைவன். சிலம்பு ஒன்று - மைந்நாகமலை. ஈசன் என்னும் பெயர் கடவுளர் பலர்க்கும் பொதுவாக இருந்தும் அடைமொழி இல்லாதவிடத்துச் சிறப்பாக இறைவனையே சார்தல்போல, மலை என்னும் பெயர் எல்லா மலைகட்கும் பொதுவாயினும் சிறப்பாகத் திருமலை என்பது திருப்பருப்பதத்திற்கே உரியதாகின்றமையின், சிறப்புப் பெயரோடு சேர்க்கப்பெற்று மைந்நாகமலை என்று வழங்கப் பெறுதலுக்கு நாணிக் கடலில் வீழ்ந்ததென்க. (௬௨)

மற்ற மலைகளும் பருப்பதமலைக்கு நிகராகா வெனல்

தன்னையோர் கையால் வீழப் பிலத்திடைத் தள்ளி வந்தோன்
சென்னியால் வணங்கி ஏத்தும் சிலம்பினை விந்தம் ஒக்கும்
என்னலாம் என்னை யாமோ இணையறு பருப்ப தத்தைப்
பின்னுவார் திரையில் இட்டுப் பெயர்த்தபுன் மத்தோ ஒக்கும்.

(அ - ரை.) தன்னை - விந்த மலையை. தள்ளிவந்தோன் - அகத்தியன். சிலம்பு - மலை. இணை அறு - ஒப்பற்ற. பின்னுவார் திரை - பின்னி யெழுகின்ற நீண்ட அலைகளையுடைய கடல். பெயர்த்த - கடைந்த. மத்து - தயிர் கடையுங் கருவி. (௬௩)

மலைச் சுனையின் மாண்பு

நகைமதிப் பிள்ளை போல நரைத்தகூன் கிழவன் சென்றோர்
முகைமலர்ச் சுனையின் மூழ்கி முருகுகொப் புளிக்கும் தோட்டுப்
பகைமலர்க் குழல்ம டந்தை பார்த்தவோர் ஆணை காத்து
மகிழ்மனத் தன்ப னேபோல் வந்துமேல் எழுவன் அன்றே.

(அ - ரை.) நகைமதிப்பிள்ளை - ஒளியையுடைய பிறைத் திங்கள். முருகு கொப்புளிக்கும் - தேனை வெளிப்படுத்தும். தோடு - இதழ். மகிழ்

*மனத்து அன்பன் - திருநீலகண்ட நாயனார். அம் மலைச்சுனையில் மூழ்கினால் இளமை உண்டாகும்.* (கசா)

### அம்மலை பலவகை மலர்களையுடைமையால் மங்கையரை ஒக்கும் எனல்

**சினைமலர் புதல்மென் போது செழும்புனற் பசுந்தாட் செந்தேன்**
**நனைமலர் தமது தண்பூ நண்ணியிரங் கொடிகள் குண்டுச்**
**சுனைமலர் விழிகள் போலத் தோன்றுமப் பராரைக் குன்றில்**
**புனைமலர் பலவும் காட்டும் புரிகுழல் மகளிர் போலும்.**

*(அ - ரை.) சினைமலர் - கோட்டுப்பூ. புதல்மென்போது - நிலப்பூ. செழும்புனல் பசுந்தாள் செந்தேன் நனைமலர் - நீர்ப்பூ. ஈரங்கொடிகள் தண்பூ - கொடிப்பூ. குண்டுச் சுனைமலர் - தாமரை. கருங்குவளை முதலியன.* (கஎ)

### அருவிநீர் ஞாயிற்றையும் குளிரச்செய்யும் எனல்

**தூங்கிசை அருவி பாயத் தொளைக்கைவெண் கோட்டு ரற்கால்**
**ஈர்ங்கவுள் நெடுநல் யானை யேற்பவெந் தழல லாமல்**
**தேங்குதண் புனல்மேல் நோக்கா தென்பது தீரச் சென்று**
**பூங்கதிர் பனிவெண் திங்கள் போன்மெனத் திவலை செய்யும்.**

*(அ - ரை.) ஈர்ங்கவுள் - குளிர்ந்த கன்னம். ஏற்ப - துதிக்கையினால் ஏந்த. என்பது தீர - என்னுங் கொள்கை ஒழிய. பனி - குளிர்ச்சி. திவலை செய்யும் - நீர்த்திவலைகளைப் பொழியும்.* (கஅ)

### அம்மலையில் யாழோசைச் சிறப்பு

**விஞ்சையர் உளர்ந ரம்பின் வீணையாழ் எழுமின் னோசை**
**குஞ்சரம் அணைய வென்றிக் குன்றவர் புறத்தில் என்றும்**
**தஞ்செவி படுத்துக் கேட்பார் தனிநிலை யோக முற்றோர்**
**அஞ்செவி நிறைய உள்ளே அரியயாழ் ஓசை கேட்பார்.**

*(அ - ரை.) உளர் - விரலால் தெறிக்கின்ற. குஞ்சரம் - யானை. அரிய யாழ் ஓசை - யோகத்தில் எழும் அருமையான யாழ் ஒலி போன்ற ஒலி.* (ககூ)

### அம்மலை பொன்முடிபோல் விளங்குதல்

**பீடுறு கருவி னோடு பெயரிய வில்லின் உம்பர்**
**ஓடுறும் பசும்பொ னூற்செய் தோங்குறு சிகரம் ஒன்று**
**நீடுறு சிலாத ரன்றன் நெடுந்தவப் பிள்ளைக் குன்றில்**
**மோடுறு முடியின் மீது கவிழ்த்தபொன் முடியை ஒக்கும்.**

(அ - ரை.) பீடுறு - பெருமை பொருந்திய. கருவினோடு பெயரிய - கருப்பக்கிரகம் என்னும் பெயரினையுடைய: உம்பர் - மேலிடத்தில். நீடுறு - நீட்சி பொருந்திய. மோடுறு மேலாக ஓங்கிய. (கஅ)

## ஒளிமரத்தின் (சோதி விருட்சம்) ஒளியைப் பறவைகள் மாறுகக் கருதுதல்

செங்கதி ரவனெ முந்த திவாவிடைக் குடம்பை தெற்றிப்
பொங்கொளி மரத்திற் சீர்சால் புள்ளினம் பொறையு யிர்த்துக்
கங்குலின் அடைகி டப்பக் கருதிவந் ததனைக் கண்டு
வெங்கனல் கொளுந்திற் றென்று மீமிசைச் சுழன்றி ரங்கும்.

(அ - ரை.) திவா - பகல். குடம்பை தெற்றி - கூடு செய்து. பொறை உயிர்த்து - முட்டை வைத்து. வெம்கனல் கொளுந்திற்று என்று - நெருப்புப்பற்றிக் கொண்டது என்று. ஒளிமரம் - இரவில் ஒளி செய்யும் தன்மையுடையது; அதனையுணராத பறவைகள் மரங்கள் தீப்பற்றிக் கொண்டதாக மாறுபடக் கருதின. (கக)

## மூங்கில்களின் சிறப்பு

நறுமலர்க் குழல்வெண் முத்த நகைமலை மடந்தைமிக்க
அறம்வளர்ப் பதற்கு நெற்சிற் றளவிந நாழி என்று
கறைமிடற் றிறைய ளப்ப ஒருபெருங் கருவி தானிவ்
வெறிமலர்க் குடுமிக் குன்றின் வேய்களுள் ஒன்றிற் பெற்றாள்.

(அ - ரை.) முத்தநகை-முத்துப்போன்ற பற்கள். கறைமிடற்று இறை - நஞ்சுக்கறையைக் கண்டத்திலுள்ள இறைவன். வெறி மலர் - மணம் பொருந்திய மலர். வேய் - மூங்கில். அம்மலையிலுள்ள மூங்கில்கள் மிகப் பெருமையுடையனவாதலின் இவ்வாறு கூறினார். ()

## மரங்களின் வியத்தகு மாண்பு

நெடியவன் குறுகி அப்பால் நின்றனை தொழுமவ் வெற்பின்
மிடியுடை ஒருவன் விற்கும் விறகினைக் குறித்துச் சென்று
வடியுடை நவியங் கொண்டோர் மரத்தினைத் துணித்த லோடும்
படியுறும் பசும்பொன் ஆகும் பரிசுகொண் டுவந்து செல்வான்.

(அ - ரை.) நெடியவன் - திருமால் மிடி - வறுமை. நவியம் - கோடரி. படியுறு - மேன்மை பொருந்திய. (உக)

நண்டு இராசிவரை மண்டிய மரங்கள்

கொண்டல்கள் முழவின் ஆர்க்குங் கோதைவெள் ளருவி வெற்பின்
வண்டுபாண் முரன்று மூசி மலர்தீனத் தூறு செந்தேன்
உண்டுகண் துயில்பூங் கோப்பர் உயர்பரத் திவர்ந்தி ராசி
ஞெண்டுகண் டஞ்சி மந்தி ஞேரேலென இழியும் அன்றே.

(அ - ரை.) கொண்டல்கள் - முகில்கள். முழவின் ஆர்க்கும் - பேரிகையைப்போல முழங்கும். கோதைவெள் அருவி - மாலை போல் இழியும் வெள்ளிய அருவி. பாண்புரன்று - இசைபாடி. மூசி - மொய்த்து. இவர்ந்து - ஏறி. இராசி ஞெண்டு - வானின் கண் இலக்கினமாக விளங்கும் நண்டு. (கர்க்கடக இராசி.) (உஉ)

பிடியின் பேதைமை ஊடல்

தளிர்க்குள கிளைத்தேன் தோய்த்துத் தனதுவாய் கொடுக்கும் செய்கை
பளிக்கறை அதனுட் கண்டு பரிந்துவே றென்றி னுக்கிங்
களித்தன்றன் றுளம யங்கி அருமபிடி ஒருகூர்ங் கோட்டுக்
களிற்றினை முனிந்து செல்லும் கம்பலை உடைத்தக் குன்றம்.

(அ - ரை.) குளகு - உணவு. கம்பலை - ஒலி. களிற்றியானை தனக்குத் தளிருணவு அளிக்குஞ் செய்கையைப் பளிங்குக் கல்லினிடத்து நிழலால், வேறொரு காட்சியாகக் கண்டு மயங்கியமையின் பிடி ஊடல் கொண்டது என்க. (உங)

குறத்தி, திங்களின் மானைப் பிடித்துத்தரக் குறவனை வேண்டல்

நண்ணுறு மதியின் மானைப் பிடித்துநீ நல்கு கென்று
ஒண்ணுதல் மடந்தை வேண்ட ஒருகுற மகன்கேட் டன்று
பெண்ணுரை கொண்டி ராமன் பிடிப்பதற் கென்னு மாபோல்
எண்ணஎன் இதற்கென் செய்வேன் என்றுளம் நைந்து நிற்பான்.

(அ - ரை.) நண்ணுறு - பொருந்தியுள்ள. மதியின் மான் - சந்திரனிடத்துத் தோன்றும் மானைகளங்கம். ஒள் நுதல் - ஒள்ளிய நெற்றி. (உச)

அருவிகள், மலை அழுங் கண்ணீரைப்போல் தோன்றுதல்

மேருமந் தரமே ஆதி வெற்பெலாம் எனைவெ றுப்பச்
சாருமென் மாட்டே முக்கண் தம்பிரான் எனநி னைந்து
சேருமொன் னலரை அஞ்சிச் சிலம்பழு மாறு போல
ஆரவெள் ளருவி பாயும் அழகினை உடைத்து மாதோ.

(அ - ரை.) ஒன்னலர் - பகைவர். ஆர - மிக. மேரு முதலிய மலைகள் என் மாட்டு இறைவன் பொருந்திய பெருமை கண்டு என்னை

பகைக்கின்றனவே; இதனால் எனக்குப் பகையன்றோ மிகுதியாகின்றது என்னும் வருத்தத்தால் திருமலை அழ, அதன் கண்ணீர் ஆறாகப் பெருகி வருவதுபோல் இருக்கின்றன மலையருவிகள். (உ௫)

### அல்லமதேவர் கோரக்கர் இருக்குமிடத்தை அடைதல்

இனையன வளமி குத்த எம்திருச் சயிலம் தன்னை
அனையினும் இனியன் எங்கோன் அல்லமன் சென்று நண்ணித்
தனியுடல் சித்தி பெற்றுத் தருக்குமக் கோரக் கன்தான்
நனியுள மகிழ்ந்தி ருக்கு நல்லிடந் தனைய டைந்தான்.

(அ - ரை.) இனையன - இத்தன்மையவான. தருக்கும் - செருக்கும். (உ௬)

### கோரக்கர், அல்லமரை ஓர் இருக்கையில் இருத்திக் கூறல்

அத்தனோர் வருதல் கண்ணுற் றப்பெருஞ் சித்தன் தன்னோ
டொத்தவோர் சித்த னாக உன்னுபு தனைவி யந்து
நித்தனுண் மலர்த்தாள் தாழா நின்றுகை குவித்து ஞான
சித்தநீ வருக என்றோர் தவிசிடைச் சேர்த்திச் சொல்வான்.

(அ - ரை.) அத்தன - அல்லமதேவன். உன்னுபு - நினைந்து. (உ௭)
தவிசு - இருக்கை.

### கோரக்கர், அல்லமதேவரைப் போற்றுதல்

(வேறு)

இரவி வானவன் எழுந்ததும் இன்றெனக் கதா அன்று
தெரிவ ஆயின கண்களும் இன்றுநின் சிறந்த
வரவு நானெதிர் இன்றுபெற் றமையினின் வரவு
பொருளில் மாதவம் புரிந்திடார்க் கெளியதோ புகலின்.

(அ - ரை.) இரவிவானவன் - கதிரோன். அதா அன்று - அதுவு மல்லாமல். ஞாயிறு தோன்றியது, கண்கள் பார்வை பெற்றது முதலிய நன்மைகள் இன்றுதான் எனக்கு ஏற்பட்டது என்றார் கோரக்கர். ( )

### அடியார்களைப் போற்றாதவன் இறைவனையும் அடையான் எனல்

மதலை ஆகிய நற்குணம் சார்ந்துநல் வாய்மை
சிதைவி லாவடி யாசனம் சேர்ந்திடா தவன்கண்
நுதவி னுனையும் சேர்ந்திடான் என்ப எந்நூலும்
முதவி லாவபெறும் ஊதியம் யாதுகொல் மொழியில்.

(அ - ரை.) மதலையாகிய - ஒருவனைத் தாங்குதலான. வாய்மை சிதைவிலா - மெய்ம்மை கெடாத. கண் நுதலினன் - சிவன், ஊதியம் - பொருட்பேறு. (உக)

கோரக்கர், அல்லமரை நீ யார் என்று கேட்டல்

ஒருவி ருந்தினர்க் குரைசெயும் முகமனோ டொப்பக்
குருப ரன்தனக் கினியன இன்மொழி கூறி
வருபெ ருந்தகை யார்கொல்நீ உரையென வாழ்த்தி
அருளின் அங்கடல் தனைவினுய் நின்றனன் அன்றே.

(அ - ரை) முகமன் - போற்றுதல் மொழி. பெருந்தகை - பெருந் தன்மையுடையவன். அருளின் - அருளினையுடைய. (கூ0)

அல்லமர், மெய்யறிவாளியே என்னை யுணர்வான் எனல்

செறிந்த மூலவாங் காரத்தின் வேறெனத் தீர்ந்திட்
டிறந்தி டாதுநற் கண்டவன் என்னையும் காண்பான்
மறிந்து போமுடல் மானியை உரைப்பதென் மதித்தென்
றறிந்த ஞானிகள் யேறற அறிபவன் அறைந்தான்.

(அ - ரை) மூல ஆங்காரம் - பிறவிக்கு முதற்காரணமாக வுள்ள ஆணவம். தீர்ந்திட்டு - நீங்கி. இறந்திடாது - தன்னிலை கெடாமல். உடல்மானி - உடல் பற்றுள்ளவன். (கூக)

குளிகைகளால் உடலை உறுதிப்படுத்தினேன் என்றும் அழியான் எனல்

ஆதி நாதன தருளினற் குளிகையா திகளான்
மேதை ஆமுடல் சித்திபெற் றவனென்றும் விளியான்
ஆத லாலது பெருதவன் அழியுமென் றறைந்தான்
பூத மேனியே தானெனப் பொருந்துபுந் தியினன்.

(அ - ரை.) மேதையாம் உடல் - ஊனினால் ஆகிய யாக்கை. விளியான் - அழியான. பூதமேனி - ஐவகைப் பூதங்களினால் ஆகிய உடல். புந்தியினன் - அறிவினையுடையான். (கூஉ)

அல்லமர் கோரக்கரைப் பார்த்து மொழிதல்

உடம்பு வாழ்தல்தான் வாழ்தலும் ஊன்பொதிந் தியற்றும்
உடம்பு சாதல்தான் சாதலும் ஆகவே உரைத்தாய்
உடம்பு தானுயிர் என்னநீ உன்னினை போலும்
உடம்பு வேறறி யாவுல காயதன் ஒத்து.

(அ - ரை.) ஊன்பொதிந்த இயற்றும் - ஊனை நிரப்பிச் செய்யப் பெறும். உன்னினை போலும் - நினைத்தாய் போலும். (௯௩)

## உடம்பு நீ அல்லை என்று அருளுரை வழங்குதல்

யாக்கை தானெனில் எனதுடம் பென்பதிங் கென்னை
போக்கும் ஆடை பொன் முதலிய பொருளுளொன் றெனதென்
றுங்கு வார்த்தையில் அதனையான் என்பவர் ஐய
பார்க்கில் யாருணர் பகர்தியென் றல்லன் பகர.

(அ - ரை.) என் ஆடை, என் பொருள் என்பது போல் எனது உடம்பு என்று ஏன் கூறுகிறாய்? நான் உடம்பு என்று வழங்காதது ஏன்? என்று கோரக்கர் கொள்கையை மறுக்கிறார். (௯௪)

## தான் எனப்படுவது எது? எனக் கோரக்கர் கேட்டல்

யானினைந்தனன் ஓடினன் என்றியாம் புகலால்
தானெனப்படு கின்றதே தெனக்கது தன்னை
நீநி கழ்த்துக என்றுகோ ரக்கனின் றியம்ப
ஞான நற்குரு பரனிது நவின்றனன் நயந்து.

(அ - ரை.) நீ நிகழ்த்துக - நீ கூறுக. நான் நினைத்தேன், நான் ஓடினேன் என்கிறீர்களே அந்த நான் என்பது எது? என்று கோரக்கர் கேட்கிறார். (௯௫)

## நீ கூறியது கற்பனை எனல்

நானி னைந்தனன் எனல்கர ணத்தினை நண்ணும்
ஆன தன்மையால் உடல்பொறி கரணங்கள் அனைத்தும்
நானெ னும்படி வரும்வரத் தான்பல அதனால்
நீந வின்றதத் தியாசமென் றறிகென நிகழ்த்த.

(அ - ரை.) கரணம் - அந்தக்கரணம்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம். அத்தியாசம் - பொய்; கற்பனை; இல்லாததைப் புனைந்துரைத்தல். (௯௬)

## உடலிலுள்ள உயிரன்றி வேறுண்டோ எனல்

ஒழியும் என்னுயிர் எனுமிடத் தவ்வுயிர் ஒழிய
மொழிய வேறுமோர் உயிருள தோஇதை மொழிநீ
யழியில் நல்லருட் குன்றமே என்றவன் பகரச்
செழிய மென்மலர்ப் பதத்தெமை ஆள்பவன் செப்பும்.

(அ - ரை.) பழிநில் - பழிப்பில்லாத. மலர்ப்பதத்து - தாமரை மலர்போன்ற திருவடிகளால். (கஎ)

உயிர் என்னும் பெயர் ஆன்ம வடிவிற்கு ஆகுபெயர் எனல்

உயிரெ னும்பெயர் இடங்குகாற் கியற்பெயர் உரைப்பின்
அயனு றுந்தனக் கப்பெயர் ஆகுபேர் ஆமென்
றியனு ணர்ந்தவர் இயம்புவர் என்றெமக் கிறைவன்
மயலறுப்படி உணர்ந்திக துரைத்தனன் மன்னே.

(அ - ரை) இடங்குகாற்கு - உடலில் போக்குவரவு செய்யும் உயிர்க்காற்றுக்கு அயனுறும் தனக்கு - உயிர்க்கு வேறாக விற்கும் ஆன்மா வடிவிற்கு. (கஅ)

நீ உடலை நம்பிக் கெட்டாய் எனல்

தன்னைச் சச்சிதா னந்தமென் றருமறை சாற்ற
மின்னிற் கெட்டிடும் தசைநிணம் என்புதோல் மேய்ந்த
இன்னற் பொய்க்குடில் ஆகிய உடம்பினை யானென்
றுன்னிக் கெட்டனை என்கோவீ என்றினும் இயம்பும்.

(அ - ரை.) மின்னில் கெட்டிடும் - மின்னலைப்போல அழிந் தொழியும். மேய்ந்த - இணைந்த; மூடிய. இன்னல் பொய்க்குடில் - துன்பத்திற்கும் பொய்க்கும் வீடு : உடைமைத்தொகை. (கக)

வீடுபேற்றை விரும்புவோன் உடலை வெறுக்கவேண்டும் எனல்

வெருவு றப்படும் பிறவியை ஒழித்துமெய் வீடு
மருவு தற்குளம் வைத்தவன் இப்பல வடிவைத்
தெருவி னிற்புனி தப்படா ஒன்றினைத் தீண்டி
அருவ ருப்பவன் போலரு வருத்ததை அகற்றும்.

(அ - ரை.) வெருவுறப்படும் - எத்தகையோரானும் அஞ்சப் பெறும். மருவுதற்கு - அடைதற்கு. மலவடிவை - மலவடிவாகிய உடலை. புனிதப்படா - தூய்மையற்ற. (சo)

உடம்போடு உறவு கூடாதெனல்

மருந்து கொண்டுநோய் தீர்ப்பவர் போற்சிவ மருவி
இருந்த இவ்வுடம் பினைப்பெரி யவர்விட எண்ண
மருந்து கொண்டுநோ யோடுற மதிப்பவன் போல
இருந்த இவ்வுடம் போடுற எண்ணினை என்னே.

(அ-ரை) சிவம் மருவி இருந்த - சிவத் தங்கியிருந்த. மருந்து கொண்டு - மருந்து பெற்றுக்கொண்டு. இருந்த - வாய்த்திருந்த. (௬௪)

தோன்றிய உடல் அழிந்துபோம் எனல்

பிறந்த ஆகமொன் றிறந்திடப் பெருமையும் உடைத்தோ
எறிந்த வான்சிலை விழுந்திடா திருப்பதிங் கில்லை
செறிந்த காரியம் என்பதென் றாயினுஞ் சிதையும்
இறந்தி டாதுகா ரணமெனப் படுமதே யென்றும்.

(அ-ரை.) ஆகம் - உடல். எறிந்த வான்சிலை - வானை நோக்கி எறியப்பெற்ற கல். காரியம் எனப்படுவது என்றாயினும் அழிந்தொழியும். காரணம் எனப்படுவதுதான் என்றைக்கும் அழியாதிருக்கும். காரியம், உடல்; காரணம், மாயை. (௬௫)

உடல், அழிவது: ஆதலால் நீ வீடுபேறு விரும்புக எனல்

மருந்தி னாலுடல் நித்தமா ரென்றுநீ வருத்த
திருந்து வாழுநாட் பன்மைகொண் டன்றிவே றில்லை
பொருந்தி நீயுடல் அழுந்திடா தென்பது பொருந்தா
தருந்த வாவினி வீடுவேண் டென்றனன் ஐயன்.

(அ-ரை.) மருந்தினால் - காயசித்தி மருந்துகளால். வருத்தது ஏற்பாடு செய்துகொண்டது. அருந்தவா - அரிய தவத்தையுடைய கோரக்கனே. (௬௬)

கோரக்கர் என் உடல் அழியாது எனல்

ஏது சொல்லினும் என்னுடல் அழிவுறா தென்றும்
வாது செய்யுமதன் காட்சியால் உணர்த்துவன் வலியின்
ஆதி நாதன தருளினால் என்றுகோ ரக்கன்
நீதி லாவருள் வாரியோ டுரைத்திது செய்யும்.

(அ-ரை.) ஏது சொல்லினும் - யாது கூறினும். வாது - சொற்போர். காட்சியால் - கண்ணுக்கு நேராக. (௬௭)

கோரக்கர், அல்லமரிடம் வாள் கொடுத்துத் தம்
உடல் வன்மையை ஆராயக் கூறல்

இன்னி யங்களின் முழங்குவெள் ளருவிவெற் பெறிந்த
மன்ன வன்படை அன்னதோர் ஒளிரயில் வாய்வாள்
தன்னை எம்பிரான் கைக்கொடுத் தனையனென் தன்னை
நின்னி ரும்புய வலியினால் எறிகென நிகழ்த்தி.

(அ - ரை.) இன்னியங்களின் - இனிய வாத்தியங்களைப்போல. மன்னவன் - இந்திரன். வாய்வான் - முனையினையுடைய வாள். எறிந என ஃ வீசுக என்று. (௭௦)

ஈச்சிறகளவு தோல் அறுபடினும் நான் சித்தன் அல்லன் எனல்

அத்த ஈச்சிற கன்னதோர் தோலறு மேனும்
சித்தன் நானலேன் என்றமுன் நின்றனன் செருக்கி
நித்தன் யானியன் கருதிய தேசெய்து நெஞ்சின்
வைத்த மாதருங் கொழிப்பலென் றருளாம் வலித்தான்.

(அ - ரை.) அத்த - தலைவனே. மா தருக்கு - மிகுந்த செருக்கு. வலித்தான் - உறுதிகொண்டான். (௭௧)

அல்லமர், கோரக்கர்மேல் வாளினை வீசல்

வாங்கு வாளினை மின்னென விதிர்த்தருள் மாரி
ஓங்கி வானுரு மேறென அதிர்ந்தவன் உடம்பில்
தாங்க மால்வரை மீதெறிந் தானெனத் தாக்க
ஆங்கொர் ஓதைநிண் என்றுமேல் எழுந்ததை அன்றே.

(அ - ரை.) அருள்மாரி - அருள்மழை பொழிபவராகிய அல்லம தேவர். உரும்ஏறு - அச்சம் தரும் இடி. அதிர்ந்து - ஒலியுண்டாகச் செய்து. தாக்க - வெட்ட. ஓதை - ஒலி. (௭௨)

அவ்வொலி கேட்டபோது உமையம்மையும் அஞ்சுதல்

திருப்ப ருப்பதம் நடுங்கிய தவ்விறற் சீற்றந்
தரக்கன் உற்றிது தனையுமின் றெடுத்தனன் ஆமென்
றுரைப்ப தற்கரி தாகிய அச்சமுற் றோடிப்
பொருப்பி றைக்கொரு மகளரன் புயங்கள்புல் லினளால்.

(அ - ரை.) பொருப்பு இறைக்கு - இமய மலைக்கு. புல்லினள் - தழுவினள். (௭௩)

உலகில் யாவரும் அவ்வொலியால் அஞ்சுதல்

விஞ்சை மாதர்தம் யாழொலி கேட்டமா வேடர்
அஞ்சில் ஓதியர் பதலைகேட் டயரசு ணம்போல்
நெஞ்சு மாழ்கினர் புள்ளினம் எழுந்தகால் நிமிர்த்துத்
துஞ்சு மாவெழுந் தோடின வான்துனி துனித்த.

(அ - ரை) அஞ்சில் - ஐவகையாக முடிக்கப்படுகின்ற. ஓதி - கூந்தல். பதலை-பறை யொலி. அயர்-தளருகிற. அகணம்-ஒருவகைப் பறவை. வான் - முகில். துளிதுளித்த - மழைபெய்தன. (சக)

## கோரக்கர் செருக்கை அல்லமர் அறிதல்

இன்ன வாறுலி எழவுடன் ஊறின்றி இருப்ப
முன்ன மேவிய செருக்கினும் முர்படங் கெய்தி
என்னை நேர்பவர் இலையென அவனுளத் தெண்ணித்
தன்னை யேநனி வியந்தமை அறிந்தனன் தலைவன்.

(அ - ரை.) ஊறு - பழுது. நேர்பவர் - ஒப்பவர். (௬0)

## அல்லமர் கோரக்கரிடம் வாளொன்று கொடுத்துச் சொல்லல்

ஒலியெ ழுந்திட இன்னணம் நினதுபே ருடம்பு
வலிய டைந்தநின் ஒப்பவர் இலைவளி வழங்கும்
உலகில் என்றுகை. குலைத்தின நகைபுரிந் தொருகைம்
பலம்பொ ருந்துவாள் அவன்கையிற் கொடுத்திது வகுத்தான்.

(அ - ரை.) வளிவழங்கும் - காற்று இயங்கும். கைகுலைத்து-கைகொட்டி. இளநகை - இகழ்ச்சிச் சிரிப்பு. (௬க)

## அல்லமரைக் கோரக்கர் வாளால் வெட்டுதல்

வாங்கும் வாளினுல் நின்வலி யொடுநுமர் வலியும்
தாங்கி என்னை நீ எறிந்துகாண் எனறுநம் தலைவன்
ஆங்கு நின்றனன் சித்தனும் அஞ்சிலன் ஆகி
ஓங்கி வாளினுல் எறிந்தனன் ஒப்பிலான் உருவை.

(அ - ரை.) நுமர்வலி - உம்முடைய சுற்றத்தார் வல்லமை. கோரக்கர் பலம் தாக்கப்போதாது ஆகையால் உறவினர் பலத்தையும் பெற்றுத் தாக்குமாறு கூறினர். (௬உ)

## அல்லமதேவர் மீது வாள் படாது போதல்

அணும யங்குமின் நுழைகதிர் எறிந்தவா ளாக
இணைம யங்குமெய்ப் படாதுவாள் வறிதுபோ யிற்றுப்
பணைம யங்குதோள் மாயைதன் படாமுலை படாத
மணம யங்குதண் சோதியேல் வாள்பட வற்றே.

(அ - ரை.) அணுமயங்கும் - மிகச் சிறு அணுவும் பின்னிடத் தக்க. கதிர் எறிந்த வாளாக-ஞாயிற்றொளியை வெட்டிய வாளாக,

இணையங்கும் மெய் - ஒப்புப் பொருள்களும் தோற்கும் அல்லமருடைய திருவுடல். பணைமயங்கு - மூங்கில் தோற்கும். படாம் - ஆடை. படா - தளராத எனஇருமாம்; படாத - அணையாத. (௩௧)

கோரக்கர் அல்லமதேவரைப் பணிந்து கூறுதல்

(வேறு)

வானொறிந்து கையிளைந்த கோரக்க
நாதன்மிக மனம்வியந்து
நானிறைஞ்சும் பரஞ்சுடரே இவனென்று
மெய்விதிர்ப்ப நடுநடுங்கித்
தானடைந்த செருக்கொழிந்து தலையன்பின்
நெறிநடப்பத் தலைப்பட் டெங்கோன்
தேனடைந்த செழுங்கமலத் திருவடியில்
விழுந்தெழுந்து செப்பு கின்றான்.

(அ - ரை.) மெய்விதிர்ப்ப - உடல் அசைய. தலையன்பு-சிறந்த அன்பு. (௩௨)

தன் பிழையைப் பொறுத்தருளுமாறு மீண்டுந் தாழ்தல்

நின்னையறி யாதுமது உண்டவன் போல்
மனஞ்செருக்கி நினைந்த பாவம்
பின்னரெதிர் நின்றுநினை குறைமறுத்துப்
பித்தனெனப் பிதற்றுந் தீமை
இன்னுயிர்கொன் றுடல்கவரும் மறவன்போற்
செய்தபிழை எல்லாம் எந்தாய்
மன்னியநின் பேரருளால் தீர்த்தெனையாட்
கோடியென மறித்தும் தாழ்ந்தான்.

(அ - ரை.) நினைந்த பாவம்-எண்ணிய தீவினை. மறவன்-வேடன். மன்னிய - நிலைபெற்ற. கோடி - கொள்ளுதி. (௩௩)

நீ உண்மை உணரவேண்டும் என்று அல்லமர் கூறுதல்

செய்தபிழை போகவினிப் பிழைசெய்யா
துடம்புநசை தீர்ந்து நின்றன்
மெய்தெரியின் எனக்குநீ இனியனெனப்
பெருங்கருணை வெள்ளங் கூற

உய்தலிலென் பிழைபொறுத்திட் டடித்தரிய
வாரமுதர் ஊட்டு கின்றாய்
கைதருசெம் மணியனையாய் யான்செய்வ
தேதுளது கைம்மா றென்று.

(அ - ரை.) நசை - அவா. மெய்த்தெரிசின் - உண்மை வடிவத்தை உணரின். உய்தல்இல் - பிழைத்தற்கு இடமில்லாத அடித்து - அறுத்து.

கோரக்கர் அருள்புரிய வேண்டுதல்

முற்றுமருள் செய்தாநீ யானறிய
வேண்டுபொருள் மொழிதி யென்று
பற்றுடலா நவைதீர்ந்த கோரக்கன்
நிறபஅவா பருவங் கண்டு
கற்றறியும் அறிவிலுள் அறிவரிய
பரஞ்சோதி கருணை கொள்ளாப்
பெற்றதிரு வுளமகிழவுந் தன்பொடுகேண்
மதியென்னுப பேச லுற்றான்.

(அ - ரை.) பற்று - பற்றியிருந்த. கேண்மதி - கேட்பாயாக; மதி முன்னிலையசை. (௬௭)

கோரக்கர், குகேசன் என்னும் மொழிப் பொருளை வினவல்

இருந்தபடி குகேசனை நீ அறிவையெனின்
இனப்பிறவி எனுநோய் தீர்ந்து
பொருந்துறுவை பேரின்பம் என்றமலன்
கூறஅவற் போற்றி எந்தாய்
பரிந்தருள்செய் குகேசனெனும் மொழிப்பொருளே
ததுகூறப் படுவான் யாவன்
தெரிந்துணர அருள் செய்வாய் என்றுதொழ
எம்பெருமான் செப்பு கின்றான்.

(அ - ரை.) பரிந்தருள்செய் - மிகுந்த அன்போடு அருள் செய்கிற. அது கூறப்படுவான் யாவன் - அதனை புணர்த்துபவன் யாவன். (௬௮)

அல்லமர், குகேசன் என்னும் மொழிப்பொருளை விளக்குதல்

குகையுதயம் அதன் கணமர் இறையீசன்
எனறுபொருள் குறித்துக் கொண்மோ
திகழுமைய குகேசமொழி உடையன் யான்
தானெனவே நிமலன் கூற

அகமகிழ முகாலர்ந்து சித்தனைறை
குவானியோ ஆகினுன்றன்
முகையவிழ்மென் மலாக்கரத்திற் சிவலிங்கங்
கொண்ட தென்கொல் மொழிதி என்ருன்.

(அ - ரை.) குகைஉதயம் - உள்ளபாக்ய குகை. கொண்மோ - கொள், மோ: முன்னிலையசை. அனைய-அத்தன்மை பொருந்திய. ! இக

கையில் சிவக்குறி கொண்டமைக்குக் காரணம் கூறுதல்

பிறந்தபயன் பெறவுலகர் எனைக்கண்டு
கொண்டுமனம் பிறழ்தல் இன்றிச்
சிறந்தசிவ லிங்காலர்க் கரங்கொண்டு
பூசனையாம் செய்ய வேண்டி
நிறைந்தவென துருவாகும் இக்குறிகைக்
கொண்டவன்யான் நீங்கா தென்றும்
அறிந்துதெளி குதியனவென் றருள்செய்தெங்
குருதேவன் அறைய லுற்ருன்.

(அ - ரை) பிறழ்தல் இன்றி - மாறுபடாமல். எனது உருவாகும் - எனது வடிவமாகும். (௯0)

பிறர்க்கு நன்னெறி கூறுவோன் அவ்வழியில் நடக்கவேண்டும்

போதகனு கியகுரவன் எஞ்ஞான்றும்
நற்கருமம் புரிக என்று
வேதமுத லாகியநூல் முழுது மொருங்
கொருவந்தம் விதித்த லானே
சாதகனு கியபருவ மாணுக்கன்
பாசவலி தணிக்க வல்லான்
மேதினிமேல் உடலோடுநற் செயல்விடுவ
தன்றியிடை விடலா காதால்.

(அ - ரை.) போதகனுகிய குரவன் - போதித்தலைச் செய்யும் ஆசிரியன். ஒருவந்தம்-உறுதியாக. பாசவலி-பிறவிக்கட்டின் வன்மை.

அல்லமர் அருளுரை வழங்கல்

என்றுதன தியலுணர்த்தி உடம்புநான்
என்றிருந்த இயல்பு போல
நின்றவெனை உணர்ந்துநீ சோகம்பா
வனைகொண்டு நிற்பை யாயின்

பொன்றலுறு விடங்கலுழன் தனைநினைப்பப்
போதல்போற போம விச்சை
நன்றறிதி என அறிவித் தனனெங்கோன்
கோரக்க நாதன் தன்னை.

(அ - ரை.) சோகம் பாவனைகொண்டு - அவனே நானென்னும் ஒற்றுமைப்பட்ட உணர்வைக்கொண்டு. பொன்றல் - இறத்தல். கலுழன் - கருடன். அவிச்சை - அறியாமை. (கஉ)

### கோரக்கர் உண்மையை உணர்ந்து சிறப்படைதல்

ஞானகுரு பரனருளால் தனக்குரைத்த
மொழிப்பொருளை நன்ற றிந்திட்
டூனவடி வென்பதுவிட் டுண்மையலா
அனைத்தையுநீத் துண்மை கண்டு
தானதனை அடைந்துதான் அதுவென்னும்
மருளகன்று தானே ஆகி
வானவரும் அறிவரிய பெரும்புகழ்கோ
ரக்கனவண் மன்னி லுறல்.

(அ - ரை.) ஊனை - ஊனுடலை. வடிவு என்பது விட்டு - தனது உண்மை வடிவம் என்பதை ஒழித்து. மருள் - மயக்கம். (கங)

பத்தொன்பதாவது கோரக்கர் கதி முடிந்தது

கதி க௯ - க்குச் செய்யுள் கங.

---

(அ-ரை.) வல்அழல் - கொடிய தீ. அறிவு இயற்றினான் - மெய்யறிவு வழங்கியருளினான். (௪)

## அல்லமதேவர் ஒரு காட்டிற் செல்லுதல்

யாவரும் தனதருட் கேற்று ளாரெனப்
பாவவன் றனையறப் பரிந்து நன்னெறி
மேவவந் தருள்புரி விமலன் ஆயிடை
மாவழங் குறுமொரு வனத்திற் போயினான்.

(அ-ரை.) ஏற்றுளார் என - உரியவரென்று. விமலன் - அல்லமதேவர். மாவழங்குறும் - விலங்குகள் உலாவும். (௫)

## அக்காட்டில் ஒரு வேடன் எதிர்ப்படுதல்

அக்கொடு வனத்தெதிர் அன்பென் கின்றதுள்
புக்கறி கிலாவொரு புளினன் கூன்புறக்
கொக்கென நாடொறுங் கொலைபு ரிந்தவன்
கைக்கொடு மரமொடு கடிது தோன்றினான்.

(அ-ரை.) உள்புகு அறிகிலா - உள்ளத்திற் சிறிதும் புகுந்தறியாத. புளினன் - வேடன். கொடுமரம் - வில். (௬)

## அல்லமதேவர் அவ்வேடனுக்கு அருள்செய்ய எண்ணுதல்

அன்பனைக் கண்ணிடந் தப்பும் வேடனுக்
கின்பமீ குதல்புகழ்க் கேற்ற தன்றுநான்
வன்பனாய்த் திரியுமிம் மறவற் காப்பலென்
றென்பொலா நெறியனா இரங்கிற் றென்றனன்.

(அ-ரை.) வேடனுக்கு - கண்ணப்ப நாயனாருக்கு. வன்பன் - கொடியவன். மறவன் - வேடன். (௭)

## அவ்வேடன்மீது அல்லமதேவர் அருட்கண் வைத்தல்

நல்லறி வவனுள நடுதற் கொப்பினா
அல்லவன் வினையற அருட்கண் வைத்தனன்
கொல்லையின் விதையிடக் கொழுப்புக் காமுனி
புல்லெரி யுறவழற் போகட் டென்னவே.

(அ-ரை.) வினை அற - தீவினை நீங்க. விதையிட - விதைவிடுவான் வேண்டி. கொழுப்புக்கா - எருவுக்காக. முனிபுல் - காய்ந்த புல். எரிஅழ - எரியும். போகட்டென்ன - போட்டாற்போல. (௮)

### வேடன், அல்லமரை அருள்புரிய வேண்டுதல்

மேவுதீ வினையெலாம் விளிந்து தூயனுய்ப்
பாவியேன் உய்வகை பகர்தி என்றனன்
மாவலால் வழங்குரு வனத்தில் வேட்டுவன்
யாவர்தாம் இறையருள் எய்தின் உய்ந்திடார்.

(அ - ரை.) மேவு - பொருந்திய. விளிந்து - கெட்டு. மாவலாலி - விலங்குகள் அல்லாமல். (அ)

### ஐம்புலன்களையும் அடக்கவேண்டும் எனல்

அறிவெனும் வேலினுல் ஐம்பு லன்களாம்
மறியினம் அருமையானும் வலையைத் தப்புறு
தெறிகுவை எனிலுனக் கில்லை துன்பெனு
நெறியினை வழுவறு நிமலன் கூறினன்.

(அ - ரை.) மறியினம் - மான்கூட்டம். தப்புறு - தப்பி யோடாமல். அறிவெனும் வேல், ஐம்புலன்களாமறியினம், அருளெனும் வலை: இவை உருவகம். (கூ)

### என்னையடையின் திருமாலும் நின்னைப் பணிவன் எனல்

அறிவொடு மனஞ்சிலை அம்ப தாகநான்
குறியென எய்யவல்லையேற் குமர நின்றனைப்
பொறிமதில் இலங்கைமுன் புரந்து ளான்தலை
பறிபட எய்தவன் பணியும் என்றுமே.

(அ - ரை.) பொறிமதில் - பகைவரைத் தடுக்கும் பொறிகள் அமைக்கப்பெற்ற மதில். அறிவுவில்; மனம் அம்பு; அல்லமன் குறி என இயைதலின், நிரனிறையணி. (௧0)

### தவக்காடு ஒன்று காணப்பெறுதல்

இப்பரி செறும்வழி எயினன் உய்வகை
செப்பிநல் நிலையருள் செய்தி ருந்தியே
அப்புறம் அருளுடை அமலன் போம்பொழு
தொப்பறு தவவனம் ஒன்று தோன்றிற்றே.

(அ - ரை.) இப்பரிசு - இத்தன்மை. எறும்வழி - மிகுந்த வலி. எயினன் - வேடன். (௧௧)

கோடமை கரிகளும் கொடும டங்களும்
பாடமை பாகதவிர் பரிசி ஞாதற்
காடர வொடுமதி அமர்பி றான்சடைக்
காடல துவமையும் கண்ட தில்லையே.

(அ-ரை.) கோடு-கொம்பு; ஈண்டு யானைத்தந்தம். பாடு அமை-கேடு பொருந்திய. ஆடு அரவு - ஆடுகின்ற பாம்பு. (௧௨)

## அக்காட்டில் விலங்குகள் முனிவர்கட்குப் பணிவிடை புரிதல்

பெயர்க்குறு கால்நல்கை யாகப் பெற்றவும்
உயிர்க்குறு நாசிகை யாக உள்ளவும்
மயக்கறு தீவினை வளர்த்து வான்புனல்
பயக்குறு முனிவரர் பணிகள் செய்யுமால்.

(அ-ரை) பெயர்க்குறு - பெயர்க்கத்தக்க. உயிர்க்குறு - மூச்சு விடுதற்கிடமாக். மயக்கறு தீ - வேள்வித்தீ. வான்புனல் பயக்குறும் - மழை பெய்யச்செய்யும். (௧௩)

## அக் காட்டகத் துறையும் முனிவரர் தொழில்

மறைபல ஓதுநர் மகம்வ ளர்க்குநர்
கறைமிட றுடையநங் கடவுட் பூசனை
முறைவழி புரிகுநர் மூச்ச வித்தொரு
தறியென வசைவற விருக்குந் தன்மையார்.

(அ-ரை.) மகம்-வேள்வி. மிடறு-கண்டம். தறி-தூண். (௧௪)

## அல்லமதேவர் அம்முனிவர்கட்கு அருள்புரிய எண்ணுதல்

(வேறு)

ஆயி ருக்கும் அருந்தவர் தங்கள்பால்
போயி வர்க்குறு போதனை யாற்பவ
நோய கற்றுவல் என்று நுவன்றனன்
தாயெ னக்கொரு தாயெனும் அல்லமன்.

(அ-ரை.) ஆயிருக்கும் - மேற்கூறியவாறு தொழில்களில் ஈடுபட்டிருக்கும். பவநோய் - பிறவித்துன்பம். (௧௫)

### மெய்யறிவாலன்றி மேன்மை உண்டாகாது எனல்

நோற்று நோன்புடன் நொந்து வருந்துவீர்
ஆற்று நீர்மகம் ஆதி வினையினுல்
மாற்று மாயை மலஞ்செறு விற்படு
சேற்றி னுற்கழுஞ் சேறு நிகர்க்குமால்.

(அ-ரை.) மாற்றும் மாயை மலம் - மாற்றப்பெறவேண்டும் மாயாமலமனைத்தும். செறு-வயல். கழும்-கழுவுகின்ற; இடைக்குறை. (கசு)

### வேள்வியால் வீடுபேறு கிடைக்காதெனல்

ஞானம் கொண்டு நணுகும் சிவபதம்
ஊனம் கொண்ட கருமத் துறுமாது
வானம் கொண்டு வளர்த்தல் புகையாறு
மானம் கொண்டு வளர்த்தலை ஒக்குமால்.

(அ-ரை.) ஞானம் கொண்டு-மெய்யறிவினுல். ஊனங்கொண்ட கருமம் - வேள்வி முதலியன. புகையுள்ள விடத்தில் நெருப்புள்ளது போல வேள்வி முதலிய நல்வினையுள்ள விடத்தில் வீடுபேறு உள்ளது என்று நீவிர் நினைத்தீராயினும் என்றார் அல்லமதேவர். (கஎ)

### ஐம்புலன்களையும் அழித்தலாலே வீடுபேறு உண்டாமெனல்

குடுமி யங்கிரி ஒப்பக் குவித்தபுல்
சுடுதல் கொண்டு பிறவி சுடப்படா
தடுபு லன்கள் அறவொனும் அங்கியில்
சுடுதல் கொண்டு பிறவி சுடப்படும்.

(அ-ரை.) குடுமி அங்கிரி-முடியையுடைய அழகிய மலை. புல்-தருப்பைப்புல். சுடுதல் கொண்டு - வேள்வியில் எரித்தல் கொண்டு. அடு - வருத்துகின்ற. அங்கி - தீ. (கஅ)

### மெய்யறிவாம் வேள்வி புரிபவனே வீடுபேறடைவான் எனல்

போதம் ஆகும் புனிதத் தழலினுள்
பேத பாவனைப் பேரவி பெய்யினேல்
ஆதி சோவுடை மாசி அனைய
வேதம் யாவும் விளங்க விளம்புமே.

(அ-ரை.) போதம் - மெய்யுணர்வு. பேரவி - மிகுந்த நெய். ஆதிசோ - மூலப்பிரகிருதியாகிய அரண். மாசி - முகில். (ககூ)

### அறிஞர்களே மெய்யறிவு பெறுவர் எனல்

மையறு பயின்உள்ள கரும மணியினை
யறியார் கொளுதல போல பதியாரும்
சிறார் கொள்வர் தெளிந்த துயமசி
அறிஞர் கொள்வர் அணிகொளும் செல்வர்போல்.

(அ-ரை.) மணி - சங்குமணி. அறிஞர்கள் சங்குமணி மாலையைக் கொளுதல்போல, அறவறிவார்கள் மையறு பயிலுள்ள வேள்வி முதலிய செயல்களை மேற்கொளவர். செல்வர்கள் பொன்னணிகளைக் கொள்ளுதல்போல அறிஞர்கள் தத்துவமசிப் பொருளை நாடியடைவர். (உ0)

### முனிவர்கள் அல்லமதேவரை வணங்கி வாழ்த்துதல்

என்று கூற இருந்தவர் அன்பொடு
நின்று ஞான நெடுந்தகை தாள்மிசை
இன்று நீவர எத்தவம் செய்தனம்
மன்ற யாமென வாழ்த்தி வணங்கினர்.

(அ-ரை.) இருந்தவர் - பெருந்தவத்தினையுடையவர்; ஆங்கிருந்தவர்கள் எனினுமாம். மன்ற - மிகவும்; "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்பது தொல்காப்பியம். (உக)

### முனிவர்கள் மோகம் நீங்கப்பெறுதல்

மாயை தோன்றிய ஞான்று மனத்தெழும்
மூய மோகம் முடிந்திடச் சொற்பவர்
வாயி னல்துறு வாசகன் சொலப்படும்
தூய னுமிவன் என்று துதித்தனர்.

(அ-ரை.) தோன்றிய ஞான்று - பிறந்தபொழுது. மூய - மூடிய. சொலப்படும் - முன்னே சொல்லப்பட்ட (உஉ)

### அல்லமர், முனிவர்கள் சிறப்படையச்செய்தல்

இன்ன வாறிங் கிருந்தவர் இன்புற
பன்னு ஞான மறைமொழி கூறியே
தன்னை மேவும் தன்மை புரிந்தனன்
அன்ன போனும் அல்லம தேவனே.

(அ-ரை.) தன்னை மேவும் தன்மை - ஒவ்வொருவரும் தம்மைத் தாமுணர்ந்து மெய்யறிவையடையும் தன்மை. (உ௩)

இருபதாவது முனிவர் கதி முடிந்தது

கதி உ0 - கவிச் செய்யுள் ககக

# உக. சூனிய சிங்காதன கதி

[இக் கதிக்கண், வசவதேவர் அல்லமதேவரை அறியும்பொருட்டுச் சூனிய அரியணை ஒன்று தேவரும் வியக்கத்தக்க முறையிற் செய்து வைத்துக்கொண்டு அடியார்கள் திருக்கூட்டத்தோடு அல்லமதேவரை எதிர்பார்த்துக்கொண்டிருக்குஞ் செய்தி கூறப்பெறுகின்றது.]

### நூலாசிரியர் கூறல்

அல்லமனை அறிதற்கோர் அறிகருவி ஆகவுனிச்
சொல்லரிய எழுநிலைப்பொற் சூனியசிங் காதனமொன்
றில்லையெனல் இல்லையெனும் எங்கள்குரு வசவேசன்
மல்லலுற இனிதாற்றி வைகுமுறை வகுத்துரைப்பாம்.

(அ-ரை.) அறிகருவி - அறிதற்குரிய கருவி. உனி - எண்ணி. இல்லையெனல் இல்லையெனும் - பொய்யென்று சொல்லக்கூடியவற்றைப் பொய்யென்று கூறும். மல்லலுற - சிறப்புப் பொருந்த. வைகும் முறை - தங்கும் வகையை. எழுநிலை; சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தபாவனை, துரியம் என்பன. (க)

### வசவதேவர் மனத்தை அடக்க முயலல்

ஒடுக்குமனம் வீட்டுநெறிக் கொருதுணையா கும்புறத்து
நடக்குமனம் நிரயவழி நடப்பதற்குத் துணையாமென்
றிடக்கர்மனம் அடக்கும்வகை எம்பிரான் இயம்பியவா
றடக்கமன முறுநெறியின் அருணந்தி தலைப்பட்டான்.

(அ-ரை.) ஒடுக்குமனம் - அடக்கப்பெறுகிற மனம். இடக்கர் மனம் - கட்டுக்கடங்காமல் திரியும் மனம். (உ)

### வசவதேவர் மனத்தை அடக்கி ஓவியம்போல் அசைவற்றிருத்தல்

நில்லாது போமனத்தைக் கால்பிடித்து நிறுத்தியே
வில்லாரும் மதியமுதம் விருந்திட்டு நட்புறீஇப்
பொல்லாத புலனுகரப் புறத்துநிலை தடுமாறிச்
செல்லாமல் உடல்கொண்டு சித்திரமொத் திருந்தனனால்.

(அ-ரை.) கால்பிடித்து - உயிர்க் காற்றைப் பிடித்து. வில்லாரும் - ஒளிபொருந்திய. (ங)

### அல்லமதேவர் வரவை எதிர்பார்த்திருத்தல்

நின்றமனங் கொண்டுநான் நித்தமாத் தனையுணர்த்த
என்றுவரு ஞான குரு என்னவெழுந்து வளர்காதல்
ஒன்றுமொழு வாதிற்ப உவப்பதுல கிறபொருள்வே
றின்றியருள் நந்திபிரான் எந்தைவர வினைநோக்கி.

(அ - ரை.) நின்ற மனம்-அடங்கிய மனம். நித்தம் - அழிவற்றது. உவப்பது - மகிழ்வது. (௫)

### அல்லமதேவரையறியச் சூழ்ச்சி யெண்ணுதல்

எவ்வுருவி னெடுவருமோ எம்பிரான் தெளிவகிலேன்
செவ்வியமோர் தவிசமைத்துச் சேர்ந்தன்மேல் இருப்பவனை
அவ்வியமில் அல்லமனென் றறிவன்யான் என்றுநுணித்
திவ்வுலகம் உளம்வியப்ப இதுசெய்தான் அருணந்தி.

(அ - ரை.) செவ்விய-சிறப்பான. தவிசு-இருக்கை. அவ்வியம்-குற்றம். உளம் வியப்ப - மனம் ஆச்சரியமுற. (௬)

### சூனிய அரியணை ஒன்று செய்வித்தல்

(வேறு)

ஆதியா தாரம் ஆதி அடுக்கெனப் பல்நிறத்த
சோதியேழ் நிலைகளா ஓங்கச் சூனிய பீடம் ஒன்று
போதினோன் உளம்வியப்பப் பொன்மணி பளிங்கு கொண்டு
சாதிநான் மறைகள் போற்றும் சைவநாயகன்செய் வித்தான்.

(அ - ரை) ஆதி ஆதாரம் - மூலாதாரம். பல்நிறத்த - பல நிறங்களையுடைய. போதினோன் - நான்முகன். சாதி நான் மறைகள்-ஒரே தன்மையுடைய நான்கு மறைகள். (௭)

### சூனிய அரியணையின் இயல்பு

காரண உபாதி ஏழ்மேற் கண்டிடு ஞானி போலச்
சீரணி நுதலின் மீது சென்றுகாண் யோகி போலப்
பூரண ஞானா னந்த போதகன் இருப்புக் காண்பான்
ஏரணி நிலைகள் ஏழ்மேல் நிகழ்வெளித் தவிச மைத்தான்.

(அ - ரை.) கண்டிடும் ஞானிபோல - தன்னைத்தான் பார்த்துக் கொண்டிருக்கும் மெய்யறிவாளனைப் போல. போதகன் - ஆசிரியனாகிய அல்லமதேவன். ஏர்அணி பேரழகு. வெளித்தவிசு - சூனிய அரியணை. (௮)

### பார்ப்பவர் உடல் நிழல் அவ்வரியணையில் தோன்றுதல்

களங்கமில் மதியம் போலக் கண்டவர் மனம லர்த்தும்
பளிங்குசெய் நிலையுள் வந்து பார்ப்பவர் பொருந்தி முற்போய்
விளங்குதல் தன்மேல் தோன்ற வெந்தெரி பசும்பொ னுறமெய்
துளங்கொளி நிலையைச் சென்னி சுமத்தல்போல் செய்த ஒக்கும்.

(அ-ரை.) களங்கம் - மறு. செய்நிலையுள் - செய்திருக்கின்ற நிலைகளுக்குள். (௮)

### அவ் வரியணையைக் கண்டோர் வசவரை வியத்தல்

திருந்திய பளிங்கு கொண்டு செய்தவந் நிலையின் வாய்தல்
பொருந்துதல் தெரிகி லாராய்ப் புகுந்துகாண் மனிதர் எல்லாம்
கரங்கொடு தடவிக் கண்டு கண்தெரி யார்தம் போல
வருந்திய மனம கிழ்ந்து வசவனை வியப்பர் அன்றே.

(அ-ரை.) வாய்தல் - வாசல். மனிதர் எல்லாம் தடவி கண்டு, மகிழ்ந்து, வியப்பர் என்க. (௯)

### அவ் வரியணையைக் கண்ட தேவரும் வியத்தல்

நினைவினும் ஒருவன் சேர்தல் நெஞ்சுஆல யமே அன்றி
வினையினால் உலகர் செய்து விளங்கிய பணிகள் தம்முள்
இனையதோர் புதுமை ஆதல் இலையென் றமரர் எல்லாம்
தனையலால் நிகரி லாத தனியனை வியந்து நின்றார்.

(அ-ரை.) நெஞ்சுள் ஆலயம் - மனக்கோயில், விளங்கிய பணிகள் - வெளித்திருப்பணிகள். தனையலால் - தன்னையல்லாமல். (௧௦)

### அடியர்கள் அங்குச் சென்று அவ்வணையைப்பார்த்து மகிழ்ந்திருத்தல்

அம்பரா சனமி யன்ற அதிசயம் கேளா முக்கண்
தம்பிரான் அடியர் ஆகத் தவரயுளார் எல்லாம் சென்று
செம்பொனால் இயன்ற அந்தச் சீர்கெழு பீட நோக்கி
எம்பிரான் வசவ தேவன் இணையடி தொழுதி ருந்தார்.

(அ-ரை.) அம்பர ஆசனம் - வெளி அணை. அதிசயம் - புதுமை. சீர் - சிறப்பு. (௧௧)

இவ்விருக்கையில் அல்லமர் ஒருவரே இருக்க இயலும் எனல்

கரையறு கல்விக் கென்னக் கற்றவர் பலரும் ஏத்தத்
தரையிசை அமைத்தி ருந்த சாரதா பீட மேபோல்
உரைமனம் இறந்த தாமிவ் வொருதனி ஞான பீடம்
அருள்தரு குருகு கேசன் அன்றியே றிடுதற் காமோ.

(அ-ரை.) தரையிசை - நிலவுலகில். சாரதா பீடம் - கலைமகள் இருக்கை. உரைமனம் இறந்தது - வாக்கால் உரைக்கவும் மனத்தால் எண்ணவும் இயலாதது. (கஉ)

அல்லமரே அதில் ஏறக்கூடியவர் என நினைந்திருத்தல்

இப்பெரும் பீடம் ஏறி இருந்திட வல்லோன் என்றும்
மைப்பெறும் படிம னைந்தெம் மனத்திருப் பதற்கு வல்ல
அப்பெருங் கருணைக் குன்றாம் ஆகுமல் லமனே என்று
செப்புறு பரிசி லானுய்ச் சிந்தைசெய் திருந்தான் நந்தி.

(அ-ரை.) மைப்பு - புதையல். செப்புறு பரிசு இலானும் - சொல்லும் தன்மை அற்றவனாக. (கங)

அல்லமதேவர் வரவை எதிர்பார்த்து இருத்தல்

கரைபொரு கங்கை யாற்றிற் கண்ணிவைத் தாசை அன்னம்
வருதலை நோக்கி நிற்கு மாறுபோல் இருள்வி ழுங்கிய
பெருமொளி விரிக்கு ஞான பீடமொன் றமைய ஆக்கிக்
குருபரன் வரவு நோக்கிக் கொண்டிருந் தனனெங் கோமான்.

(அ-ரை.) கண்ணி - வலை. கண்ணியை விரித்துத் தலைமை அன்னத்தின் வரவைப் பார்த்திருத்தல்போல, இருக்கையை அமைத்து அல்லமதேவர் வரவை நோக்கியிருந்தார் வசவண்ணர். (கச)

அடியார்களும் அல்லமர் வரவை எதிர்பார்த்தல்

ஏட்டினைப் புதுநீர் ஆற்றில் எதிர்கிழித் தேற விட்டோன்
பாட்டுடைத் தலைவன் அன்பர் பலருநம் வசவன் தன்னை
நாட்டமுற் றடையும் ஆசான் நமக்குமாம் என்றி ருந்தார்
விட்டினுக் கேற்றுஞ் சோதி விருந்திற்கும் உதவு றாதோ.

(அ-ரை.) ஏறவிட்டோன் - திருஞானசம்பந்தர். பாட்டுடைத் தலைவன் - சிவபெருமான். (கரு)

இருபத்தொன்றாவது சூனிய சிங்காதனகதி முடிந்தது.

கதி உக - க்குச் செய்யுள் கசரு.

## ௨௨. சூனிய சிங்காதனத்தில் இருந்த கதி

[இக் கதிக்கண், அல்லமதேவர் வரின் அவர் எழுந்தருளுவதற்காகவும் அல்லமதேவரைத் தாம் அறிந்துகொள்வதற்காகவும் வசவண்ணர் வெளி அரியணை (சூனிய சிங்காதனம்) ஒன்று செய்து வைத்துக் கொண்டு, அல்லமதேவரின் வரவை எதிர்நோக்கியிருக்கிறார். ஓராண்டாகியும் அல்லமதேவர் வரவில்லை. நான் செய்த செய்கை பிள்ளைச் செய்கையாகிவிட்டதே என்று வசவண்ணர் வருந்தியிருக்கும்போது ஒருநாள் அல்லமதேவர் வருவதற்கான நற்குறிகள் காணப்பெறுகின்றன. அவ்வளவில் வசவண்ணர், கலியாணபுரத்தை அழகுபடுத்துமாறு செய்து படைத்திரளுடன் அல்லமதேவரை எதிர்கொள்ளும் பொருட்டுச் செல்லுகிறார். சென்னவசவர், மடிவாலமாச்சையர், கின்னரப் பிரமன் முதலியோரும் வசவண்ணரைச் சூழ்ந்து செல்லுகின்றனர். இதனைக் கண்ட அமணர்கள் விச்சல மன்னனிடஞ் சென்று கூறுகிறார்கள். அல்லமதேவர், வசவர் முன்பு பித்தர்போலத் தோன்றுகிறார். பலவகையான ஆடல் பாடல்களைச் செய்கிறார். வசவண்ணர், அல்லமதேவரை யுணர்ந்து போற்றுகிறார். அடியார்களும் போற்றுகிறார்கள். வசவண்ணர் திருமனைக்குச் சென்று வெளி அரியணையைக் கண்டு அதன்மீது எழுந்தருளுகிறார் என்னுஞ் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

பள்ளம்புகு புனல்போல்நெறி படருஞ்சிவன் அடியார்
உள்ளம் புகும் அருள் நந்தியிவ் வுலகோரறி யாமல்
கள்ளங்கொளு மனமோடுசெய் அணைமேலொரு கருணை
வெள்ளங்கடி தேறுஞ்செயல் விருப்பாலெடுத் துரைப்பாம். (௧)

(அ - ரை.) பள்ளம் புகுபுனல் - தாழ்ந்த இடத்தை நோக்கிச் செல்லும் நீர். அருள் நந்தி - வசவண்ணர். நெறிபடரும் - நல்ல வழியிலே நடக்கும்.

### வசவண்ணர் அல்லமதேவர் வரவை நாடியிருத்தல்

சிரல்நாடுறு கயலாடல்செய் செந்நாடுடை உழவர்
அரன்நாடுறும் ஒருகாவிரி அறல்நாடுறு முறைபோல்
பரன்நாடுறும் அடியார்வினை பரியத்தரி குரவன்
வரல்நாடுறும் உருகும்பர வசவன்புறு வசவன்

(அ - ரை.) சிரல் - சிச்சிலிப்பறவை. அரன் - சிவன். அறல் நாடுறும் - நீரை எதிர்பார்க்கும். பரன் - இறைவன். பரிய - நீங்க.

வரல் நாடுறும் - வருதலை விரும்பும். பரவச அன்புறும் - மிகுந்த பேரன்பை அடையும். (௪)

### அல்லமதேவர் வாராமையின் வசவண்ணர் வருந்தல்

பொன் ஞனமை கதிர்வீசணை புரிந்தீராறு பருவம்
பின்னுயின யான்செய்தொழில் பின்னைத்தொழில் ஆயிற்
றெந்நாள் வரும் எனையாளுடை எம்மானறி யேனென்
றுன்னுவரும் துயரோடுளம் உலைந்தான்வினை களைந்தான்.

(அ - ரை.) கதிர்வீச அணை - ஒளியை வெளிப்படுத்தும் அணை. ஈராறுபருவம் - பன்னிரண்டு திங்கள். உன்னு - எண்ணி. உளம் உலைந்தான் - மனம் வருந்தினன். (௫)

### ஒருநாள் வசவண்ணர் உள்ளத்தில் அல்லமர் வரவு தோன்றுதல்

இவ்வாறமர் நாளோர் பகல் எமையாளுடை வசவன்
செவ்வாறுசெல் மனத்தல்லம தேவன்வரல் தோன்றிற்
றவ்வாறது நிகழ்வுற்றவன் ஆர்வந்தனை ஒருநாள்
எவ்வாறுரை செய்வன்பணி இறையுஞ்சொல அரிதால்.

(அ - ரை.) செவ்வாறு செல்மனம்-செம்மையான நல்வழியிலே செல்லு மனம். பணிஇறை - பாம்புத்தலைவன் (ஆதிசேடன்). (௬)

### வலத்தோள் விழி முதலியன துடிக்கும் நற்குறி கண்டு மகிழ்தல்

வலமாடின விழிதோளருள் வசவற்கதி தூரம்
செலுமாடவன் வருநாள்விழி இடமாடிய செயல்வாய்
குலமாதுளம் எனவேமகிழ் கொண்டன்பு நிறைந்து
மலமாயைகள் துரக்குஞ்சென்ன வசவற்கிது புகல்வான்.

(அ - ரை.) அதிதூரம்-மிகு சேய்மை. துரக்கும் - நீக்கும். மிகு சேய்மை நாட்டிற்குச் சென்ற தலைவன் மீண்டும் வருநாளன்று, இடத் தோளும் இடத்து விழியும் துடிக்கப்பெற்ற குலமாதைப் போல வசவண்ணர் மகிழ்வு கொண்டார். (௭)

### நற்குறியைச் சென்னவசவர்க்கு நவிலல்

(வேறு)

நற்குறி பலவும் இற்றைநாள் நிகழ்கின்ற என்பால்
வற்கலை முனிவர் போற்றும் வசவஅந் நிகழ்ச்சியானும்
பிறபெறு பயன்யா தென்று பெருந்தகை வினவ நின்ற
சிற்பரம் உணர்ந்த சென்ன வசவதே சிகனுரைப்பான்.

(அ-ரை) வற்கலை-மரவுரி. பெருந்தகை-வசவண்ணர். சிற்பரம் உணர்ந்த - சிற்பரத்தின் தன்மையை உணர்ந்த. (௬)

இந் நறிகுறியினால் இன்று அல்லமரைக் காண்பாயெனல்

ஐயவிந் நிமித்தந் தன்னால் அல்லமற் காண்பை இன்று
மெய்யுரை இதுகண் என்று விடுத்தனன் மருகன் எங்கள்
கையுறும் அமுதனன்தான் கருதிய படியின் னப்பம்
செய்யவுள் மகிழ்வு பூத்துச் செயல்செய் வார்க்குரைத்த லுற்றான்.

(அ-ரை.) விடுத்தனன் மருகன் - மருகனுக்குச் சென்னவசவர் பதில் உரை கூறினார். அமுதனன் - அமுதத்தைப் போன்ற வசவண்ணர். செயல் செய்வார் - ஏவல் செய்பவர். (௭)

வசவண்ணர் கலியாணபுரத்தை அழகுபடுத்தக் கட்டளையிடுதல்

உடம்பெனும் வனத்தில் நின்ற உயிரெனும் கன்னி தன்னைத்
தொடர்ந்திசை மணத்தற் சேர்ந்த துணைவனாம் அல்லமின் றெய்தும்
அடைந்தருள் கல்யாணத்தை அணிமின்கள் என்றங் கூற
நடந்தனர் நன்றென் றன்னோர் நகரியோர்க் குணர்த்தி னாரால்.

(அ-ரை) அணிமின் - அழகு செய்யுங்கள். நகரியோர் - நகரத்திலுள்ளவர்கள். உயிர் எனுங் கன்னி, துணைவன் - அல்லமன் என்பன உருவகம். (௮)

நகரில் தோரணங் கட்டுதல்

அலர்கதிர் ஞாயி றூரும் அணிநெடுந் தேர்க்கொ டிஞ்சி
விலகுற அதிர்தாக் காவல் மேலைய பொருசாண் நிற்பப்
பலர்புகழ் மணிமா டத்துப் பறக்குமொண் கிளிமொய் மூங்கில்
இலைசெரு கியபசும்பூந் தோரணம் இசைய ஆர்த்தார்.

(அ-ரை) அலர்-பரவிய. ஊரும்-செலுத்துகின்ற. கொடிஞ்சி-தேர்த்தட்டு. விலகுற - விலகிச்செல்ல. ஆர்த்தார் - கட்டினார். (௯)

கொடி கட்டுதலும் தேர் செய்தலும்

போதகக் குருநம் ஊருட் புகக்கொடி கட்டல் நன்றென்
றோதர வொடும சைத்தார் அநேகொடி மாடத் தூபர்
சோதிதன் இரதம் என்றும் கழன்பென நகுதல் போல
வீதியுள் ஆடி ஓடி விளங்குறு நிலைத்தேர் செய்தார்.

(அ-ரை) போதகக்குரு-அல்லமதேவர். மாடத் தூபி-மாளிகைமேல். நகுதல் - நகைத்தல். ஆடி ஓடி - அசைந்து செல்கின்ற. (௧௦)

## பலவித மணப் பொருள்களை இறைத்து மாலை கட்டுதல்

குங்குமம் நறிய சந்தம் குழைத்ததண் பனிநீர் சிந்திப்
பொங்கெழில் மறுக லைத்தும் புழுதிசெழுஞ் சேறு செய்தார்
பங்கய மனைமுன் பந்தர் மணப்பந்தர் உண்மை யாகக்
கொங்கவிழ் இதழ்ந றும்பூங் கோதைகள் தூக்கி னாரால்.

(அ - ரை.) குழைத்த - கலந்த. மனைப்பந்தர் உண்மையாக - உண்மையான திருமணப் பந்தலைப் போல. கொங்கு அவிழ் - மணம் வெளிப்படுகின்ற. கோதை - மாலை. (கக)

## வாழை முதலியன கட்டுதல்

வயலிடம் சேர்ந்து நின்ற வாழையும் கரும்பும் பாளை
உடைவிரி கமுகும் ஒன்றோ டொன்றுநின் றுசாவித் தாமேல்
விளருநந் தொடைதோள் கண்டம் எனுமிவற் றழகி ரக்கும்
செல்வியர் வந் தடைந்த என்னச் செழுங்கடைத் தலைமுன் ஆர்த்தார்.

(அ - ரை.) உசாவி - கேட்டு. செல்வியர் - பெண்கள். அழகு இரக்கும் - அழகின் ஐயங் கேட்கும். கடைத்தலை முன் - தலைவாசல் முன்பாக. (கஉ)

## நிறைகுடங்கள் அமைத்தல்

இளையினிற் பொலிந்த வாழை தொடையினால் எய்து பேறு
முலையினாற் பெறுவம் என்று முன்னியந் திருந்தல் போலக்
கலையினிற் சிறந்த அல்குற் கமுகினு நிறைகு டங்கள்
விலையினுஞ் சிறந்த செம்பொன் வேதிகை மீது வைத்தார்.

(அ - ரை.) தொடையினால் எய்தும் பேறு - தொடையென்று ஒப்புக் கூறப்பட்டு எய்தும் பெருமை. முலையினால் பெறுவம் என்று - முலையென ஒப்புக்கூறிப் புகழப் பெறும் பயனை அடைவோமென்று. முன்னி - நினைத்து. கலை - ஆடை. வேதிகை - திண்ணை. (கங)

## திருவிளக்கு வைத்தல்

மனத்திருள் அகற்று நின்ற மணிச்சுடர் வரவு பார்ப்ப
நினைத்துவந் திருத்தல் போல நெடுமணிக் கதவு வாய்தல்
முனைத்திரு விளக்கு வைத்தார் முகிழ்முலைக் கருநெ டுங்கண்
தனிச்சிலை நுதற்பூங் கோதைச் சரிகுழல் தளிர்க்கை நல்லார்.

(அ - ரை.) மனத்து இருள் - அறியாமை. மணிச்சுடர் - அல்லமதேவர். மனவிருள் அகற்றும் அறிவு விளக்காகிய அல்லமதேவர் வரவை எதிர்பார்ப்பதற்கு வைத்தாற்போலத் திருவிளக்கு வைத்தனர் என்க. சரிகுழல் - அவிழ்ந்து தொங்கும் கூந்தல். (கச)

### மாதர்கள் நிலைத்தேரேறி யிருத்தல்

அல்லமை குரவன் தன்னை அருள் நந்தி யோடு காணச்
செல்லுவம் என்று செம்பொற் சிரமகமு விமானத் தோடும்
ஒல்லையின் நிலத்தி ழிந்த உம்பர்வாழ் மகளிர் போல
இல்லெனும் மருங்குல் மாதர் இருந்தனர் நிலைத்தே ரேறி. (௪௯)

(அ - ரை) ஒல்லையில் - விரைவில். உம்பர்வாழ் - மேலுலகத்தில் வாழ்கிற. மருங்குல் - இடை.

### கழிக்கப்பட்ட பொருள்களின் மிகுதி

திருநகர் இதனை இன்று திருந்தவே றலங்க ரிப்ப
நெருநலுள் ளவாக ழித்து நீத்தவை அமரர் கோமான்
ஒருநகர் அலங்க ரித்தற் குரியன என்னின் நந்தி
பெருநகர் அணியின் மிக்க பெருமையார் கூற வல்லார் (௫௦)

(அ - ரை.) நெருநல் உள்ளன - நேற்று அமைக்கப்பட்டவை யானவை. அமரர் கோமான் - தேவர்கோ.

### வசவண்ணர் அல்லமதேவரை எதிர்கொள்ளப் புறப்படுதல்

இன்னணம் அலங்க ரித்த எழில்மணி மறுகின் ஊடு
மன்னவர் மன்னன் உபாய மந்திரிக் கிழமை பூண்டோன்
தன்னொரு குரவன் தன்னைத் தயவொடெதிர் கொள்ள வேண்டிப்
பொன்னவிர் கோயில் நின்றும் புறப்படாப் போத லுற்றான். (௫௧)

(அ - ரை) இன்னணம் - இவ்வாறு. மந்திரிக்கிழமை - அமைச்சுரிமை. பொன் அவிர் - பொன் போல் அழகு மிகுந்து விளங்குகின்ற. புறப்படா - புறப்பட்டு.

### சென்னவசவர் உடன் செல்லுதல்

பதியுமப் பதியாற் காணும் பசுவுமப் பசுவின் ஞானம்
பொதியுமப் பாசந் தானும் பொருளென வழக்கிற் கூறும்
விதியுமப் பாசம் பொய்யாய் வேறாறும் விடுமெ னோதி
மதியமக் கருத்த சென்ன வசவனும் மருங்கு சென்றான். (௫௨)

(அ - ரை.) காணும் - தெரிந்துணரும். பசு - உயிர். தமம், மாயை, மோகம், அவித்தை, பொய்யுருவி என்பன ஐம்பாசங்கள்.

### மடிவாலமாச்சையரும் உடன்செல்லுதல்

எம்மடி மாசு முக்கண் இறையவன் அடிமை பூண்டோர்
தம்மடி மாசு நீக்கும் தன்தொழில் நெறிவ ழாத
செம்மடி வால மாச்ச தேவனும் அன்பு தாயின்
மும்மடி ஆகும் நந்தி முதல்வனோ டருகு சென்றான்.

(அ-ரை.) அடிமாசு - மூல அறிவின்மை. மடிமாசு - ஆடை யழுக்கு. செம - செப்பமையான. (கக)

### கின்னரப்பிரமன் செல்லுதல்

சங்கரன் சடையிற் பாம்பும் தவழ்ந்தெதிர் கிடந்த பின்னைத்
திங்களும் செய்த ஒப்பச் செங்கைமான் அவசம ஆகக்
கங்கையும் திரைய டங்கக் கானமுன் பாடி மிச
கிங்கரன் தனது பாங்கர் கின்னரப் பிரமன் சென்றான்.

(அ-ரை.) செய்த ஒப்ப - செய்யப்பட்டவற்றைப்போல அசைவற்றிருக்க. கானம் - இசை. இசையால் செய்யப்பெற்றவற்றைப் போலாயின என்க. (உ0)

### கணக்கற்ற அடியார்கள் உடன் செல்லுதல்

தண்டினர் கரகக் கையர் சடையருத் தூள னத்தர்
புண்டர நுதலர் கல்தோய் பூந்துகில் உடையர் நீல
கண்டனை அகப்பு றத்தும் கண்டவர் வினையின் நீங்கித்
தொண்டுறு நெறியில் நின்றோர் சூழ்ந்தனர் எண்ணி லாரே.

(அ-ரை.) கரகக் கையர் - கமண்டலக் கையினர். உத்தூளனத்தர் - தூளாகப் பூசப்பட்ட திருநீற்றையுடையவர்கள். புண்டர நுதலர் - முப்பட்டையாகத் திருநீறணிந்த நெற்றியையுடையவர். கல்தோய் - காவிக்கல் நனைக்கப்பெற்ற. பூந்துகில் - மெல்லிய ஆடை. (உக)

### போர்மறவர் புடைசூழ்ந்து செல்லுதல்

தோள்வலம் துடித்த தின்று கடரினை வேற்புண் ஒன்று
கோள்வலம் கொள்ளும் செம்பொன் குன்றெனும் பாரிற் காண்பேம்
வேள்வலம் கொண்ட நெற்றி விழியிறை அருளால் என்னும்
வாள்வலம் கொண்ட சேனை மறவர்வா ரிதிபோற் சூழ்ந்தார்.

(அ-ரை.) கோள் - ஒன்பது கோள்கள்; ஞாயிறு. வேள்வலம் - காமன் வலி. வாரிதி - கடல். (உஉ

## திலம் அதிரப் படைகள் செல்லுதல்

எங்கள்வாழ் வனைய நந்தி எழுந்தருள் மறுகி னூடு
மங்குல்வான் இரவிப் புத்தேள் மணிநெடுந் தேர்ப்பைங் கிள்ளை
தங்கள்கால் தூட்கு டைந்து தரிப்பரி தாகி ஓட
அங்கணமா ஞாலம் எல்லாம் அதிர்தர நடந்த அம்மா.

(அ-ரை.) மங்குல்வான் - முகிலையுடைய விண். இரவிப்புத்தேள் - ஞாயிறு. வசவண்ணருடன் சென்ற படையின் கால்துகள் ஞாயிற்றினுடைய தேரிற் உள்ள இளங்குதிரைகளை வெளியச் செய்தன. படை: தோமரு என பூவாயாக கிடந்தது. (௨௧)

## யானைகள் செல்லுதல்

அரவொடு மண்சு மக்கும் அடிகளி றெட்டோ டும்போர்
பொரவொரு களிநல் யானை போதுமா றெண்ணி லாத
இரவொடு புரைநி றத்த ஈர்ங்கவுள் சிறுகண் தூங்கு
கரயமை வெண்ம ருப்புக் கடாக்களி றெழுந்த அன்றே.

(அ-ரை) அரவு - ஆதிசேடன். அடுகளிறு - போர்செய்யும் யானை. பொரப்பொர - போர் செய்ய. இரவொடு புரைநிறத்த - இரவின் கருநிறத்தோடு ஒத்த நிறத்தையுடைய. ஈர்ங்கவுள் - மதவொழுக்கால் குளிர்ச்சியை யுடைய கன்னம். (௨௨)

## படைத்தலைவர்கள் பலர் பக்கத்தில் செல்லுதல்

ஆனைமேற் கொண்டும் வாவும் ஆடல்வெம் பரிமி வர்ந்தும்
கூனல்வேய் தொடுத்து ஞான்ற குச்சுடைச் சிவிகை யூர்ந்தும்
சேனைகா வலரெண் ணில்லார் சிலைமதன் கோலம் என்ன
மானவேல் மன்னர் மன்னன் மந்திரி மருங்கு சென்றார்.

(அ-ரை.) வாவும் - தாவிச்செல்லும். கூனல்வேய் - வளைந்த மூங்கில். ஞான்ற - தொங்குகின்ற. மானவேல் - பெருமை பொருந்திய வேல். (௨௩)

## குடைகள் பல செல்லுதல்

நலங்கிளர் மதன்கு டைக்கு நகைமணிக் காம்பில் என்ன
இலங்குறு பசும்பொற் காம்போ டெண்ணில்வெண் குடையெழுந்த
புலன்களை வென்ற வீரன் போகிய மறுகில் எங்கும்
விலங்கினை அன்றி அந்த விலங்கின் வால் ஆடிற் றன்றே.

(அ - ரை) கலம் கிளர் - நன்மை விளங்குகின்ற. புலன்களை வென்ற வீரன - வசவண்ணர். போகிய - சென்ற. விலங்கினை யன்றி வந்த விலங்கினைவால் ஆடுதலாவது, மான்களாகிய விலங்குகள் இல்லாமலே அவற்றின் வால் மயிராலாகிய கவரிகள் வீசுதல் என்க. (உ௬)

மாதர்கள் பலர் எழுதல்

மாயைதன் தோல்வி எல்லா மாதர்க்கும் வந்த தன்றே
நாயகன் தன்னைப் பற்றி நாமொன்றி கொள்வதும் என்று
போயுறு தன்மை போலப் புணர்முலைக் கருவிந் திங்கள்
தேயுநுண் மருங்குல் மாதர் திரள்பல எழுந்த அன்றே

(அ - ரை.) நாயகன் - அல்லமதேவர். வென்றி - வெற்றி. புணர் - சேர்ந்த. மருங்குல் - இடை. போயுறு - போதர். (உ௭)

பலவகை ஒலிகளுங் கலந்து கடல்ஒலி போலாதல்

பரிகளின் முழக்கும் மிக்க பல்லியம் முழக்கும் பூட்கைக்
கரிகளின் முழக்கும் வீரக் கழலொடு செல்லும் வெங்கோல்
அரிகளின் முழக்கும் மாதர் அணிகளின் முழங்கும் செங்கைச்
சரிகளின் முழங்கும் விம்மித் தடங்கடல் போலா அன்றே.

(அ - ரை) முழக்கு - ஒலி. பூட்கை - தொளையுடைய கை. வெம் கோள - கொடிய வலிமை கொண்ட. சரிகளின் முழக்கு - வளையல்களின் ஒலி. விம்மி - ஒன்றுபட்டு (உ௮)

எழுச்சியின் பொதுநிகழ்ச்சி

ஆடுவ கவரி எங்கும் அசைவன சிவிறி எங்கும்
மூடுவ குடைகள் எங்கும் முழங்குவ இயங்கள் எங்கும்
பாடுவ இசைகள் எங்கும் பாய்வன கரிகள் எங்கும்
ஓடுவ புரவி எங்கும் உயர்வன தூவி எங்கும்

(அ - ரை) கவரி - வெண்சாமரைகள். சிவிறி - விசிறி. தூவி - கொடிகள். (உ௯)

வசவண்ணர் படை கடலைப்போன்றது எனல்

கரிகலம் அசைபோ நின்ற கவரிகள் நுரைகள் மொக்குள்
விரிதடை மதுகை வீரர் விதிர்க்கும்வாள் உகள்மீன் பாயும்
பரிநிரை முழக்கம் ஆர்க்கும் பல்லிய முழக்கம் ஆகப்
பெருங்கடல் எனவெ ழுந்து போயது வசவன் சேனை

(அ-ரை) வசவண்ணருடன் சென்ற படைக்கடல், யானைகளைக் கப்பல்களாகவும், சவரிகளை நுரைகளாகவும், விரிக்கப்பெற்ற வெண்குடைகளை நீர்க்குமிழிகளாகவும், போர் புரிவர்களின் வாள்களை மீன்களாகவும், குதிரைகளை அலைகளாகவும், ஊதிய ஒலிகளைக் கடல் முழக்கமாகவும் கொண்டிருந்தது என்க. இஃது இயைபுருவக அணி.

வசவண்ணர் உவகையுடன் செல்லுதல்

(வேறு)

இன்ன வாறெழுந் திரளொடு நந்தியெம் பெருமான்
தன்னை நேர்குரு பரனெதிர் சென்றவன் றாளைச்
சென்னி யால்வணங் குவனெனும் உவகையாற் சென்றான்
துன்னும் வானவர் தொகுதியும் வியப்பொடு துதிப்ப.

(அ-ரை.) திரளொடு - படைப் பெருக்கத்துடன். உவகையால் - உவகையோடு. துன்னும் - பொருந்திய. (௨௧)

வசவண்ணர் செலவினைக்கண்ட அமணர்கள் எள்ளி நகையாடுதல்

அத்தி றஞ்செலும் செலவினை அகங்குருட் டமணர்
புத்தர் கண்டிவர் என்கொலோ வறிதெதிர் போதல்
பித்தன் என்றுதம் இறைவனைச் சொல்லுமிப் பேயர்
எத்தி றஞ்செயார் எனச்சிவ சரணரை இகழ்ந்தார்.

(அ-ரை.) அத்திறம் - அவ்வாறு. அகம் குருட்டு அமணர் - அறிவில்லாத அமணர். வறிது - வீணே. (௨௨)

விச்சல மன்னனிடத்திற் சென்று கூறுதல்

மன்னன் விச்சலன் பாலடைந் தருகரெம் மன்னு
நின்ன கர்க்கொரு புதுமையொன் றுற்றது நீகேள்
நன்னி மித்தமொன் றெய்திய தேகொடு நந்தி
தன்னி டத்தொரு வன்வரும் என்றெதிர் சாரும்.

(அ-ரை.) விச்சலன்பால் அடைந்து - விச்சல மன்னனிடத்திற் போய். எய்தியதே கொடு - அடைந்ததையே பற்றுக்கோடாகக் கொண்டு. (௨௩)

வசவர் செல்லுதல் பயனற்றது எனல்

தண்ட நாயகன் தோள்வலம் துடித்தது தன்னைக்
கொண்டு தான்வரும் குருபரன் என்றெதிர் கோடல்

தண்ட நாயகன் விற்பெரும் அடிசிலைக் கருதி
உண்டு பொய்வித் திணைத்தமைத் தேடுதல் ஒக்கும்.

(அ - ரை) தண்டநாயகன் - வசவண்ணர். எதிர்கோடல்-எதிர்கொள்ளுதல். அடிசில் - உணவு. (௧௭)

வசவண்ணரை அமைச்சராக்கிய உன்னைப்போல் யாரும் இலர் எனல்

ஒருவன் வந்திடும் எனஎதிர் கடற்படை ஒருங்கு
பரவி வந்திடச் செலுமியான் தன்னை நீ பார்த்துப்
பொருவில் மந்திரக் கிழமைநல் கியவுனைப் போல்வார்
அரவின் வன்தலைப் படிமிசை இலையெனை அறைந்தார்.

(அ - ரை.) பொருவில் - ஒப்பில்லாத. மந்திரக்கிழமை-அமைச்சுரிமை. படிமிசை - உலகில். (௧௮)

பிச்சலமன்னன், வசவண்ணர் செயல்யாவும்காண்போம் எனல்

அருகர் வாசகம் கேட்டலும் உளம்வியந் தடிகேள்
விரகி னுன்மிகு தண்டநா யகனுசெய் வினைவு
கருதி னுன்கொலோ அறிகிலம் முடிவுறக் காண்பம்
வருக நீரென மின்களென் றிருந்தனன் மன்னன்.

(அ - ரை.) விரகு - எண்ணம் வினைவு - செய்கை. (௧௯)

அல்லமதேவர் வசவண்ணர் முன் செல்ல எண்ணுதல்

தண்ட நாயகன் தனதுளம் தங்குறைத் தானைத்
தண்ட நாயகன் தன்மலம் தங்கிய தலைவன்
தண்ட நாயகன் தனைபுகழ் சாண்செருக் கழியாத்
தண்ட நாயகன் எதிர்செல நினைந்தனன் தனித்து.

(அ - ரை.) செருக்கு அழிய - களிப்பு நீங்க. எதிர்செல-எதிரே சென்று காட்சி கொடுத்தற்கு. (௨௦)

பித்தன் போல் வசவண்ணர்க்கு முன் செல்லுதல்

என்னைக் காண்குவன் எவ்வகை செல்லினும் என்றும்
துன்னற் கோவண மோடுவிரி குஞ்சியும் தோன்றத்
தன்னைக் காண்குநர் பித்தனென் றெண்ணஎன் றனக்குப்
பொன்னைப் போலுநல் வசவன்நா யகனெதிர் போனன்.

(அ - ரை) எவ்வகை செலினும் - எவ்வாறு சென்றாலும். துன்னற்கோவணம் - தைக்கப்பெற்ற கோவணம். (௨௧)

## பித்தன் போல் வந்த அல்லமதேவரை விலக்குதல்

(வேறு)

மருவிநின் றவரிவன் மருள னேயென
விரைவிலிங் ககலகல் எனவி லக்கினர்
ஒருவரும் கண்டிறை உருவு ணர்ந்திலர்
உருவுகண் டெவருநர் உணர வல்லரே.

(அ - ரை.) மருவி நின்றவர் - சூழ்ந்து நின்றவர். மருளன் - பித்தன். அகல் அகல் - விலகு விலகு. (௩௯)

## அல்லமதேவர் திருவிளையாடல் புரிதல்

அல்லான் ஆயிடை ஆடல் உன்னியே
பல்லெழ வாயுடைப் பாலன் ஆகுவன்
கொல்லின ஏறெனக் குமரன் ஆகுவன்
வில்லென உடல்வளை விருத்தன் ஆகுவன்.

(அ - ரை.) ஆயிடை - அங்கு. ஆடல் - திருவிளையாடல். பாலன் - இளைஞன். கொல் - கொல்கிற. இளஏறு - இளங்காளை. (௪௦)

## அல்லமர் பாடியாடுதல்

விஞ்சையர் மகிழ்வுற வீணை ஒன்றுகைக்
கஞ்சமென் மலர்கொடு காமம் பாடுவன்
அஞ்சன விழிமணி அரிச்சி லம்படி
வஞ்சியர் மனமயல் வளர வாடுவன்.

(அ - ரை.) கஞ்ச மென்மலர் - தாமரை மலரைப்போன்ற கை. அஞ்சனவிழி - மையீட்டப்பெற்ற கண்கள். (௪௧)

## யானை மேலும் குதிரை மேலுந் தோன்றுதல்

இந்திரன் இவனென யானை மேற்கொளா
வந்தொரு புடைநரர் மருளத் தோன்றுவன்
பைந்தொடி பெயர்தரு பாணி போலவே
பந்திமுன் முடங்குளைப் பரிநடத்துவன்.

(அ - ரை.) மேற்கொளா - மேற்கொண்டு. நரர்மருள - மக்கள் மயங்க. பைந்தொடி - பசிய வளையல். பாணி - கை; கூத்து, காலம். பந்தி - வரிசை. முடங்குளை - மடங்கிய பிடரி மயிர். (௪௨)

### எல்லா இடங்களிலும் காணப்பெறுதல்.

வானிடைக் கண்டனன் மனையிற் கண்டனன்
சோலையுட் கண்டனன் தெருவிற் கண்டனன்
யாவையுங் கடிநகர் எங்குந் தோன்றுவன்
ஞானநற் கண்ணினுற் காணும் நம்பனே.

(அ-ரை.) வான் - விண். யான் வானிடைக் கண்டனன். யான் மனையிற் கண்டனன்; யான் படையுட் கண்டனன்; யான் தெருவிற் கண்டனன் என்று கூட்டுக. (சக)

### ஆடல் புரிவார் அனைவருடன் விளங்குதல்

ஆடுநர் தம்முடன் ஆடும் நல்லிசை
பாடுநர் தம்முடன் பாடும் மென்மலர்
சூடுநர் தம்முடன் சூடும் வாள்விதிர்த்
தோடுநர் தம்முடன் ஓடும் அல்லமன்.

(அ-ரை.) வாள்விதிர்த்து ஓடுநர் - வாளை அசைத்துக் கொண்டு ஓடுபவர். (சஉ)

### அல்லமர் செயலைக் கண்டு மக்கள் மயங்குதல்

பொருவிலா வளநகர் பொருந்து மானிடர்
வரைவிலா ஆடலின் வகைசெய் கிற்பவர்
ஒருவரோ பலர்கொலோ உணர்கி லோமென
வெருவினர் அல்லமன் விநோதம் நோக்கியே.

(அ-ரை.) வரைவுஇலா - எல்லையில்லாத. வெருவினர் - அஞ்சினர். (சஙு)

### வசவண்ணர், அல்லமதேவரை அறிதல்

மண்ணிடை மறைவுறு நிதிய வைப்பினைக்
கண்ணிடும் அஞ்சனக் காரன் காண்கைபோல்
நண்ணிடும் உணர்வுடை நந்தி எம்பிரான்
அண்ணலை அறிந்தனன் ஐயம் இன்றியே.

(அ-ரை) மறைவுறு - மறைந்து கிடக்கும். நிதியவைப்பு - புதையல். கண் இடும் அஞ்சனக்காரன் - கண்ணில் பூசப்பெற்ற மையையுடையவன். (சச)

### வசவண்ணர் அல்லமதேவரை வணங்குதல்

உடம்பெலாம் உள்ளமாய் உருகிக் கண்கள்நீர்
அடங்குறு தொழுதமெய் சிலிர்ப்ப அன்பினால்
தொடர்ந்தெலா உயிரையும் தொண்டு கொண்டருள்
நெடுந்தகாய் அருளென நிலத்தி றைஞ்சினான்.

(அ - ரை.) உடம்பு எலாம் உள்ளமாய் - உடல் முழுவதும் மனமாய். மெய்சிலிர்ப்ப - உடல் நடுங்க. நெடுந்தகாய் - மிக்க பேராற்றல் பொருந்தியவனே. (௪௭)

### அடியார்களும் வணங்குதல்

தண்டநா யகன்நிலந் தண்டில் தாழ்ந்தெழத்
தொண்டராய் அயலுறு துன்னி னோரெலாம்
கண்டுநீர் விழியுகக் கசிந்த அன்பினால்
அண்டநா யகன்திரு வடியி றைஞ்சினார்.

(அ - ரை.) தண்டில் தாழ்ந்தெழ - தடியைப்போல் நிலத்தில் நன்றாக விழுந்து வணங்கியெழ. நீர் விழியுக - கண்களில் இருந்து நீர்வழிய. (௪௮)

### தேவர்கள் மலர்மழை பொழிந்து துந்துமி முழக்குதல்

நந்திநன் அன்னையும் நந்தி பால்வரும்
எந்தைதன் அருளையும் என்சொல் வாமெனச்
சிந்தினர் மலர்மழை தேவர் யாவரும்
துந்துமி அதிர்த்தனர் தொண்டர் ஆர்ப்பவே.

(அ - ரை.) துந்துமி - துந்து என்னும் ஒலியை உடைய ஒருவகை வாத்தியம். (௪௯)

### கலியாணபுரம் கயிலையைப்போலும் எனல்

மயலிலா நங்குரு வசவன் வாழ்தரும்
இயலினால் அல்லமன் எண்ணி வந்தருள்
செயலினால் அடியவர் திரள்க வித்தலால்
கயிலையே எனப்பெறு கல்லி யாணமே.

(அ - ரை.) இயலினால் - பண்பினால். செயலினால்-செய்கையால். கல்லியாணம்: விரித்தல் விகாரம். (௫௰)

### மலர் மழை பொழிதல்

கூறரும் ஒளியுடைக் குதிரைத் தேரினன்
வேறொரு மணிமய வொறாபி யர்பதெனத்
தேறரும் அணைமிசைத் தேசி கோத்தமன்
ஏறலும் மலர்மழை கழிந்த என்பவே.

(அ-ரை.) கூறஅரும் - சொல்லுதற்கரிய. குதிரைத்தேரினன் - கதிரோன். தேறஅரும் - இன்ன தன்மைத்தென யாராலும் தெளிய முடியாத. (கசு)

### பலவகை ஒலி மிகுதல்

முரசொடு பல்லிய முழக்கெ ழுந்தன
துரிசறும் அடியவர் தொகுதி யகைகுவித்
தரகர வொனுமொலி அண்ட கூடமட்
டொரு கணம் ஒடுங்குமுன் ஓடிற் றென்பவே.

(அ-ரை) முரசு - பேரிகை. துரிசு - குற்றம். தொகுதி - கூட்டம். அண்ட கூடம் - உலகக் கடைசி. கணம் - அமைப்பொழுது. (கஎ)

### ஏழு நிலைகளையுங் கடத்தல்

(வேறு)

முதனிலை முதலா மூவிரு நிலையின்
மூலமா முதலா தாரத்
திதழவிழ் கமலப் பொகுட்டினுள் நின்ற
இலிங்கமோர் ஆறொளை நின்று
நுதல்மிசை இலகு நிடகளர் போல
நுழைன்றவே முநிலை ஆகும
அதன்மிசை அமலன் அல்லமத் தேவன்
அமர்ந்தனன் அமரரும் வியப்ப.

(அ-ரை.) மூலமா முதலா தாரம் - மூலமாகிய முதலாதாரம். இதழ் அவிழ் - ஆயிரம் இதழ்கள் விரிந்த. ஆறு ஆதாரங்கட்கும் மேலாயது யாதுமற்ற வெளியிடம். (கஅ)

### வெளியிடத்தில் அமருதல்

உடம்பொடு பொறிநாற கரணமற் றாயபிறன்
றுரைத்திடப் படும்உபா திகளைக்
கடந்துள நிலையிற் சேர்தலாப் இலங்கக்
கணடிடு துமியனைப் போல

நெடுந்தவி சமைய அமைத்தசெம் மணிப்பொன்
திலகனோர் ஏழையும் கடவா
இடந்தனி விசும்பென் றல்லன் இருப்ப
இருந்தனர் யாவரும் கண்டார்.

(அ-ரை.) பொறி - ஐம்பொறி. அந்தக்கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு. உபாதி - கட்டு. துரியன் - துரிய நிலையைக் கண்டவன். ([illegible])

அடியவர் மகிழ்ச்சிக் கூத்து

ஆடினர் சிலவர் அங்கைகள் கொட்டி
அல்லமன் பெரியதோர் புகழைப்
பாடினர் சிலவர் விழிபொழி வெள்ளம்
பாய்வுறக் குவித்தகை தலைமேல்
சூடினர் சிலவர் நிலமிசை வீழ்ந்து
தொழுதனர் சிலவர்மெய்ப் புளகம்
மூடினர் சிலவர் பரவினர் சிலவர்
முக்கணன் அடியவர் அன்றே.

(அ-ரை.) சிலவர் - சிலர்; விரித்தல் விகாரம். மெய்ப்புளகம் - உடம்பு பூரித்தல். ([illegible])

வசவண்ணர் மகிழ்ச்சி

இந்தியம் விடயங் கரணமெய் என்னும்
யாவையும் காண்கிலன் ஓங்கும்
அந்தர அணைமேல் இவர்ந்திருந் தருளும்
அண்ணலைக் கண்டவப் பொழுதே
முந்திய பரமா னந்தவா ரிதியுள்
முழ்கினன் அழுந்தினன் அம்மா
தந்திரம் எவற்றும் சிறந்தது சைவ
தந்திரம் எனும்அருள் நந்தி.

(அ-ரை.) இந்தியம் - பொறி. கரணம் - உட்கருவி. வெளியிடையிலே பல் அல்லமதேவர் எழுந்தருளிய பொழுதே வசவண்ணர் எல்லாவற்றையும் மறந்து பேரின்பக்கடலில் படிந்தனர் என்க. ([illegible])

## அல்லமர் வசவண்ணரைப் போற்றுதல்

மண்டலம் அவத்தை குணமபி மானம்
  மலமிவை அனைத்தையும் கடந்துள்
கண்டிடும் வண்ணம் புறத்துநீ எம்மைக்
  காணிய அமைத்தவிச் செய்கை
வெண்டிரை சுருட்டும் கருங்கடல் உலகில்
  வேறுளர் செய்வதன் றென்று
தொண்டர்கள் துதிக்கும் வசவனைத் துதித்தான்
  சுரரெலாம் துதிக்குமெம் பெருமான்.

*(அ-ரை.) மண்டலம் - ஞாயிறு, திங்கள் தீ முதலிய மண்டலங்கள். மலம் - ஆணவம், காமியம், மாயை என்னும் மும்மலம். காணிய - காணும் பொருட்டு.* (௧௧)

## அல்லமர் வெளி அரியணையில் அமர்ந்திருத்தல்

உன்னருள் உளதேற் காலன்மால் தொழிலும்
  ஒருசிறு துரும்புசெய் கிற்கும்
என்னநல் வசவன் புகன்றுகை கூப்பி
  இணைவிழி புனலுக உருகித்
தன்னுணர் விலனாய் வசமற நிற்பத்
  தண்கதிர்ச் செம்மணி குயின்ற
பொன்னரி யணைமேல் விசும்புற இருந்தான்
  புல்லரும் அல்லம தேவன்.

*(அ-ரை.) செய்கிற்கும் - செய்யும். கமலன் - நான்முகன். புல்லரும் - யாராலும் அடைதற்கரிய.* (௧௨)

இருபத்திரண்டாவது சூனிய சிங்காதனத்தில் இருந்த கதி முடிந்தது.

கதி ௨௨-க்குச் செய்யுள் ௧௦௪௯

---

## ௨௩. ஆரோகணை கதி

[இக்கதிக்கண், அல்லமதேவர் வெளி அரியணையில் அமர்ந்திருத்தலை வசவண்ணர் முதலியோர் பார்த்து மகிழ்கிறார்கள். அங்குள்ள அடியார்கள் இறைவனை வழிபடுதல், பெரியோர்க்குத் தொண்டு செய்தல், இறைவனைப் பாடிப் புகழ்தல், மறைப்பொருளை எண்ணியிருத்தல், இறைவனை உள்ளத்திற் கொண்டிருத்தல், உயிர்க்காற்றை நிறுத்துதல் (யோகஞ் செய்தல்) முதலிய பலவகைச் செயல்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். அல்லமதேவரிடத்திலே முழு உள்ளத்தையுஞ் செலுத்திய வசவண்ணர் அடியார்களைப் போற்றுதலை மறந்திருக்கிறார். வசவண்ணர் தம்மைப் போற்றாமையைக் கண்டு வெகுண்ட அடியார்கள் வேறிடஞ் செல்கிறார்கள். கலியாணபுரி அழகிழந்து காணப்படுகிறது. அடியார்கள் அகன்றுவிட்ட செய்தியை அறிந்த வசவண்ணர் அவர்களுக்காக அடப்பட்ட அடிசில் வீணாக அழிவுறுமே என்று வருந்துகிறார். வசவண்ணர் உள்ளத்துத் துன்பினை உணர்ந்த அல்லமதேவர், தமக்குச் சிறிது உணவிடும்படி வசவண்ணரைக் கேட்கிறார். ஆங்கு ஆக்கி வைத்திருந்த அடிசில் முதலிய உணவுகளையெல்லாம் அல்லமதேவருக்குப் படைக்கிறார்கள். அனைத்தையும் அல்லமதேவர் அயின்றும் அவருடைய பசித்தீ அடங்காமல் மிகுதிப்படுகிறது. செவ்வவர் ஊணொடு பொருந்தாத இறைவனுக்கு இவ்வாறு உணவிடத் தொடங்கியது தக்கதன்றென்கிறார். வசவண்ணரும் உண்மையை உணர்ந்து அல்லமதேவரைப் போற்றுகிறார். உணவுண்ணாமற் சென்றுவிட்ட அடியார்களையெல்லாம் உண்பதற்கு அழைத்துவா என்கிறார் அல்லமதேவர். வசவண்ணர் அவ்வாறே சென்று அடியார்களைக் காண்கிறார். அவர்கள், அல்லமதேவர் அணிந்தன அணிந்து, உண்டன உண்டு களித்திருக்கின்றார்கள். அவர்களை வசவண்ணர் உண்பதற்கு அழைக்கின்றார். அவர்கள் 'நாங்கள் வழக்கப்படி வழுகின்றவாகக் கையும் வாயுந்தொழிற் படாமலே உண்டு மகிழ்ந்தோம்' என்று கூறிச் சிவயோகி ஒருவனுக்கு உணவளிப்பின் எல்லா உயிர்களுக்கும் பசி நிறைவேற்றப் படுமென்றும், அவை தேவர்க்குச் செய்யும் வழிபாடுகளெல்லாம் எம்மைச் சேருமென்றும் உரைக்கின்றார்கள். வசவண்ணர் மீண்டுவந்து அல்லமதேவர்க்கு அச்செய்தியை உரைக்கின்றார். அல்லமதேவர் வசவண்ணருக்கு மெய்ப்பொருளை உணர்த்த விரும்புகிறார் என்னும் செய்திகள் கூறப்பெறுகின்றன.]

### நூலாசிரியர் கூறல்

ஒருவர் உண்ண ஒருவர் பசிகெடார்
தரையில் என்னும் தருமொழி பொய்த்திட
அருளின் அல்லமன் ஆரும் பசிகெட
விரவி உண்ட மிகுதி விளம்புவாம்.

(அ-ரை.) தரையில்-நிலவுலகில். தகுமொழி - தகுந்த சொல். விரவி - கலந்து. (௧)

அல்லமதேவர் வெளி அரியணையில் எழுந்தருளியிருந்த தன்மை

தண்ணந் திங்களில் தண்ணெனத் தண்கதிர்
வண்ணங் குன்றுரு ஞாயிறு வார்சிலைப்
பண்ணங் குன்றுறு பான்மையின் ஆசனத்
தெண்ணந் தேவன் இருந்தருள் காலையில்.

(அ-ரை.) தண்அம - குளிர்ந்த அழகிய. திங்களில் - திங்களைப் பார்க்கிலும். வண்ணம் - இயல்பு. வார்சிலை - நீண்ட கல். பண் அம் குன்று - செய்யப்பட்ட அழகிய மலையில். பான்மையில் - தன்மையைப்போல. எண் - மதிக்கும். அந்தேவன் - அழகிய அல்லமதேவர். திங்களைப் பார்க்கினும் குளிர்ந்த ஞாயிறு மலையில் தோன்றும் தன்மை போல் வெளி அரியணையில் அல்லமதேவர் இருந்தார் என்க. இஃது இல்பொருள் உவமையணி. (௨)

வசவண்ணர் ஓவியம் போன்று இருத்தல்

வசவன் உள்ளம் வயப்புறும் நீரென
விசயன் அல்லான் மேனி வடிவமாய்
அசைவி லன்றிறி தோன்றும் அறிந்நிலன்
இசையும் ஓவியம் என்ன இருந்தனன்.

(அ-ரை.) விசயன் - வெற்றியையுடையவன். இசையும் - பொருந்திய. ஓவியம் - சித்திரம். (௩)

சென்னவசவரும் அல்லமதேவரைப் பார்த்து மகிழ்தல்

கழும ணித்தவி சென்னும் கலத்திடை
அழிவா றத்திகழ் அல்லமன் ஆகிய
செழிய நற்சுதை சென்ன வசவனும்
விழியி னுக்கு விருந்திட் டனனரோ.

(அ-ரை.) கழுமணி - சாணை பிடிக்கப்பெற்ற மணி. கலம் - உண்கலம். சுதை - அமுதம்: உருவக அணி. (௪)

மோளிகை மாரன் மடிவால மாச்சன் ஆகியோர்

முனிவி னைக்கொளும் மோளிகை மாரனும்
வினையி னைத்தெறு மெய்ம்மடி வாலனும்
தனைநி கர்க்கும் தவிமர் பூவினை
மனமெ னப்படும் வண்டுற விட்டனர்.

### இறைவனைப் புகழ்பவர்

பூசனை தொழில் பூண்பதின் எண்மடங்
கீசனைத் துதித் தேத்துதல் நன்றெனா
ஊசல் ஒத்த உளமில ராய்ப்புலத்
தூசி நிற்பத் துதிப்பவர் ஓர்சிலர்.

(அ-ரை) தொழில் பூண்பதன் - செய்வதைப் பார்க்கினும். ஊசல் ஒத்த உளம் - ஊஞ்சல்போல அங்குமிங்குஞ் சென்று அலையும் மனம். புலத்தூசி - ஐம்புலப் புழுதி. நிற்ப - அடங்கிநிற்ப. (௧0)

### மெய்ப்பொருளைப் பகர்பவர்

அங்க லிங்கம் அயிக்கம் இதுவென
மங்க லந்தரு மாமறை யின்முடித்
தங்கு றுந்தத் துவமசி தன்பொருள்
பங்கம் இன்றிப் பகர்பவர் ஓர்சிலர்.

(அ-ரை.) அயிக்கம் - ஒன்றுபடுகை. பங்கம் இன்றி - பாடமில் லாமல். தத்துவமசி: தத் - அது துவம் - நீயாக. அசி - ஆகிறாய். தத்துவமசி - அது நீயாகிறாய் என்பது பொருள். (௧௧)

### மெய்ப்பொருளை ஆசிரியர்பால் ஆராய்பவர்

பாசம் ஏது பசுவெனப் பட்டதே
தீசன் யாபதி எவ்வகை யாதெனக்
காசு தீர அருளும் அருளுடைத்
தேசி காவெனத் தேர்பவர் ஓர்சிலர்.

(அ-ரை.) காசுதீர - குற்றம் நீங்க. தேசிகா - ஆசிரியரே! தேர்பவர் - ஆராய்பவர். (௧௨)

### இறைவனை எண்ணியிருப்பவர்

புறந்தி னஞ்செயும் பூசையின் நன்றெனச்
சிறந்த கஞ்செய் தியானம் மருவிமெய்ம்
மறந்தி ருந்த மனஞ்சிவ லிங்கமுற்
றிறந்தி டுந்திறம் எய்தினர் ஓர்சிலர்.

(அ-ரை.) புறம் - வெளியே. அகஞ்செய் தியானம் - உள்ளத்தில் செய்யப்படும் தியானம். மெய்ம்மறந்திருந்த - உடலை மறந்திருந்த. இறந்திடுந் திறம் - உலக உணர்ச்சி நீங்கும் தன்மை. (௧௩)

### உயிர்க்காற்றை அடக்கி நிற்பவர்

ஓடி மீளும் உயிர்நின்றி டாதெனில்
நீடு மாமன நிற்பதன் றுதலால்
வீடு மேவரி தென்று விதிமுறை
நாடி வாயு நலிபவர் ஓர்சிலர்.

(அ-ரை.) நீடுமாமனம்-பலவற்றிலும் நீண்டு செல்லும் உள்ளம். வாயுநலிபவர் - காற்றை அடக்கி நிறுத்துபவர். (கச)

### வசவண்ணரைப்பற்றி அடியார்கள் எண்ணுதல்

இனையர் ஆகி இருந்தவக் காலையில்
அனையன் ஆகிய அல்லமன் தன்னிடை
நினைவெ லாமுற நின்று தமதிடை
மனமி லாத வசவனைக் கண்டனர்.

(அ-ரை.) இனையர் - இத்தன்மையை உடையவர். அனையன்-அத்தன்மையை உடையவன். மனம் இலாத-மனத்தைச் செலுத்தாத.

### அடியார்களுள் பெரியவர் சிறியவர் இல்லையெனல்

பெரியவர் சிறியவர் என்னும் பெற்றிமை
அரவணி கடவுள்தன் அடியர் தம்முளே
தெரிபவன் எவனவன் சிறிய னேஎன
விரிவுறு மறையெலாம் விளம்பும் என்பவே.

(அ-ரை.) பெற்றிமை-தன்மை. விரிவுறு-விரிவினையுடைய. (கசு)

### இறைவன் அன்பரே தக்கவர் எனல்

ஆவுரித் திடினும்நீ றணியும் அன்பனம்
மாவுரித் தவனென வணங்கத் தக்கவன்
பூவுரித் தவன்பதம் புனையப் போற்றுற
நாவுரித் தெனமறை நான்கும் ஓதுமால்.

(அ-ரை.) ஆ - ஆன். மாவுரித்தவன் - யானையை உரித்த சிவபிரான். பூ உரித்து - மலர் உரிமையை உடையது. நா உரித்து - நாவானது உரிமையை உடையது. அவன் அடிகளில் புனைய மலர் உரியது. அவன் புகழைப் பாட நா உரியது. 'ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும், கங்கைவார் சடைக்கரந்தார்க்கன்பராகில்அவர்கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே' என்பது தேவாரம். (கஎ)

### வசவண்ணர் அடியார் தொண்டினை மறந்திருத்தல்

வந்தவர் வருபவர் வருகின் ளுர்களாம்
அந்தமில் அடியர்மாட் டாற்றும் செய்கையைச்
சிந்தனை செய்கிலன் தேசி கன்செயும்
இந்திர சாலமுற் றிருந்து நந்தியே.

(அ-ரை.) அந்தம்இல்-முடிவில்லாத. அடியர் மாட்டு-அடியவர் இடத்தில். ஆற்றும் செய்கையை - செய்யும் வழிபாட்டை. (கசு)

### வசவண்ணர் தம்மைப் போற்றாததற்கு அடியார்கள் சினந்து கூறுதல்

பத்தியில் தவறினேன் பாலி ருந்துநாம்
துய்த்துடற் சுமப்பதில் துறத்தல் நன்றெனு
மெய்த்தவக் குழாமெலாம் வெகுண்டு போயின
அத்தன்நல் தண்டநா யகனை விட்டரோ.

(அ-ரை.) பத்தி-அன்பு. பால்-இடம். துய்த்து-உண்டு தவக்குழாம்-அடியார் கூட்டம். (ககூ)

### நகர் அழகு குன்றியிருத்தலை வசவண்ணர் காணுதல்

துன்றிய மெய்த்தவர் துறந்து போயபின்
மன்றல்செய் மற்றைநாள் மனையை ஒத்தொரு
தன்தனி நற்புரம் தனிப்பக் கண்டனன்
நன்றறி நற்செயல் நந்தி தேவனே.

(அ-ரை.) துன்றிய-பொருந்திய. மன்றல்செய்-திருமணஞ் செய்யப்பட்ட. மற்றைநாள்-அடுத்தநாள். (உ0)

### அடியார்க்கு ஆக்கிய உணவு வீணாகுமென வசவண்ணர் வருந்துதல்

வழுவினன் அன்புசெய் வழியை இன்றுநான்
குழுவுறும் அடியவர்க் குறித்துச் செய்தவிவ்
ஒழிவுறும் அடிசிலுண் டொழிந்தி டாதுதீர்ந்
தழிவுறு மேயென அகந்த ளர்ந்தனன்.

(அ-ரை.) வழுவினன்-தவறினேன். குழுவுறு-கூடியிருந்த. ஒழிவுறும் அடிசில்-மிகுந்த உணவு. (உக)

### அடியாரிடத்தில் அன்பு கொளல் அரிதெனல்

சங்கம பத்திசெய் தண்ட நாதனே
சங்கம பத்திசெய் தகைமை பூண்டுநான்
சங்கம பத்தியில் தவறினேன் என்றால்
சங்கம பத்திசெய் தன்மை எண்மையோ.

(அ - ரை.) *சங்கமம் - அடியார். பத்தி - அன்பு. தகைமை - விருப்பம். எண்மையோ - எளிமையானதோ.* (உஉ)

### அடியார்பால் அன்பு கொள்வோன் பிறப்பைக் கெடுப்போன் எனல்

இழிப்பினும் வெறுப்பினும் இல்லின் உள்ளன
அழிப்பினும் உடம்பினை அரிந்து கொல்லினும்
பழிப்பறு சங்கம பத்தி செய்பவன்
ஒழிப்பது பிறவியென் றுலகம் ஓதுமே.

(அ - ரை.) *இழிப்பினும் - இகழ்ந்தாலும். இல்லில் உள்ளன - வீட்டில் உள்ளன. அரிந்து - அறுத்து ஒழிப்பது - நீக்குவது.* (உங)

### அல்லமர் உணவெலாம் உண்டு அடியார் பசி போக்க நினைதல்

இம்முறை சங்கம பத்தி எய்திய
எம்முடை நந்திதன் எண்ணம் முற்றுற
அம்மடை அடிசிலுண் டலமன் மாதவர்
தம்முறு பசியெலாம் தணிப்ப உன்னினன்.

(அ - ரை.) *மடை அடிசில் - ஆக்கிய சோறு.* (உச)

### அல்லமதேவர் தம் பசிக்குச் சிறிது உணவிட வேண்டுதல்

ஒருவன்யான் சிறுபசி உடையன் சிற்றுணு
விரைவுற விடுதிநீ வேண்டு மாறுபின்
பரிவுள அடியவர் பாற்செய் என்றனன்
பொருவறு வசவனை நோக்கிப் போதகன்.

(அ - ரை.) *ஒருவன் யான் - யான் ஒருவன். சிற்றுணு - சிறிது உணவு. பரிவுள - அன்புள்ள. பொருவு அறு - ஒப்பில்லாத. போதகன் - அல்லமதேவர்.* (உரு)

### வசவண்ணர், அல்லமரை அழைத்துச் சென்று இருக்கையில் அமர்த்தல்

ஐயனும் முனிவுரு தருளும் வண்ணம்யான்
செய்யுநல் வினையென மகிழ்ந்து தேவனைப்
பையவுன் மனையிடைப் பணிந்து கொண்டுபோய்ப்
பெய்யுமென் மலர்மணிப் பீடத் தேற்றினன்.

(அ - ரை.) ஐயனும்-அல்லமதேவரும். பைய-மெதுவாக. (உக)

### வசவண்ணர், அல்லமரின் திருவடி வழிபாடு செய்தல்

ஏற்றிய அருள்வச வேசன் எம்பிரான்
காற்றுணை மலர்களைக் கந்த மஞ்சன
நாற்றமென் மலர்நறும் புகைவி ளக்கெனப்
போற்றிய இவைகொடு பூசை செய்தனன்.

(அ - ரை.) கால்துணை மலர்களை - திருவடித் தாமரைமலர்களை. கந்த மஞ்சனம் - மணமுள்ள நீர். (உஎ)

### அல்லமருக்கு வசவண்ணர் உணவு படைத்தல்

பூசனை செய்தபின் போற்றி நின்றுபொன்
பாசனம் அமைத்துமென் பதப்ப டைத்துமேல்
யோசனை கைகமழ் கறியும் ஒள்ளிய
போசன முறையிடப் புரிந்து தந்தியே.

(அ - ரை.) பொன்பாசனம் - அழகிய உண்கலம். மென்பதம் - மெல்லிய சோறு. கைகமழ் கறி - தொட்ட கையையும் மணக்கச் செய்யும் கறி. (உஅ)

### அல்லமர், இட்ட உணவை ஓரிமைப்பொழுதில் உண்டுவிடல்

அருந்துக எனவடி தொழலும் அக்கலம்
திருந்திய அமுதுளோர் அவிழும் சேடியா
தருந்தினன் ஒரிமைப் போதின் அல்லமன்
பொருந்திய அவரிறும் பூத ராகவே.

(அ - ரை.) திருந்திய அமுதன் - நிறைவாகப் படைக்கப்பெற்ற உணவில். ஓர் அவிழும் - ஒரு பருக்கையும். சேடியாது - எஞ்சாமல். இறும்பூதர் - வியப்பையுடையவர். (உக)

மேலும் படைக்க அல்லமர் உண்டமை கண்டு வியத்தல்

பின்னரும் அம்முறை பெய்ய ஐயனவ்
அன்னரும் அம்முறை அருந்திப் பின்னரும்
பின்னரும் அம்முறை பெய்ய உண்டனன்
தன்னுளம் வியந்தனன் தண்ட நாயகன்.

(அ - ரை.) அம்முறை - முன்படைத்தபடியே. பின்னரும் பின்னரும் - மேலும், மேலும். பெய்ய - படைக்க. (௯௦)

அல்லமதேவருக்குப் பசி வளருதல்

சிறுச்சிறி தனமிடும் செய்கை யாலருள்
இறைக்கெழில் உதரவெந் நெருப்பெ ழுந்ததால்
விறற்கனல் அம்முறை விறகி டக்கனன்
றுழப்பெரி தெனவெழுந் தோங்கல் போலவே.

(அ - ரை) சிறுச்சிறிது-சிறிது, சிறிது. உதரவெம் நெருப்பு - வயிற்றுப் பசித்தீ. விறல்கனல் - மிகுநெருப்பு. தீயில் சிறிது சிறிது விறகிடுந்தோறுந் தீ அதிகரித்தல் போலப் பசி வளர்ந்ததென்க. (௯௧)

சமைத்த உணவெல்லாம் படைக்க வசவண்ணர் கட்டளை இடுதல்

எண்ணிய எண்ணியாங் கியற்றும் ஏவலர்
அண்ணலும் வருகென அழைத்து நம்மனைப்
பண்ணிய பதமெலாம் படைமின் என்றலும்
துண்ணென அனமிடும் தொழில்தொ டங்கினர்.

(அ - ரை.) ஏவலர் - பணியாட்கள். பதம்-சோறு. படைமின் இடுங்கள். துண்என - விரைவாக. (௯௨)

கயிலைமலையைப்போல் உணவைக் குவித்தல்

(வேறு)

அளவறும் அடியர்க் கெல்லாம் ஆக்கிய அடிசிற் குன்றம்
கொளவுறு கூடை யோடு கூடைகள் தாக்கக் கொண்டு
வளமுறு கயிலைக் குன்றம் பெயர்த்திவண் வைத்த தென்னத்
தளவுறழ் அடிசில் எங்கள் தம்பிரான் எதிர்கு வித்தார்.

(அ - ரை.) அடிசிற்குன்றம் - உணவுமலை. கயிலைக் குன்றம் - வெள்ளிமலை. பெயர்த்து - தோண்டியெடுத்து. தளவு உறழ் - முல்லையரும்பையொத்த. (௯௩)

பருப்பு நெய் முதலியவற்றைப் படைத்தல்

பருப்பொரு பொருப்பெ னத்தாம் படைத்தனர் சிலரெ டுத்து
விரைப்புது நெய்க விழ்த்து விடுத்தனர் சிலர்ம ணக்கும்
பொரிக்கறி பளிதம் பாகு புளிங்கறி பலவும் எல்லாம்
திரைத்தொரு சிலர்சொ ரிந்து நின்றனர் முகில்கள் போல.

(அ - ரை.) பொருப்பு - மலை. விரை-மணம். பளிதம் - பச்சடி. பாகு - குழம்பு. முகில் - மேகம். (கச)

வடை மாங்கனி கரும்பு முதலியவற்றைப் படைத்தல்

வடைபடு திகிரி யாக மாங்கனி கவண்கல் லாக
உடைபடு கழைக்க ரும்பங் கொண்கதை யாகக் கொண்டு
கடைபடு முலகிற் கெல்லாம் காரிய கருத்தன் முன்னர்ப்
படைபடை எனச்சொ ரிந்தார் படைமுகத் திளைஞர் போல.

(அ - ரை.) படுதிகிரி-பொருந்திய உருளை; சக்கராயுதம். கவண் கல் - எறிகின்ற கல். கதை - தடியாயுதம். காரியகருத்தன் - எல்லாச் செயல்களையும் நடத்தும் தலைவன். படை படை - படையுங்கள் படையுங்கள். உருவக அணி. (கரு)

பால் பழவகை முதலியவற்றைப் படைத்தல்

குளங்கரை யாக அந்தக் குளத்தினுட் பசுவின் தீம்பால்
விளங்குறும் அமுத வேலை விடுத்தென விட்டார் சில்லோர்
உளங்கனி மூவர் செய்யுள் ஒத்தமுக் கனியும் ஏனோர்
வளங்கெழு தொடர்பு போலும் மற்றைய பழமும் தூர்த்தார்.

(அ·ரை.) அமுதவேலை-பாற்கடல். மூவர் செய்யுள் - சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்னும் மூவர் தேவாரச் செய்யுள். முக்கனி-மா, பலா, வாழை. ஏனோர்-பிறர். வளம்கெழு தொடர்பு - வளப்பம் அமைந்த பாட்டு. மற்றைய பழம், கொடி முந்திரி, திராட்சை முதலியன. ஈண்டுப் பன்னிரு திருமுறையும் பலவகைக் கனிகளாகக் கூறப் பெற்றன. (கசு)

அல்லமதேவர் எல்லாவற்றையும் உண்டு வறிதிருத்தல்

எண்ணிலர் இடுவ எல்லாம் இனியன இன்று என்னுன்
கண்ணிமை ஒடுங்கும் முன்னர்க் கடிதயின் றுதவு ருமல்
வண்ணமென் மலர்க்கை வாங்கி வறிதிருந் தனனெங் கோன்தேர்ப்
பண்ணவன் பரிக்கு மேடு பள்ளமென் பனவங் குண்டோ.

(அ - ரை.) இனியன - சுவையுடையன. இன்று - இனிமையில்லாதன. கடிது - விரைவாக. தேர்ப்பண்ணவன் - சூரியன். (கஎ)

